உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்
திருநாவுக்கரசு சுவாமிகள்
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
ஆகிய மூவர் அருளிச்செய்த

# தேவாரம் அடங்கன்முறை



மயிலைகிழார் இளமுருகனார் பதிப்பு

திருவருளகம்
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை
1953

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah and published by M. Balasubrahmanya Mudaliyar, B.A., B.L. (= மயிலை கிழார் இளமுருகனார்) who owns the entire copyright.

இந்நூலைப் படிக்க விரும்பும் ஒவ்வொருவருக்கும் ஒரு பிரதி மட்டும் விற்கப்பெறும். வாங்குவோர் எவரும் எக்காரணம் கொண்டும் இதிற் குறிக்கப்பெற்ற விலைக்குமேல் எவருக்கும் விற்கக் கூடாது. யான் வெளியிட்ட நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தை ரூபா மூன்றுக்கு என்னிடம் வாங்கி ரூபா நாலரை + விற்பனை வரி என்று சில வஞ்சக வியாபாரிகள் விற்றுள்ளபடியால் புத்தக வியாபாரிகட்கு இப்புத்தகம் விலைக்குத் தரப்படமாட்டாது. இப்புத்தகம் ரயில்வே பார்சல் மூலமாகவோ, வி. பி. தபால் மூலமாகவோ அனுப்பப்படமாட்டாது. புத்தக விலை, ரிஜிஸ்டர் தபாற்கூலி ஆகியவற்றை முழுவதும் மணியார்டர் செய்வோருக்கு மட்டும் ரிஜிஸ்டர் தபாலில் அனுப்பப்படும். ரிஜிஸ்டர் தபாற்கூலி ரூ. 1— — ஆகும். ரிப்ளை கார்டு எழுதுவோருக்கு மட்டும் இப்புத்தகம் பற்றிய விவரங்கள் தெரிவிக்கப்படும். சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடுகள் பற்றிய விவரங்களை யறிய விரும்புவோர் " சமாஜக் காரியாலயம், 53, திருவள்ளுவர் தெரு (ஜோன்ஸ் ரோட்), சைதாப்பேட்டை, சென்னை-15 " என்ற விலாசத்திற் கெழுதவேண்டும்.

உ

சிவமயம்

# உரிமை உரை

கயிலை நிகர்க்கும் மயிலைப் பதிக்கண்
தொழுதுணு மரபின் பழுதிலா வித்து
செல்வ நிலனில் கல்வி ஒளியில்
நேயப் புனலில் மேய ஒழுக்க
வளியில் இன்ப வெளியில் வளர்தரு
அறநூல் சைவத் திறநூல் சாரம்
தேங்கித் திரண்ட பாங்குடைக் கேணி
ஓதித் தமிழ்மறை ஆதியை உன்னி
நைந்துநைந் துருகி உந்துநீர் அருவி
குடிப்பிறப் படக்கம் படிப்பு நிறையே
விருந்தே ஈகை பொருந்திய வல்லி
முன்னைத் தொடர்பால் பின்னு பொறைமலை
வள்ளுவர் வாசுகி உள்ளறம் ஓம்பி
ஒப்புற வுறைந்தே ஐப்பசி அறுநாள்
நோன்பிருந் தடியனை ஈன்றிருங் கல்வி
அழியாப் பொருட்டுணை வழியால் வளர்த்த
ஆருயிர் அன்னை சீருயர் அப்பன்
ஆசில் அன்னம்மாள் மாசிலா மணிவேள்
இருமுது குரவர் பெருநினை வாகவும்
தந்தையின் குருவும் தமிழ்நா டனைத்தும்
பெரும்புகழ் படைத்த பொதுநலப் பெரியார்
திரு.வி.க. எனும் திவ்விய நண்பரின்
குரவருள் ஒருவரும் குவலயம் போற்றும்
அறுமுக நாவலர் அன்புடைச் சீடரும்
தத்துவ ஞானமும் தாணுவின் கழல்சேர்
நித்திய பூசையும் நிரம்பிய நியமம்
உடையரு மாகிய உயர்மெய் ஆசான்
தணிகா சலனூர் தகுநினை வாகவும்
விளங்குக முத்தமிழ் விரகர் மூவரும்
அருளிய திருமுறை அரியஇப் பதிப்பே

இங்ஙனம் : **மயிலைகிழான் இளமுருகன்.**

# உள்ளுறை

சிவமயம்

# முகவுரை

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு
பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர்வன் தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு. இவற்றுள் முதல் ஏழு திருமுறைகள் தேவாரம் அடங்கன்முறை எனப் பெயர் பெறும். இவற்றைத் திருவாய் மலர்ந்தருளியவர்கள் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகிய மூவர். திருவாசகம் திருக்கோவையார் ஆகிய எட்டாம் திருமுறையைத் திருவாய்மலர்ந்தருளிச் செய்தவர் மாணிக்கவாசக சுவாமிகள் ஆவார். இந்நால்வரும் சைவசமயத்திற்குக் காலத்தாற் செய்தஉதவி ஞாலத்தின் மாணப் பெரிது. இவர்கள் "முற்கோலி வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே" என்ற வினாவிற்கு நாம் இன்பமான விடைகூற முடியாமற் போயிருக்கும். இவர்கள் செய்த பேருதவியைக் கருதி இவர்களைச் சைவசமயாசாரியர் நால்வர் என்று ஆன்றோர் கூறுவர்.

சைவ சமயத்தில் உயிர்கள் நல்லகதி பெறுதற்கு ஏணிப்படிகள்போல நான்கு நெறிகள் உள்ளன. இவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் அல்லது தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்று சாத்திரம்கூறும். இவற்றைத் தங்கள் திருவாக்கிலும் பெருவாழ்விலும் விளக்குபவர்கள் முறையே திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்திகள், மாணிக்கவாசகர் ஆவார்கள். ஆசாரியர் என்ற சொல்லுக்குச் சொல்லிய வண்ணம் செய்பவர் என்று பொருள் (ஸ்வயம் ஆசரதே ஆசார்ய:) இவ்வுண்மையை இப்பெரியார்கள் வாழ்க்கையில் நன்கு காணலாம்.

அப்பர் சுவாமிகள் பல பாசுரங்களில் சரியைத் தொண்டினை வற்புறுத்தியுள்ளதற் கேற்ப உழவாரத் திருத்தொண்டு புரிந்தவர். பெரிய புராணத்துள் இவர் உழவாரத் தொண்டின் தனிச் சிறப்பு பல சந்தர்ப்பங்களில் புகழப்பெற்றுள்ளது. "உழவாரத்தின் படையாளுத் திருக்கரம்" மாதவச் சிவஞான யோகிகளால் விதந்து கூறப் பெற்றுள்ளது. சிறந்த சிவஞானியாகிய அப்பரைச் சரியை நெறியில் நின்று சாலோகபத முத்தி யடைந்தவராகக் கனவிலும்

கருதலாகாது. ஞானநெறிக்கண் நிற்போர், சரியை கிரியை யோகம் ஆகிய மூன்றையும் அனுட்டித்தற்குரியர் என்று சிவஞான போத மாபாடியம் கூறுதற்கேற்ப, அப்பர் சரியைத் தொண்டோடு சிவ பூசையாகிய கிரியைத் தொண்டும் உயிராவணமிருந்து உற்றுநோக்கும் யோகத்தொண்டும் ஞானநெறியிற் சிறந்தசிவானுபவமும்உடையராயிருந்தனர். முதற்படியாகிய சரியையே ஏனைய மூன்றிற்கும் அடிப்படையாகலின் அதனை வற்புறுத்தியுள்ளனர். தாம் சமணராயிருந்தபோது அனுபவித்தவைகளையும் சைவ சமயம் சார்ந்த பிறகு அனுபவித்தவைகளையும் மிக விளக்கமாக எடுத்துக் கூறியுள்ளார். அஞ்சாமை என்பது இவருடைய சமய வாழ்க்கையில் காணப்பெறும் அரிய உண்மைகளுள் ஒன்று. இவ்வாஞ்சாமையால், தம்மைத் துன்புறுத்திய மஹேந்திரவர்ம பல்லவ மன்னனைத் தமது காலில் விழும்படி ஆண்டு, அவனைச் சைவ சமயத்திற்கு மாற்றி, அவனைக்கொண்டே அவன் ஆட்சியில் இருந்த நாட்டைச் சைவமாக்கிய செயற்கருஞ் செயல் பல சரித்திரச் சான்றுகளால் நன்கு நிலைநாட்டப்பட்டுள்ளது. இந்த மன்னன் தமிழ் நாட்டிற் பல ஆலயங்கள் எடுப்பித்த செய்திகள் கல்வெட்டுக்களால் அறியப்படும். மாமல்லபுரம் (= மஹாபலிபுரம்), திரிசிராப்பள்ளி, மஹேந்திர வாடி, திருவதிகை முதலிய பல தலங்களில் இவன் திருப்பணிகளை இன்றும் கண்டு மகிழலாம்.

சமண சமயத்தால் சைவத்திற் கேற்பட்ட ஆபத்தை நீக்கிச் சைவத்திற்குப் புத்துயிர் அளிக்கக்கூடிய பிள்ளை வேண்டும் என்று தமது தாய் தந்தையர் தவம் இருப்ப, அவர்கள் தவத்திற்கருளிச் சிவபெருமானால் அனுப்பப் பெற்றவர் திருஞானசம்பந்தர். இவர் தாயின் கருப்பத்தில் வாசம் செய்யாத அயோநிஜர் என்று சிலர் கூறுவது பெரியபுராணத்திற்கு முற்றிலும் முரண்பட்டது. சிவ பாத இருதயர் தம் " காதலியார் மணிவயிற்றில் உருத்தெரியவரும் பெரும் பேறுலகுய்ய உளதாக " என்றும், " மறைநூல் முறைச் சடங்கு நாளுடைய ஈரைந்து திங்களினும் நலம் சிறப்ப " என்றும் சேக்கிழார் கூறுதல் காண்க. இவரை முருகவேளின் அவதாரம் என்பதையும் உபசாரமாகவே கொள்ளவேண்டும். " பெம்மான் முருகன் பிறவான் இறவான் " என்பதே சைவர்கள் கொள்கை. சேக்கிழார் முருகன் அவதாரமெனத் திருஞானசம்பந்தரை எங்கும் கூறவேயில்லை. சத்புத்ர மார்க்கத்தில் நின்றபடியாலும் இறைவியால்பால் ஊட்டப்பெற்ற படியாலும் இவரைப் புரமெரித்தார் திருமகனார், ஆளுடையபிள்ளையார் என்றெல்லாம் புகழ்வதிலிருந்து இவரை முருகவேள் அவதாரம் என்பது பொருந்தாது. மூன்றும்

வயதில் " போதையார் பொற்கிண்ணத்தடிசில் " ஊட்டப்பெற்ற போதே பரஞானம்அபரஞானம் ஆகியஇரண்டினையும் பெற்றவர். சைவ சமயத்திற்கு அழியாத நிலைக்களம் திருக்கோயிலே என்பதை நாம் நன்குணரும் பொருட்டுத்தமிழ்நாடுமுழுமையும் தலயாத்திரை செய்து, ஆங்காங்குள்ள சிவாலயங்களில் திருப்பதிகம் ஓதி, நாளும் இன்னிசையால் தமிழும் சைவமும் பரப்பித் தொண்டு புரிந்தார். இவர் செய்த சமயப் பணியை மிக நன்றாக உணர்ந்த ஆதிசங்கராசாரிய சுவாமிகள் தமது " ஸௌந்தர்யலஹரி " என்ற ஸ்தோத்ர நூலில் ஒரு சுலோகத்தில் இவரை வாயாரப் புகழ்கின்றார். அந்த சுலோகம் பின்வருமாறு: "தவஸ்தன்யம் மன்யே தரணிதர கன்யே ஹ்ருதயத: பய: பாராவார: பரிவஹதிஸாரஸ்வத இவ தயாவத்யா தத்தம் த்ரவிட சிசுரார் ஸ்வாத்யதவயத் கவீநாம்ப்ரௌடாநாம்ஜநி கமநீயம் கவயிதா "

தமது பதிகம் ஒவ்வொன்றிலும் தலத்தின் நீர்வள நிலவளங்களை நன்றாக வருணிப்பார். எட்டாம் பாசுரத்தில் இராவணன் அஹங்காரத்தால் கயிலை மலையைப் பெயர்க்க முயன்று தோற்றுப் பின் தன்பிழையைப் பொருத்தருளுமாறு இறைவனை வேண்டிப்பல வரங்களைப் பெற்ற செய்தியைக் குறிப்பார். " மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட" இப்பாசுரம்அமைந்ததெனச் சேக்கிழார் கூறுகிறார். ஒன்பதாம் பாசுரம் தோறும் அரியும் அயனும் சிவபெருமான் திருவடி திருமுடிகளைக் காண முயன்று தோற்ற செய்தியைக் குறிப்பார். " தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் எனத் தொழார், வழுவான மனத்தாலே மாலாய மாலயனும், இழிவாகும் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை, விழுவார்கள் அஞ்செழுத்தும் துதித்துய்ந்தபடி விரித்தார்" என்று இதன் உட்கருத்தைப்பெரிய புராணம் விளக்குகின்றது. பத்தாவது பாசுரம்தோறும் சமணர் புத்தர் சாக்கியர் தேரர் கொள்கை பழக்க ஒழுக்கங்களை விவரித்து அவற்றின் இழிவைக் கண்டிப்பார். சம்பந்தர் இயற்கை வளத்தை வருணிப்பதில் வொர்ட்ஸ்வொர்த், விட்மன் போன்ற ஆங்கில அமெரிக்கக் கவிகளைவிட எவ்வகையிலும் தாழ்ந்தவரல்லர். இயற்கையழகை யனுபவிக்குங்கால் அதில் திருவருளின் பெருமையை நன்குணரலாம் என்பது சம்பந்தர் கருத்து. அங்கம்பூம்பாவையின் பேரழகைச் சம்பந்தர் அனுபவித்த நிலைமையைச் சேக்கிழார் " கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார் " என்று புகழ்கின்றனர். சமணர்கள் இத்தகைய பொறி புலன் நுகர்ச்சி யற்றவர்கள். பொறி புலன் நுகர்ச்

சியை உலகானுபவத்திலிருந்து சிவானுபவத்திற்கு மடை மாற்றம் (Sublimation of the instincts) செய்யும் சிறந்த வழி இவர் போதிப்பது. இவர் மதுரை மாநகரில் அனல்வாதம் புனல் வாதம் முதலியவற்றில் வெற்றிபெற்றுப் பாண்டி நாட்டையும் மன்னனை யும் சைவத்திற் சேர்த்தபடியால், தமது அவதாரத்தின் நோக் கத்தை நிறைவேற்றினர். இவர் வழியில் திருந்த மனமில்லாத சமணர்கள் தங்கள் சபதத்தை நிறைவேற்றக் கழுவேறினர்கள். மந்திரி குலச்சிறை நாயனர் அரசன் ஆணையை நிறைவேற்றினர். இவ்வரலாற்றுக்கு முற்றிலும் மாறாகச் சம்பந்தரைக் கொலைபாதகர் என்று அறிவிலிகள் கூறுவது எவ்வகையிலும் பொருந்தாது.

சம்பந்தரும் சுந்தரரும் (வைணவத்தில்நம்மாழ்வார் திருமங்கை மன்னன் முதலியவர்களைப்போல) முத்ராகவிகள் எனப்படுவர். பதிகந்தோறும் இறுதிப் பாசுரத்தில் தமது பெயரைக் கூறிப் பதி கம் பாடுவதால் ஏற்படும் பலனையும் "பலச்சுருதி" என்ற முறை யில் வெளிப்படுத்துவது முத்ராகவிகள் வழக்கம். இதை யறியாதார் "சம்பந்தன் தன்னைப் பாடினன்" என்பர். சம்பந்தர் தாம் பிறந்த அந்தணர் மரபுக்கேற்ப முத்தீ வளர்க்கும் கிரியைத் தொண்டினைச் செய்தனர், வற்புறுத்தினர். இவரைச் சத்புத்திரமார்க்கத்தை விளக் கும் ஆசாரியராகத் தடையின்றிக் கொள்ளலாம.

சுந்தரர் யோக நெறியாகிய சகமார்க்கத் தலைவர், பரவை நாச்சியார், சங்கிலி நாச்சியார் ஆகிய இருமனைவியரோடு இல்லறம் நடத்திய இவரை யோக நெறியில் நின்றவர் என எவ்வாறு கொள்ள இயலும் எனச் சிலர் கேட்கலாம். இவர் யோக நெறி யில் நின்றமைக்குப் பற்பல சான்றுகள் உள்ளன. நாள் தோறும் யோக சாதனை செய்து இறைவனை யனுபவித்ததை இவரே தமது திருவாக்கிற் கூறுகிறார். "தேடுவன் தேடுவன் செம்மலர்ப்பாதங் கள் நாடொறும் நாடுவன் நாடுவன் நாபிக்குமேலே ஓர் நால்விரல்" என்று 7688-ம் பாசுரத்திலுள்ள குறிப்பில், நாபிக்குமேல் நால்விரல் எனுமிடம் ஆறுதாரங்களுள் ஒன்று. சிவயோகத்தில் இது முக்கிய மானது. சுந்தரருடைய சிறந்த தோழர்களுள் ஒருவர் சேரமான் பெருமாள் எனும் கழற்றிற்றறிவார் நாயனர். அவர் நாடோறும் சிவபூசையில் யோக நிலையில் இறைவன் சிலம்பொலி கேட்பது வழக்கம். ஒருநாள் அவ்வொலி கேட்கக் காலம் தாழ்த்தது. சுந்தரர் பாடலில் ஈடுபட்டுச் சுவைத்தமையால் தாமதம் ஏற்பட்டதெனத் தில்லைக்கூத்தன் தெரிவித்தான். கழறிற்றறிவார் சுந்தரரைத் தேடிச் சென்று அவருடைய நட்பைப் பெற்றார். சுந்தரருடைய மற்றொரு நண்பர் பெருமிழலைக் குறும்ப நாயனர். இவரும் சிறந்த

யோகி. சுந்தரர் கயிலைக்குச் செல்லப்போகும் செய்தியை முந்திய நாளே யோகக் காட்சியில் கண்டு, "நாலு கரணங்களும் ஒன்றாய் நல்ல அறிவு மேற்கொண்டு, காலும் பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபால நடு, எலவே முன்பயின்ற நெறி எடுத்த மறை மூலம் திறப்ப, மூலமுதல்வர் திருப்பாதம் அணைவார் கயிலை முன்னடைந்தார்" எனச் சேக்கிழார் கூறுகிறார். சுந்தரர் சிறந்த யோகி என்பதற்குச் சிவபெருமானே சான்று பகர்ந்தனன், "மேரு வரையின் மேம்பட்ட தவத்தான்" என்று இவரைச் சங்கிலி நாச்சியாருக்கு அறிமுகப்படுத்தினான். "வேண்டிக்கொள்வேன் தவ நெறியே" என்று திருத்துறையூரில் விண்ணப்பித்தனர் சுந்தரர்.

இறைவன் உயிர்களோடு கொண்டுள்ள தொடர்பு பல வகைத்து. அவற்றுள் நான்கு சைவ சமயத்துள் போற்றப்படுகின்றன. ஆண்டான் அடிமை, தந்தை மைந்தன், தோழன் தோழன், தலைவன் தலைவி என்பன அவை. சுந்தரர் சகமார்க்கத்தில் நின்று இறைவனைத் தோழனாகப் பெற்றவர். "தோழமையாக உனக்கு நன்மைத் தந்தனம்...நின் வேட்கை தீர வாழி மண் மேல் விளையாடுவாய்" என்று அசரீரியாக ஆரூராண்ணல் அருளினான். இதனால் சுந்தரருக்குத் "தம்பிரான் தோழர்" என்று பெயர். "என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி" என்று சுந்தரர் தமது திருவாக்கில் குறிப்பதற் கேற்ப, நள்ளிரவில் பரவை நாச்சியார் புலவியைத் தீர்க்க இறைவன் ஒரு முறைக்கு இருமுறை தூது சென்றமை இத்தோழனுடைய எளிமையின் பேரெல்லை ஆகும். இச்செய்கையை வெறுத்த எயர்கோன் கலிக்காம நாயனாரைத் திருத்தி அவரையும் சுந்தரருடைய தோழராக்கியதும் இறைவனுடைய தோழமைத் திருவிளையாடலே. "நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண் மேற் சென்றிடித்தற் பொருட்டு" என்ற பொது மறைக் கேற்ப, இறைவனாகிய தோழன் நடுநிலையில் நின்று நீதி செலுத்தி, மகிழமரத்தின் கீழ்ச் செய்த சபதத்திற்கு மாறாகச், சுந்தரர் சங்கிலி நாச்சியாரை விட்டுப் பிரிந்து திருவொற்றியூர் எல்லை தாண்டி ஒரு காலடி வைத்தவுடன், சுந்தரருடைய கண்கள் இரண்டையும் மறைப்பித்த செய்தி நமக்கு நல்ல போதனையாகின்றது. கண்ணிழந்த சுந்தரர் மறுபடியும் கண் பார்வை பெறுகிற வரையில் பாடிய பாடல்கள் மிக்க உருக்கமுடையனவாய், ஓதுவோர் கண்களில் நீர்மல்கும்படிக் கசிவிக்கும் இயல்புடையன. சுந்தரர் திருவாக்கில் பல உண்மைகள் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் சிறந்தவொன்று, குற்றம் செய்த உயிர், அக்குற்றத்திற்காக உண்மையாகவே வருந்தி, அதை

மன்னித்து நன்மை தருமாறு இறைவனை வேண்டினால், அவன் அவ்வுயிரின் வேண்டுகோளை ஏற்று, அதை மன்னித்து அதற்கு எல்லாநலங்களையும் தருவான் என்பது. பாவமன்னிப்பெனும் இக் கொள்கைஉலகப்பொதுச்சமயங்களிலும் கூறப்படுகின்றது.

தேவாரமுதலிகள்மூவருடைய திருப்பெயர்கள் பக்தபஞ்சாக்ஷரங் கள் எனப்பெறும். இவைஞானசம்பந்தர், நாவுக்கரசர், நம்பியாரூரர் என்பன. மந்திரங்களின் எழுத்தெண்ணிக்கையில் மெய்எழுத்துக்களை நீக்கும் இந்துசமயக்கொள்கையின்படி, மேற்கூறியமூன்றிலும்உள்ள மெய்யெழுத்துக்களை நீக்கினால் எஞ்சி நிற்பவை ஞான சபத, நாவு காச, நபியாரூர என்பனவே. இவை ஒவ்வொன்றிலும் ஐந்தெழுத் தைக் காணலாம். இம்மந்திரங்கள் எத்தகைய நன்மை விளைவித்தன என்பதைப் பெரியபுராணம் நன்றாகக் கூறுகின்றது. முதலாவ தாக ஞானசம்பந்தர் எனும் பக்த பஞ்சாக்கரத்தைப் பார்க்கலாம். மதுரைமாநகரில் கூன்பாண்டியன் வெப்புநோயால் மிகமிக வருந்தி உணர் வழிந்து சோர்ந்திருக்கும் நிலையில், மங்கையர்க்கரசியாரும் மந்திரி குலச்சிறையாரும் அவனை நோக்கித் திருஞானசம்பந்தரை அழைத்தால் நோய் தீரும் என்றனர். " மீனவன் செவியின் ஊடு மெய்யுணர் வளிப்போர் கூற ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திர மும் செல்ல ஆனபோது அயர்வுதன்னை அகன்றிட அமணராகும் மானமில்லவரைப் பார்த்து மாற்றம் ஒன்றுரைக்கல் உற்றான் " என்பர் சேக்கிழார். நாவுக்கரசர் எனும் பக்த பஞ்சாக்கரத்தை எல்லாவகையிலும் பயன் படுத்தி முத்தியடைந்தவர் அப்பூதியடிகள் நாயனார். அவர் " மனைப்பால் உள்ள அளவைகள் நிறைகோல் மக்கள் ஆவொடு மேதி மற்றும் உளவெலாம் அரசின் நாமம் சாற்றும் அவ்வொழுகலாற்றார் " என்பர் சேக்கிழார். நம்பியா ரூரர் என்ற பக்த பஞ்சாக்ஷரத்தின் பெருமையைப் பெருமிழலைக் குறும்ப நாயனார் வரலாற்றில் காணலாம். " நாளும் நம்பியாரூரர் நாமம் நவின்ற நலத்தாலே ஆளும்படியால் அணிமாதி சித்தியான அணைந்த தற்பின் மூளும் காதல் உடன் பெருக முதல்வர் நாமத்தஞ் செழுத்தும் கேளும் பொருளும் உணர்வுமாம் பரிசுவாய்ப்பக் கெழு மினார் " என்பது சேக்கிழார் திருவாக்கு. பக்த பஞ்சாக்கரம் உலக நலங்களையெல்லாம் அளித்தது, அணிமாதி சித்திகளைத் தந்தது, சிவ பஞ்சாக்கரத்துக்கு வழியும் காட்டிற்று. இம்மாதிரியே " மணி வாசக " என்ற பக்த பஞ்சாக்ஷரத்தின் பெருமையை மாணிக்க வாசகர் வரலாற்றிற் காணலாம்.

சேக்கிழார் திருவாக்கில் தேவாரம் என்ற சொல் காணப்பட வில்லை. திருப்பதிகம் உரைமாலை தண்டமிழ்த்தொடை முதலியபல

வற்றால் மூவர் முதலிகள் அருளிச் செயல்களைக் குறிக்கின்றார். தேவாரம் என்ற சொல் ஆதியில் இறைவழிபாட்டைக் குறித்தது. உமாபதி சிவம் அருளிய கோயிற் புராணம் திருவிழாச் சருக்கம் 27-ம் செய்யுளில் " உயர்தவ மூவாயிரவர் கடாவா மறையொடு தேவாரக் கைப்பற்றிய பணிமுற்ற " என்றும், ஈடு முப்பத்தாறு யிரப்படி என்னும் வைஷ்ணவ வியாக்யான நூலில் 6–8–10-ல் "உம்முடைய தேவாரமோ " என்றும், கல்வெட்டுவழக்கில் தெஇக 7–269-ல் பெரியவுடையார் தேவாரத்தே கேட்டருளி என்றும். தெஇக 2–155-ல் பெரிய பெருமாளுக்குத் தேவார தேவராக எழுந்தருளிவித்த தேவர் என்றும் வருதல் காண்க. பழைய காலத்தில் அரசர் புறப்பாட்டில் முன்பாகக்கொண்டு செல்வதும் பூசைக் குரிய விக்கிரகம் முதலியவற்றை வைத்திருப்பதுமாகிய பெட்டிக் குத் தேவாரப் பெட்டி என்று பெயர். பிற்காலத்தில் இறைவழி பாடாகிய தேவாரத்தில் ஓதுகின்ற மறைகளைத் தேவாரம் எனும் பழக்கம் ஏற்பட்டது. மலையாள நாட்டில் இன்றைக்கும் வடமொழி வேதங்களைத் தேவாரம் எனும் சொல்வழக் குள்ளது. வடமொழி வேதங்களைக் குறிப்பது, தமிழ்நாட்டில் தமிழ் வேதமாகிய மூவர் திருவாக்கின் பெயராயிற்று. முனியூர்க்கல்வெட்டில் (தெஇக 8–205) திருமுறைத் தேவாரச் செல்வன் என்ற குறிப்பும், திருக் களர்க் கல்வெட்டில் (தெஇக 8–260) நம் தேவாரத்துக்குத் திருப்பதியம் பாடும் பெரியான் மறைதேடும் பொருளான அக ளங்கப்பிரியன் என்ற குறிப்பும் வந்துள்ளன. திருமுறை கண்ட சோழனாகிய முதல் இராஜ ராஜன் தான் எடுப்பித்த தஞ்சை இராஜ இராஜேச்சரத்தில், திருப்பதிகம் விண்ணப்பம் செய்ய 48 ஓதுவார் களையும் உடுக்கை, கொட்டி மத்தளம் வாசிக்க இருவர்களையும் ஏற் படுத்தி இவ்வைம்பதின்மர்க்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தியதை அக் கோயில் கல்வெட்டு (தெஇக 2–65) விரிவாகக் கூறுகின்றது. திரு ஆமாத்தூர்க்கல்வெட்டொன்றில் (தெஇக 8–749) பதினாறு குருடர் கள் நாடோறும் திருப்பதியம் விண்ணப்பிக்க நிபந்தம்ஏற்படுத்தியது கூறப்பட்டுள்ளது. நூற்றுக்கணக்கானதிருக்கோயில்களில்தேவாரம் பாடுவதற்குப் பலதிட்டங்கள் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன.

இப்பதிப்பு செம்மையாக வெளிவருவதற்குத் தொண்டு புரிந்த அன்பர் சிலருக்கு நன்றிசெலுத்தும் இன்றியமையாத கடன் இன்ப மளிக்கின்றது. திருக்கோவலூராதீனத்து ஐந்தாவது பட்டமாகஎழுந் தருளியிருந்து ஆயிரக்கணக்கான சமயச் சொற்பொழிவுகளைத் தமிழ் நாடெங்கும் செய்து சமய வளர்ச்சி செய்தவராகிய திருப்பாதிரிப் புலியூர் ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள் சீடரும், அண்ணாமலை நகரி

லுள்ள இராமசாமி செட்டியார் உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியரும், என்னிடம் சிறந்த அன்பு பாராட்டுபவருமாகிய செல்வச்சிரஞ்சீவி பு. ர. சுவாமிநாத முதலியாரவர்கள் எம் ஏ. பாட்டு முதற்குறிப்பகராதியைத் தொகுத்து உதவி புரிந்தனர். தலச்சிறப் பகராதி, அரும்பொருளகராதி முதலியவற்றைத் தொகுப்பதிலும் அச்சுத்தாள்கள் பலவற்றைத் திருத்துவதிலும் உதவி புரிந்த இளைஞர் செல்வச் சிரஞ்சீவி கோ. சௌரிராஜ பிள்ளையவர்களாவார். தனவணிக நாட்டிலுள்ள சில தலங்கட்கும், அனேகதங்காவதம் திருக்கேதாரம் எனும் வடநாட்டுத் தலங்கட்கும் செல்லும் வழி விவரங்களைத் தாம் நேரிற் சென்ற அனுபவம் திகழ எழுதியனுப்பி உதவியவர் (காரைக்குடி சொக்கலிங்கஐயா அவர்களுடைய திருமகனாராகிய) சைவத் திருவாளர் ராம. சொ. திருநாவுக்கரசு செட்டியாரவர்களே யாவர். திரு இந்திரநீலபருப்பதத்திற்கு நேரிற் சென்று தரிசித்த சிவஸ்ரீ ஈசான சிவாசாரிய சுவாமிகள் பல அருமையான குறிப்புக்களோடு போகும் வழி விவரத்தை அறிவித்தார்கள். பாடல் பெற்ற தலங்களைத் தரிசிப்பதில் பேரூக்கம் செலுத்தும் திருவாளர்கள் குழுமணிப்பாக்கம் செல்வ நடராஜ முதலியார் திருமயிலை கலியாண சுந்தரமுதலியார் ஆகிய இருவரும் தத்தம் யாத்திரைக் குறிப்புப் புத்தகங்களை அன்புடன் உதவினார்கள். சாது அச்சுக்கூடம் தற்போதுள்ள நிலையில், அதைப் பொறுப்பாக நடத்தி வரும் திரு. மு. நாராயணசாமி முதலியார், இயன்றவரையில் அச்சுவேலையை நல்ல முறையில் முடித்துத் தொண்டு புரிந்தனர். வேறு சில அன்பர்களும் இளைஞர்களும் சிற்சில வழிகளில் தொண்டாற்றினர். மேற்கூறிய எல்லோருக்கும் எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன். இப்பதிப்புசிவநேயச்செல்வர்கட்கு இம்மையில் எல்லா நலங்களையும் இறுதியில் இரண்டறக் கலந் தின்புறும் திருவடிமுத்தியையும் நல்குமாறு தேவாரமுதலிகள் மூவர் திருவடிகளையும் முழுமுதற்கடவுள் திருவடிகளையும் வழுத்துகின்றேன்.

சைவத்தின்மேல் சமயம் வேறிலை அதிற்சார் சிவமாம்
தெய்வத்தின் மேல்தெய்வம் இல்லெனும்நான் மறைவாய்
மைவைத்தசீர்த் திருத்தேவாரமும் திருவாசகமும்
உய்வைத்தரச் செய்தநால்வர் பொற்றாள்எம்உயிர்த்துணையே.

திருக்கச்சி ஏகம்பம்
நந்தனஹு பங்குனி
உத்திரத்திருநாள்
29–3–1953

இங்ஙனம் :
திருநெறித் தொண்டன்
மயிலைகிழான் இளமுருகன்

சிவமயம்

# பிழை திருத்தம்

[தயவு செய்து இதிலுள்ளபடி பிழை திருத்தங்களைச் செய்து முடித்து பிறகு நூலை வாசிக்கத் தொடங்கவும். வேறு பிழைகள் இருப்பின் அவற்றைத் தெரிவித்தருள்க.]

பாட்டெண், பிழை, திருத்தம். 96 பெறுவாறே, பெறுவாரே 147 அளவத்தொடு, அாவத்தொடு 150 பத்தர்கருள், பத்தர்க்கருள் 180 வாங்காக் வாங்கக் 188 தொழிலல்லது, தொழலல்லது 214 சயசயவெனு, சயசயவென 241 கொளாவம், கொளரவம் 281 திருப்புத்தூா, திருப்புத்தூர் 300 சாடிக்காலன், சாடிக்காலன் 306 ஓடுகங்கையொளிர், ஓடுகங்கையொளிர் 324 மாண்டார்கடலைப், மாண்டார்சடலைப் 334 கொய்யாாமலர், கொய்யார்மலர் 358 போாத்துழல், போர்த்துழல் 418 தாந்திரை, தாந், திரை 448 யயந்தளிர், யந்தளிர் 473 மலர்மாலை, மலர்மாலை 477 யாவர்களும், யாவர்களும் 566 விலங்குங், விளங்குங் 747 பங்கரிமையோர், பங்கரிமையோர் 795 அந்திமாதி, அந்தமாதி 812 வண்டனை, வண்டணை 817 காகிச்சேறிடை, காகிச், சேறிடை 916 சுடற்பொற், சுடர்பொற் 925 களைகளிவை, கலைகளிவை 973 காணுமிண், காணுமின் 984 உய்யலுறவீர்காள், உய்யலுறுவீர்காள் 1100 கண்ணுர், கண்ணுர் 1154 கழழேத்தல், கழலேத்தல் 1181 வளர்நகர், வளநகர் 1214 முமுவலி, முழுவலி 1411 கிறுமி, சிறுமி 1485 பொழியுப், பொழியும் 1757 இவரனிந்திர, இரவனிந்திர 1938 செடியாய், செடியாய 1997 திரைமேல, திரைமேல் 2082 கொள்கை, கொள்கை 2089 மாதாாள, மாதாாள 2142 வலைய, வலிய 2150 மார்பா, மார்பர் 2244 பரவும, பரவும் 2375 மேனியுதிர்மாசா, மேனியுதிர்மாசர் 2533 திருத்தியாய, திருத்தியாய் 2599 மதியமொடலை, மதியமொடலை 2604 கடலேரதம், கடலோதம் 2658 சமபந்தன், சம்பந்தன் 2700 பூவிணுலும், பூவினுனும் 2708 யுடையார்களா, யுடையார்கள் 2711 தநதம், தந்தம் 2716 புனைநதா, புனைந்தா 2720 பெணணும், பெண்ணும் 2759 தொமுதேத்தி, தொழுதேத்தி 2801 எமதொல், எம்தொல் 2831 பரிகிடு, பருகிடு 3139 வமபுலாம், வம்புலாம் 3149 சம்பாதன, சம்பந்தன 3164 மருவிடம, மருவிடம் 3222 அல்லத்தேவை, அல்லாத்தேவை 3289தோர்செல்வ, தேர்செல்வ 3299 திருவுளமே, திருவுள்ளமே 3338 தணடலை, தண்டலை 3346 தொலைத்தொரு, தொலைத்தரு 3367 கூறுமாலை, கூருமாலை 3368

தன்மையொர், தன்மையோர் 3371 தோற்றும் வாளெடும், தோற்று வாளெடும் 3389 நீதி, நீதீ 3389 ஒதி, ஒதீ 3562 இன்னசில, இன்னநிற 3578 இராவணன், இராவணன 3593 தென்றல்தரு, தென்றல்தெரு 3595 மரதரவர், மாதரவர் 3604 பங்கைய, பங்கய 3605 வுந்துதரு, வுந்துதகு 3660 டந்தமல், டந்தமில் 3660 வெந் தறல், வெந்திறல் 3792 கொலபுலி, கொல்புலி 3794 மறை யினர், மரையினர் 3885 பின்தாழ, பின்புதாழ 4026 மரசுண, மாசுண 4030 யானையாடு, யானெயாடு 4076 இறைவருறை, இறைவனுருறை 4091 னும்பாரார், னும்பரார் 4114 மாம்புலி யூருடை, மாம்புலியூருடை 4237 ஒளிவளர், ஒளிவளர் 4465 பெரும்புலவர், பெரும்புலர் 4640 பாரம, பாரம் 4823 மேல, மேய 5272 பலலம், பலஇலம் 5633 துஞ்சும்போதும, துஞ்சம் போதும் 5657 நல்லம அடைவதே, நல்லம் அடைவதே 5825 பற்றறுகரும், பற்றறுக்கும் 5883 ஐந்தமாந், ஐந்தமர்ந் 5977 எடுத்தலும், எடுத்தலும் 6143 புராணனே, புராணனே 6195 நாடொறும, நாடொறும் 6354 அணுகாதரவர், அணுகாதாரவர் 6402 மந்திரமுமானர், மந்திரமுந்தந்திரமுமானர் 6403 திசை யனைத்துமரய், திசையனைத்துமாய் 6482 இறைவனகணடாய், இறைவன்கண்டாய் 6507 மின்னிளெனி, மின்னிளெனி 6550 பொருந்தினன்கரண், பொருந்தினன்காண் 6583 முன்காயந்த, முன்காய்ந்த 6666 குறவைுடையார், குறைவுடையார் 6855 மட வாள் பாங்கா, மடவாள் பங்கா 6859 பசியில், பசியினல் 6944 செம்பொன்பன்னி, செம்பொன்பள்ளி 6985 ஆலதன்கீழ, ஆலதன் கீழ் 7013 இடிபங், இடபங் 7017 வாய்மூாடிகளே, வாய்மூரடி களே 7036 போக்னேனே, போக்கினேனே 7089 தேவனகாண், தேவன்காண் 7102 பொந்துதுடைய, பொந்துடைய 7103 கை யிலுண்டுழழ், கையிலுண்டுழல் 7130 மழுவொன்றுடையாா, மழு வொன்றுடையார் 7171 பெருமையாகியப், பெருமையாகிப் 7206 தீர்ந்தோம, தீர்ந்தோம் 7219 பாறேறு, பாரேறு 7235 சில பூதமு, சில்பூதமு 7254 கனியீந்ததுபோல், கனியீயந்துவபோல் 7257 பூசிறமறன்னே, பூசிற்றென்னே 7278 கோவணததராகி, கோவணத்தராகி 7279 பரவிக்கொண்டீ, பரவிக்கொண்டீர் 7286 வைத்தவள்ள, வைத்தவுள்ள 7320 கலிக்கசசி, கலிக்கச்சி 7366 குழைத்துவநதோடி, குழைத்துவந்தோடி 7367 படுகணடனே, படு கண்டனே 7428 நெல்லுபெற்றேன், நெல்லுப்பெற்றேன் 7445 வாடுமிவ்வாழ்க்கை, வாடுமின்வாழ்க்கை 7466 பொழில சூழ், பொழில்சூழ் 7508 துனைநீயலதே, துணைநீயலதே 7602 பாண

லங், பானலங் 7604 குரவனுரக். குரவனுறக் 7638 வெண்டமிழ்கள், வொண்டமிழ்கள் 7702 பாட்டூர்யலரும், பாட்டூர்பலரும் 7739 கூரெயிற்றேணங், கூரெயிற்றேனங் 7796 பணியவிடலாமே, பணியாவிடலாமே 7805 வல்லானையானே, வல்லானையாணே 7813 பழம்வீழ, பழம்விழ 7825 மறையிடத், மறையிடைத் 7830 அத்தனெந்தையிரா. அத்தனெந்தைபிரா 7844 முதலாச, முதலாக 7878 பெருக்குநப்பி, பெருக்குநம்பி 7881 கண்ணினே, கண்ணிணே 7928 கொங்கையங்கையற், கொங்கையங்கயற் 7951 தரமும், தாமும் 7959 காடாங்கா, காடரங்கா 8023 கிளேக்க, கிளேக்க 8062 சைவ்த்த, சைவத்த 8133 பாரிடங்கள், பாரிடங்கள் 8137 கர்தலசதிற், காதலத்திற் 8173 மருகில், மறுகில் 8178 சுழநீர்ப், சுழல்நீர்ப் 8206 மேனிறையுள்ன, மேனிறைவுள்ள 8231 குரவம், குரவம் 8232 நரகேச்சர, நாகேச்சர.

**பக்கத் தலைப்புக்களில் பிழை திருத்தம் :** பக்கம் 106ல் 809–1121 என்பதை 809–1046, 1058–1121 என்றும், பக்கம் 225ல் திருநாலூர் மயானம் என்பதை திருமயிலாப்பூர் என்றும், பக்கம் 695ல் மீயச்சூர் என்பதை மீயச்சூர் இளங்கோயில் என்றும் திருத்துக. **பாட்டெண்களில் பிழை, திருத்தம் :** 2364ம் பாட்டின் தமிழ் எண் கூ என்பதை கூ என்றும், பக்கம் 440ல் 3537 என்பதை 3357 என்றும், பக்கம் 470ல் 3558 என்பதை 3588 என்றும், பக்கம் 475ல் 2627 என்பதை 3627 என்றும், பக்கம் 861ல் 6627 என்பதை 6527 என்றும், பக்கம் 959ல் 70 1 என்பதை 7071 என்றும், பக்கம் 1003ல் தமிழ்எண் ௨ என்பதை க என்றும் திருத்துக. பக்கம் 1326 வரி 18ல் பெருமானேத, பெருமானேத்; பக்கம் 1327 வரி 12-ல் மளிதரா, மனிதரா ௩க 21 அடியினே அடியிணே, ௩௫ 22 ஒனிர் ஒ[illegible] ௪எ 24 கொடியேறிடை கொடியேரிடை ௪அ 2 முள்ளிநான் முள்ளிநாண், ௫க 22 மறையன் மறையவன், ௫கூ 25 செந்தை சிந்தை, அ௩ 3 நெல் நெய், அகூ 30 புகப்பெய்த்ார் புகப்பெய்தார், கூ௩ 9 தட்டியிடுக்கி தட்டையிடுக்கி. கூகூ 27 அப்பவோர் அப்புவோர், க௩க 16 பைஞுஞீவியீர் பைஞ்ஞீலியீர், க௩க 24 விருபபால் விருப்பால், க௩௨ 14 அரிகுலம அரிகுலம், க௩௨ 17 தோஙகும் தோங்கும், க௩அ 13 பயன்றேதும் பயின்றேதும், க௩கூ 23 வைபபுத் வைப்புத், க௪0 (கடைசி வரி) சருக்கதில சருக்கத்தில், க௪கூ 6 படைச்தான் படைத்தான், க௪கூ 26 டாறு டாறு. க௫கூ 32 தவத்திறகருளி, தவத்திற்கருளி, க௫எ 6 என்று என்ற, க௫எ 10, 3197, 3197), க௫கூ 10, 7699, 7267, 7699.

———

## இசைக்குறிப்பட்டவணை

பன்னிரு திருமுறைகளைப் பொருள் தெரிந்து சுவைத்து, சிறந்த இன்னிசையிற் பொருத்தி, ஓதிப் பல்லாயிரமக்களை இறைவன் திருவடி நினைவில் ஈடுபடுத்தியவரும், எனது கெழுதகை நண்பரும், 1942 ஆண்டு சிவபதமெய்தியவருமாகிய திருநெல்வேலி உயர்திரு. சுந்தர ஓதுவார் மூர்த்திகள் என்னிடம் நேரில் தெரிவித்தபடி இவ்வட்டவணை அமைந்துள்ளது. திருமுறைகளை ஓதுவதில் நிரம்பிய ஆர்வமுடையவரும், அரிய தமிழ்ச் சொற்பொழிவுகள் வாயிலாகச் சிவபக்தியை வளர்த்து வருபவரும், இருபது ஆண்டுகளாக நட்புமுறையில் என்னுடன் இயலும் போதெல்லாம் அளவளாவி இன்பம் ஊட்டுபவருமாகிய பிரஹ்மஸ்ரீ முடிகொண்டான் சுவாமிநாத ஐயரவர்களும் இவ்வட்டவணை திருத்தமானது என்று ஆமோதித்தனர். தமிழ் இசைச் சங்கம் சில ஆண்டுகளாகப் பண் ஆராய்ச்சி செய்து, ஆராய்ச்சியின் முடிபுகளை வெளியிட்டுள்ளது. உயர்திரு – பொன் ஓதுவாரவர்கள் "சித்தாந்தம்" மலர் 25 இதழ் 10ல் (1952ஆண்டு அக்டோபர் இதழில்) ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை வெளியிட்டுள்ளார். காரைக்குடி, உயர் திரு அ. நடேச தேசிகரவர்கள் "தேவாரப்பண்முறைக்கட்டளை விளக்கம்" என்றொரு நூலை 1951 ஆண்டில் வெளியிட்டுள்ளார். திருவண்ணாமலைப் பெருவிழாவிலும் வேறு பல தலங்களிலும் தேவாரம் ஓதும் உயர்திரு – புதுவை விநாயக முதலியாரவர்களும் தேவாரப் பண்சுர அமைப்பு பற்றிய நூல் ஒன்றைச் சில ஆண்டுகட்குமுன் வெளியிட்டனர். வேறு பல வெளியீடுகளும் உள்ளன. அந்தாளிக் குறிஞ்சி சாமாராகம், இந்தளம் நாதநாமக்ரியா, காந்தார பஞ்சமம் கேதாரகௌளம், காந்தாரம் நவரோஸ், குறிஞ்சி சுருட்டியிலும் எதுகுலகாம்போதியிலும் (அப்பர் குறுந்தொகை நாத நாமக்ரியா) கொல்லி நவரோஸ், கொல்லிக் கௌவாணம் நவரோஸ், கௌசிகம் பைரவி, சாதாரி பந்துவாளி, சீகாமரம் நாதநாமக்ரியா, செந்துருத்தி ஸ்ரீராகத்திலும் மத்யமாவதியிலும், செவ்வழி எதுகுலகாம்போதி, தக்க ராகமும் தக்கேசியும் காம்போஜி (திருத்தாண்டகம் ஹரிகாம்போஜி) நட்டபாடை நாட்டை, நட்டராகம் பந்துவராளி (நேரிசை நவரோஸ்) பஞ்சமம் ஆகிரி, பழந்தக்கராகம் ஆரபியிலும் சுத்தசாவேரியிலும், பழம்பஞ்சுரம் சங்கராபரணத்திலும் பைரவியிலும், பியந்தைக் காந்தாரம் நவரோஸ், புறநீர்மை பூபாளம், மேகராகக் குறிஞ்சி நீலாம்புரி, யாழ்மூரி அடாணா, வியாழக்குறிஞ்சி சௌராஷ்ட்ரம். சிற்சில பண்கள் வெவ்வேறு ராகங்களிற் சிலர் பாடுவதும் உண்டு. இக்காலத்தில் தேவாரப் பாடல்களைச் சிலர் சினிமா பாட்டுக்கள் சிலவற்றைப் போலவே பாடுதல் மிகவும் வெறுக்கத் தக்கது.

உ
சிவமயம்

# அரும்பொருளகராதி

ம. பாலசுப்பிரமணிய முதலியார் தொகுத்தது

இவ்வகராதியில் பற்பல அரும்பொருள்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. இதிற் குறிக்கப் பெற்றுள்ளவைகளைத் தவிர வேறு பொருள்கள் தேவாரத்தில் இல்லை என்று எவரும் எண்ணுதல் கூடாது. இதை அடிப்படையாகக் கொண்டு, தேவாரம் ஓதும் அன்பர்கள் பன்மடங்கு பெருக்கி இன்புற வேண்டும் என்பதே இச் சிறு பணியின் நோக்கம். ஏறக்குறைய 1300 ஆண்டுகட்கு முன்பு, தேவார முதலிகள் மூவர் காலத்தில், தமிழ் நாடு இருந்தநிலை, சைவ மக்கள் நாகரிகம், இறைவழிபாடு, திருக்கோயிற்பகுதிகள், திருவிழாக்கள், தமிழர் வள்ளன்மை, புலவர்கட்கு ஆதரவு, பெண்மக்கள் சிறப்பு, அரசர்கள் பற்றிய செய்திகள், தமிழகத்தின் நிலவள நீர்வளங்கள், அந்தணர் ஒழுக்கம், யோகிகள் ஞானிகள் சமய வாழ்க்கை, புறச்சமயிகள் பழக்க ஒழுக்கங்கள் முதலியவற்றைக் கண்ணாடியிற் காண்பது போலவே பார்க்கலாம். ஏறக்குறைய இக்காலத்திலிருந்த ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும் இவற்றையெல்லாம் கண்டு ஒப்பிட்டு மகிழலாம். இத்தகைய தெளிவான சான்றுகள் ஒப்பியல் ஆராய்ச்சித்துறையில் உழைக்கும் பேறிஞர்கட்குப் பெரும் பயனளிக்கும். பொதுவாக மேற்கூறிய செம்பொருள்களைக் கொண்டுள்ள தேவாரப்பாசுரங்கள், சிறப்பாகத் தமிழ்நாட்டில் சிவபெருமானிடத்திலும் சிவாலயங்களிடத்திலும் தமிழ்மக்கள் கொண்டிருந்த அன்பையும் அறிவையும் பெருக்கி, அவர்களுடைய உண்மையான இன்பவாழ்க்கையை நன்றாக நிலைபெறச் செய்தன என்பதை எவரும் எக்காலத்திலும் மறக்கலாகாது.

### அகச்சமயிகள்

காதலர்ற் சைவர் பாசுபதர்கள் வணங்கும்..,715, உருத்திர பல் கணத்தார் விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர்

கபாலிகள் தெருவினிற்பொலியும் திருவாரூர் 4358, வித்தகக்கோல வெண்டலை மாலை விரதிகள் 4366.

### அகச்சான்றுகள்

(அப்பர் சுவாமிகள் வரலாற்றில்) இடபம் பொறிக்க விண்ணப்பம் 5188, இறைவன் தம்மை வாளென்றழைத்தது 5727, 5728, ஐயாறடைந்த வழி (யாதும் சுவடுபடாமல்) 4179, கதவைத் திருமறைக்காட்டில் திறக்கப்பாடியது 5321, 5331, 5734, கயிலை சென்றது 4183, கல் மேல் மிதந்தது 4262, 5954, சமணர் அழிவெய்தியது 5818, சமணர் மறைத்த இலிங்கம் வெளிப்பட்டது 5810, சிவபூசை செய்தது 4164, 5050, சூலம் பொறிக்க விண்ணப்பம் 5186, சூலையால் வருந்தியது 4161, 4162, 4164, 4165, 4202, 4933, 7209, திருவடி சூட்டக் கேட்டது 5091, திருவடி சூட்டப்பெற்றது 4522, 6380-90, 6927, திருவடிமுத்தி எய்தியது 7215–24, நஞ்சுண்டது 4841, நீற்றறை குளிர்ந்தது 6112, படிக்காசு பெற்றது 5733, வயது முதிர்ந்தது 4919, 4920, (சம்பந்த மூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்) அரசர்களுடன் வழிபட்டு ஆசீர்வதித்தது 2777, 2779, ஆண்பனை குலை ஈன்றது 590, இறைவனை யாசித்துப் பொன் பெற்றது, (தந்தையாருக்கு வேள்வி செய்தற் பொருட்டு கொடுத்தது) 2834–2844, ஆலங்காட்டீசன் தன்னை வழிபடச் செய்தது 481, எடு ஆற்றில் எதிர் சென்றது 3382, 4023, எட்டை எரியில் இட்டது 3734–3744, ஓடம் விட்டது 2861, கதவடைக்கப்பாடியது 1862, சமணரைத் திருநீறு அழிக்கும் என்று உறுதி கூறியது 2397, சமணர்களை வென்றது 1023, 3829, சமணர்களோடு வாது செய்தது 3301, 3956–3966, சமணர்கள் வைத்த தீ பாண்டியர்க்காயது 3339, 3344, 3349, ஞானப்பால் உண்டது 3053, தந்தையார் பியல் மீதிருந்து பாடியது 2387, பாண்டியன் சுரம் தீர்த்தது 2188, பாண்டியன் தேவியாருக்குத் தைரியம் கூறியது 3211–3221, முத்திவேண்டி நின்றது 4144, வாசிதிரப்பாடிக் காசுபடி பெற்றது 992, 993, வீட்

டின்பம் தமது திருமணத்திற் கலந்து கொண்டார் அனைவருக்கும் அருளியது 4137-47, (சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாற்றில்) ஆவண ஓலை காட்டி இறைவன் ஆட்கொண்டது 7400, 7917, இல்லறம் நடத்தியது 8243, 8244, ஊன்றுகோல் கேட்டது 7777, ஊன்றுகோல் பெற்றது 8135, கண் இழந்தது 7924, 8131, 8189, 8198, கயிலை நாதன் நம்தமர் ஊரன் என்றது 8249, கயிலையில் திரு அணுக்கத்தொண்டு புரிந்தது 7942, காஞ்சிபுரத்தில் ஒரு கண்பெற்றது 7848–58, குருகாவூரில் பொதி சோறு பெற்றது 7515, கூடலை யாற்றூருக்கு வழிகாட்டி இறைவன் மறைந்தது 8086–95, சங்கிலி நாச்சியாரை இறைவன் மணம் செய்வித்தது 7752, சிற்றின்பத்தைத் திருவருள் நினைவோடு அனுபவித்தது 7683, தவநெறி வேண்டிப் பெற்றது 7347–57, தாய்தந்தையர் சிவபதமடைந்தது 7437, திருவடி தீக்ஷை செய்யப்பெற்றது 7607, திருவாரூரில் மற்றைக்கண் வேண்டியது (பெற்றது) 8189, தூதனாக இறைவன் உதவிசெய்தது 7919, 8084, தோழனாக இறைவன் திருவிளையாடல் புரிந்தது 7751, 7919, 8243, நெல் பெற்றுக் குண்டையூரிலிருந்து திருவாரூரில் தமது மாளிகையிற் சேர்ப்பதற்கு ஆட்களை வேண்டிப் பெற்றது 7423–32, நோயால் வருந்தியது 7934, 7936, நோய் தீரப்பெற்றது 7975, 7977, பரவை நாச்சியாரை இறைவன் மணம் செய்வித்தது 7751, பிச்சை யெடுத்துத் திருக்கச்சூரீசன் சோறளித்தது 7639,7640, 7644, பொன்னை இறைவன் திருமுதுகுன்றில் அளித்தது 7474, பொன்னைத் திரு ஆரூர்க் கமலாலயத்தில் எடுத்தது 7473–81, பொன்னையும் ஆடைகளையும் பெற்றது 7392, 7521, 7687, மகிழமரத்தின்கீழ் சபதம் 8134, 8135, மனைவாழ்க்கையை இறுதியில் வெறுத்தது 7263, யானையைக் கயிலைநாதன் அனுப்பியது 8241–49, யானைமீது கயிலை செல்லும் வழியில் ஓதிய பதிகத்தை அஞ்சைக்களத்தீசனுக்கு அறிவிக்குமாறு கடலரையனுக்குக் கட்டளையிட்டது 8250, வன்தொண்டன் என்ற பெயர் பெற்றது 7392, வேந்தர் மூவரும் உடனிருப்பத் திருப்பரங்குன்றில் கோயில் வழிபாடு செய்தது 7245.

## அகத்திய முனிவர் சிவபூசை செய்து அருள் பெற்றது

*மங்கலக்குடி யீசனை... அகத்தியனும் அர்ச்சித்தாரன்றே 5960, சந்திமூன்றிலும் தாபரம் நிறுத்தி சகளி செய்திறைஞ் சகத்தியர் தமக்குச் சிந்து மாமணியணிதிருப்பொதியில் சேர்வு நல்கியசெல்வம்7893.*

## அகத்துறைப் பாடல்கள்

3, 6, 603–606, 608, 610, 645–55, 678–89, 787–97, 820–29, 1655–64, 1819–28, 3492–3502, 3872–78,3912-22, 4210–19, 4272–81, 5101–10, 5295–97, 5513–22, 5625–33, 5675–89, 5758–69, 6095–6100, 6330–39, 6370–79, 6501, 6593–99, 6691, 6694–98, 6826–30, 7596–7605, 8150.

## அகப்பூசை

*சினமலி யறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவி யமனன்உணர்வொடு மலர்மிசையெழு தருபொருள் நியதமும் உணர்பவர் தனதெழிலுருவது கொடு அடைதரு பரன் 221, பத்திப்பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே...நாலந்தக் கரணமும் ஒரு நெறியாய்ச் சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்த மெய்ப்பரம்பொருள் சேர்வார் 1365, அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத்துள் இருக்கும் புராணர் 1421, சிந்தைவெள்ளப் புனலாட்டி செஞ்சொல் மாலை அடி சேர்த்தி எந்தை பெம்மான் என்னம்மான் என்பார் 4313, காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக நேயமே நெய்யும் பாலா நிறையநீர் அமைய ஆட்டிப் பூசனை ஈசனுர்க்குப் போற்றவிக் காட்டினேமே 4897, உயிராவண மிருந்து உற்று நோக்கி உள்ளக் கிழியின் உருவெழுதி உயிராவணம் செய்திட்டுன் கைத்தந்தால் உணரப்படுவாரோ டொட்டி வாழ்தி 6495.*

## அஞ்சாமை

*கூற்றத்தார் பார்க்கின்றூர் கொண்டு போவார்... அஞ்சல் நெஞ்சே 2325, காலன் அங்கி...நல்ல நல்ல 2391, இடியும்*

யின்னும் அஞ்சிடும் 2392, பாலன் ஈங்கிவன் என்று நீ பரிவெய்திடேல் 3211–21, உடையார் ஒருவர்தமர் நாம் அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதுமில்லை 4169–78, மண்பாதலம் புக்கு மால்கடல் மூடி மற்றேழுலகும் விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே 5079, வானம் துளங்கில் என் மண் கம்பமாகில் என்...ஊனம் ஒன்றில்லா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே 5215, நமனை யஞ்சோம் 7205, நாவலந் தீவகத்தினுக்கு நாதரான காவலரே விடுத்தாரேனும் கடவமலோம் 7210, தருமனுர் தமர் செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான் 8137–46.

## அடியார் பெருமை தன்மை இலக்கணம்

பெரியார் கழல் என்றும் தொழுதேத்த உள்கிலாவி அவர் சிந்தையுள் நீங்கா ஒருவன் 14, அருள்பேணிப் பொய்யிலாத மனத்தார் 16, உரைகளெல்லாம் உணர்வெய்தி நல்ல உத்தமராய் உயர்ந்தார் 46, மெய்யராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து செய்யரானுர் 540, கொள்கையினுல் உயர்ந்த நிறையுடையார் 559, அடியார்பண்பு இகழ்வார்கள் ஆதர்களே 1288, பத்திப் பேர் வித்திட்டே பரந்த ஐம்புலன்கள் வாய்ப்பாலே போகாமே... பரம்பொருள் சேர்வார் 1365, அகனமர்ந்த அன்பினராய் அறு பகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர் கோயில் 1421, வீடு ஞானமும் வேண்டுதிரேல்...பாடு ஞானம் வல்லார் அடி சேர்வது ஞானமே 1490, செடிகொள் நோயின் அடையார் திறம்பார் செறுதீவினை கடிய கூற்றமும் கண்டகலும்...அடியார் அடியார்கட்கே 1544, கொன்றைத் தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருள் அலவே 1912, நமன்தூதர் ஆலமிடற்றான் அடியார் என்று அடா அஞ்சுவரே 1986, பத்தியாரத் தொழுதேத்த முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்றம் முடுகாதே 2108, கண்முத்தரும்பக் கழற்சேவடி கைதொழுவார்கள் உள்முத்தரும்ப உவகை தருவான் 2126, அடியவர்மேல் வினை கனலிடைச்செதிள்

அன்றே 2590, தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி எளிதாமே 2603, தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கிச் சுரும்பார் மலர் இண்டை கட்டி வழிபாடு செய்யுமிடம் 2703, நாவினாலே நவின்றேத்தல் ஓவார் செவித்துளைகளால் யாவும் கேளார் அவன் பெருமை யல்லால் அடியார்கள் 2717, தொண்டர்கள் குதியும் கொள்வர் விதியும் செய்வர் 2785, சொல் தெரியாப் பொருள் சோதிக்கப்பால் நின்ற சோதிதான் மற்று அறியா அடியார்கள் தம் சிந்தையுள் மன்னுமே 2898, அஞ்சுபுலன் வென்று அறுவகைப் பொருள் தெரிந்து எழு இசைக்கிளவியால் வெம்சினம் ஒழித்தவர்கள் 3644, பொய்யன்பிலா அடித்தொண்டர்க்குத் தொண்டாராம் புண்ணியமே 5142, பாவுமின் பணிமின் பணிவாரொடே விரவுமின் விரவாரை விடுமினே 5658, எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்படிகால் எமையாண்ட பெம்மான்...அடியார்க்கடியேன் ஆவேனே 7762, அழுமலர்க்கண் இணையடியவர்க்கல்லால் அறிவரிது அவன் திருஅடியிணை இரண்டும் 7826, விற்றுக்கொள்வீர் ஒற்றியல்லேன் விரும்பி ஆட்பட்டேன் 8189.

அடைமொழிச் சிறப்பு

சம்பந்தர் தேவாரத்தில் :—(குலச்சிறையார்) வெற்றவே அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளை நீறணியும் கொற்றவன் தனக்கு மந்திரியாய குலச்சிறை 4091, கணங்களாய் வரினும் தமியராய்வரினும் அடியவர் தங்களைக் கண்டால் குணங்கொடுபணியும் குலச்சிறை 4093, நலமிலராக நலமதுண்டாக நாடவர் நாடறிகின்ற குலமிலராகக் குலமதுண்டாகத் தவம்பணி குலச்சிறை 4095, நாவணங்கியல்பாம் அஞ்செழுத்தோதி நல்லராய் நல்லியல்பாகும் கோவணம் பூதிசாதனம் கண்டால் தொழுதெழு குலச்சிறை 4097, தொண்டராயுள்ளார் திசை திசை தோறும் தொழுது தன்குணத்தினைக் குலாவக் கண்டு நாள்தோறும் இன்புறுகின்ற குலச்சிறை 4099, (கோச்செங்கட் சோழன்) செருவிலாரும் புலி செங்கயலானையினான் 2771, தென்னன்கோழி எழில்வஞ்சியும் ஓங்குசெங்கோலினான் மன்னன் 2772, வடமனீடு புகழ்ப்பூழியன்

தென்னவன் கோழிமன் அடல்மன் 2773, அந்தண்மா மானதன் நேரியன் செம்பியன் 2774, சீரினல் அங்கொளிர் தென்னவன் செம்பியன் வில்லவன் 2777, ஒண்புலால் வேல்மிகவல்லவன் ஒங்கெழிற்கிள்ளி 2778, குரிசில் செங்கண்ணவன் 2998, செங்கண்நல் இறை 3002, செம்பியர் செறிகழல் இறை 3006, (சண்டேசுவரர்) பீரடைந்த பாலதாட்டப் பேணுதவன்தாதை வேரடைந்து பாய்ந்த தாளை வேர்த்தடிந்தான் 521, வந்தமணலால் இலிங்கம் மண்ணியின் கட் பாலாட்டும் சிந்தைசெய்வோன் 670, முதலிய பல (சிறுத்தோண்டர்) பொடி நுகரும் சிறுத்தொண்டர்665, கன்னவில்தோள் சிறுத்தொண்டன் 3472, சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன் 3473, தேனமர்தார்ச் சிறுத்தொண்டன் 3474, சீருலாம் சிறுத்தொண்டன் 3475, செருவடிதோட் சிறுத்தொண்டன் 3477, சீராளன் சிறுத்தொண்டன் 3478, சிறப்புலவன் சிறுத்தொண்டன் 3479, வெந்த நீறணிமார்பன் சிறுத்தொண்டன் 3480, (திருநீலகண்ட யாழ்ப்பாணர்) தானு எனையாளுடையான் தன் அடியார்க் கன்புடைமை பாணன் 675, தக்கபூமனைச் சுற்றக்கருளொடே தாரமுய்த்தது பாணற்கருளொடே 4040, (நமிநந்தியடிகள்) தாவியவனுடனிருந்தும் காணுத தற்பரனை ஆவிதனில் அஞ்சொடுக்கி அங்கணனென்றுதரிக்கும் நாவியல்சீர் நமிநந்தியடிகள் 672, (நீலநக்கர்) நிறையினுர் நீலநக்கன் நெடுமாநகரென்று தொண்டர் அறையுமூர் 3426, (மங்கையர்க்கரசி) மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக்கை மடமானி பங்கயச் செல்வி பாண்டிமாதேவி 4090, செந்துவர்வாயாள் சேலனகண்ணுள் சிவன் திருநீற்றினை வளர்க்கும் பந்தணை விரலாள் பாண்டிமாதேவி 4092, செய்யதாமரைமேல் அன்னமேயனைய சேயிழை திருநுதற் செல்விபையாவல்குற் பாண்டிமாதேவி 4094, முத்தின்தாழ்வடமும் சந்தனக் குழம்பும் நீறும் தன்மார்பினில் முயங்கப் பத்தியார்கின்ற பாண்டிமாதேவி 4096, மண்ணெலாம் நிகழ மன்னனுய் மன்னுமணிமுடிச் சோழன் தன் மகளாம் பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி 4098, பன்னலம் புணரும் பாண்டிமாதேவி 4100, மானினேர்விழி மாதராய் வழுதிக்கு மாபெருந்தேவி 3211, (முருக நாயனர்) சாந்தமும்

புகையும் கொண்டு கொண்டடிபரவிக் குறிப்பறி முருகன் செய் கோலம் 2466, மூசுவண்டறை கொன்றை முருகன் முப்போதும் செய்முடிமேல் வாசமாமலருடையார் 2468, (அப்பர் தேவாரத் தில்:) (அப்பூதியடிகள்) அஞ்சிப்போய்க்கலி மெலிய அழலோம்பும் அப்பூதி 4281, (அமர்நீதி நாயனர்) நல்லூரகத்தேகீட் கொண்ட கோவணம் காவென்று சொல்லிக் கிறிபடத்தான் வாட்கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கொர் வாணிகனை 5107, (கணம் புல்லர்) நல் அருந்தவத்த கணம்புல்லர் 4642, (கண்ணப்பர்) காப்ப தோர் வில்லும் அம்பும்...4640, குவப்பெருந்தடக்கைவேடன்... தவப்பெருந்தேவு செய்தார் 4794, (சாக்கிய நாயனர்) கல்லினல் எறிந்து கஞ்சிதாமுணும் சாக்கியனர் 4639, (திருஞானசம்பந்தர்) திறக்கப்பாடிய என்னினும் செந்தமிழ் உறைப்புப்பாடி அடைப் பித்தார் 5734, (நமிநந்தியடிகள்) அடித்தொண்டன் நம்பிநந்தி 5145, பொடிக்கொண்டு பூசிப்புகுந்தொண்டர் பாதம் பொறுத்த பொற் பால் அடித்தொண்டன் நந்தியென்பான் 5147, (மார்க்கண்டேயர்) சேலின் நேரனைய கண்ணார்திறம்விட்டுச் சிவனுக்கன்பாய்ப் பாலும் நல்தயிர் நெய்யோடு பலபல ஆட்டி என்றும் மாலினைத் தவிரநின்ற மார்க்கண்டன் 4470, நீற்றினை நிறையப்பூசி நித்தலும் நியமம் செய்து ஆற்றுநீர் பூரித்தாட்டும் அந்தணனர் 4635, தோடுலா மலர்கள் தூவித்தொழுதெழுமார்க்கண்டேயன். 4787, மருள்துயர் தீர அன்றர்ச்சித்தமாணி 5174, பதத்தெழுமந்திரம் அஞ்செழுத் தோதிப் பரிவினெடும் இதத்தெழுமாணி 5175, வானவர்கோனை மனமகிழ்ந்து குறித்தெழுமாணி 5177, வானவர்கோனைக் குளிர்ந் தெழுந்து பழக்கமொடர்ச் சித்தமாணி 5178 முதலியபல (சுந்தரர் தேவாரத்தில்) கோட்புலி நாயனர் கூடாமன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி 7379, திருஞானசம்பந்தர் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் 7787, நாளும் இன்னிசையால் தமிழ்பரப் பும் ஞானசம்பந்தன் 7866, நல்லிசை ஞானசம்பந்தன் 7905, தமிழ் ஞானசம்பந்தன் 8025, ஊனமில்காழி தன்னுள் உயர்ஞானசம்பந் தர் 8217, திருநாவுக்கரசர் இணைகொள் எழெழுநூறு இரும்பனு வல் ஈன்றவன் திருநாவினுக்கரையன் 7890, நாவின்மிசையரை

யன் 8025, சண்டேசுவர நாயனர் அணிகொள் ஆடை அம்பூண் அணிமாலை அமுது செய்தமுதம் பெறுசண்டி 7890, தண்டியடிகள் தண்டுடைத்தண்டி 7962, புகழ்த்துணை நாயனர் அகத்தடிமை செய்யும் அந்தணன்...நன்றிப் புகழ்த்துணை 7312, திருத்தொண்டத்தொகையுள்வரும் அடைமொழிகள் இல்லையே என்னத இயற்பகை, வெல்லுமாமிகவல்ல மெய்ப்பொருள், விரிபொழில் சூழ்குன்றையார் விறன்மிண்டர், அல்லிமென்முல்லை யந்தார் அமர்நீதி 7617, இலைமலிந்த வேல்நம்பி எறிபத்தர், கலைமலிந்தசீர்நம்பி கண்ணப்பர், மலைமலிந்ததோள்வள்ளல் மானக்கஞ்சாறன், எஞ்சாதவாள் தாயன், அலைமலிந்தபுனல் மங்கை ஆனயர் 7618, மும்மையால் உலகாண்ட மூர்த்தி, செம்மையே திருநாளைப் போவார், மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினல் எறிந்த அம்மையான் அடிச்சண்டிப் பெருமான் 7619, திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன், பெருநம்பி குலச்சிறை, ஒருநம்பி அப்பூதி, ஒலிபுனல் சூழ் சாத்தமங்கை நீலநக்கர், அருநம்பி நமிநந்தி 7620, வம்பறுவரி வண்டு மணநாறமலரும் மதுமலர் நற்கொன்றையான் அடியலாற் பேண எம்பிரான் சம்பந்தன், நம்பிரான் திருமூலன், நாட்டமிகு தண்டி, அம்பரான் சோமாசிமாறன் 7621, வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே மறவாது கல்எறிந்த சாக்கியர், சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலி, கார்கொண்ட கொடைக் கழறிற்றறிவார், ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோன் 7622, பொழிற்கருவூர் துஞ்சிய புகழ்ச் சோழர், மெய்யடியான் நரசிங்கமுனையரையர், விரிதிரை சூழ்கடல் நாகை அதிபத்தர், கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன், கழற்சத்திவரிஞ்சையர்கோன், 7623, கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண்டிருந்த கணம்புல்லநம்பி, நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன், துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றும் சோதித் தொன்மயிலை வாயிலான், அறைக்கொண்ட வேல்நம்பி முனையடுவார்7624, கடல் சூழ்ந்த உலகெல்லாம் காக்கின்ற பெருமான்காடவர்கோன் கழற்சிங்கன், மடல்சூழ்ந்ததார்நம்பி இடங்கழி, தஞ்சை

மன்னவனும் செருத்துணை, புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிபொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணை, அடல்சூழ்ந்தவேல் நம்பிகோட்புலி 7625, மன்னியசீர் மறைநாவன் நின்றவூர்ப்பூசல், வரிவளையாள்மானி, தென்னவனுயுலகாண்ட செங்கணர் 7627.

## அந்தணர் மறையோர் தன்மை தொழில் பெருமை

பொய் மொழியா மறையோர் 34, பூமரு நான்முகன் போல்வர் 40, அங்கமும் வேதமும் ஓதும்நாவர் 55, நெய்தவழ் மூஎரிகாவல் ஓம்புநேர்புரி நூல் மறையாளர் 56, வேதம் பயின் றேத்திப் புலன்கள் தமைவென்றூர் புகழவர் 170, வந்தியோடு பூசையல்லாப் பொழ்தின் மறை பேசிச் சந்திபோதிற் சமாதி செய்யும்...721, கற்றுஆங்கு எரி ஓம்பிக் கலியை வாராமே செற்றூர் 864, ஒன்றும் இருமூன்றும் ஒருநாலும் உணர்வார்கள் 1838, கலிகடி அந்தணர் 7383, திருமேவு செல்வத்தார் தீமூன்றும் வளர்த்த திருத்தக்க அந்தணர்கள் 7629.

## அபிஷேகப் பொருள்கள்

பாலினல் நறு நெய்யால் பழத்தினல் பயின்றூட்டி 660, தேன் நெய் பால் தயிர் தெங்கிளநீர் கரும்பின் தெளிஆன் அஞ்சாடும் முடியான் 1528, ஆடினுய் நறுநெய்யொடு பால் தயிர் 2801, பாலொடு நெய் தயிர் பலவும் ஆடுவர் 2956, சலம் பூவொடு தூபம் மறந்தறியேன் 4164, போதொடுநீர் சுமந்தேத்திப் புகுவார் 4179, இட்டுக் கொள்வன பூவுள நீருள 6127. நுரைதீர்புனல் 8221.

## அப்பர் சுவாமிகளைக் குறிக்குமா ?

அலையார் புனலை நீத்தவரும் தோரும் அன்பு செய்யா நிலையா வண்ணமாயம் வைத்த 699.

## அப்பர் சுவாமிகள் அன்பின் பெருமை

இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும் 4159, நினையாதொருபோதும் இருந்தறியேன் 4160, சலம்பூவொடு தூபம் மறந்தறியேன்...உன்நாமம் என்நாவில் மறந்தறியேன் 4164, அளவு படாததொரன்போடையாறடைகின்றபோது 4189,

அழலார் வண்ணத் தம்மானை அன்பில் அணைத்து வைத்தேனே 4309, என் அன்பு ஆலிக்குமாறு கண்டின்புற இன்னம் பாலிக்குமோ இப்பிறவியே 5229, எண்ணித் தம்மை நினைந்திருந்தேனுக்கு அண்ணித்திட்டு அமுதூறும் என் நாவுக்கே 5392.

## அப்பர் சுவாமிகள் இல்லறம் நடத்தினரா ?

(இல்லை என்பது மரபு, உண்டென்பார் கூறும் சான்றுகளுட் சில கீழ்வருவன) உயர்ந்தேன் மனை வாழ்க்கையும் ஒண்பொருளும் 4165, வலித்தேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன் 4166, தாழ்குழல் இன்சொல் நல்லார் தங்களைத் தஞ்சம் என்று ஏழையேனாகி நாளும் என் செய்கேன் 4660, மானுலாம் மழைக்கணார் தம்வாழ்க்கையை மெய் என்றெண்ணி நானெலாம் இனையகாலம் நண்ணிலேன் 4812, மணத்திடை ஆட்டம் பேசி மக்களே சுற்றம் என்னும் கணத்திடை ஆட்டப்பட்டு...வாழமாட்டேன் 4835, மக்களே மணந்ததாரம் அவ்வயிற்றவரை ஓம்பும் சிக்குளே அழுந்தி... 4923, சுற்றமும்துணை நன்மடவாளொடு பெற்ற மக்களும் பேணல் ஒழிந்தனர் 5929, எழுதுபாவை நல்லார் திறம்விட்டு நான் 6119.

## அப்பர் சுவாமிகள் சமணராயிருந்தது

குண்டனாய்த் தலைபறித்துக் குவிமுலையார் நகைநாணுதழிதர்வேனை 4203, பல்லுரைச் சமணரோடே பலபல காலமெல்லாம் சொல்லிய செலவு செய்தேன் 4548, திருந்தா அமணர் தம்நீ நெறிபட்டுத் திகைத்து முத்திதரும் தாளிணைக்கே சரணம் புகுந்தேன் 5080, முன் அறவுரை காட்டி அமணரொடே காதுவித்தாய் 5114, (5140, 6271, 7148 முதலிய பல).

## அரக்கர் அவுணர் அசுரர்

அந்தகாசுரன் 2763, 2891, 3209, இடும்பன் 174, இரணியன் 223, இராவணன் (சம்பந்தர் பதிகந்தோறும் 8ம் பாசுரம்; அப்பர் பதிகந்தோறும் கடைசி பாசுரம், சில பதிகங்களில் பாசுரம் தோறும்), சம்பரன் 4112, சலந்தரன் 4112, (பலவேறு பாடல்களிலும்) சூரபத்மன் 2135, 5878, (பல) தாரகன் 1363, 3984, மகிஷன் 2274, வாணாசுரன் 4049.

## அரசர்கள் பற்றிய குறிப்புக்கள்

இராமபிரான் 1937, 2901, 2902, 3150, 6833, முதலிய பல; இலக்குமணன் 3150, கிருஷ்ணன் 4294, 6274, 7628, 7812 முதலிய பல; கோச்செங்கட் சோழன் 1714, 2152, 2774, 2990, 3002, 3336, 4637, 4765, 4789, 6448, 6477, 6899, 6994, 7889, 7897 முதலிய பல; சண்டன் 686, சிபி 3521, சிலம்பன் 684, சுக்ரீவன் 3150, தருமன் 681, நந்தன் 688, நளன் 1821, நாகரையன் 687, நெடுமாறன் 7614, பகீரதன் 3542, 4113, 8122, பரசுராமன் 7891, பல்லவமன்னர் 701–711, 4001–4011, 8140, பாண்டவர் 671, பாண்டு 5945, பாரி 7565, புரூரவா 4084, மகேந்திரவர்மன் 7212, மாவலி 1095, 4641, 5184; மூர்த்தி (மும்மையால் உலகாண்ட) 7619, மூவேந்தர் 690, 694, 2777, 2779, 7245, ராஜசிம்மன் (காடவர்கோன் கழற்சிங்கன்) 7625, வாலி 3783, 3784, விஜயன் (= அர்ச்சுனன்) 211, 520, 671, 4229, 6585, 7790, 7810, 7899 (முதலிய பல), வீமன் 7565.

## அரசர் போகம்

ஏறுமால்யானையே சிவிகை யந்தளகம் ஈச்சோப்பி வட்டில் மாறிவாழ் உடம்பினர் 2330, (73, 122 முதலியன).

## அரிஅயன் குறிப்புக்கள்

தாள்நுதல் செய்திறை காணிய மாலொடு தண்தாமரையானும் நீள்நுதல் செய்தொழிய 9, பிரமனொடுமாலும் தொழுதேத்த ஏகம் வைத்த எரியாய் மிக ஓங்கிய எம்மான் 20, பணியுடைமாலும் மலரினோனும் பன்றியும் வென்றிப் பறவையாயும் நணுகலரிய...நம்பெருமான் 73, அயனொடும் எழில் அமர் மலர்மகள் மகிழ்கணன் அளவிடல் ஒழியவொர் பயமுறுவகை தழல் நிகழ்வதோர் படியுருவதுவரவரன் முறைசயசய என மிகுதுதி செய வெளி உருவிய அவன் 214, கனகம் அனையான் 269, மேலதுநான்முகன் எய்தியதில்லை கீழது சேவடிதன்னை நீலது வண்ணனும் எய்தியதில்லை 478, சரியாநாவின் வேதகிதன் தாமரை நான்முகத்தன் பெரியான்பிரமன் 678, அங்கம் ஆறும் வேதம் நான்கும்

ஓதும் அயன் 709, மொய்ஒளி உந்தியில் வந்திங்கு அருமறை யீந்த உரவோன் 1088, அறவுருவேத நாவன் அயன் 2385, பாலாடுமேனி கரியான் 2429, விளங்கொளி அரவணையான் 2461, விரிகடல் துயின்றவன் 2494, குறிய மாணுருவாகிக் குவலயம் அளந்தவன் 2504, பைகொள் பாம்பணைப் பள்ளிகொள் அண்ணல் 2591, விரிபோதின் மல்கும் திருமகள் தனைமேவினன் 2700, முன்னம் தாவி அடிமூன்றளந்தவன் 2788, வரைகுடையா மழை தாங்கினன் 2886, தாமுகமாக்கிய அசுரர் தம்பதி வேமுகமாக்கிய விகிர்தர் கண்ணன் 2940, கன்றுருக்கையிலேந்தி நல்விளவின் கனிபட நூறி 3197, குளிர் கொண்டல் நிறத்தவன் 3457, எண் பெரிய பண்படை கொள்மால் 3522, ஏன உருவாகி மண் இடந்த இமையோன் 3665, வெல்பறவைக் கொடிமால் 3876, பூமகனும் அவனைப் பயந்த புயலார் நிறத்தானும் 3953, பையஞ்சுடர் விடு நாகப்பள்ளி கொள்வான் 4199, ஆகம்பத் தரவணையான் 4228, தடமலர் ஆயிரங்கள் குறை வொன்றதாக நிறைவென்று தன்கண் அதனல் உடன் வழிபாடு செய்த திருமால் 4301, அரி அலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே 4556, நீற்றினை நிறையப்பூசி நித்தல் ஆயிரம் பூக்கொண்டு ஏற்றுழி ஒருநாள் ஒன்று குறையக் கண் நிறையவிட்ட ஆற்றலுக்காழி நல்கி அவன் கொணர்ந்திழிச்சுங் கோயில் வீற்றிருந்தளிப்பர் 4784, தேசமாகுந் திருமாலோர்பங்கன் 4918, கோன் நாரணன் அங்கம் தோள்மேற் கொண்டு6717, திருமகள்கோன் நெடுமால் பல நாள் சிறப்பாகிய பூசனைசெய் பொழுதில் ஒருமலர் ஆயிரத்திற் குறைவால்...7308.

## அரிய சொற்கள் சில

அரட்டு 6243, இறவு 1185, ஈளை 727, உசிர் 7724, உள்வேர் 582, எச்சம் 885, எச்சும் 935, எத்தர் 2636, 3340, எண் 1433, 2545, 3127, ஓமம் செய்தல் 5409, ஓலக்கச் சூளைகள் 5123, கரிசு 853, கருக்கு 3059, கல்லவடம் 2894, கவினி 2377, காணிய 9, 1674, குஞ்சித்து 2881, குடசம் 3756, கொற்று 7267, சங்கநிதி 7182, சமைவு 3135, சாயினை 7559, சுவண்டாய் 300,

செடிகள் 1024, செடிச்சியர் 3789, திரிசு 7466, 8243, தெருவம் 2422, தோழம் 804, நாதி 6444, பச்சை 2778, படிதம் 2138, படுதம் 2337, பதுமநிதி 7182, பருக்கு 955, 7177, பிலயம் 2240, பிறவு 1185, பின்றி 2173, புல்லம் 1741, பெங்கு 880, மாமடி 1836, முசலம் 2335, வணக்கி 2335, விலைத்து 1251, வேர் 521. வேர்ப்பது 2873.

அர்ச்சனைகள்

சந்திபல அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அழகன் 3603, செந்தமிழர் தெய்வமறை நாவர் செழுநற்கலை தெரிந்த அவரோ டந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அரனூர் 3660, கைகாள் கூப்பித் தொழீர் கடிமாமலர் தூவி நின்று 4246, ஆறுடைச் சடையினனை அர்ச்சித்தான் அடியிணைக்கீழ் 4638, மருள்துயர்தீர அன்றர்ச்சித்தமாணி மார்க்கண்டேயன் 5174, இயக் கர்கின்னரர் ஞமனொடு வருணர் இயங்கு தீவளி ஞாயிறு திங்கள் மயக்கமில் புலிவானரம் நாகம் வசுக்கள் வானவர் தானவர் எல்லாம் அயர்ப்பொன்றின்றி நின்திருவடியதனை அர்ச்சித்தார் பெறும் ஆரருள் கண்டு 7789.

அறம்பொருள் இன்பம் வீடு

வடமரநிழலினில்...அறநெறி மறையொடும் அருளியபரன் 210, நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு மாலடைந்த நால்வர் கேட்க நல்கியநல் அறத்தை 515, ஐம்புலனும் அழிந்த சிந்தை அந்தணாளர்க்கறம் பொருள் இன்பம் வீடுமொழிந்த வாயான் முக்கண் ஆதி 575, முனிவருடனாய் அறநான்கருள் செய்த காதார் குழையர் 738, அறங்கிளரும் நால்வேதம் ஆலின்கீழ் இருந்தருளி 1411, (அப்பர் இல்லறம்நடத்தினாரா என்ற தலைப்பின்கீழ்ப் பார்க்க) மான்மறித்தனைய நோக்கி மடந்தைமார் மதிக்கும் இந்த மானுடப் பிறவி வாழ்வு 7298, மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன் 8243.

அறிவு

ஆண்டகழல் தொழில் அல்லது அறியார்அவர் அறிவே 188, அடிகளதடிதொழும் அறிவலதறியமே 201, பரமனை நினைபசை

யொடுமிகு கலைபயில் புலவர்கள் 238, கல்லா நெஞ்சின் நில்லா னீசன் 3224, பிறைநுதலீர் உமைப்பேணுதல் கற்றறிவோர்கள் தம்கடனே 3836, அறிவு இலங்கு மனத்தானை அறிவார்க்கன்றி அறியாதார் தம்திறத்தொன் றறியாதானை 7149, ஐயன் எங்கள் பிரானை அறியாதார் அறிவென்னே 8102.

## அன்பு

வம்மின் அடியீர் நாள்மலர் இட்டுத் தொழுதுய்ய உம்அன்பி னொடு எம்அன்புசெய்து ஈசன் உறைகோயில் 110, அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்றைம்புலனும் அடக்கி...மிழலை1421, அரவநீள்சடையானை உள்கிநின்றுதரித்து முன் அன்புசெய்தடிபரவு மாறுவல்லார் 2028, கையால்தொழுது தலைசாய்ந்துள்ளம் கசிவார் கள் 2115, கண்முத்தரும்பக் கழற்சேவடி கைதொழுவார்கள்2126, காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார் 3320, அழையாவும் அரற்றாவும் அடிவீழ்வார் 3485, அன்பெனும் பாசம்வைத்தார் 4454, தொண்டர்கூடித் தொழுது அழுது ஆடிப்பாடும் அன்பலால் பொருளுமில்லை ஐயன் ஐயாறனார்க்கே 4557, என் அன்பு ஆலிக்கு மாறு கண்டு இன்புற 5229, பிறர் உள்ளத்தில் அளக்கும் தன்னடி யார் மனத்து அன்பினை 5438, அடிகளை நினைந்திட்டு அழுமலர்க் கண்ணிணை அடியவர்க்கல்லால் அறிவரிது அவன்திருவடி 7826, வாரத்தால் உனநாமங்கள் பரவி வழிபட்டுன் திறமே நினைந்துருகி ஆர்வத்தோடு வந்து அடியிணை அடைந்தேன் 7899.

## அஷ்டகுணங்கள்

எழிசையும் எண்குணங்களும்...தலைவன் 1405, எட்டுக்கொ லாம் அவர்ஈறில் பெருங்குணம் 4342, எண்குணவன்காண் 5861, எட்டுவான்குணத்து ஈசன் 6109, பரமர்போலும் எண்குணத்தார் 6405, இறையவனை மறையவனை என்குணத்தினனை 7630.

## அஷ்டபுஷ்பங்கள்

அட்டமாமலர்சூடி...மறைக்காடரோ 5315, எட்டுநாண்மலர் கொண்டு அவன்சேவடி மட்டலர் இடுவார்வினை மாயுமால் 5770,

அணிபெறுவடமரநிழலினிலமர்வொடுமடியிணையிருவர்கள்
பணிதரஅறநெறிமறையொடுமருளியபரனுறைவிடமொளி
மணிபொருவருமரகதநிலமலிபுனலணைதருவயலணி
210 திணிபொழில்தருமணமதுநுகரறுபதமுரல்திருமிழலையே.

வசையறுவலிவனசரவுருவதுகொடுநினைவருதவமுயல்
விசையனதிறன்மலைமகளறிவுறுதிறலமர்மிடல்கொடுசெய்து
அசைவிலபடையருள்புரிதருமவனுறைபதியதுமிகுதரு
211 திசையினின்மலர்குலவியசெறிபொழின்மலிதருதிருமிழலையே.

நலமலிதருமறைமொழியொடுநதியுறுபுனல்புகையொளிமுதல்
மலரவைகொடுவழிபடுதிறன்மறையவனுயிரதுகொளவரு
சலமலிதருமறலிதனுயிர்கெடவுதைசெய்தவனுறைபதி
212 திலகமிதெனவுலகுகள்புகழ்தருபொழிலணிதிருமிழலையே.

அரனுறைதருகயிலையைநிலைகுலைவதுசெய்ததசமுகனது
கரமிருபதுநெரிதரவிரணிறுவியகழலடியுடையவன்
வரன்முறையுலகவைதருமலர்வளர்மறையவன்வழிவழுவிய
213 சிரமதுகொடுபலிதிரிதருசிவனுறைபதிதிருமிழலையே. ௮

அயனொடுமெழிலமர்மலர்மகள்மகிழ்கணனளவிடலொழியவொர்
பயமுறுவகைதழனிகழ்வதொர்படியுருவதுவரவரன்முறை
சயசயவெனமிகுதுதிசெயவெளியுருவியவவனுறைபதி
214 செயநிலவியமதில்மதியதுதவழ்தரவுயர்திருமிழலையே. ௯

இகழுருவொடுபறிதலைகொடுமிழிதொழில்மலிசமண்விரகினர்
திகழ்துவருடையுடல்பொதிபவர்கெடவடியவர்மிகவருளிய
புகழுடையிறையுறைபதிபுனலணிகடல்புடைதழுவியபுவி
215 திகழ்சுரர்தருநிகர்கொடையினர்செறிவொடுதிகழ்திருமிழலையே.

சினமலிகரியுரிசெய்தசிவனுறைதருதிருமிழலையைமிகு
தனமனர்சிரபுரநகரிறைதமிழ்விரகனதுரையொருபதும்
மனமகிழ்வொடுபயில்பவரெழின்மலர்மகள்கலைமகள்சயமகள்
216 இனமலிபுகழ்மகளிசைதரவிருநிலனிடையினிதமர்வரே.

21 புவம்வளிகனல்புனல்புவிகலையுரைமறைதிரிகுணமமர்நெறி
திவமலிதருசுரர்முதலியர்திகழ்தருமுயிரவையவைதம
பவமலிதொழிலதுநினைவொடுபதுமநன்மலரதுமருவிய
217 சிவனதுசிவபுரநினைபவர்செழுநிலனினில்நிலைபெறுவரே. ௧

மலைபலவளர்தருபுவியிடைமறைதருவழிமலிமனிதர்கள்
நிலைமலிசுரர்முதலுலகுகள்நிலைபெறுவகைநினைவொடுமிகும்
அலைகடல்நடுவறிதுயிலமரரியுருவியல்பரனுறைபதி
218 சிலைமலிமதிள்சிவபுரநினைபவர்திருமகளொடுதிகழ்வரே. ௨

பழுதிலகடல்புடைதழுவியபடிமுதலியவுலகுகள்மலி
குழுவியசுரர்பிறர்மனிதர்கள்குலமலிதருமுயிரவையவை
முழுவதுமழிவகைநினைவொடுமுதலுருவியல்பரனுறைபதி
219 செழுமணியணிசிவபுரநகர்தொழுமவர்புகழ்மிகுமுலகிலே. ௩

நறைமலிதருமளறொடுமுகைநகுமலர்புகைமிகுவளரொளி
நிறைபுனல்கொடுதனைநினைவொடுநியதமும்வழிபடுமடியவர்
குறைவிலபதமணைதரவருள்குணமுடையிறையுறைவனபதி
220 சிறைபுனலமர்சிவபுரமதுநினைபவர்செயமகள்தலைவரே. ௪

சினமலியறுபகைமிகுபொறிசிதைதருவகைவளிநிறுவிய
மனனுணர்வொடுமலர்மிசையெழுதருபொருள்நியதமுமுணர்பவர்
தனதெழிலுருவதுகொடுவடைதகுபரனுறைவதுநகர்மதிள்
221 கனமருவியசிவபுரநினைபவர்கலைமகள்தரநிகழ்வரே. ௫

சுருதிகள்பலநலமுதல்கலைதுகளறுவகைபயில்வொடுமிகு
உருவியலுலகவைபுகழ்தரவழியொழுகுமெயுறுபொறியொழி
அருதவமுயல்பவர்தனதடியடைவகைநினையரனுறைபதி
222 திருவளர்சிவபுரநினைபவர்திகழ்குலனிலனிடைநிகழுமே. ௬

கதமிகுகருவுருவொடுவுகிரிடவடவரைகணகணவென
மதமிகுநெடுமுகனமர்வளைமதிதிகழெயிறதனுதிமிசை
இதமமர்புவியதுநிறுவியஎழிலரிவழிபடவருள்செய்த
223 பதமுடையவனமர்சிவபுரநினைபவர்நிலவுவர்படியிலே. ௭

அசையுறுதவமுயல்வினிலயனருளினில்வருவலிகொடுசிவன்
இசைகயிலையையெழுதருவகையிருபதுகரமவைநிறுவிய
நிசிசரன்முடியுடைதரவொருவிரல்பணிகொளுமவனுறைபதி
224 திசைமலிசிவபுரநினைபவர்செழுநிலனினில்நிகழ்வுடையரே.

அடல்மலிபடையரியயனொடுமறிவரியதொழல்மலிதரு
சுடருருவொடுநிகழ்தரவவர்வெருவொடுதுதியதுசெயவெதிர்
விடமலிகளநுதலமர்கணதுடையுருவெளிபடுமவன்நகர்
225 திடமலிபொழிலெழில்சிவபுரநினைபவர்வழிபுவிதிகழுமே. ௯

குணமறிவுகள்நிலையிலபொருளுரைமருவியபொருள்களுமில
திணமெனுமவரொடுசெதுமதிமிகுசமணருமலிதமதுகை
உணலுடையவருணர்வருபரனுறைதருபதியுலகினில்நல
226 கணமருவியசிவபுரநினைபவரெழிலுருவுடையவர்களே. ௧௦

திகழ்சிவபுரநகர்மருவியசிவனடியிணைபணிசிரபுர
நகரிறைதமிழ்விரகனதுரைநலமலியொருபதும்நவில்பவர்
நிகழ்குலநிலநிறைதிருவுருநிகரிலகொடைமிகுசயமகள்
227 புகழ்புவிவளர்வழியடிமையின்மிகைபுணர்தரநலமிகுவரே. ௧௧

22 சிலைதனைநடுவிடைநிறுவியொர்சினமலியரவதுகொடுதிவி
தலமலிசுரரசுரர்களொலிசலசலகடல்கடைவுழிமிகு
கொலைமலிவிடமெழஅவருடல்குலைதரவதுநுகர்பவனெழில்
228 மலைமலிமதில்புடைதழுவியமறைவனமமர்தருபரமனே. ௧

கரமுதலியஅவயவமமைவகடுவிடவரவதுகொடுவரு
வரன்முறையணிதருமவனடல்வலிமிகுபுலியதளுடையினன்
இரவலர்துயர்கெடுவகைநினையிமையவர்புரமெழில்பெறவளர்
229 மரநிகர்கோடைமனிதர்கள்பயில்மறைவனமமர்தருபரமனே.

இழைவளர்தருமுலைமலைமகளினிதுறைதருமெழிலுருவினன்
முழையினின்மிகுதுயிலுறுமரிமுசிவொடுமெழமுளரியொடெழு
கழைநுகர்தருகரியிரிதருகயிலையின்மலிபவனிருளுறும்
230 மழைதவழ்தருபொழில்நிலவியமறைவனமமர்தருபரமனே.

நலமிகுதிருவிதழியின்மலர்நகுதலையொடுகனகியின்முகை
பலசுரநதிபடஅரவொடுமதிபொதிசடைமுடியினன்மிகு
தலநிலவியமனிர்தகளோடுதவமுயல்தருமுனிவர்கள்தம
231 மலமறுவகைமனநினைதருமறைவனமமர்தருபரமனே. ௪

கதிமலிகளிறதுபிளிறிடவுரிசெய்தஅதிகுணனுயர்பசு
பதியதன்மிசைவருபசுபதிபலகலையவைமுறை முறையுணர்
விதியறிதருநெறியமர்முனிகணனொடுமிகுதவமுயல்தரு
232 மதிநிபுணர்கள்வழிபடவளர்மறைவனமமர்தருபரமனே. ௫

கறைமலிதிரிசிகைபடையடல்கனல்மழுவெழுதரவெறிமறி
முறைமுறையொலிதமருகமுடைதலைமுகிழ்மலிகணிவடமுகம்
உறைதருகரனுலகினிலுயரொளிபெறுவகைநினைவொடுமலர்
233 மறையவன்மறைவழிவழிபடுமறைவனமமர்தருபரமனே. ௬

இருநிலனதுபுனலிடைமடிதரவெரிபுகவெரியதுமிகு
பெருவளியினிலவிதரவளிகெடவியனிடைமுழுவதுகெட
இருவர்களுடல்பொறையொடுதிரியெழிலுருவுடையவனினமலர்
234 மருவியஅறுபதமிசைமுரல்மறைவனமமர்தருபரமனே. எ

சனம்வெருவுறவருதசமுகனொருபதுமுடியொடுமிருபது
கனமருவியபுயநெரிவகைகழலடியிலொர்விரனிறுவினன்
இனமலிகணநிசிசரன்மகிழ்வுறவருள்செய்தகருணையனென
235 மனமகிழ்வொடுமறைமுறையுணர்மறைவனமமர்தருபரமனே

அணிமலர்மகள்தலைமகனயனறிவரியதொர்பரிசினிலெரி
திணிதருதிரளுருவளர்தரஅவர்வெருவுறலொடுதுதிசெய்து
பணியுறவெளியுருவியபரனவனுரைமலிகடல்திரளெழும்
236 மணிவளரொளிவெயில்மிகுதருமறைவனமமர்தருபரமனே.

இயல்வழிதரவிதுசெலவுறஇனமயிலிறகுறுதழையொடு
செயல்மருவியசிறுகடமுடியடைகையர்தலைபறிசெய்துதவம்
முயல்பவர்துவர்படமுடல்பொதிபவரறிவருபரனவனணி
237 வயலினில்வளைவளமருவியமறைவனமமர்தருபரமனே. க0

வசையறுமலர்மகள்நிலவியமறைவனமமர்பரமனைநினை
பசையொடுமிகுகலைபலபயில்புலவர்கள்புகழ்வழிவளர்தரு
இசையமர்கழுமலநகரிறைதமிழ்விரகனதுரையியல்வல
238 இசைமலிதமிழொருபதும்வலவவருலகினிலெழில்பெறுவரே.

23 மடையில்வாளைபாயமாதரார்
குடையும்பொய்கைக்கோலக்காவுளான்
சடையும்பிறையுஞ்சாம்பற்பூச்சுங்கீழ்
239 உடையுங்கொண்டவுருவமென்கொலோ. க

பெண்டான்பாகமாகப்பிறைச்சென்னி
கொண்டான்கோலக்காவுகோயிலாக்
கண்டான்பாதங்கையாற்கூப்பவே
240 உண்டான்நஞ்சையுலகமுய்யவே. உ

பூணற்பொறிகொளரவம்புன்சடை
கோணற்பிறையன்குழகன்கோலக்கா
மாணப்பாடிமறைவல்லானையே
241 பேணப்பறையும்பிணிகளானவே. ந

தழுக்கோள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள்செல்வன்மறிசேரங்கையான்
குழுக்கொள்பூதப்படையான்கோலக்கா
242 இழுக்காவண்ணமேத்திவாழ்மினே. ச

மயிலார்சாயல்மாதோர்பாகமா
எயிலார்சாயஎரித்தஎந்தைதன்
குயிலார்சோலைக்கோலக்காவையே
243 பயிலாநிற்கப்பறையும்பாவமே. ரு

வெடிகோள்வினையைவீட்டவேண்டுவீர்
கடிகொள்கொன்றைகலந்தசென்னியான்
கொடிகொள்விழவார்கோலக்காவுளெம்
244 அடிகள்பாதமடைந்துவாழ்மினே. சு

நிழலார்சோலைநீலவண்டினங்
குழலார்பண்செய்கோலக்காவுளான்
கழலால்மொய்த்தபாதங்கைகளால்
245 தொழலார்பக்கல்துயரமில்லையே. எ

எறியார்கடல்சூழிலங்கைக்கோன்றனை
முறியார்தடக்கையடர்த்தமூர்த்திதன்
குறியார்பண்செய்கோலக்காவையே
246 நெறியால்தொழுவார்வினைகள்நீங்குமே. அ

நாற்றமலர்மேலயனுநாகத்தில்
ஆற்றலணைமேலவனுங்காண்கிலாக்
கூற்றமுதைத்தகுழகன்கோலக்கா
247 ஏற்றான்பாதமேத்திவாழ்மினே. கூ

பெற்றமாசுபிறக்குஞ்சமணரும்
உற்றதுவர்தோயுருவிலாளருங்
குற்றநெறியார்கொள்ளார்கோலக்காப்
248 பற்றிப்பரவப்பறையும்பாவமே. க0

நலங்கொள்காழிஞானசம்பந்தன்
குலங்கொள்கோலக்காவுளானையே
வலங்கொள்பாடல்வல்லவாய்மையார்
249 உலங்கொள்வினைபோயோங்கிவாழ்வரே. கக

24 பூவார்கொன்றைப்புரிபுன்சடையீசா
காவாயெனநின்றேத்துங்காழியார்
மேவார்புரமூன்றட்டாரவர்போலாம்
250 பாவாரின்சொற்பயிலும்பரமரே. க

எந்தையென்றங்கிமையோர்புகுந்தீண்டிக்
கந்தமாலைகொடுசேர்காழியார்
வெந்தநீற்றர்விமலரவர்போலாம்
251 அந்திநட்டமாடும்மடிகளே. உ

தேனைவென்றமொழியாளொருபாகங்
கானமான்கைக்கொண்டகாழியார்
வானமோங்குகோயிலவர்போலாம்
252 ஆனவின்பமாடும்மடிகளே. ங

மாணாவென்றிக்காலன்மடியவே
காணாமாணிக்களித்தகாழியார்
நாணார்வாளிதொட்டாரவர்போலாம்
253 பேணார்புரங்களட்டபெருமானே. ச

மாடேஓதமெறியவயற்செந்நெற்
காடேறிச்சங்கீனுங்காழியார்
வாடாமலராள்பங்கரவர்போலாம்
254 ஏடார்புரமூன்றெரித்தஇறைவரே. ரு

கொங்குசெருந்திகொன்றைமலர்கூடக்
கங்கைபுனைந்தசடையார்காழியார்
அங்கணரவமாட்டுமவர்போலாஞ்
255 செங்கணரக்கர்புரத்தையெரித்தாரே. சு

கொல்லைவிடைமுன்பூதங்குனித்தாடுங்
கல்லவடத்தையுகப்பார்காழியார்
அல்லவிடத்துநடந்தாரவர்போலாம்
256 பல்லவிடத்தும்பயிலும்பரமரே. எ

எடுத்தஅரக்கன்நெரியவிரலூன்றிக்
கடுத்துமுரியஅடர்த்தார்காழியார்
எடுத்தபாடற்கிரங்குமவர்போலாம்
257 பொடிக்கொள்நீறுபூசும்புனிதரே. அ

ஆற்றலுடையஅரியும்பிரமனுந்
தோற்றங்காணாவென்றிக்காழியார்
ஏற்றமேறங்கேறுமவர்போலாங்
258 கூற்றமறுகக்குமைத்தகுழகரே. ௯

பெருக்கப்பிதற்றுஞ்சமணர்சாக்கியர்
கரக்குமுரையைவிட்டார்காழியார்
இருக்கின்மலிந்தஇறைவரவர்போலாம்
259 அருப்பின்முலையாள்பங்கத்தையரே. ௧௦

காரார்வயல்சூழ்காழிக்கோன்றனைச்
சீரார்ஞானசம்பந்தன்சொன்ன
பாரார்புகழப்பாவவல்லவர்
260 ஏரார்வானத்தினிதாயிருப்பரே. ௧௧

25 மருவார்குழலிமாதோர்பாகமாய்த்
திருவார்செம்பொன்பள்ளிமேவிய
கருவார்கண்டத்தீசன்கழல்களை
261 மருவாதவர்மேல்மன்னும்பாவமே. ௧

வாரார்கொங்கைமாதோர்பாகமாய்ச்
சீரார்செம்பொன்பள்ளிமேவிய
ஏரார்புரிபுன்சடையெம்மீசனைச்
262 சேராதவர்மேற்சேரும்வினைகளே. ௨

வரையார்சந்தோடகிலும்வருபொன்னித்
திரையார்செம்பொன்பள்ளிமேவிய
நரையார்விடையொன்றூருநம்பனை
263 உரையாதவர்மேலொழியாவூனமே. ௩

மழுவாளேந்திமாதோர்பாகமாய்ச்
செழுவார்செம்பொன்பள்ளிமேவிய
எழிலார்புரிபுன்சடையெம்மிறைவனைத்
264 தொழுவார்தம்மேற்றுயரமில்லையே. ௪

மலையான்மகளோடுடனாய்மதிளெய்த
சிலையார்செம்பொன்பள்ளியானையே
இலையார்மலர்கொண்டெல்லிநண்பகல்
265 நிலையாய்வணங்கநில்லாவினைகளே. ௫

அறையார்புனலோடகிலும்வருபொன்னிச்
சிறையார்செம்பொன்பள்ளிமேவிய
கறையார்கண்டத்தீசன்கழல்களை
266 நிறையால்வணங்கநில்லாவினைகளே. ௬

பையாரரவேரல்குலாளொடும்
செய்யார்செம்பொன்பள்ளிமேவிய
கையார்சூலமேந்துகடவுளை
267 மெய்யால்வணங்கமேவாவினைகளே. ௭

வானார்திங்கள்வளர்புன்சடைவைத்துத்
தேனார்செம்பொன்பள்ளிமேவிய
ஊனார்தலையிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
268 ஆனான்கழலேயடைந்துவாழ்மினே. ௮

காரார்வண்ணன்கனகம்அனையானும்
தேரார்செம்பொன்பள்ளிமேவிய
நீரார்நிமிர்புன்சடையெந்நிமலனை
269 ஓராதவர்மேலொழியாவூனமே. ௯

மாசாருடம்பர்மண்டைத்தேரரும்
பேசாவண்ணம்பேசித்திரியவே
தேசார்செம்பொன்பள்ளிமேவிய
270 ஈசாஎன்னநில்லாஇடர்களே. ௧௦

நறவார்புகலிஞானசம்பந்தன்
செறுவார்செம்பொன்பள்ளிமேயானைப்
பெறுமாறிசையாற்பாடவிவைபத்தும்
271 உறுமாசொல்லவோங்கிவாழ்வரே. ௧௧

26 வெங்கள்விம்முவெறியார்பொழிற்சோலை
திங்களோடுதிளைக்குந்திருப்புத்தூர்க்
கங்கைதங்குமுடியாரவர்போலும்
272 எங்களுச்சியுறையுமிறையாரே. ௧

வேனல்விம்முவெறியார்பொழிற்சோலைத்
தேனும்வண்டுந்திளைக்குந்திருப்புத்தூர்
ஊனமின்றியுறைவாரவர்போலும்
273 ஏனமுள்ளுமெயிறும்புனைவாரே. ௨

பாங்குநல்லவரிவண்டிசைபாடத்
தேங்கொள்கொன்றைதிளைக்குந்திருப்புத்தூர்
ஓங்குகோயிலுறைவாரவர்போலும்
274 தாங்குதிங்கள்தவழ்புன்சடையாரே. ௩

நாறவிண்டநறுமாமலர்கவ்வித்
தேறல்வண்டுதிளைக்குந்திருப்புத்தூர்
ஊறல்வாழ்க்கையுடையாரவர்போலும்
275 ஏறுகொண்டகொடியெம்மிறையாரே. ௪

இசைவிளங்குமெழில்சூழ்ந்தியல்பாகத்
திசைவிளங்கும்பொழில்சூழ்திருப்புத்தூர்ப்
பசைவிளங்கப்படித்தாரவர்போலும்
276 வசைவிளங்கும்வடிசேர்நுதலாரே. ௫

வெண்ணிறத்தவிரையோடலருந்தித்
தெண்ணிறத்தபுனல்பாய்திருப்புத்தூர்
ஒண்ணிறத்தஒளியாரவர்போலும்
277 வெண்ணிறத்தவிடைசேர்கொடியாரே. ௬

நெய்தலாம்பல்கழுநீர்மலர்ந்தெங்கும்
செய்கண்மல்குசிவனூர்திருப்புத்தூர்த்
தையல்பாகமகிழ்ந்தாரவர்போலும்
278 மையுள்நஞ்சமருவுமிடற்றாரே. ௭

கருக்கமெல்லாங்கமழும்பொழிற்சோலைத்
திருக்கொள்செம்மைவிழவார்திருப்புத்தூர்
இருக்கவல்லஇறைவாரவர்போலும்
279 அரக்கனொல்கவிரலாலடர்த்தாரே. ௮

மருவியெங்கும்வளரும்மடமஞ்ஞை
தெருவுதோறுந்திளைக்குந்திருப்புத்தூர்ப்
பெருகிவாழும்பெருமானவன்போலும்
280 பிரமன்மாலுமறியாப்பெரியோனே. ௯

கூறைபோர்க்குந்தொழிலாரமண்கூறல்
தேறல்வேண்டாதெளிமின்திருப்புத்தூர்
ஆறுநான்குமமர்ந்தாரவர்போலும்
281 ஏறுகொண்டகொடியெம்மிறையாரே. ௧௦

நல்லகேள்விஞானசம்பந்தன்
செல்வர்சேடருறையுந்திருப்புத்தூர்ச்
சொல்லல்பாடல்வல்லார்தமக்கென்றும்
282 அல்லல்தீருமவலமடையாவே. கக

27
முந்திநின்றவினைகளவைபோகச்
சிந்திநெஞ்சேசிவனார்திருப்புன்கூர்
அந்தமில்லாவடிகளவர்போலும்
283 கந்தமல்குகமழ்புன்சடையாரே. க

மூவராயமுதல்வர்முறையாலே
தேவரெல்லாம்வணங்குந்திருப்புன்கூர்
ஆவவென்னுமடிகளவர்போலும்
284 ஏவினல்லாரெயில்மூன்றெரித்தாரே. உ

பங்கயங்கண்மலரும்பழனத்துச்
செங்கயல்கள்திளைக்குந்திருப்புன்கூர்க்
கங்கைதங்குசடையாரவர்போலும்
285 எங்களுச்சியுறையுமிறையாரே. ங

கரையுலாவுகதிர்மாமணிமுத்தம்
திரையுலாவுவயல்சூழ்திருப்புன்கூர்
உரையினல்லபெருமானவர்போலும்
286 விரையினல்லமலர்ச்சேவடியாரே. ச

பவளவண்ணப்பரிசார்திருமேனி
திகழும்வண்ணமுறையுந்திருப்புன்கூர்
அழகரென்னுமடிகளவர்போலும்
287 புகழநின்றபுரிபுன்சடையாரே. ரு

தெரிந்திலங்குகழுநீர்வயற்செந்நெல்
திருந்தநின்றவயல்சூழ்திருப்புன்கூர்ப்
பொருந்திநின்றஅடிகளவர்போலும்
288 விரிந்திலங்குசடைவெண்பிறையாரே. சா

பாரும்விண்ணும்பரவித்தொழுதேத்தும்
தேர்கொள்வீதிவிழவார்திருப்புன்கூர்
ஆரநின்றஅடிகளவர்போலும்
289 கூரநின்றஎயில்மூன்றெரித்தாரே. எ

மலையதனாருடையமதில்மூன்றும்
சிலையதனாலெரித்தார்திருப்புன்கூர்த்
தலைவர்வல்லஅரக்கன் தருக்கினை
290 மலையதனாலடர்த்துமகிழ்ந்தாரே. ௮

நாடவல்லமலரான்மாலுமாய்த்
தேடநின்றாருறையுந்திருப்புன்கூர்
ஆடவல்லஅடிகளவர்போலும்
291 பாடலாடல்பயிலும்பரமரே. ௯

குண்டுமுற்றிக்கூறையின்றியே
பிண்டமுண்ணும்பிராந்தர்சொற்கொளேல்
வண்டுபாடமலரார்திருப்புன்கூர்க்
292 கண்டுதொழுமின்கபாலிவேடமே. ௧௦

மாடமல்குமதில்சூழ்காழிமன்
சேடர்செல்வருறையுந்திருப்புன்கூர்
நாடவல்லஞானசம்பந்தன்
293 பாடல்பத்தும்பரவிவாழ்மினே. ௧௧

28 செப்பநெஞ்சேநெறிகொள்சிற்றின்பம்
துப்பனென்னாதருளேதுணையாக
ஒப்பரொப்பர்பெருமானொளிவெண்ணீற்
294 றப்பர்சோற்றுத்துறைசென்றடைவோமே. ௧

பாலுநெய்யுந்தயிரும்பயின்றாடித்
தோலுநூலுந்துதைந்தவரைமார்பர்
மாலுஞ்சோலைபுடைசூழ்மடமஞ்ஞை
295 ஆலுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. ௨

செய்யர்செய்யசடையர்விடையூர்வர்
கைகொள்வேலர்கழலர்கரிகாடர்
தையலாளோர்பாகமாயஎம்
296 ஐயர்சோற்றுத்துறைசென்றடைவோமே. ௩

பிணிகொளாக்கையொழியப்பிறப்புளீர்
துணிகொள்போரார்துளங்குமழுவாளர்
மணிகொள்கண்டர்மேயவார்பொழில்
297 அணிகொள்சோற்றுத்துறைசென்றடைவோமே. ௪

பிறையுமரவும்புனலுஞ்சடைவைத்து
மறையுமோதிமயானமிடமாக
உறையுஞ்செல்வமுடையார்காவிரி
298 அறையுஞ்சோற்றுத்துறைசென்றடைவோமே. ரு

துடிகளோடுமுழவம்விம்மவே
பொடிகள்பூசிப்புறங்காடரங்காகப்
படிகொள்பாணிபாடல்பயின்றாடும்
299 அடிகள்சோற்றுத்துறைசென்றடைவோமே. சு

சாடிக்காலன்மாளத்தலைமாலை
சூடிமிக்குச்சுவண்டாய்வருவார்தாம்
பாடியாடிப்பரவுவாருள்ளத்
300 தாடிசோற்றுத்துறைசென்றடைவோமே. எ

பெண்ணோர்பாகமுடையார்பிறைசென்னிக்
கண்ணோர்பாகங்கலந்தநுதலினர்
எண்ணாதரக்கனெடுக்கவூன்றிய
301 அண்ணல்சோற்றுத்துறைசென்றடைவோமே. அ

தொழுவாரிருவர்துயரநீங்கவே
அழலாயோங்கியருள்கள்செய்தவன்
விழவார்மறுகில்விதியால்மிக்கஎம்
302 எழிலார்சோற்றுத்துறைசென்றடைவோமே. கூ

கோதுசாற்றித்திரிவாரமண்குண்டர்
ஓதுமோத்தையுணராதெழுநெஞ்சே
நீதிநின்றுநினைவார்வேடமாம்
303 ஆதிசோற்றுத்துறைசென்றடைவோமே. க0

அந்தண்சோற்றுத்துறையெம்மாதியைச்
சிந்தைசெய்ம்மினடியா ராயினீர்
சந்தம்பரவுஞானசம்பந்தன்
304 வந்தவாறேபுனைதல்வழிபாடே. கக

29 ஊருலாவுபலிகொண்டுலகேத்த
நீருலாவுநிமிர்புன்சடையண்ணல்
சீருலாவுமறையோர்நறையூரில்
305 சேருஞ்சித்தீச்சரஞ்சென்றடைநெஞ்சே. க

காடுநாடுங்கலக்கப்பலிநண்ணி
ஓடுகங்கையொளிர்புன்சடைதாழ
வீடுமாகமறையோர்நறையூரில்
306 நீடுஞ்சித்தீச்சரமேநினைநெஞ்சே. உ

கல்வியாளர்கனகம்மழல்மேனி
புல்குகங்கைபுரிபுன்சடையானூர்
மல்குதிங்கட்பொழில்சூழ்நறையூரில்
307 செல்வர்சித்தீச்சரஞ்சென்றடைநெஞ்சே. ௩

நீடவல்லமிர்புன்சடைதாழ
ஆடவல்லஅடிகளிடமாகும்
பாடல்வண்டுபயிலுநறையூரில்
308 சேடர்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. ௪

உம்பராலுமுலகின்னவராலும்
தம்பெருமையளத்தற்கரியானூர்
நண்புலாவுமறையோர்நறையூரில்
309 செம்பொன்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. ரு

கூருலாவுபடையான்விடையேறி
போருலாவுமழுவானனலாடி
பேருலாவுபெருமானறையூரில்
310 சேருஞ்சித்தீச்சரமேயிடமாமே. சு

அன்றிநின்றஅவுணர்புரமெய்த
வென்றிவில்லிவிமலன்விரும்புமூர்
மன்றில்வாசமணமார்நறையூரில்
311 சென்றுசித்தீச்சரமேதெளிநெஞ்சே. எ

அரக்கனுண்மையழியவரைதன்னுல்
நெருக்கவூன்றும்விரலான்விரும்புமூர்
பரக்குங்கீர்த்தியுடையார்நறையூரில்
312 திருக்கொள்சித்தீச்சரமேதெளிநெஞ்சே. அ

ஆழியானுமலரினுறைவானும்
ஊழிநாடியுணரார்திரிந்துமேல்
சூழுநேடவெரியாமொருவன்சீர்
313 நீழல்சித்தீச்சரமேநினைநெஞ்சே. ௯

மெய்யின்மாசர்விரிநுண்துகிலிலார்
கையிலுண்டுகெழறுமுரைகொள்ளேல்
உய்யவேண்டிலிறைவன்நறையூரில்
314 செய்யுஞ்சித்தீச்சரமேதவமாமே. க0

மெய்த்துலாவுமறையோர்நறையூரில்
சித்தன்சித்தீச்சரத்தையுயர்காழி
அத்தன்பாதமணிஞானசம்பந்தன்
315 பத்தும்பாடப்பறையும்பாவமே. கக

30 **விதியாய்விளைவாய்விளைவின்பயனாகிக்**
கொதியாவருகூற்றையுதைத்தவர்சேரும்
பதியாவதுபங்கயநின்றலரத்தேன்
316 பொதியார்பொழில்சூழ்புகலிந்நகர்தானே. க

ஒன்னார்புரமூன்றுமெரித்தவொருவன்
மின்னாரிடையாளொடுங்கூடியவேடந்
தன்னாலுறைவாவதுதண்கடல்சூழ்ந்த
317 பொன்னார்வயற்பூம்புகலிந்நகர்தானே. உ

வலியன்மதிசெஞ்சடைவைத்தமணாளன்
புலியின்னதள்கொண்டரையார்த்தபுனிதன்
மலியும்பதிமாமறையோர்நிறைந்தீண்டிப்
318 பொலியும்புனற்பூம்புகலிந்நகர்தானே. ௩

கயலார்தடங்கண்ணியொடும்மெருதேறி
அயலார்கடையிற்பலிகொண்டவழகன்
இயலாலுறையும்மிடமெண்டிசையோர்க்கும்
319 புயலார்கடற்பூம்புகலிந்நகர்தானே. ச

காதார்கனபொற்குழைதோடதிலங்கத்
தாதார்மலர்தண்சடையேறமுடித்து
நாதானுறையும்மிடமாவதுநாளும்
320 போதார்பொழிற்பூம்புகலிந்நகர்தானே. ரு

வலமார்படைமான்மழுவேந்தியமைந்தன்
கலமார்கடல்நஞ்சமுதுண்டகருத்தன்
குலமார்பதிகொன்றைகள்பொன்சொரியத்தேன்
321 புலமார்வயற்பூம்புகலிந்நகர்தானே. சா

கறுத்தான்கனலால்மதில்மூன்றையும்வேவச்
செறுத்தான்திகழுங்கடல்நஞ்சமுதாக
அறுத்தானயன்தன்சிரமைந்திலுமொன்றைப்
322 பொறுத்தானிடம்பூம்புகலிந்நகர்தானே. ௭

தொழிலால்மிகுதொண்டர்கள்தோத்திரஞ்சொல்ல
எழிலார்வரையாலன்றரக்கனைச்செற்ற
கழலானுறையும்மிடங்கண்டல்கள்மிண்டிப்
323 பொழிலால்மலிபூம்புகலிந்நகர்தானே. ௮

மாண்டார்கடலைப்பொடிபூசிமயானத்
தீண்டாநடமாடியவேந்தன்றன்மேனி
நீண்டானிருவர்க்கெரியாயரவாரம்
324 பூண்டானகர்பூம்புகலிந்நகர்தானே. ௯

உடையார்துகில்போர்த்துழல்வார்சமண்கையர்
அடையாதனசொல்லுவராதர்களோத்தைக்
கிடையாதவன்தன்நகர்நன்மலிபூகம்
325 புடையார்தருபூம்புகலிந்நகர்தானே. ௧௦

இரைக்கும்புனல்செஞ்சடைவைத்தஎம்மான்றன்
புரைக்கும்பொழிற்பூம்புகலிந்நகர்தன்மேல்
உரைக்குந்தமிழ்ஞானசம்பந்தனொண்மாலை
326 வரைக்குந்தொழில்வல்லவர்நல்லவர்தாமே. ௧௧

31 விழுநீர்மழுவாட்படையண்ணல்விளங்கும்
கழுநீர்குவளைம்மலரக்கயல்பாயும்
கொழுநீர்வயல்சூழ்ந்தகுரங்கணில்முட்டம்
327 தொழுநீர்மையர்தீதுறுதுன்பமிலரே. ௧

விடைசேர்கொடியண்ணல்விளங்குயர்மாடக்
கடைசேர்கருமென்குளத்தோங்கியகாட்டில்
குடையார்புனல்மல்குகுரங்கணில்முட்டம்
328 உடையானெனையாளுடையெந்தைபிரானே. ௨

சூலப்படையான்விடையான்சுடுநீற்றான்
காலன்றனைஆருயிர்வவ்வியகாலன்
கோலப்பொழில்சூழ்ந்தகுரங்கணில்முட்டத்
329 தேலங்கமழ்புன்சடையெந்தைபிரானே. ௩

வாடாவிரிகொன்றைவலத்தொருகாதில்
தோடார்குழையானலபாலனநோக்கிக்
கூடாதனசெய்தகுரங்கணில்முட்டம்
330 ஆடாவருவாரவரன்புடையாரே. ௪

இறையார்வளையாளையொர்பாகத்தடக்கிக்
கறையார்மிடற்றான்கரிகீறியகையான்
குறையார்மதிசூடிகுரங்கணில்முட்டத்
331 துறைவானெமையாளுடையொண்சுடரானே. ௫

பலவும்பயனுள்ளனபற்றுமொழிந்தோம்
கலவம்மயில்காமுறுபேடையொடாடிக்
குலவும்பொழில்சூழ்ந்தகுரங்கணில்முட்டம்
332 நிலவும்பெருமானடிநித்தனினைந்தே. ௬

மாடார்மலர்க்கொன்றைவளர்சடைவைத்துத்
தோடார்குழைதானொருகாதிவிலங்கக்
கூடார்மதிலெய்துகுரங்கணில்முட்டத்
333 தாடாரரவம்மரையார்த்தமர்வானே. ௭

மையார்நிறமேனியரக்கர்தங்கோனை
உய்யாவகையாலடர்த்தின்னருள்செய்த
கொய்யார்மலர்சூடிகுரங்கணில்முட்டம்
334 கையாற்றொழுவார்வினைகாண்டலரிதே. ௮

வெறியார்மலர்த்தாமரையானொடுமாலும்
அறியாதசைந்தேத்தவோராரழலாகும்
குறியால்நிமிர்ந்தான்றன்குரங்கணில்முட்டம்
335 நெறியாற்றொழுவார்வினைநிற்ககிலாவே. ௯

கழுவார்துவராடைகலந்துமெய்போர்க்கும்
வழுவாச்சமண்சாக்கியர்வாக்கவை கொள்ளேல்
குழுமின்சடையண்ணல்குரங்கணில்முட்டத்
336 தெழில்வெண்பிறையானடிசேர்வதியல்பே. ௧௦

கல்லார்மதிற்காழியுள்ஞானசம்பந்தன்
கொல்லார்மழுவேந்திகுரங்கணில்முட்டம்
சொல்லார்தமிழ்மாலைசெவிக்கினிதாக
337 வல்லார்க்கெளிதாம்பிறவாவகைவீடே. ௧௧

32

ஓடேகலனுண்பதுமூரிடுபிச்சை
காடேயிடமாவதுகல்லால்நிழற்கீழ்
வாடாமுலைமங்கையுந்தானுமகிழ்ந்
338 தீடாவுறைகின்றஇடைமருதீதோ. க

தடங்கொண்டதோர்தாமரைப்பொன்முடிதன்மேல்
குடங்கொண்டடியார்குளிர்நீர்சுமந்தாட்டப்
படங்கொண்டதொர்பாம்பரையார்த்தபரமன்
339 இடங்கொண்டிருந்தான்றனிடைமருதீதோ. உ

வெண்கோவணங்கொண்டொருவெண்டலையேந்தி
அங்கோல்வளையாளையொர்பாகமமர்ந்து
பொங்காவருகாவிரிக்கோலக்கரைமேல்
340 எங்கோனுறைகின்றஇடைமருதீதோ. ௩

அந்தம்மறியாதஅருங்கலமுந்திக்
கந்தங்கமழ்காவிரிக்கோலக்கரைமேல்
வெந்தபொடிப்பூசியவேதமுதல்வன்
341 எந்தையுறைகின்றஇடைமருதீதோ. ச

வாசங்கமழ்மாமலர்ச்சோலையில்வண்டே
தேசம்புகுந்தீண்டியொர்செம்மையுடைத்தாய்ப்
பூசம்புகுந்தாடிப்பொலிந்தழகாய
342 ஈசனுறைகின்றஇடைமருதீதோ. ரு

வன்புற்றின்நாகமசைத்தழகாக
என்பிற்பலமாலையும்பூண்டெருதேறி
அன்பிற்பிரியாதவளோடுமுடனாய்
343 இன்புற்றிருந்தான்றனிடைமருதீதோ. சா

தேக்குந்திமிலும்பலவுஞ்சுமந்துந்திப்
போக்கிப்புறம்பூசலடிப்பவருமால்
ஆர்க்குந்திரைக்காவிரிக்கோலக்கரைமேல்
344 ஏற்கவிருந்தான்றனிடைமருதீதோ. எ

பூவார்குழலாரகில்கொண்டுபுகைப்ப
ஓவாதடியாரடியுள்குளிர்ந்தேத்த
ஆவாவரக்கன்றனையாற்றலழித்த
345 ஏவார்சிலையான்றனிடைமருதீதோ. அ

முற்றாததோர்பால்மதிசூடுமுதல்வன்
நற்றாமரையானொடுமால்நயந்தேத்தப்
பொற்றோளியுந்தானும்பொலிந்தழகாக
346 எற்றேயுறைகின்றஇடைமருதீதோ. ௯

சிறுதேருஞ்சில்சமணும்புறங்கூற
நெறியேபலபத்தர்கள்கைதொழுதேத்த
வெறியாவருகாவிரிக்கோலக்கரைமேல்
347 எறியார்மழுவாளனிடைமருதீதோ. ௧௦

கண்ணார்கமழ்காழியுள்ஞானசம்பந்தன்
எண்ணார்புகழெந்தையிடைமருதின்மேல்
பண்ணோடிசைபாடியபத்தும்வல்லார்கள்
348 விண்ணோருலகத்தினில்வீற்றிருப்பாரே. ௧௧

33 கணைநீடெரிமாலரவம்வரைவில்லா
இணையாவெயில்மூன்றுமெரித்தஇறைவர்
பிணைமாமயிலுங்குயில்சேர்மடவன்னம்
349 அணையும்பொழிலன்பிலாலந்துறையாரே. ௧

சடையார்சதுரன்முதிராமதிசூடி
விடையார்கொடியொன்றுடையெந்தைவிமலன்
கிடையாரொலியோத்தரவத்திசைகிள்ளை
350 அடையார்பொழிலன்பிலாலந்துறையாரே. ௨

ஊரும்மரவஞ்சடைமேலுறவைத்துப்
பாரும்பலிகொண்டொலிபாடும்பரமர்
நீருண்கயலும்வயல்வாளைவராலோ
351 டாரும்புனலன்பிலாலந்துறையாரே. ௩

பிறையும்மரவும்முறவைத்தமுடிமேல்
நறையுண்டெழுவன்னியுமன்னுசடையார்
மறையும்பலவேதியரோதவொலிசென்
352 றறையும்புனலன்பிலாலந்துறையாரே. ௪

நீடும்புனற்கங்கையுந்தங்கமுடிமேற்
கூடும்மலையாளொருபாகமமர்ந்தார்
மாடும்முழவம்மதிரம்மடமாதர்
353 ஆடும்பதியன்பிலாலந்துறையாரே. ௫

நீரூர்திருமேனியரூனமிலார்பால்
ஊரூர்சுவையாகியவும்பர்பெருமான்
வேரூரகிலும்மிகுசந்தனமுந்தி
354 ஆரூர்வயலன்பிலாலந்துறையாரே. ௬

செடியார்தலையிற்பலிகொண்டினிதுண்ட
படியார்பரமன்பரமேட்டிதன்சீரைக்
கடியார்மலரும்புனல்தூவிநின்றேத்தும்
355 அடியார்தொழுமன்பிலாலந்துறையாரே. ௭

விடத்தார்திகழும்மிடறன்நடமாடி
படத்தாரரவம்விரவுஞ்சடையாதி
கொடித்தேரிலங்கைக்குலக்கோன்வரையார
356 அடர்த்தாரருளன்பிலாலந்துறையாரே. ௮

வணங்கிம்மலர்மேலயனுந்நெடுமாலும்
பிணங்கியறிகின்றிலர்மற்றும்பெருமை
சுணங்கும்முகத்தம்முலையாளொருபாகம்
357 அணங்குந்திகழன்பிலாலந்துறையாரே. ௯

தறியார்துகில்போர்த்துழல்வார்சமண்கையர்
நெறியாவுணராநிலைகேடினர்நித்தல்
வெறியார்மலர்கொண்டடிவீழுமவரை
358 அறிவாரவரன்பிலாலந்துறையாரே. ௧௦

அரவார்புனலன்பிலாலந்துறைதன்மேல்
கரவாதவர்காழியுள்ஞானசம்பந்தன்
பரவார்தமிழ்பத்திசைபாடவல்லார்போய்
359 விரவாகுவர்வானிடைவீடெளிதாமே. ௧௧

34 அடலேறமருங்கொடியண்ணல்
மடலார்குழலாளொடுமன்னுங்
கடலார்புடைசூழ்தருகாழி
360 தொடர்வாரவர்தூநெறியாரே. ௧

திரையார்புனல்சூடியசெல்வன்
வரையார்மகளோடுமகிழ்ந்தான்
கரையார்புனல்சூழ்தருகாழி
361 நிரையார்மலர்தூவுமினின்றே. ௨

இடியார்குரலே றுடையெந்தை
துடியாரிடையாளொடுதுன்னுங்
கடியார்பொழில்சூழ்தருகாழி
362 அடியாரறியாரவலம்மே. ௩

ஒளியார்விடமுண்டவொருவன்
அளியார்குழல்மங்கையொடன்பாய்க்
களியார்பொழில்சூழ்தருகாழி
363 எளிதாமதுகண்டவரின்பே. ௪

பனியார்மலரார்தருபாதன்
முனிதானுமையோடுமுயங்கிக்
கனியார்பொழில்சூழ்தருகாழி
364 இனிதாமதுகண்டவரீடே. ௫

கொலையார்தருகூற்றமுதைத்து
மலையான்மகளோடுமகிழ்ந்தான்
கலையார்தொழுதேத்தியகாழி
365 தலையாற்றொழுவார்தலையாரே. ௬

திருவார்சிலையாலெயிலெய்து
உருவாருமையோடுடனானான்
கருவார்பொழில்சூழ்தருகாழி
366 மருவாதவர்வான்மருவாரே. ௭

அரக்கன்வலியொல்கவடர்த்து
வரைக்கும்மகளோடுமகிழ்ந்தான்
சுரக்கும்புனல்சூழ்தருகாழி
367 நிரக்கும்மலர்தூவுநினைந்தே. ௮

இருவர்க்கெரியாகிநிமிர்ந்தான்
உருவிற்பெரியாளொடுசேருங்
கருநற்பரவைகமழ்காழி
368 மருவப்பிரியும்வினைமாய்ந்தே. ௯

சமண்சாக்கியர்தாமலர்தூற்ற
அமைந்தானுமையோடுடனன்பாய்க்
கமழ்ந்தார்பொழில்சூழ்தருகாழி
369 சுமந்தார்மலர்தூவுதல்தொண்டே. ௧0

நலமாகியஞானசம்பந்தன்
கலமார்கடல்சூழ்தருகாழி
நிலையாகநினைந்தவர்பாடல்
370 வலரானவர்வானடைவாரே. கக

35 அரையார்விரிகோவணஆடை
நரையார்விடையூர்திநயந்தான்
விரையார்பொழில்வீழிம்மிழலை
371 உரையாலுணர்வாருயர்வாரே. க

புனைதல்புரிபுன்சடைதன்மேல்
கனைதல்லொருகங்கைகரந்தான்
வினையில்லவர்வீழிம்மிழலை
372 நினைவில்லவர்நெஞ்சமுநெஞ்சே. உ

அழவல்லவராடியும்பாடி
எழவல்லவரெந்தையடிமேல்
விழவல்லவர்வீழிம்மிழலை
373 தொழவல்லவர்நல்லவர்தொண்டே. ௩

உரவம்புரிபுன்சடைதன்மேல்
அரவம்மரையார்த்தவழகன்
விரவும்பொழில்வீழிம்மிழலை
374 பரவும்மடியாரடியாரே. ௪

கரிதாகியநஞ்சணிகண்டன்
வரிதாகியவண்டறைகொன்றை
விரிதார்பொழில்வீழிம்மிழலை
375 உரிதாநினைவாருயர்வாரே. ரு

சடையார்பிறையான்சரிபூதப்
படையான்கொடிமேலதோர்பைங்கண்
விடையானுறைவீழிம்மிழலை
376 அடைவாரடியாரவர்தாமே. சு

செறியார்கழலுஞ்சிலம்பார்க்க
நெறியார்குழலாளொடுநின்றான்
வெறியார்பொழில்வீழிம்மிழலை
377 அறிவாரவலம்மறியாரே. எ

உளையாவலியொல்கவரக்கன்
வளையாவிரலூன்றியமைந்தன்
விளையார்வயல்வீழிம்மிழலை
378 அளையாவருவாரடியாரே. அ

மருள்செய்திருவர்மயலாக
அருள்செய்தவனாரழலாகி
வெருள்செய்தவன்வீழிம்மிழலை
379 தெருள்செய்தவர்தீவினைதேய்வே. கூ

துளங்குந்நெறியாரவர்தொன்மை
வளங்கொள்ளன்மின்புல்லமண்தேரை
விளங்கும்பொழில்வீழிம்மிழலை
380 உளங்கொள்பவர்தம்வினையோய்வே. க0

நளிர்காழியுள்ஞானசம்பந்தன்
குளிரார்சடையானடிகூற
மிளிரார்பொழில்வீழிம்மிழலை
381 கிளர்பாடல்வல்லார்க்கிலைகேடே. கக

36 கலையார்மதியோடுரநீரும்
நிலையார்சடையாரிடமாகும்
மலையாரமுமாமணிசந்தோ
382 டலையார்புனல்சேருமையாறே. க

மதியொன்றியகொன்றைவடத்தன்
மதியொன்றவுதைத்தவர்வாழ்வும்
மதியின்னொடுசேர்கொடிமாடம்
383 மதியம்பயில்கின்றவையாறே. உ

கொக்கின்னிறகின்னொடுவன்னி
புக்கசடையார்க்கிடமாகும்
திக்கின்னிசைதேவர்வணங்கும்
384 அக்கின்னரையாரதையாறே. ௩

சிறைகொண்டபுரம்மவைசிந்தக்
கறைகொண்டவர்காதல்செய்கோயில்
மறைகொண்டநல்வானவர்தம்மில்
385 அறையும்மொலிசேருமையாறே. ச

உமையாளொருபாகமதாகச்
சமைவாரவர்சார்விடமாகும்
அமையாருடல்சோர்தரமுத்தம்
386 அமையாவருமந்தணையாறே. ௫

தலையின்தொடைமாலையணிந்து
கலைகொண்டதொர்கையினர்சேர்வாம்
நிலைகொண்டமனத்தவர்நித்தம்
387 மலர்கொண்டுவணங்குமையாறே. ௬

வரமொன்றியமாமலரோன்றன்
சிரமொன்றையறுத்தவர்சேர்வாம்
வரைநின்றிழிவார்தருபொன்னி
388 அரவங்கொடுசேருமையாறே. ௭

வரையொன்றதெடுத்தவரக்கன்
சிரமங்கநெரித்தவர்சேர்வாம்
விரையின்மலர்மேதகுபொன்னித்
389 திரைதன்னொடுசேருமையாறே. ௮

சங்கக்கயனும்மறியாமைப்
பொங்குஞ்சுடரானவர்கோயில்
கொங்கிற்பொலியும்புனல்கொண்டு
390 அங்கிக்கெதிர்காட்டுமையாறே. ௯

துவராடையர்தோலுடையார்கள்
கவர்வாய்மொழிகாதல்செய்யாதே
தவராசர்கள்தாமரையானோ
391 டவர்தாமணையந்தணையாறே. ௧௦

கலையார்கலிக்காழியர்மன்னன்
நலமார்தருஞானசம்பந்தன்
அலையார்புனல்சூழுமையாற்றைச்
392 சொலுமாலைவல்லார்துயர்வீடே. ௧௧

37 அரவச்சடைமேல்மதிமத்தம்
விரவிப்பொலிகின்றவனூராம்
நிரவிப்பலதொண்டர்கள்நாளும்
393 பரவிப்பொலியும்பனையூரே. ௧

எண்ணொன்றிசினைந்தவர்தம்பால்
உண்ணின்றுமகிழ்ந்தவனூராம்
கண்ணின்றெழுசோலையில்வண்டு
394 பண்ணின்றொலிசெய்பனையூரே. ௨

அலரும்மெறிசெஞ்சடைதன்மேல்
மலரும்பிறையொன்றுடையானூர்
சிலரென்றுமிருந்தடிபேணப்
395 பலரும்பரவும்பனையூரே. ௩

இடியார்கடல்நஞ்சமுதுண்டு
பொடியாடியமேனியினானூர்
அடியார்தொழமன்னவரேத்தப்
396 படியார்பணியும்பனையூரே. ௪

அறையார்கழல்மேலரவாட
இறையார்பலிதேர்ந்தவனூராம்
பொறையார்மிகுசீர்விழமல்கப்
397 பறையாரொலிசெய்பனையூரே. ௫

அணியார்தொழவல்லவரேத்த
மணியார்மிடறொன்றுடையானூர்
தணியார்மலர்கொண்டிருபோதும்
398 பணிவார்பயிலும்பனையூரே. ௬

அடையாதவர்மூவெயில்சீறும்
விடையான்விறலார்கரியின்தோல்
உடையானவனெண்பலபூதப்
399 படையானவனூர்பனையூரே. ௭

இலகும்முடிபத்துடையானை
அலல்கண்டருள்செய்தவெம்மண்ணல்
உலகில்லுயிர்நீர்நிலமற்றும்
400 பலகண்டவனூர்பனையூரே. ௮

வரமுன்னிமகிழ்ந்தெழுவீர்காள்
சிரமுன்னடிதாழவணங்கும்
பிரமன்னொடுமாலறியாத
401 பரமன்னுறையும்பனையூரே. ௯

அழிவல்லமணரொடுதேரர்
மொழிவல்லனசொல்லியபோதும்
இழிவில்லதொர்செம்மையினானூர்
402 பழியில்லவர்சேர்பனையூரே. ௧௦

பாரார்விடையான்பனையூர்மேல்
சீரார்தமிழ்ஞானசம்பந்தன்
ஆராதசொன்மாலைகள்பத்தும்
403 ஊரூர்நினைவாருயர்வாரே. ௧௧

38 கரவின்றிநன்மாமலர்கொண்டே
இரவும்பகலுந்தொழுவார்கள்
சிரமொன்றியசெஞ்சடையான்வாழ்
404 வரமாமயிலாடுதுறையே. ௧

உரவெங்கரியின்னுரிபோர்த்த
பரமன்னுறையும்பதியென்பர்
குரவஞ்சுரபுன்னையும்வன்னி
405 மருவும்மயிலாடுதுறையே. ௨

ஊனத்திருள்நீங்கிடவேண்டில்
ஞானப்பொருள்கொண்டடிபேணும்
தேனொத்தினியானமருஞ்சேர்
406 வானம்மயிலாடுதுறையே. ௩

அஞ்சொண்புலனும்மவைசெற்ற
மஞ்சன்மயிலாடுதுறையை
நெஞ்சொன்றிநினைந்தெழுவார்மேல்
407 துஞ்சும்பிணியாயினதானே. ௪

தணியார்மதிசெஞ்சடையான்றன்
அணியார்ந்தவருக்கருளென்றும்
பிணியாயினதீர்த்தருள்செய்யும்
408 மணியான்மயிலாடுதுறையே. ௫

தொண்டரிசைபாடியுங்கூடிக்
கண்டுதுதிசெய்பவனூராம்
பண்டும்பலவேதியரோத
409 வண்டார்மயிலாடுதுறையே. ௬

அணங்கோடொருபாகமமர்ந்து
இணங்கியருள்செய்தவனூராம்
நுணங்கும்புரிநூலர்கள்கூடி
410 வணங்கும்மயிலாடுதுறையே. ௭

சிரங்கையினிலேந்தியிரந்த
பரங்கொள்பரமேட்டிவரையால்
அரங்கவ்வரக்கன்வலிசெற்ற
411 வரங்கொள்மயிலாடுதுறையே. ௮

ஞாலத்தைநுகர்ந்தவன்தானும்
கோலத்தயனும்மறியாத
சீலத்தவனூர்சிலர்கூடி
412 மாலைத்தீர்மயிலாடுதுறையே. ௯

நின்றுண்சமணும்நெடுந்தேரர்
ஒன்றும்மறியாமையுயர்ந்த
வென்றியருளானவனூராம்
413 மன்றன்மயிலாடுதுறையே. ௧௦

நயர்காழியுள்ஞானசம்பந்தன்
மயல்தீர்மயிலாடுதுறைமேல்
செயலாலுரைசெய்தனபத்தும்
414 உயர்வாமிவையுற்றுணர்வார்க்கே. ௧௧

39 அந்தமுமாதியுமாகிய அண்ணல்ஆரழலங்கையமர்ந்திலங்க
மந்தமுழவமியம்பமலைமகள்காணநின்றாடிச்
சந்தமிலங்குநகுதலைகங்கைதண்மதியம்மயலேததும்ப
415 வெந்தவெண்ணீறுமெய்பூசும்வேட்களநன்னகாரே. ௧

சடைதனைத்தாழ்தலுமேறமுடித்துச்சங்கவெண்டோடுசரிந்திலங்கப்
புடைதனிற்பாரிடஞ்சூழப்போதருமாறிவர்போல்வார்
உடைதனில்நால்விரற்கோவணவாடையுண்பதுமூரிடுபிச்சை
416 விடைதனையூர்திநயந்தார்வேட்களநன்னகாரே. [வெள்ளை

பூதமும்பல்கணமும்புடைசூழப்பூமியும்விண்ணுமுடன்பொ
சீதமும்வெம்மையுமாகிச்சீரொடுநின்றவெஞ்செல்வர் [ருந்தச்
ஓதமுங்கானலுஞ்சூழ்தருவேலைஉள்ளங்கலந்திசையாலெழுந்த
417 வேதமும்வேள்வியுமோவாவேட்களநன்னகாரே. ௩

அரைபுல்குமைந்தலையாடலரவம் அமையவெண்கோவணத்தோடசைத்து, வரைபுல்குமார்பிலொராமைவாங்கியணிந்தவர்தாந்திரைபுல்குதெண்கடல்தண்கழியோதந்தேனலங்கானலில்வண்டுபண்செய்ய, விரைபுல்குபைம்பொழில்
418 சூழ்ந்தவேட்களநன்னகராரே. ச

பண்ணுறுவண்டறைகொன்றையலங்கல்பால்புரைநீறுவெண்ணூல்கிடந்த, பெண்ணுறுமார்பினர்பேணார்மும்மதிலெய்தபெருமான், கண்ணுறுநெற்றிகலந்தவெண்திங்கட்கண்ணியர்விண்ணவர்கைதொழுதேத்தும், வெண்ணிறமால்
419 விடையண்ணல்வேட்களநன்னகராரே. ரு

கறிவளர்குன்றமெடுத்தவன் காதற்கண்கவரைங்கணையோனுடலம், பொறிவளராரழலுண்ணப்பொங்கியபூதபுராணர், மறிவளரங்கையர்மங்கையொர்பங்கர்மைஞ்ஞிறமானுரிதோலுடையாடை, வெறிவளர்கொன்றையந்தாரார்வேட்கள
420 நன்னகராரே. சு

மண்பொடிக்கொண்டெரித்தோர்சுடலைமாமலைவேந்தன்மகள்மகிழ, நுண்பொடிச்சேரநின்றாடிநொய்யனசெய்யலுகந்தார்,கண்பொடிவெண்டலையோடுகையேந்திக்காலனைக்காலாற்கடிந்துகந்தார், வெண்பொடிச்சேர்திருமார்பர்வேட்கள
421 நன்னகராரே. எ

ஆழ்தருமால்கடல்நஞ்சினையுண்டாரமுதமமரர்க்கருளிச்
சூழ்தருபாம்பரையார்த்துச்சூலமோடொண்மழுவேந்தித்
தாழ்தருபுன்சடையொன்றினைவாங்கித்தண்மதியம்மயலேததும்ப
422 வீழ்தருகங்கைகரந்தார்வேட்களநன்னகராரே. அ

திருவொளிகாணியபேதுறுகின்றதிசைமுகனுந்திசைமேல
கருவரையேந்தியமாலுங்கைதொழநின்றதுமல்லால் [ளந்த
அருவரையொல்கவெடுத்தவரக்கனுடெழிற்றோள்களாழத்தழுந்த
423 வெருவுறவூன்றியபெம்மான்வேட்களநன்னகராரே. கூ

அத்தமண்தோய்துவராரமண்குண்டர்யாதுமல்லாவுரையேயுரைத்துப், பொய்த்தவம்பேசுவதல்லாற்புறனுரையாதொன்றுங்கொள்ளேன், முத்தனவெண்முறுவல்லுமையஞ்சவூரிவல்லானையினீருரிபோர்த்த,வித்தகர்வேதமுதல்வர்
424 வேட்களநன்னகராரே. கO

விண்ணியன்மாடம்விளங்கொளிவீதிவெண்கொடியெங்குமி
நண்ணியசீர்வளர்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன் [ரிந்திலங்க
பெண்ணினல்லாளொருபாகமமர்ந்துபேணியவேட்களமேல்மொ
425 பண்ணியல்பாடல்வல்லார்கள்பழியொடுபாவமிலாரே. [ழிந்த

40 பொடியுடைமார்பினர்போர்விடையேறிப்பூதகணம்புடைசூழக்
கொடியுடையூர்திரிந்தையங்கொண்டுபலபலகூறி [த்தூர்க்
வடிவுடைவாணெடுங்கண்ணுமைபாகமாயவன்வாழ்கொளிபு
426 கடிகமழ்மாமலரிட்டுக்கறைமிடற்றானடிகாண்போம். க

அரைகெழுகோவணவாடையின்மேலோராடரவம்மசைத்தை
புரைகெழுவெண்டலையேந்திப்போர்விடையேறிப்புகழ [யம்
வரைகெழுமங்கையதாகமொர்பாகமாயவன்வாழ்கொளிப்புத்தூர்
427 விரைகமழ்மாமலர்தூவிவிரிசடையானடிசேர்வோம். உ

பூணெடுநாகமசைத்தனலாடிப்புன்தலையங்கையிலேந்தி
ஊணிடுபிச்சையூரையமுண்டியென்றுபலகூறி [புத்தூர்த்
வாணெடுங்கண்ணுமைமங்கையொர்பாகமாயவன்வாழ்கொளி
428 தாணெடுமாமலரிட்டுத்தலைவனதாள்நிழல்சார்வோம். ங

தாரிடுகொன்றையொர்வெண்மதிகங்கைதாழ்சடைமேலவை
ஊரிடுபிச்சைகொள்செல்வமுண்டியென்றுபலகூறி [சூடி
வாரிடுமென்முலைமாதொருபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்க்
429 காரிடுமாமலர்தூவிக்கறைமிடற்றானடிகாண்போம். ச

கனமலர்க்கொன்றையலங்கலிலங்கக்காதிலொர்வெண்குழை
புனமலர்மாலைபுனைந்தூர்புகுதியென்றேபலகூறி [யோடு
வனமுலைமாமலைமங்கையொர்பாகமாயவன்வாழ்கொளிபுத்
430 இனமலரேய்ந்தனதூவியெம்பெருமானடிசேர்வோம். [தூர்

அளைவளர்நாகமசைத்தனலாடியலர்மிசையந்தணனுச்சிக்
களைதலையிற்பலிகொள்ளுங்கருத்தனேகள்வனேயென்று [த்
வளையொலிமுன்கைமடந்தையொர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்
431 தளையவிழ்மாமலர்தூவித்தலைவனதாளிணைசார்வோம். சு

அடர்செவிவேழத்தினீருரிபோர்த்துவழிதலையங்கையிலேந்தி
உடலிடுபிச்சையோடையமுண்டியென்றுபலகூறி [புத்தூர்த்
மடனெடுமாமலர்க்கண்ணியொர்பாகமாயவன்வாழ்கொளி
432 தடமலராயினதூவித்தலைவனதாள்நிழல்சார்வோம். எ

உயர்வரையொல்கவெடுத்தவரக்கனொளிர்கடகக்கையடர்த்து
அயவிடுபிச்சையோடையமார்தலையென்றடிபோற்றி
வயல்விரிநீலநெடுங்கணிபாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்ச்
433 சயவிரிமாமலர்தூவித்தாழ்சடையானடிசார்வோம். அ

கரியவன்நான்முகன்கைதொழுதேத்தக்காணலுஞ்சாரலுமாகா
எரியுருவாகியூரையமிடுபலியுண்ணியென்றேத்தி [தூர்
வரியரவல்குல்மடந்தையொர்பாகமாயவன்வாழ்கொளிபுத்
434 விரிமலராயின தூவிவிகிர்தனசேவடிசேர்வோம். கூ

குண்டமணர்துவர்க்கூறைகள்மெய்யிற்கொள்கையினார்புறங்கூற
வெண்டலையிற்பலிகொண்டல்விரும்பினையென்றுவிளம்பி
வண்டமர்பூங்குழல்மங்கையொர்பாகமாயவன்வாழ்கொளிபுத்தூர்த்
435 தொண்டர்கள்மாமலர்தூவத்தோன்றிநின்றானடிசேர்வோம்.

கல்லுயர்மாக்கடனின்றுமுழங்குங்கரைபொருகாழியமூதூர்
நல்லுயர்நான்மறைநாவின்நற்றமிழ்ஞானசம்பந்தன் [தூர்ச்
வல்லுயர்சூலமும்வெண்மழுவாளும்வல்லவன்வாழ்கொளிபுத்
436 சொல்லியபாடல்கள்வல்லார்துயர்கெடுதல்லெளிதாமே. கக

41 சீரணிதிகழ்திருமார்பில்வெண்ணூலர்திரிபுரமெரிசெய்த
செல்வர், வாரணிவனமுலைமங்கையோர்பங்கர்மான்மறியேந்
தியமைந்தர், காரணிமணிதிகழ்மிடறுடையண்ணல்கண்ணு
தல்விண்ணவரேத்தும், பாரணிதிகழ்தருநான்மறையாளர்
437 பாம்புரநன்னகராரே. க

கொக்கிறகோடுகூவிளமத்தங்கொன்றையொடெருக்கணிசடையர்
அக்கினொடாமைபூண்டழகாகஅனலதுஆடுமெம்மடிகள்
மிக்கநல்வேதவேள்வியுளெங்கும்விண்ணவர்விரைமலர்தூவப்
438 பக்கம்பல்பூதம்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே. உ

துன்னலினாடையுடுத்ததன்மேலோர்சூறைநல்லரவது
சுற்றிப், பின்னுவார்சடைகள்தாழவிட்டாடிப்பித்தராய்த்
திரியுமெம்பெருமான், மன்னுமாமலர்கள்தூவிடநாளும்
மாமலையாட்டியுந்தாமும், பன்னுநான்மறைகள்பாடிடவரு
439 வார்பாம்புரநன்னகராரே. ங

துஞ்சுநாள்துறந்துதோற்றமுமில்லாச்சுடர்விடுசோதி
யெம்பெருமான், நஞ்சுசேர்கண்டமுடையவென்நாதர்நள்ளி
ருள்நடஞ்செயுந்நம்பர், மஞ்சுதோய்சோலைமாமயிலாடமாட

மாளிகைதன்மேலேறிப், பஞ்சுசேர்மெல்லடிப்பாவையர்பயி
440 லும்பாம்புரநன்னகாரே. ௪

நதியதனயலேநகுதலைமாலைநாண்மதிசடைமிசையணிந்து
கதியதுவாகக்காளிமுன்காணக்கானிடைநடஞ்செய்தகருத்தர்
விதியதுவழுவாவேதியர்வேள்விசெய்தவரோத்தொலியோவாப்
441 பதியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகாரே. ௫

ஓதிநன்குணர்வார்க்குணர்வுடையொருவரொளிதிகழுரு
வஞ்சேரொருவர், மாதினையிடமாவைத்தஎம்வள்ளல்மான்
மறியேந்தியமைந்தர், ஆதிநீயருளென்றமரர்கள்பணியஅலை
கடல்கடையவன்றெழுந்த, பாதிவெண்பிறைசடைவைத்த
442 எம்பரமர்பாம்புரநன்னகாரே. ௬

மாலினுக்கன்றுசக்கரமீந்துமலரவற்கொருமுகமொழித்து
ஆலின்கீழறமோர்நால்வருக்கருளியனலது ஆடுமெம்மடிகள்
காலனைக்காய்ந்து தங்கழலடியாற்காமனைப்பொடிபடநோக்கிப்
443 பாலனுக்கருள்கள்செய்தவெம்மடிகள்பாம்புரநன்னகாரே.

விடைத்தவல்லரக்கன்வெற்பினை யெடுக்கமெல்லியதிரு
விரலூன்றி, அடர்த்தவன்றனக்கன்றருள்செய்தவடிகளன
லதுஆடுமெம்மண்ணல், மடக்கொடியவர்கள்வருபுனலாட
வந்திழியரிசிலின்கரைமேல், படப்பையிற்கொணர்ந்துபரு
444 மணிசிதறும்பாம்புரநன்னகாரே. ௮

கடிபடுகமலத்தயனொடுமாலுங்காதலோடடிமுடிதேடச்
செடிபடுவினைகள்தீர்த்தருள்செய்யுந்தீவணரெம்முடைச்செல்வர்
முடியுடையமரர்முனிகணத்தவர்கள்முறைமுறையடிபணிந்தேத்தப்
445 படியதுவாகப்பாவையுந்தாமும்பாம்புரநன்னகராரே. ௯

குண்டர்சாக்கியருங்குணமிலாதாருங்குற்றுவிட்டுடுக்
கையர்தாமுங், கண்டவாறுரைத்துக்கால்நிமிர்த்துண்ணுங்
கையர்தாமுள்ளவாறறியார், வண்டுசேர்குழலிமலைமகள்
நடுங்கவாரணமுரிசெய்துபோர்த்தார், பண்டுநாஞ்செய்தபா
446 வங்கள்தீர்ப்பார்பாம்புரநன்னகராரே. ௧௦

பார்மலிந்தோங்கிப்பருமதில்சூழ்ந்தபாம்புரநன்னகராரைக்
கார்மலிந்தழகார்கழனிசூழ்மாடக்கழுமலமுதுபதிக்கவுணி
நார்மலிந்தோங்குநான்மறைஞானசம்பந்தன்செந்தமிழ்வல்லார்
447 சீர்மலிந்தழகார்செல்வமதோங்கிச்சிவனடிநண்ணுவர்தாமே.

42 பைம்மாநாகம்பன்மலர்கொன்றைபன்றிவெண்கொம்
பொன்றுபூண்டு, செம்மாந்தையம்பெய்கென்றுசொல்லிச்
செய்தொழில்பேணியோர்செல்வர், அம்மானோக்கியயந்தளிர்
மேனியரிவையோர்பாகமமர்ந்த, பெம்மானல்கியதொல்புக
448 ழாளர்பேணுபெருந்துறையாரே. க

மூவருமாகியிருவருமாகிமுதல்வனுமாய்நின்றமூர்த்தி
பாவங்கள்தீர்தரநல்வினைநல்கிப்பல்கணம்நின்றுபணியச்
சாவமதாகியமால்வரைகொண்டுதண்மதில்மூன்றுமெரித்த
449 தேவர்கள்தேவரெம்பெருமானார்தீதில்பெருந்துறையாரே. உ

செய்பூங்கொன்றைகூவிளமாலைசென்னியுட்சேர்புனல்சேர்த்திக்
கொய்பூங்கோதைமாதுமைபாகங்கூடியோர்பீடுடைவேடர்
கைபோனான்றகனிகுலைவாழைகாய்குலையிற்கமுகினைப்
450 பெய்பூம்பாளைபாய்ந்திழிதேறல்பில்குபெருந்துறையாரே. ங

நிலனோடுவானுநீரொடுதீயும்வாயுவுமாகியோரைந்து
புலனோடுவென்றுபொய்ம்மைகள்தீர்ந்தபுண்ணியர்வெண்பொடிப்
நலனொடுதீங்குந்தானலதின்றிநன்கெழுசிந்தையராகி [பூசி
451 மலனொடுமாசுமில்லவர்வாழுமல்குபெருந்துறையாரே. ச

பணிவாயுள்ளநன்கெழுநாவின்பத்தர்கள்பத்திமைசெய்யத்
துணியார்தங்களுள்ளமிலாதசுமடர்கள்சோதிப்பரியார்
அணியார்நீலமாகியகண்டரரிசிலுரிஞ்சுகரைமேல்
452 மணிவாய்நீலம்வாய்கமழ்தேறல்மல்குபெருந்துறையாரே.

எண்ணார்தங்கள்மும்மதில்வேவவலங்காட்டியஎந்தை
விண்ணோர்சாரத்தன்னருள்செய்தவித்தகர்வேதமுதல்வர்
பண்ணார்பாடலாடலறாதபசுபதியீசனோர்பாகம்
453 பெண்ணாணாயவார்சடையண்ணல்பேணுபெருந்துறையாரே.

விழையாருள்ளம்நன்கெழுநாவில்வினைகெடவேதமாறங்கம்
பிழையாவண்ணம்பண்ணியவாற்றற்பேரியோரேத்தும்பெருமான்
தழையார்மாவின்தாழ்கனியுந்தித்தண்ணரிசில்புடைசூழ்ந்து
454 குழையார்சோலைமென்னடையன்னங்கூடுபெருந்துறையாரே.

பொன்னங்கானல்வெண்திரைசூழ்ந்தபொருகடல்வேலியிலங்
மன்னனொல்கமால்வரையூன்றிமாமுரணாகமுந்தோளும் [கை
முன்னவைவாட்டிப்பின்னருள்செய்தமூவிலைவேலுடைமூர்த்தி
455 அன்னங்கன்னிப்பேடையொடாடியணவுபெருந்துறையாரே.

புள்வாய்போழ்ந்துமாநிலங்கீண்டபொருகடல்வண்ணனும்பூவின்
உள்வாயல்லிமேலுறைவானுமுணர்வரியானுமைகேள்வன்
முள்வாய்தாளின்தாமரைமொட்டின்முகமலரக்கயல்பாயக்
456 கள்வாய்நீலங்கண்மலரேய்க்குங்காமர்பெருந்துறையாரே. ௬

குண்டுந்தேருங்கூறைகளைந்துங்கூப்பிலர்செப்பிலராகி
மிண்டும்மிண்டர்மிண்டவைகண்டுமிண்டுசெயாதுவிரும்பும்
தண்டும்பாம்பும்வெண்டலைசூலந்தாங்கியதேவர்தலைவர்
457 வண்டுந்தேனும்வாழ்பொழிற்சோலைமல்குபெருந்துறையாரே.

கடையார்மாடநன்கெழுவீதிக்கழுமலவூரன்கலந்து
நடையாரின்சொல்ஞானசம்பந்தன்நல்லபெருந்துறைமேய
படையார்சூலம்வல்லவன்பாதம்பரவியபத்திவைவல்லார்
458 உடையாராகியுள்ளமுமொன்றியுலகினில்மன்னுவர்தாமே.

43 வடந்திகழ்மென்முலையாளைப்பாகமதாகமதித்துத்
தடந்திரைசேர்புனல்மாதைத்தாழ்சடைவைத்தசதுரர்
இடந்திகழ்முப்புரிநூலர்துன்பமொடின்பமதெல்லாம்
459 கடந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. க

அங்கமொராறுடைவேள்வியானஅருமறைநான்கும்
பங்கமில்பாடலோடாடல்பாணிபயின்றபடிறர்
சங்கமதார்குறமாதர்தங்கையில்மைந்தர்கள்தாவிக்
460 கங்குலின்மாமதிபற்றுங்கற்குடிமாமலையாரே. உ

நீரகலந்தருசென்னிநீடியமத்தமும்வைத்துத்
தாரகையின்னொளிசூழ்ந்ததண்மதிசூடியசைவர்
போரகலந்தருவேடர்புனத்திடையிட்டவிறகில்
461 காரகிலின்புகைவிம்முங்கற்குடிமாமலையாரே. ௩

ஒருங்களிநீயிறைவாவென்றும்பர்களோலமிடக்கண்
டிருங்களமாரவிடத்தையின்னமுதுண்ணியஈசர்
மருங்களியார்பிடிவாயில்வாழ்வெதிரின்முளைவாரிக்
462 கருங்களியானைகொடுக்குங்கற்குடிமாமலையாரே. ௪

போர்மலிதிண்சிலைகொண்டுபூதகணம்புடைசூழப்
பார்மலிவேடுருவாகிப்பண்டொருவர்க்கருள்செய்தார்
ஏர்மலிகேழல்கிளைத்தஇன்னொளிமாமணியெங்கும்
463 கார்மலிவேடர்குவிக்குங்கற்குடிமாமலையாரே. ௫

உலந்தவரென்பதணிந்தேவூரிடுபிச்சையராகி
விலங்கல்வில்லெங்கனலாலேமூவெயில்வேவமுனிந்தார்
நலந்தருசிந்தையராகிநாமலிமாலையினாலே
464 கலந்தவர்காதலில்வாழுங்கற்குடிமாமலையாரே. ௬

மானிடமார்தருகையர்மாமழுவாரும்வலத்தார்
ஊனிடையார்தலையோட்டிலுண்கலனாகவுகந்தார்
தேனிடையார்தருசந்தின்திண்சிறையால்தினைவித்திக்
465 கானிடைவேடர்விளைக்குங்கற்குடிமாமலையாரே. ௭

வாளமர்வீரநினைந்தஇராவணன்மாமலையின்கீழ்த்
தோளமர்வன்தலைகுன்றத்தொல்விரலூன்றுதுணைவர்
தாளமர்வேய்தலைபற்றித்தாழ்கரிவிட்டவிசைபோய்க்
466 காளமதார்முகில்கீறுங்கற்குடிமாமலையாரே. ௮

தண்டமர்தாமரையானுந்தாவியிம்மண்ணையளந்து
கொண்டவனும்மறிவொண்ணாக்கொள்கையர்வெள்விடையூர்வர்
வண்டிசையாயினபாடநீடியவார்பொழில்நீழல்
467 கண்டமர்மாமயிலாடுங்கற்குடிமாமலையாரே. ௯

மூத்துவராடையினாரும்மூசுகடுப்பொடியாரும்
நாத்துவர்பொய்ம்மொழியார்கள்நயமிலாமதிவைத்தார்
ஏத்துயர்பத்தர்கள்சித்தரிறைஞ்சஅவரிடரெல்லாங்
468 காத்தவர்காமருசோலைக்கற்குடிமாமலையாரே. ௧௦

காமருவார்பொழில்சூழுங்கற்குடிமாமலையாரை
நாமருவண்புகழ்க்காழிநலந்திகழ்ஞானசம்பந்தன்
பாமருசெந்தமிழ்மாலைபத்திவைபாடவல்லார்கள்
469 பூமலிவானவரோடும்பொன்னுலகிற்பொலிவாரே. ௧௧

44 துணிவளர்திங்கள்துளங்கிவிளங்கச்சுடர்ச்சடை சுற்றி முடித்துப், பணிவளர்கொள்கையர்பாரிடஞ்சூழவாரிடமும் பலிதேர்வர்,அணிவளர்கோலமெலாஞ்செய்துபாச்சிலாச்சிராமத்துறைகின்ற, மணிவளர்கண்டரோமங்கையைவாடமயல்
470 செய்வதோஇவர்மாண்பே. ௧

கலைபுனைமானுரிதோலுடையாடைகனல்சுடராலிவர்கண்கள்
தலையணிசென்னியர்தாரணிமார்பர்தம்மடிகளிவரென்ன

அலைபுனல்பூம்பொழில்சூழ்ந்தமர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
471 இலைபுனைவேலரோஏழையைவாடஇடர்செய்வதோஇவரீடே.

வெஞ்சுடராடுவர்துஞ்சிருள்மாலைவேண்டுவர்பூண்பது
வெண்ணூல், நஞ்சடைகண்டர்நெஞ்சிடமாகநண்ணுவர்நம்
மைநயந்து, மஞ்சடைமாளிகைசூழ்தருபாச்சிலாச்சிராமத்
துறைகின்ற, செஞ்சுடர்வண்ணரோபைந்தொடிவாடச்
472 சிதைசெய்வதோஇவர்சீரே. ரு

கனமலர்க்கொன்றைஅலங்கலிலங்கக்கனல்தருதூம
திக்கண்ணி, புனமலர்மாலையணிந்தழகாயபுனிதர்கொலாமிவ
ரென்ன, வனமலிவண்பொழில்சூழ்தருபாச்சிலாச்சிராமத்
துறைகின்ற, மனமலிமைந்தரோமங்கையைவாடமயல்செய்
473 வதோஇவர்மாண்பே. ச

மாந்தர்தம்பால்நறுநெய்மகிழ்ந்தாடிவளர்சடைமேற்
புனல்வைத்து, மோந்தைமுழாக்குழல்தாளமொர்வீணைமுதிர
வோர்வாய்மூரிபாடி, ஆந்தைவிழிச்சிறுபூதத்தர்பாச்சிலாச்
சிராமத்துறைகின்ற, சாந்தணிமார்பரோதையலைவாடச்சதுர்
474 செய்வதோஇவர்சார்வே. ரு

நீறுமெய்பூசிநிறைசடைதாழநெற்றிக்கண்ணாலுற்றுநோக்கி
ஆறதுசூடிஆடரவாட்டிவைவிரற்கோவணவாடை
பால்தருமேனியர்பூதத்தர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
475 ஏறதுவேறியரோஏழையைவாடஇடர்செய்வதோஇவரீடே. சு

பொங்கிளநாகமொரேகவடத்தோடாமைவெண்ணூல்
புனைகொன்றை, கொங்கிளமாலைபுனைந்தழகாயகுழகர்கொ
லாமிவரென்ன, அங்கிளமங்கையோர்பங்கினர்பாச்சிலாச்சிரா
மத்துறைகின்ற, சங்கொளிவண்ணரோதாழ்குழல்வாடச்
476 சதிர்செய்வதோஇவர்சார்வே.

ஏவலத்தால்விசயற்கருள்செய்துஇராவணனையீடழித்து
மூவரிலும்முதலாய்நடுவாயமூர்த்தியையன்றிமொழியாள்
யாவர்களும்பரவும்மெழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
477 தேவர்கள்தேவரோசேயிழைவாடச்சிதைசெய்வதோஇவர்சார்வே.

மேலதுநான்முகனெய்தியதில்லைகீழதுசேவடிதன்னை
நீலதுவண்ணனுமெய்தியதில்லையெனவிவர்நின்றதுமல்லால்
ஆலதுமாமதிதோய்பொழிற்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
478 பாலதுவண்ணரோவைபைந்தொடிவாடப்பழிசெய்வதோஇவர்பண்பே.

நாணொடுகூடியசாயினரேனும்நகுவரவரிருபோதும்
ஊணொடுகூடியவுட்குநகையாலுரைகளவைகொளவேண்டா
ஆணொடுபெண்வடிவாயினர்பாச்சிலாச்சிராமத்துறைகின்ற
479 பூணெடுமார்பரோபூங்கொடிவாடப்புனைசெய்வதோஇவர்பொற்பே.

அகமலியன்பொடுதொண்டர்வணங்கஆச்சிராமத்துறைகின்ற
புகைமலிமாலைபுனைந்தழகாயபுனிதர்கொலாமிவரென்ன
நகைமலிதண்பொழில்சூழ்தருகாழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
480 தகைமலிதண்டமிழ்கொண்டிவையேத்தச்சாரகிலாவினைதானே.

45 துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாரும்முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்டு
481 அஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. க

கேடும்பிறவியுமாக்கினாருங்கேடிலா
வீடுமாநெறிவிளம்பினரெம்விகிர்தனார்
காடுஞ்சுடலையுங்கைக்கொண்டெல்விக்கணப்பேயோ
482 டாடும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. உ

கந்தங்கமழ்கொன்றைக்கண்ணிசூடிகனலாடி
வெந்தபொடிநீற்றைவிளங்கப்பூசும்விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலையரவிற்றோன்றிக்கோடல்பூத்
483 தந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ங

பாலமதிசென்னிபடரச்சூடிப்பழியோராக்
காலனுயிர்செற்றகாலனாயகருத்தனார்
கோலம்பொழிற்சோலைப்பெடையோடாடிமடமஞ்ஞை
484 ஆலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ச

ஈர்க்கும்புனல்சூடியிளவெண்டிங்கள்முதிரவே
பார்க்குமரவம்பூண்டாடிவேடம்பயின்றாரும்
கார்க்கொள்கொடிமுல்லைகுருந்தமேறிக்கருந்தேன்மொய்த்
485 தார்க்கும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ரு

பறையுஞ்சிறுகுழலும்யாழும்பூதம்பயிற்றவே
மறையும்பலபாடிமயானத்துறையும்மைந்தனர்
பிறையும்பெரும்புனல்சேர்சடையினரும்பேடைவண்
486 டறையும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௬

நுணங்குமறைபாடியாடிவேடம்பயின்றாரும்
இணங்குமலைமகளோடிருகூறொன்றாயிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர்வைகலேத்தும்வாழ்த்துங்கேட்
487 டணங்கும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௭

கணையும்வரிசிலையுமெரியுங்கூடிக்கவர்ந்துண்ண
இணையிலெயின்மூன்றுமெரித்திட்டாரெம்மிறைவனர்
பிணையுஞ்சிறுமறியுங்கலையுமெல்லாங்கங்குல்சேர்ந்
488 தணையும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௮

கவிழமலைதளரக்கடகக்கையாலெடுத்தான்றோள்
பவழநுனைவிரலாற்பையவூன்றிப்பரிந்தாரும்
தவழுங்கொடிமுல்லைபுறவஞ்சேரநறவம்பூத்
489 தவிழும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௯

பகலுமிரவுஞ்சேர்பண்பினரும்நண்போரா
திகலுமிருவர்க்குமெரியாய்த்தோன்றிநிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடுவல்லார்க்கென்றுந்தீயபோய்
490 அகலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௧௦

போழம்பலபேசிப்போதுசாற்றித்திரிவாரும்
வேழம்வருமளவும்வெயிலேதுற்றித்திரிவாரும்
கேழல்வினைபோகக்கேட்பிப்பாருங்கேடிலா
491 ஆழ்வர்பழையனூராலங்காட்டெம்மடிகளே. ௧௧

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்தன்
ஆந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லார்
492 சேர்ந்தஇடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே. ௧௨

46 குண்டைக்குறட்பூதங்குழுமஅனலேந்திக்
கெண்டைப்பிறழ்தெண்ணீர்க்கெடிலவடபக்கம்
வண்டுமருள்பாடவளர்பொன்விரிகொன்றை
493 விண்டதொடையலானாடும்வீரட்டானத்தே. ௧

அரும்புங்குரும்பையுமலைத்தமென்கொங்கைக்
கரும்பின்மொழியாளோடுடன்கையனல்வீசிச்
சுரும்புண்விரிகொன்றைச்சுடர்பொற்சடைதாழ
494 விரும்புமதிகையுளாடும்வீரட்டானத்தே. ௨

ஆடலழல்நாகமரைக்கிட்டசைத்தாடப்
பாடல்மறைவல்லான்படுதம்பலிபெயர்வான்
மாடமுகட்டின்மேல்மதிதோய்அதிகையுள்
495 வேடம்பலவல்லானாடும்வீரட்டானத்தே. ௩

எண்ணாரெயிலெய்தானிறைவனனலேந்தி
மண்ணார்முழவதிரமுதிராமதிசூடிப்
பண்ணார்மறைபாடப்பரமனதிகையுள்
496 விண்ணோர்பரவநின்றாடும்வீரட்டானத்தே. ௪

கரிபுன்புறமாயகழிந்தாரிடுகாட்டில்
திருநின்றொருகையால்திருவாமதிகையுள்
எரியேந்தியபெருமானெரிபுன்சடைதாழ
497 விரியும்புனல்சூடியாடும்வீரட்டானத்தே. ௫

துளங்குஞ்சுடரங்கைத்துதையவிளையாடி
இளங்கொம்பனசாயலுமையோடிசைபாடி
வளங்கொள்புனல்சூழ்ந்தவயலாரதிகையுள்
498 விளங்கும்பிறைசூடியாடும்வீரட்டானத்தே. ௬

பாதம்பலரேத்தப்பரமன்பரமேட்டி
பூதம்புடைசூழப்புலித்தோலுடையாகக்'
கீதமுமைபாடக்கெடிலவடபக்கம்
499 வேதமுதல்வனின்றாடும்வீரட்டானத்தே. ௭

கல்லார்வரையரக்கன்தடந்தோள்கவின்வாட
ஒல்லையடர்த்தவனுக்கருள்செய்ததிகையுள்
பல்லார்பகுவாயநகுவெண்டலைசூடி
500 வில்லாலெயிலெய்தானாடும்வீரட்டானத்தே. ௮

நெடியான்நான்முகனுமிமிர்ந்தானைக்காண்கிலார்
பொடியாடுமார்பானைப்புரிநூலுடையானைக்
கடியார்கழுநீலம்மலரும்மதிகையுள்
501 வெடியார்தலையேந்தியாடும்வீரட்டானத்தே. ௯

அரையோடலர்பிண்டிமருவிக்குண்டிகை
சுரையோடுடனேந்தியுடைவிட்டுழல்வார்கள்
உரையோடுரையொவ்வாதுமையோடுடனாகி
502 விரைதோயலர்தாரானாடும்வீரட்டானத்தே. ௧௦

ஞாழல்கமழ்காழியுள்ஞானசம்பந்தன்
வேழம்பொருதெண்ணீரதிகைவீரட்டானத்துச்
சூழுங்கழலானைச்சொன்னதமிழ்மாலை
503 வாழுந்துணையாகநினைவார்வினையிலரே. ௧௧

47 பல்லடைந்தவெண்டலையிற்பலிகொள்வதன்றியும்போய்
வில்லடைந்தபுருவநல்லாள்மேனியில்வைத்தலென்னே
சொல்லடைந்ததொல்மறையோடங்கங்கலைகளெல்லாஞ்
504 செல்லடைந்தசெல்வர்வாழுஞ்சிரபுரமேயவனே. ௧

கொல்லைமுல்லைநகையினாளோர்கூறதுவன்றியும்போய்
அல்லல்வாழ்க்கைப்பலிகொண்டுண்ணுமாதரவென்னைகொலாஞ்
சொல்லநீண்டபெருமையாளர்தொல்கலைகற்றுவல்லார்
505 செல்லநீண்டசெல்வமல்குசிரபுரமேயவனே. ௨

நீரடைந்தசடையின்மேலோர்நிகழ்மதியன்றியும்போய்
ஊரடைந்தஏறதேறியுண்பலிகொள்வதென்னே
காரடைந்தசோலைசூழ்ந்துகாமரம்வண்டிசைப்பச்
506 சீரடைந்தசெல்வமோங்குசிரபுரமேயவனே. ௩

கையடைந்தமானினோடுகாரரவன்றியும்போய்
மெய்யடைந்தவேட்கையோடுமெல்லியல்வைத்தலென்னே
கையடைந்தகளைகளாகச்செங்கழுநீர்மலர்கள்
507 செய்யடைந்தவயல்கள்சூழ்ந்தசிரபுரமேயவனே. ௪

புரமெரித்தபெற்றியோடும்போர்மதயானைதன்னைக்
கரமெடுத்துத்தோலுரித்தகாரணமாவதென்னே
மரமுரித்ததோலுடுத்தமாதவர்தேவரோடுஞ்
508 சிரமெடுத்தகைகள்கூப்புஞ்சிரபுரமேயவனே. ௫

கண்ணுமூன்றுமுடையதன்றிக்கையினில்வெண்மழுவும்
பண்ணுமூன்றுவீணையோடுபாம்புடன்வைத்தலென்னே
எண்ணுமூன்றுகனலுமோம்பியெழுமையும்விழுமியராய்த்
509 திண்ணமூன்றுவேள்வியாளர்சிரபுரமேயவனே. ௬

குறைபாடதவேட்கையோடுகோல்வளையாளொருபாற்
பொறைபடாதஇன்பமோடுபுணர்தருமெய்ம்மையென்னே
இறைபடாதமென்முலையார்மாளிகைமேலிருந்து
510 சிறைபடாதபாடலோங்குசிரபுரமேயவனே. ௭

மலையெடுத்தவாளரக்கனஞ்சவொருவிரலால்
நிலையெடுத்தகொள்கையானேநின்மலனேநினைவார்
துலையெடுத்தசொற்பயில்வார்மேதகுவீதிதோறுஞ்
511 சிலையெடுத்ததோளினானேசிரபுரமேயவனே. ௮

மாலினோடுமலரினானும்வந்தவர்காணாது
சாலுமஞ்சப்பண்ணிநீண்டதத்துவமேயதென்னே
நாலுவேதமோதலார்கள்நந்துணையென்றிறைஞ்சச்
512 சேலுமேயுங்கழனிசூழ்ந்தசிரபுரமேயவனே. ௯

புத்தரோடுசமணர்சொற்கள்புறனுரையென்றிருக்கும்
பத்தர்வந்துபணியவைத்தபான்மையதென்னைகொலாம்
மத்தயானையுரியும்போர்த்துமங்கையொடும்முடனே
513 சித்தர்வந்துபணியுஞ்செல்வச்சிரபுரமேயவனே. ௧௦

தெங்குநீண்டசோலைசூழ்ந்தசிரபுரமேயவனை
அங்கநீண்டமறைகள்வல்லஅணிகொள்சம்பந்தனுரை
பங்கநீங்கப்பாடவல்லபத்தர்கள்பாரிதன்மேற்
514 சங்கமோடுநீடிவாழ்வர்தன்மையினாலவரே. ௧௧

48 நூலடைந்தகொள்கையாலேநுன்னடிகூடுதற்கு
மாலடைந்தநால்வர்கேட்கநல்கியநல்லறத்தை
ஆலடைந்த்நீழல்மேவியருமறைசொன்னதென்னே
515 சேலடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. ௧

நீறடைந்தமேனியின்கண்நேரிழையாளொருபால்
கூறடைந்தகொள்கையன்றிக்கோலவளர்சடைமேல்
ஆறடைந்ததிங்கள்சூடியரவமணிந்ததென்னே
516 சேறடைந்ததண்கழனிச்சேய்ஞலூர்மேயவனே. ௨

ஊனடைந்தவெண்தலையினோடுபலிதிரிந்து
கானடைந்தபேய்களோடுபூதங்கலந்துடனே
மானடைந்தநோக்கிகாணமகிழ்ந்தெரியாடலென்னே
517 தேனடைந்தசோலைமல்குசேய்ஞலூர்மேயவனே. ௩

வீணடைந்தமும்மதிலும்வில்மலையா அரவின்
நாணடைந்தவெஞ்சரத்தால்நல்லெரியூட்டலென்னே
பாணடைந்தவண்டுபாடும்பைம்பொழில்சூழ்ந்தழகார்
518 சேணடைந்தமாடமல்குசேய்ஞலூர்மேயவனே. ௪

பேயடைந்தகாடிடமாப்பேணுவதன்றியும்போய்
வேயடைந்ததோளியஞ்சவேழமுரித்ததென்னே
வாயடைந்தநான்மறையாறங்கமோடைவேள்வித்
519 தீயடைந்தசெங்கையாளர்சேய்ஞலூர்மேயவனே. ௫

காடடைந்தஏனமொன்றின்காரணமாகிவந்து
வேடடைந்தவேடனாகிவிசயனொடெய்ததென்னே
கோடடைந்தமால்களிற்றுக்கோச்செங்கணாற்கருள்செய்
520 சேடடைந்தசெல்வர்வாழுஞ்சேய்ஞலூர்மேயவனே. ௬

பீரடைந்தபாலதாட்டப்பேணாதவன்தாதை
வேரடைந்துபாய்ந்ததாளைவேர்த்தடிந்தான்றனக்குத்
தாரடைந்தமாலைசூட்டித்தலைமைவகுத்ததென்னே
521 சீரடைந்தகோயில்மல்குசேய்ஞலூர்மேயவனே. ௭

மாவடைந்ததேரரக்கன்வலிதொலைவித்தவன்றன்
நாவடைந்தபாடல்கேட்டுநயந்தருள்செய்ததென்னே
பூவடைந்தநான்முகன்போற்பூசுரர்போற்றிசெய்யும்
522 சேவடைந்தவூர்தியானேசேய்ஞலூர்மேயவனே. ௮

காரடைந்தவண்ணனோடுகனகமனையானும்
பாரிடந்தும்விண்பறந்தும்பாதமுடிகாணார்
சீரடைந்துவந்துபோற்றச்சென்றருள்செய்ததென்னே
523 தேரடைந்தமாமறுகிற்சேய்ஞலூர்மேயவனே. ௯

மாசடைந்தமேனியாரும்மனந்திரியாதகஞ்சி
நேசடைந்தவூணினாரும்நேசமிலாததென்னே
வீசடைந்ததோகையாடவிரைகமழும்பொழில்வாய்த்
524 தேசடைந்தவண்டுபாடுஞ்சேய்ஞலூர்மேயவனே. ௧௦

சேயடைந்தசேய்ஞலூரிற்செல்வனசீர்பாவித்
தோயடைந்தவண்வயல்சூழ்தோணிபுரத்தலைவன்
சாயடைந்தஞானமல்குசம்பந்தனின்னுரைகள்
525 வாயடைந்துபாடவல்லார்வானுலகாள்பவரே. ௧௧

49 போகமார்த்தபூண்முலையாள்தன்னோடும்பொன்னகலம்
பாகமார்த்தபைங்கண்வெள்ளேற்றண்ணல்பரமேட்டி
ஆகமார்த்ததோலுடையன்கோவணஆடையின்மேல்
526 நாகமார்த்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. க

தோடுடையகாதுடையன்தோலுடையன்தொலையாப்
பீடுடையபோர்விடையன்பெண்ணுமோர்பாலுடையன்
ஏடுடையமேலுலகோடேழ்கடலுஞ்சூழ்ந்த
527 நாடுடையநம்பெருமான்மேயதுநள்ளாறே. உ

ஆன்முறையாலாற்றவெண்ணீறாடியணியிழையோர்
பான்முறையால்வைத்தபாதம்பத்தர்பணிந்தேத்த
மான்மறியும்வெண்மழுவுஞ்சூலமும்பற்றியகை
528 நான்மறையான்நம்பெருமான்மேயதுநள்ளாறே. ங

புல்கவல்லவார்சடைமேற்பூம்புனல்பெய்தயலே
மல்கவல்லகொன்றைமாலைமதியோடுடன்சூடிப்
பல்கவல்லதொண்டர்தம்பொற்பாதநிழற்சேர
529 நல்கவல்லநம்பெருமான்மேயதுநள்ளாறே. ச

ஏறுதாங்கியூர்திபேணியேர்கொளிளமதியம்
ஆறுதாங்குஞ்சென்னிமேலோராடரவஞ்சூடி
நீறுதாங்கிநூல்கிடந்தமார்பினிரைகொன்றை
530 நாறுதாங்குநம்பெருமான்மேயதுநள்ளாறே. ரு

திங்களுச்சிமேல்விளங்குந்தேவனிமையோர்கள்
எங்களுச்சியெம்மிறைவனென்றடியேயிறைஞ்சத்
தங்களுச்சியால்வணங்குந்தன்னடியார்கட்கெல்லாம்
531 நங்களுச்சிநம்பெருமான்மேயதுநள்ளாறே. சு

வெஞ்சுடர்த்தீயங்கையேந்திவிண்கொண்முழவதிர
அஞ்சிடத்தோராடல்பாடல்பேணுவதன்றியும்போய்ச்
செஞ்சடைக்கோர்திங்கள்சூடித்திகழ்தருகண்டத்துள்ளே
532 நஞ்சடைத்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. எ

சிட்டமார்ந்தமும்மதிலுஞ்சிலைவரைத்தீயம்பினால்
சுட்டுமாட்டிச்சுண்ணவெண்ணீறாடுவதன்றியும்போய்ப்
பட்டமார்ந்தசென்னிமேலோர்பால்மதியஞ்சூடி
533 நட்டமாடுநம்பெருமான்மேயதுநள்ளாறே. அ

உண்ணலாகாநஞ்சுகண்டத்துண்டுடனேயொடுக்கி
அண்ணலாகாவண்ணளீழலாரழல்போலுருவம்
எண்ணலாகாவுள்வினையென்றெள்கவலித்திருவர்
534 நண்ணலாகாநம்பெருமான்மேயதுநள்ளாறே. ௯

மாசுமெய்யர்மண்டைத்தேரர்குண்டர்குணமிலிகள்
பேசும்பேச்சைமெய்யென்றெண்ணியந்நெறிசெல்லன்மின்
மூசுவண்டார்கொன்றைசூடிமும்மதிலும்முடனே
535 நாசஞ்செய்தநம்பெருமான்மேயதுநள்ளாறே. ௧௦

தண்புனலும்வெண்பிறையுந்தாங்கியதாழ்சடையன்
நண்புநல்லார்மல்குகாழிஞானசம்பந்தன்நல்ல
பண்புநள்ளாறேத்துபாடல்பத்துமிவைவல்லார்
536 உண்புநீங்கிவானவரோடுலகிலுறைவாரே. ௧௧

50 ஒல்லையாறியுள்ளமொன்றிக்கள்ளமொழிந்துவெய்ய
சொல்லையாறித்தூய்மைசெய்துகாமவினையகற்றி
நல்லவாறேயுன்றனாமநாவில்நவின்றேத்த
537 வல்லவாறேவந்துநல்காய்வலிவலமேயவனே. ௧

இயங்குகின்றஇரவிதிங்கள்மற்றுநற்றேவரெல்லாம்
பயங்களாலேபற்றிநின்பாற்சித்தந்தெளிகின்றிலர்
தயங்குசோதீசாமவேதாகாமனைக்காய்ந்தவனே
538 மயங்குகின்றேன்வந்துநல்காய்வலிவலமேயவனே. ௨

பெண்டிர்மக்கள்சுற்றமென்னும்பேதைப்பெருங்கடலை
விண்டுபண்டேவாழமாட்டேன்வேதனைநோய்நலியக்
கண்டுகண்டேயுன்றனாமங்காதலிக்கின்றதுள்ளம்
539 வண்டுகிண்டிப்பாடுஞ்சோலைவலிவலமேயவனே. ௩

மெய்யராகிப்பொய்யைநீக்கிவேதனையைத்துறந்து
செய்யரானார்சிந்தையானேதேவர்குலக்கொழுந்தே
நைவனாயேனுன்றனாமநாளுந்நவிற்றுகின்றேன்
540 வையம்முன்னேவந்துநல்காய்வலிவலமேயவனே. ௪

துஞ்சும்போதுந்துற்றும்போதுஞ்சொல்லுவனுன்திறமே
தஞ்சமில்லாத்தேவர்வந்துன்தாளிணைக்கீழ்ப்பணிய
நஞ்சையுண்டாய்க்கென்செய்கேனோநாளுநினைந்தடியேன்
541 வஞ்சமுண்டென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. ௫

புரிசடையாய்புண்ணியனே நண்ணலார்மூவெயிலும்
எரியவெய்தாயெம்பெருமானென்றிமையோர்பரவும்
கரியுரியாய்காலகாலாநீலமணிமிடற்று
542 வரியரவாவந்துநல்காய்வலிவலமேயவனே. ௬

தாயுநீயேதந்தைநீயேசங்கரனேயடியேன்
ஆயுநின்பாலன்புசெய்வானுதரிக்கின்றதுள்ளம்
ஆயமாயகாயந்தன்னுளைவர்நின்றேன்றலொட்டார்
543 மாயமேயென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே. ௭

நீரொடுங்குஞ்செஞ்சடையாய்நின்னுடையபொன்மலையை
வேரொடும்பீழ்ந்தேந்தலுற்றவேந்தனிராவணனைத்
தேரொடும்போய்வீழ்ந்தலறத்திருவிரலாலடர்த்த
544 வாரொடுங்குங்கொங்கைபங்காவலிவலமேயவனே. ௮

ஆதியாயநான்முகனுமாலுமறிவரிய
சோதியானேநீதியில்லேன்சொல்லுவனின்திறமே
ஓதிநாளுமுன்னையேத்துமென்னைவினையவலம்
545 வாதியாமேவந்துநல்காய்வலிவலமேயவனே. ௯

பொதியிலானேபூவணத்தாய்பொன்திகழுங்கயிலைப்
பதியிலானேபத்தர்சித்தம்பற்றுவிடாதவனே
விதியிலாதார்வெஞ்சமணர்சாக்கியரென்றிவர்கள்
546 மதியிலாதாரென்செய்வாரோவலிவலமேயவனே. ௧௦

வன்னிகொன்றைமத்தஞ்சூடும்வலிவலமேயவனைப்
பொன்னிநாடன்புகலிவேந்தன்ஞானசம்பந்தன்சொன்ன
பன்னுபாடல்பத்தும்வல்லார்மெய்த்தவத்தோர்விரும்பும்
547 மன்னுசோதியீசனோடேமன்னியிருப்பாரே. ௧௧

51 வெங்கணானையீருரிவைபோர்த்துவிளங்குமொழி
மங்கைபாகம்வைத்துகந்தமாண்பதுஎன்னைகொலாம்
கங்கையோடுதிங்கள்சூடிக்கடிகமழுங்கொன்றைத்
548 தொங்கலானேதூயநீற்றாய்சோபுரமேயவனே. ௧

விடையமர்ந்துவெண்மழுவொன்றேந்திவிரிந்திலங்கு
சடையொடுங்கத்தண்புனலைத்தாங்கியதென்னைகொலாம்
கடையுயர்ந்தமும்மதிலுங்காய்ந்தனலுள்ளழுந்தத்
549 தொடைநெகிழ்ந்தவெஞ்சிலையாய்சோபுரமேயவனே. ௨

தீயராயவல்லரக்கர்செந்தழலுள்ளழுந்தச்
சாயவெய்துவானவரைத்தாங்கியதென்னைகொலாம்
பாயும்வெள்ளைஏற்றையேறிப்பாய்புலித்தோலுடுத்த
550 தூயவெள்ளைநீற்றினானேசோபுரமேயவனே. ௩

பல்விலோடுகையிலேந்திப்பல்கடையும்பலிதேர்ந்
தல்லல்வாழ்க்கைமேலதானஆதரவென்னைகொலாம்
வில்லைவென்றநுண்புருவவெல்நெடுங்கண்ணியோடுந்
551 தொல்லையூழியாகிநின்றாய்சோபுரமேயவனே. ௪

நாற்றமிக்ககொன்றைதுன்றுசெஞ்சடைமேல்மதியம்
ஏற்றமாகவைத்துகந்தகாரணமென்னைகொலாம்
ஊற்றமிக்ககாலன்றன்னையொல்கவுதைத்தருளித்
552 தோற்றமீறுமாகிநின்றாய்சோபுரமேயவனே. ௫

கொன்னவின்றமூவிலைவேற்கூர்மழுவாட்படையன்
பொன்னைவென்றகொன்றைமாலைசூடும்பொற்பென்னைகொலாம்
அன்னமன்னமென்னடையாள்பாகமமர்ந்தரைசேர்
553 துன்னவண்ணஆடையினாய்சோபுரமேயவனே. ௬

குற்றமின்மையுண்மைநீயென்றுன்னடியார்பணிவார்
கற்றகேள்விஞானமானகாரணமென்னைகொலாம்
வற்றலாமைவாளரவம்பூண்டயன்வெண்டலையில்
554 துற்றலானகொள்கையானேசோபுரமேயவனே. ௭

விலங்கலொன்றுவெஞ்சிலையாக்கொண்டுவிறலரக்கர்
குலங்கள்வாழூரெரித்தகொள்கையிதென்னைகொலாம்
இலங்கைமன்னுவாளவுணர்கோனையெழில்விரலால்
555 துலங்கவூன்றிவைத்துகந்தாய்சோபுரமேயவனே. ௮

விடங்கொள்நாகமால்வரையைச்சுற்றிவிரிதிரைநீர்
கடைந்தநஞ்சையுண்டுகந்தகாரணமென்னைகொலாம்
இடந்துமண்ணையுண்டமாலுமின்மலர்மேலயனுந்
556 தொடர்ந்துமுன்னங்காணமாட்டாச்சோபுரமேயவனே. ௯

புத்தரோடுபுன்சமணர்பொய்யுரையேயுரைத்துப்
பித்தராகக்கண்டுகந்தபெற்றிமையென்னைகொலாம்
மத்தயானையீருரிவைபோர்த்துவளர்சடைமேல்
557 துத்திநாகஞ்சூடினானேசோபுரமேயவனே. ௧௦

சோலைமிக்கதண்வயல்சூழ்சோபுரமேயவனைச்
சீலமிக்கதொல்புகழார்சிரபுரக்கோன்நலத்தால்
ஞாலமிக்கதண்டமிழால்ஞானசம்பந்தன்சொன்ன
558 கோலமிக்கமாலைவல்லார்கூடுவர்வானுலகே. கக

52 மறையுடையாய்தோலுடையாய்வார்சடைமேல்வளரும்
பிறையுடையாய்பிஞ்ஞகனேயென்றுனைப்பேசினல்லால்
குறையுடையார்குற்றமோராய்கொள்கையினாலுயர்ந்த
559 நிறையுடையாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. க

கனைத்தெழுந்தவெண்டிரைசூழ்கடலிடைநஞ்சுதன்னைத்
தினைத்தனையாமிடற்றில்வைத்ததிருந்தியதேவநின்னை
மனத்தகத்தோர்பாடலாடல்பேணியிராப்பகலும்
560 நினைத்தெழுவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. உ

நின்னடியேவழிபடுவான்நிமலாநினைக்கருத
என்னடியானுயிரைவவ்வேலென்றடற்கூற்றுதைத்த
பொன்னடியேபரவிநாளும்பூவொடுநீர்சுமக்கும்
561 நின்னடியாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ங

மலைபுரிந்தமன்னவன்றன்மகளையோர்பால்மகிழ்ந்தாய்
அலைபுரிந்தகங்கைதங்குமவிர்சடையாரூரா
தலைபுரிந்தபலிமகிழ்வாய்தலைவநின்றாள்நிழற்கீழ்
562 நிலைபுரிந்தாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ச

பாங்கினல்லார்படிமஞ்செய்வார்பாரிடமும்பலிசேர்
தூங்கிநல்லார்பாடலோடுதொழுகழலேவணங்கித்
தாங்கிநில்லாஅன்பினொடுந்தலைவநின்றாள்நிழற்கீழ்
563 நீங்கிநில்லாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ரு

விருத்தனாகிப்பாலனாகிவேதமோர்நான்குணர்ந்து
கருத்தனாகிக்கங்கையாளைக்கமழ்சடைமேற்கரந்தாய்
அருத்தனாயஆதிதேவனடியிணையேபரவும்
564 நிருத்தர்கீதரிடர்களையாய்நெடுங்களமேயவனே. சு

கூறுகொண்டாய்மூன்றுமொன்றாக்கூட்டியோர்வெங்கணையால்
மாறுகொண்டார்புரமெரித்தமன்னவனேகொடிமேல்
ஏறுகொண்டாய்சாந்தமீதென்றெம்பெருமானணிந்த
565 நீறுகொண்டாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. எ

குன்றினுச்சிமேல்விலங்குங்கொடிமதில்சூழிலங்கை
அன்றிநின்றவரக்கர்கோனையருவரைக்கீழடர்த்தாய்
என்றுநல்லவாய்மொழியாலேத்தியிராப்பகலும்
566 நின்றுநைவாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ௮

வேழவெண்கொம்பொசித்தமாலும்விளங்கியநான்முகனும்
சூழவெங்குநேடஆங்கோர்சோதியுளாகிநின்றாய்
கேழல்வெண்கொம்பணிந்தபெம்மான்கேடிலாப்பொன்னடியின்
567 நீழல்வாழ்வாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ௯

வெஞ்சொற்றஞ்சொல்லாக்கிநின்றவேடமில்லாச்சமணும்
தஞ்சமில்லாச்சாக்கியருந்தத்துவமொன்றறியார்
துஞ்சலில்லாவாய்மொழியால்தோத்திரநின்னடியே
568 நெஞ்சில்வைப்பாரிடர்களையாய்நெடுங்களமேயவனே. ௧௦

நீடவல்லவார்சடையான்மேயநெடுங்களத்தைச்
சேடர்வாழுமாமறுகிற்சிரபுரக்கோன்நலத்தால்
நாடவல்லபனுவன்மாலைஞானசம்பந்தன்சொன்ன
569 பாடல்பத்தும்பாடவல்லார்பாவம்பறையுமே. ௧௧

53 தேவராயுமசுரராயுஞ்சித்தர்செழுமறைசேர்
நாவராயுநண்ணுபாரும்விண்ணெரிகால்நீரும்
மேவராயவிரைமலரோன்செங்கண்மாலீசனென்னும்
570 மூவராயமுதலொருவன்மேயதுமுதுகுன்றே. ௧

பற்றுமாகிவானுளோர்க்குப்பல்கதிரோன்மதிபார்
எற்றுநீர்தீக்காலுமேலைவிண்ணியமானனோடு
மற்றுமாதோர்பல்லுயிராய்மாலயனும்மறைகள்
571 முற்றுமாகிவேறுமானான்மேயதுமுதுகுன்றே. ௨

வாரிமாகம்வைகுதிங்கள்வாளரவஞ்சூடி
நாரிபாகம்நயந்துபூமேல்நான்முகன்றன்றலையில்
சீரிதாகப்பலிகொள்செல்வன்செற்றலுந்தோன்றியதோர்
572 மூரிநாகத்துரிவைபோர்த்தான்மேயதுமுதுகுன்றே. ௩

பாடுவாருக்கருளுமெந்தைபனிமுதுபௌவமுந்நீர்
நீடுபாருமுழுதுமோடியண்டர்நிலைகெடலும்
நாடுதானுமூடுமோடிஞாலமுநான்முகனும்
573 ஊடுகாணமூடும்வெள்ளத்துயர்ந்ததுமுதுகுன்றே. ௪

வழங்குதிங்கள்வன்னிமத்தமாசுணமீசணவிச்
செழுங்கல்வேந்தன்செல்விகாணத்தேவர்திசைவணங்கத்
தழங்குமொந்தைதக்கைமிக்கபேய்க்கணம்பூதஞ்சூழ
574 முழங்குசெந்தீயேந்தியாடிமேயதுமுதுகுன்றே. ரு

சுழிந்தகங்கைதோய்ந்ததிங்கட்டொல்லராநல்லிதழி
சழிந்தசென்னிச்சைவவேடந்தான்நினைத்தைம்புலனும்
அழிந்தசிந்தையந்தணாளர்க்கறம்பொருளின்பம்வீடு
575 மொழிந்தவாயான்முக்கணாதிமேயதுமுதுகுன்றே. சு, எ

மயங்குமாயம்வல்லராகிவானினொடுநீரும்
இயங்குவோருக்கிறைவனுய இராவணன்தோள்நெரித்த
புயங்கராகமாநடத்தன்புணர்முலைமாதுமையாள்
576 முயங்குமார்பன்முனிவரேத்தமேயதுமுதுகுன்றே. அ

ஞாலமுண்டமாலுமற்றைநான்முகனுமறியாக்
கோலமண்டர்சிந்தைகொள்ளாராயினுங்கொய்மலரால்
ஏலஇண்டைகட்டிநாமமிசையஎப்போதுமேத்தும்
577 மூலமுண்டநீற்றர்வாயான்மேயதுமுதுகுன்றே. கூ

உறிகொள்கையர்சீவரத்தருண்டுழல்மிண்டர்சொல்லை
நெறிகளென்னநினைவுறாதேநித்தலுங்கைதொழுமின்
மறிகொள்கையன்வங்கமுந்நீர்ப்பொங்குவிடத்தையுண்ட
578 முறிகொள்மேனிமங்கைபங்கன்மேயதுமுதுகுன்றே. க0

மொய்த்துவானோர்பல்கணங்கள்வணங்குமுதுகுன்றைப்
பித்தர்வேடம்பெருமையென்னும்பிரமபுரத்தலைவன்.
579 * * * * * * கக

54 பூத்தேர்ந்தாயனகோண்டுநின்போன்னடி
ஏத்தாதாரில்லையெண்ணுங்கால்
ஓத்தூர்மேயவொளிமழுவாளங்கைக்
580 கூத்தீரும்மகுணங்களே. க

இடையீர்போகாஇளமுலையாளையோர்
புடையீரேபுள்ளிமானுரி
உடையீரேயும்மையேத்துதுமோத்தூர்ச்
581 சடையீரேயுமதாளே. உ

உள்வேர்போலநொடிமையினார்திறம்
கொள்வீரல்குலோர்கோவணம்
ஒள்வாழைக்கனிதேன்சொரியோத்தூர்க்
582 கள்வீரேயுமகாதலே. ௩.

தோட்டீரேதுத்தியைந்தலைநாகத்தை
ஆட்டீரேயடியார்வினை
ஒட்டீரேயும்மையேத்துதுமோத்தூர்
583 நாட்டீரேயருள்நல்குமே. ௪

குழையார்காதீர்கொடுமழுவாட்படை
உழையாள்வீர்திருவோத்தூர்
பிழையாவண்ணங்கள்பாடிநின்றாடுவார்
584 அழையாமேயருள்நல்குமே. ௫

மிக்கார்வந்துவிரும்பிப்பலியிடத்
தக்கார்தம்மக்களீரென்
றுட்காதாருளரோதிருவோத்தூர்
585 நக்கீரேயருள்நல்குமே. ௬

தாதார்கொன்றைதயங்குமுடியுடை
நாதாஎன்றுநலம்புகழ்ந்
தோதாதாருளரோதிருவோத்தூர்
586 ஆதீரேயருள்நல்குமே. ௭

என்றானிம்மலைஎன்றஅரக்கனை
வென்றார்போலும்விரலினால்
ஒன்றார்மும்மதிலெய்தவனோத்தூர்
587 என்றார்மேல்வினையேகுமே. ௮

நன்றாநான்மறையானொடுமாலுமாய்ச்
சென்றார்போலுந்திசையெலாம்
ஒன்றாயொள்ளெரியாய்மிகவோத்தூர்
588 நின்றீரேயுமைநேடியே. ௯

காரமண்கலிங்கத்துவராடையர்
தேரர்சொல்லவைதேறன்மின்
ஓரம்பாலெயிலெய்தவனோத்தூர்ச்
589 சீரவன்கழல்சேர்மினே. ௧௦

குரும்பையாண்பனையீன்குலையோத்தூர்
அரும்புகொன்றையடிகளைப்
பெரும்புகலியுள்ஞானசம்பந்தன்சொல்
590 விரும்புவார்வினைவீடே. கக

55 ஊறியார்தருநஞ்சினையுண்டுமை
நீறுசேர்திருமேனியர்
சேறுசேர்வயல்தென்திருமாற்பேற்றின்
591 மாறிலாமணிகண்டரே. க

தொடையார்மாமலர்கொண்டிருபோதும்மை
அடைவாராமடிகள்ளென
மடையார்நீர்மல்குமன்னியமாற்பே
592 றுடையீரேயுமையுள்கியே. உ

பையாரும்மரவங்கொடுவாட்டிய
கையானென்றுவணங்குவர்
மையார்நஞ்சுண்டுமாற்பேற்றிருக்கின்ற
593 ஐயாநின்னடியார்களே. ங

சாலமாமலர்கொண்டுசரணென்று
மேலையார்கள்விரும்புவர்
மாலினார்வழிபாடுசெய்மாற்பேறு
594 நீலமார்கண்டநின்னையே. ச

மாறிலாமணியேயென்றுவானவர்
ஏறவேமிகஏத்துவர்
கூறனேகுலவுந்திருமாற்பேற்றின்
595 நீறனேயென்றுநின்னையே. ரு

உரையாதாரில்லையொன்றுநின்தன்மையைப்
பரவாதாரில்லைநாள்களும்
திரையார்பாலியின்தென்கரைமாற்பேற்
596 றரையானேயருள்நல்கிடே. சு, எ

அரசளிக்கும்மரக்கனவன்றனை
உரைகெடுத்தவனொல்கிட
வரமிகுத்தவெம்மாற்பேற்றடிகளைப்
597 பரவிடக்கெடும்பாவமே. அ

இருவர்தேவருந்தேடித்திரிந்தினி
ஒருவராலறிவொண்ணிலன்
மருவுநீள்கழல்மாற்பேற்றடிகளைப்
598 பரவுவார்வினைபாறுமே. ௬

தூசுபோர்த்துழல்வார்கையில்துற்றுணும்
நீசர்தம்முரைகொள்ளெலும்
தேசமல்கியதென்திருமாற்பேற்றின்
599 ஈசனென்றெடுத்தேத்துமே. ௧௦

மன்னிமாலொடுசோமன்பணிசெயும்
மன்னுமாற்பேற்றடிகளை
மன்னுகாழியுள்ஞானசம்பந்தன்சொல்
600 பன்னவேவினைபாறுமே. ௧௧

56 காரார்கொன்றைகலந்தமுடியினர்
சீரார்சிந்தைசெலச்செய்தார்
பாரார்நாளும்பரவியபாற்றுறை
601 ஆராராதிமுதல்வரே. ௧

நல்லாரும்மவர்தீயரெனப்படும்
சொல்லார்நன்மலர்சூடினார்
பல்லார்வெண்டலைச்செல்வரெம்பாற்றுறை
602 எல்லாருந்தொழுமீசரே. ௨

விண்ணார்திங்கள்விளங்குநுதலினர்
எண்ணார்வந்தெனெழில்கொண்டார்
பண்ணார்வண்டினம்பாடல்செய்பாற்றுறை
603 உள்நாள்நாளும்முறைவரே. ௩

பூவுந்திங்கள்புனைந்தமுடியினர்
ஏவினல்லாரெயிலெய்தார்
பாவந்தீர்புனல்மல்கியபாற்றுறை
604 ஓவென்சிந்தையொருவரே. ௪

மாகந்தோய்மதிசூடிமகிழ்ந்தென
தாகம்பொன்னிறமாக்கினார்
பாகம்பெண்ணுமுடையவர்பாற்றுறை
605 நாகம்பூண்டநயவரே. ௫

போதுபொன்திகழ்கொன்றைபுனைமுடி
நாதர்வந்தென்கலங்கொண்டார்
பாதந்தொண்டர்பரவியபாற்றுறை
606 வேதமோதும்விகிர்தரே. சா

வாடல்வெண்டலைசூடினர்மால்விடை
கோடல்செய்தகுறிப்பினர்
பாடல்வண்டினம்பண்செயும்பாற்றுறை
607 ஆடல்நாகமசைத்தாரே. எ

வெவ்வமேனியராய்வெள்ளைநீற்றினர்
எவ்வஞ்செய்தெனெழில்கொண்டார்
பவ்வநஞ்சடைகண்டரெம்பாற்றுறை
608 மவ்வல்சூடியமைந்தரே. அ

ஏனமன்னமுமானவருக்கெரி
ஆனவண்ணத்தெமண்ணலார்
பானலம்மலர்விம்மியபாற்றுறை
609 வானவெண்பிறைமைந்தரே. சு

வெந்தநீற்றினர்வேலினர்நூலினர்
வந்தெனன்னலம்வௌவினர்
பைந்தண்மாதவிசூழ்தருபாற்றுறை
610 மைந்தர்தாமோர்மணாளரே. கo

பத்தர்மன்னியபாற்றுறைமேவிய
பத்துநூறுபெயரனைப்
பத்தன்ஞானசம்பந்தனதின்தமிழ்
611 பத்தும்பாடிப்பரவுமே. கக

57 ஒள்ளிதுள்ளக்கதிக்காமிவனொளி
வெள்ளியானுறைவேற்காடு
உள்ளியாருயர்ந்தாரிவ்வுலகினில்
612 தெள்ளியாரவர்தேவரே. க

ஆடல்நாகமசைத்தளவில்லதோர்
வேடங்கொண்டவன்வேற்காடு
பாடியும்பணிந்தாரிவ்வுலகினில்
613 சேடராகியசெல்வரே. உ

பூதம்பாடப்புறங்காட்டிடையாடி
வேதவித்தகன்வேற்காடு
போதுஞ்சாந்தும்புகையுங்கொடுத்தவர்க்
614 கேதமெய்துதலில்லையே. ௩

ஆழ்கடலெனக்கங்கைகரந்தவன்
வீழ்சடையினன்வேற்காடு
தாழ்வுடைமனத்தாற்பணிந்தேத்திடப்
615 பாழ்படும்மவர்பாவமே. ௪

காட்டினாலுமயர்த்திடக்காலனை
வீட்டினானுறைவேற்காடு
பாட்டினாற்பணிந்தேத்திடவல்லவர்
616 ஓட்டினார்வினையொல்லையே. ௫

தோலினாலுடைமேவவல்லான்சுடர்
வேலினானுறைவேற்காடு
நூலினாற்பணிந்தேத்திடவல்லவர்
617 மாலினார்வினைமாயுமே. ௬

மல்லல்மும்மதில்மாய்தரஎய்தவோர்
வில்லினானுறைவேற்காடு
சொல்லவல்லசுருங்காமனத்தவர்
618 செல்லவல்லவர்தீர்க்கமே. ௭

மூரல்வெண்மதிசூடுமுடியுடை
வீரன்மேவியவேற்காடு
வாரமாய்வழிபாடுநினைந்தவர்
619 சேர்வர்செய்கழல்திண்ணமே. ௮

பரக்கினார்படுவெண்டலையிற்பலி
விரக்கினானுறைவேற்காட்டூர்
அரக்கனாண்மையடரப்பட்டானிறை
620 நெருக்கினானைநினைமினே. ௯

மாறிலாமலரானொடுமாலவன்
வேறலானுறைவேற்காடு
ஈறிலாமொழியேமொழியாவெழில்
621 கூறினார்க்கில்லைகுற்றமே. ௧௦

விண்டமாம்பொழில்சூழ்திருவேற்காடு
கண்டுநம்பன்கழல்பேணிச்
சண்பைஞானசம்பந்தனசெந்தமிழ்
622 கொண்டுபாடக்குணமாமே. கக

58 அரியுநம்வினையுள்ளன ஆசற
வரிகொள்மாமணிபோற்கண்டங்
கரியவன்திகழுங்காவீரத்தெம்
623 பெரியவன்கழல்பேணவே. க

தங்குமோவினை தாழ்சடைமேலவன்
திங்களோடுடன்சூடிய
கங்கையான்திகழுங்காவீரத்தெஞ்
624 சங்கரன்கழல்சாரவே. உ

ஏதம்வந்தடையாவினிநல்லன
பூதம்பல்படையாக்கிய
காதலான்திகழுங்காவீரத்தெம்
625 நாதன்பாதநணுகவே. ௩

பறையுநம்வினையுள்ளனபாழ்பட
மறையுமாமணிபோற்கண்டம்
கறையவன்திகழுங்காவீரத்தெம்
626 இறைபவன்கழலேத்தவே. ௪

பண்ணினார்மறைபாடலனாடலன்
விண்ணினார்மதிலெய்தமுக்
கண்ணினானுறையுங்காவீரத்தை
627 நண்ணுவார்வினைநாசமே. ௫

நிழலினார்மதிசூடியநீள்சடை
அழலினானலேந்திய
கழலினாருறையுங்காவீரத்தைத்
628 தொழவல்லார்க்கில்லைதுக்கமே. ௬

வண்டார்மும்மதில்மாய்தரவெய்தவன்
அண்டனாழல்போலொளிர்
கண்டனாருறையுங்காவீரத்துத்
629 தொண்டர்மேற்றுயர்தூரமே. எ

புனலிலங்கையர்கோன்முடிபத்திறச்
சினவலாண்மைசெகுத்தவன்
கனலவன்னுறைகின்றகரவீரம்
630 எனவல்லார்க்கிடரில்லையே. அ

வெள்ளத்தாமரையானொடுமாலுமாய்த்
தெள்ளத்தீத்திரளாகிய
கள்ளத்தானுறையுங்கரவீரத்தை
631 உள்ளத்தான்வினைஓயுமே. சூ

செடியமண்ணொடுசீவரத்தாரவர்
கொடியவெவ்வுரைகொள்ளேன்மின்
கடியவன்னுறைகின்றகரவீரத்
632 தடியவர்க்கில்லையல்லலே. க0

வீடிலான்விளங்குங்கரவீரத்தெஞ்
சேடன்மேற்கசிவாற்றமிழ்
நாடுஞானசம்பந்தனசொல்லிவை
633 பாடுவார்க்கில்லைபாவமே. கக

59 ஒடுங்கும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்
கையொழியத்தவம், அடங்கும்மிடங்கருதிநின்றீரெல்லா
மடிகளடிநிழற்கீழாளாம்வண்ணம், கிடங்கும்மதிலுஞ்சுலாவி
யெங்குங்கெழுமனைகள்தோறுமறையினொலி, தொடங்குங்
கடந்தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்
634 களே. க

பிணிநீரசாதல்பிறத்தலிவைபிரியப்பிரியாதபேரின்பத்
தோ, டணிநீரமேலுலகமெய்தலுறிலறிமின்குறைவில்லையா
னேறுடை, மணிநீலகண்டமுடையபிரான்மலைமகளுந்தானு
மகிழ்ந்துவாழும், துணிநீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர்
635 தூங்கானைமாடந்தொழுமின்களே. உ

சாநாளும்வாழ்நாளுந்தோற்றமிவைசலிப்பாயவாழ்க்கை
யொழியத்தவம், ஆமாறறியாதலமந்துநீரயர்ந்துங்குறை
வில்லையானேறுடைப், பூமாணலங்கலிலங்குகொன்றைபுனல்
பொதிந்தபுன்சடையினானுறையும், தூமாண்கடந்தைத்தடங்
636 கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ந

ஊன்றும்பிணிபிறவிகேடென்றிவையுடைத்தாயவாழ்க்
கையொழியத்தவம், மான்றுமனங்கருதிநின்றீரெல்லாமனந்
திரிந்துமண்ணில்மயங்காதுநீர்,மூன்றுமதிலெய்தமூவாச்சிலை
முதல்வர்க்கிடம்போலுமுகில்தோய்கொடி, தோன்றுங்கடந்
637 தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ௪

மயல்தீர்மையில்லாததோற்றம்மிவைமரணத்தொடொத்த
ழியுமாறுதலால், வியல்தீரமேலுலகமெய்தலுறின்மிக்கொன்
றும்வேண்டாவிமலனிடம்,உயர்தீரவோங்கியநாமங்களாலோ
வாதுநாளுமடிபரவல்செய், துயர்தீர்கடந்தைத்தடங்கோயில்
638 சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ௫

பன்னீர்மைகுன்றிச்செவிகேட்பிலாபடர்நோக்கிற்கண்
பவளந்நிற, நன்னீர்மைகுன்றித்திரைதோலொடுநரைதோன்
றுங்காலம்நமக்காதல்முன், பொன்னீர்மைதுன்றப்புறந்
தோன்றுநற்புனல்பொதிந்தபுன்சடையினானுறையும்,தொன்
னீர்க்கடந்தைத்தடங்கோயில்சேர் தூங்கானைமாடந்தொழு
639 மின்களே. ௬

இறையூண்துகளோடிடுக்கணெய்தியிழிப்பாயவாழ்க்கை
யொழியத்தவம், நிறையூணெறிகருதிநின்றீரெல்லாம்நீள்
கழலேநாளுநினைமின்சென்னிப், பிறைசூழலங்கலிலங்கு
கொன்றைபிணையும்பெருமான்பிரியாதநீர்த், துறைசூழ்கடந்
640 தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ௭

பல்வீழ்ந்துநாத்தளர்ந்துமெய்யில்வாடிப்பழிப்பாயவாழ்க்
கையொழியத்தவம், இல்சூழிடங்கருதிநின்றீரெல்லாமிறை
யேபிரியாதெழுந்துபோதும், கல்சூழரக்கன்கதறச்செய்தான்
காதலியுந்தானுங்கருதிவாழும், தொல்சீர்க்கடந்தைத்தடங்
641 கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ௮

நோயும்பிணியுமருந்துயரமுநுகருடையவாழ்க்கையொ
ழியத்தவம், வாயுமனங்கருதிநின்றீரெல்லாமலர்மிசையநான்
முகனும்மண்ணும்விண்ணும், தாய அடியளந்தான்காணமாட்
டாத்தலைவர்க்கிடம்போலுந்தண்சோலைவிண், தோயுங்கடந்
642 தைத்தடங்கோயில்சேர்தூங்கானைமாடந்தொழுமின்களே. ௯

பகடூர்பசிநலியநோய்வருதலாற்பழிப்பாயவாழ்க்கையொ
ழியத்தவம், முகடூர்மயிர்கடிந்தசெய்கையாருமூடுதுவராடை

யருநாடிச்சொன்ன,திகழேர்ந்தபொய்ம்மொழிகள்தேறவேண்
டாதிருந்திழையுந்தானும்பொருந்திவாழுந், துகழேர்கடந்
643 தைத்தடங்கோயில்சேர் தூங்கானைமாடந்தொழுமின்களே.

மண்ணார்முழவதிரும்மாடவீதிவயற்காழிஞானசம்பந்
தன்நல்ல, பெண்ணாகடத்துப்பெருங்கோயில்சேர்பிறையுரிஞ்
சுந்தூங்கானைமாடமேயான்,கண்ணார்கழல்பாவுபாடல்பத்துங்
கருத்துணரக்கற்றாருங்கேட்டாரும்போய், விண்ணோருலகத்
644 துமேவிவாழும்விதியதுவேயாகும்வினைமாயுமே. கக

60 வண்டரங்கப்புனற்கமலமதுமாந்திப்பெடையினோடும்
ஒண்டரங்கஇசைபாடுமளியரசேஒளிமதியத்
துண்டரங்கப்பூண்மார்பர்திருத்தோணிபுரத்துறையும்
645 பண்டரங்கர்க்கென்னிலைமைபரிந்தொருகாற்பகராயே. க

எறிசுறவங்கழிகானலிளங்குருகேஎன்பயலை
அறிவுறாதொழிவதுவுமருவினையேன்பயனன்றே
செறிசிறார்பதமோதுந்திருத்தோணிபுரத்துறையும்
646 வெறிநிறார்மலர்க்கண்ணிவேதியர்க்குவிளம்பாயே. உ

பண்பழனக்கோட்டகத்துவாட்டமிலாச்செஞ்சூட்டுக்
கண்பகத்தின்வாரணமேகடுவினையேனுறுபயலை [யும்
செண்பகஞ்சேர்பொழில்புடைசூழ்திருத்தோணிபுரத்துறை
647 பண்பனுக்கென்பரிசுரைத்தாற்பழியாமோமொழியாயே. ௩

காண்டகையசெங்காலொண்கழிநாராய்காதலாற்
பூண்டகையமுலைமெலிந்துபொன்பயந்தாளென்றுவளர்
சேண்டகையமணிமாடத்திருத்தோணிபுரத்துறையும்
648 ஆண்டகையாற்கின்றேசென்றடியறியவுணர்த்தாயே. ச

பாராரேயெனையொருகால்தொழுகின்றேன்பாங்கமைந்த
காராருஞ்செழுநிறத்துப்பவளக்காற்கபோதகங்காள்
தேராருநெடுவீதித்திருத்தோணிபுரத்துறையும்
649 நீராருஞ்சடையாருக்கென்னிலைமைநிகழ்த்தீரே. ரு

சேற்றெழுந்தமலர்க்கமலச்செஞ்சாலிக்கதிர்வீச
வீற்றிருந்தஅன்னங்காள்விண்ணோடுமண்மறைகள்
தோற்றுவித்ததிருத்தோணிபுரத்தீசன்துளங்காத
650 கூற்றுதைத்ததிருவடியேகூடுமோகூறீரே. சு

முன்றில்வாய்மடற்பெண்ணைக்குரம்பைவாழ்முயங்குசிறை
அன்றில்காள்பிரிவுறுநோயறியாதீர்மிகவல்லீர்
தென்றலார்புகுந்துலவுந்திருத்தோணிபுரத்துறையுங்
651 கொன்றைவார்சடையார்க்கென்கூர்பயலைகூறீரே. எ

பானுறுமலர்ச்சூதப்பல்லவங்களவைகோதி
ஏனோர்க்குமினிதாகமொழியுமெழிலிளங்குயிலே
தேனாரும்பொழில்புடைசூழ்திருத்தோணிபுரத்தமரர்
652 கோனாரையென்னிடத்தேவரவொருகாற்கூவாயே. அ

நற்பதங்கள்மிகஅறிவாய்நானுன்னைவேண்டுகின்றேன்
பொற்பமைந்தவாயலகிற்பூவைநல்லாய்போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர்மறையாளர்திருத்தோணிபுரத்துறையும்
653 விற்பொலிதோள்விகிர்தனுக்கென்மெய்ப்பயலைவிளம்பாயே.

சிறையாருமடக்கிளியேயிங்கேவாதேனொடுபால்
முறையாலேயுணத்தருவன்மொய்பவளத்தொடுதாளந்
துறையாருங்கடற்றோணிபுரத்தீசன்றுளங்குமிளம்
654 பிறையாளன்திருநாமமெனக்கொருகாற்பேசாயே. ௧௦

போர்மிகுத்தவயற்றோணிபுரத்துறையும்புரிசடையெங்
கார்மிகுத்தகறைக்கண்டத்திறையவனைவண்கமலத்
தார்மிகுத்தவரைமார்பன்சம்பந்தனுரைசெய்த
655 சீர்மிகுத்ததமிழ்வல்லார்சிவலோகஞ்சேர்வாரே. ௧௧

61 நறைகொண்டமலர்தூவிவிரையளிப்பநாடோறும்
முறைகொண்டுநின்றடியார்முட்டாமேபணிசெய்யச்
சிறைகொண்டவண்டறையுஞ்செங்காட்டங்குடியதனுள்
656 கறைகொண்டகண்டத்தான்கணபதீச்சரத்தானே. ௧

வாரேற்றபறையொலியுஞ்சங்கொலியும்வந்தியம்ப
ஊரேற்றசெல்வத்தோடோங்கியசீர்விழவோவாச்
சீரேற்றமுடைத்தாயசெங்காட்டங்குடியதனுள்
657 காரேற்றகொன்றையான்கணபதீச்சரத்தானே. ௨

வரந்தையான்சோபுரத்தான்மந்திரத்தான்தந்திரத்தான்
கிரந்தையான்கோவணத்தான்கிண்கிணியான்கையதோர்
சிரந்தையான்செங்காட்டங்குடியான்செஞ்சடைசேருங்
658 கரந்தையான்வெண்ணீற்றான்கணபதீச்சரத்தானே. ௩

தொங்கலுங்கமழ்சாந்துமகிற்புகையுந்தொண்டர்கொண்
டங்கையால்தொழுதேத்த அருச்சுனற்கன்றருள்செய்தான்
செங்கயல்பாய்வயலுடுத்தசெங்காட்டங்குடியதனுள்
659 கங்கைசேர்வார்சடையான்கணபதீச்சரத்தானே. ௪

பாலினல்நறுநெய்யாற்பழத்தினற்பயின்றாட்டி
நூலினல்மணமாலைகொணர்ந்தடியார்புரிந்தேத்தச்
சேலினர்வயல்புடைசூழ்செங்காட்டங்குடியதனுள்
660 காலினற்கூற்றுதைத்தான்கணபதீச்சரத்தானே. ௫

நுண்ணியான்மிகப்பெரியான்ஓவுளார்வாயுளான்
தண்ணியான்வெய்யானந்தலைமேலான்மனத்துளான்
திண்ணியான்செங்காட்டங்குடியான்செஞ்சடைமதியக்
661 கண்ணியான்கண்ணுதலான்கணபதீச்சரத்தானே. ௬

மையினார்மலர்நெடுங்கண்மலைமகளோர்பாகமாம்
மெய்யினன்பையரவமரைக்கசைத்தான்மீன்பிறழச்
செய்யினார்தண்கழனிச்செங்காட்டங்குடியதனுள்
662 கையினார்கூரெரியான்கணபதீச்சரத்தானே. ௭

தோடுடையான்குழையுடையானரக்கன்றன்றோளடர்த்த
பீடுடையான்போர்விடையான்பெண்பாகமிகப்பெரியான்
சேடுடையான்செங்காட்டங்குடியுடையான்சேர்ந்தாடுங்
663 காடுடையானாடுடையான்கணபதீச்சரத்தானே. ௮

ஆனூராவுழிதருவானன்றிருவர்தேர்ந்துணரா
வானூரான்வையகத்தான்வாழ்த்துவார்மனத்துளான்
தேனூரான்செங்காட்டங்குடியான்சிற்றம்பலத்தான்
664 கானூரான்கழுமலத்தான்கணபதீச்சரத்தானே. ௯

செடிநுகருஞ்சமணர்களுஞ்சீவரத்தசாக்கியரும்
படிநுகராதயருழப்பார்க்கருளாதபண்பினன்
பொடிநுகருஞ்சிறுத்தொண்டர்க்கருள்செய்யும்பொருட்டாகக்
665 கடிநகராய்வீற்றிருந்தான்கணபதீச்சரத்தானே. ௧௦

கறையிலங்குமலர்க்குவளைகண்காட்டக்கடிபொழிலின்
நறையிலங்குவயற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
சிறையிலங்குபுனற்படப்பைச்செங்காட்டங்குடிசேர்த்தும்
துதமிழ்வல்லார்வானுலகத்திருப்பாரே. ௧௧

62 நாளாயபோகாமேநஞ்சணியுங்கண்டனுக்கே
ஆளாயஅன்புசெய்வோம்மடநெஞ்சேயரன்நாமம்
கேளாய்நங்கிளைகிளைக்குங்கேடுபடாத்திறமருளிக்
667 கோளாயநீக்குமவன்கோளிலியெம்பெருமானே. ௧

ஆடரவத்தழகாமைஅணிகேழற்கொம்பார்த்த
தோடரவத்தொருகாதன்துணைமலர்நற்சேவடிக்கே
பாடரவத்திசைபயின்றுபணிந்தெழுவார்தம்மனத்தில்
668 கோடரவந்தீர்க்குமவன்கோளிலியெம்பெருமானே. ௨

நன்றுநகுநாண்மலரால்நல்லிருக்குமந்திரங்கொண்
டொன்றிவழிபாடுசெயலுற்றவன்றனோங்குயிர்மேல்
கன்றிவருகாலனுயிர்கண்டவனுக்கன்றளித்தான்
669 கொன்றைமலர்பொன்றிகழுங்கோளிலியெம்பெருமானே. ௩

வந்தமணலாலிலிங்கமண்ணியின்கட்பாலாட்டும்
சிந்தைசெய்வோன்தன்கருமந்தேர்ந்துசிதைப்பான்வருமத்
தந்தைதனைச்சாடுதலுஞ்சண்டீசனென்றருளிக்
670 கொந்தணவுமலர்கொடுத்தான்கோளிலியெம்பெருமானே. ௪

வஞ்சமனத்தஞ்சொடுக்கிவைகலுநற்பூசனையால்
நஞ்சமுதுசெய்தருளுநம்பியெனவேநினையும்
பஞ்சவரிற்பார்த்தனுக்குப்பாசுபதமீந்துகந்தான்
671 கொஞ்சுகிளிமஞ்சணவுங்கோளிலியெம்பெருமானே. ௫

தாவியவனுடனிருந்துங்காணாததற்பரனை
ஆவிதனிலஞ்சொடுக்கியங்கணனென்றாதரிக்கும்
நாவியல்சீர்நமிநந்தியடிகளுக்குநல்குமவன்
672 கோவியலும்பூவெழுகோற்கோளிலியெம்பெருமானே. ௬

கன்னவிலுமால்வரையான்கார்திகழுமாமிடற்றான்
சொன்னவிலுமாமறையான்தோத்திரஞ்செய்வாயினுளான்
மின்னவிலுஞ்செஞ்சடையான்வெண்பொடியானங்கையினில்
673 கொன்னவிலுஞ்சூலத்தான்கோளிலியெம்பெருமானே. ௭

அந்தரத்தில்தேருருமாக்கன்மலையன்றெடுப்பச்
சுந்தரத்தன்திருவிரலாலூன்றவவனுடல்நெரிந்து
மந்திரத்தமறைபாடவாளவனுக்கீந்தானும்
674 கொந்தரத்தமதிச்சென்னிக்கோளிலியெம்பெருமானே. ௮

நாணமுடைவேதியனுநாரணனுநண்ணவொணாத்
தாணுவெனையாளுடையான்றன்னடியார்க்கன்புடைமை
பாணனிசைபத்திமையாற்பாடுதலும்பரிந்தளித்தான்
675 கோணவிளம்பிறைச்சென்னிக்கோளிலியெம்பெருமானே.

தடுக்கமருஞ்சமணரொடுதர்க்கசாத்திரத்தவர்சொல்
இடுக்கண்வருமொழிகேளாதீசனையேஏத்துமின்கள்
நடுக்கமிலாஅமருலகம்நண்ணலுமாமண்ணல்கழல்
676 கொடுக்ககிலாவரங்கொடுக்குங்கோளிலியெம்பெருமானே.

நம்பனைநல்லடியார்கணாமுடைமாடென்றிருக்கும்
கொம்பனையாள்பாகனெழிற்கோளிலியெம்பெருமானை
வம்பமருந்தண்காழிச்சம்பந்தன்வண்டமிழ்கொண்
677 டின்பமாவல்லார்களெய்துவர்களீசனையே. ௧௧

63 எரியார்மழுவொன்றேந்தியங்கையிடுதலையேகலனா
வரியார்வளையாரையம்வவ்வாய்மாநலம்வவ்வுதியே
சரியாநாவின்வேதகீதன்தாமரைநான்முகத்தன்
678 பெரியான்பிரமன்பேணியாண்டபிரமபுரத்தானே. ௧

பெயலார்சடைக்கோர்திங்கள்சூடிப்பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்கணஞ்சொனல்லார்கண்டுயில்வவ்வுதியே
இயலானடாவியின்பமெய்தியிந்திரனாள்மண்மேல்
679 வியலார்முரசமோங்குசெம்மைவேணுபுரத்தானே. ௨

நகலார்தலையும்வெண்பிறையுநளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந்தையம்வவ்வாய்பாய்கலைவவ்வுதியே
அகலாதுறையுமாநிலத்திலயலின்மையாலமரர்
680 புகலால்மலிந்தபூம்புகலிமேவியபுண்ணியனே. ௩

சங்கோடிலங்கத்தோடுபெய்துகாதிலோர்தாழ்குழையன்
அங்கோல்வளையாரையம்வவ்வாயானலம்வவ்வுதியே
செங்கோனடாவிப்பல்லுயிர்க்குஞ்செய்வினைமெய்தரிய
681 வெங்கோத்தருமன்மேவியாண்டவெங்குருமேயவனே. ௪

தணிநீர்மதியஞ்சூடிநீடுதாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவாரையம்வவ்வாய்பெய்கலைவவ்வுதியே
அணிநீருலகமாகியெங்குமாழ்கடலாலழுங்கத்
682 துணிநீர்பணியத்தான்மிதந்ததோணிபுரத்தானே. ௫

கவர்பூம்புனலுந்தண்மதியுங்கமழ்சடைமாட்டயலே
அவர்பூம்பலியோடையம்வவ்வாயானலம்வவ்வுதியே
அவர்பூணரையர்க்காதியாய்அவள்தன்மன்னனாள்மண்மேல்
683 தவர்பூம்பதிகளெங்குமெங்குந்தங்குதராயவனே. சு

முலையாழ்கெழுமமொந்தைகொட்டமுன்கடைமாட்டயலே
நிலையாய்ப்பலிதேர்ந்தையம்வவ்வாய்நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்திவ்வையமெல்லாந்தன்னதோராணைநடாய்ச்
684 சிலையால்மலிந்தசீர்ச்சிலம்பன்சிரபுரமேயவனே. எ

எருதேகொணர்கென்றேறியங்கையிடுதலையேகலனாக்
கருதேர்மடவாரையம்வவ்வாய்கண்டுயில்வவ்வுதியே
ஒருதேர்கடாவியாரமருளொருபதுதோள்தொலையப்
685 பொருதேர்வலவன்மேவியாண்டபுறவமர்புண்ணியனே. அ

துவர்சேர்கலிங்கப்போர்வையாருந்தூய்மையிலாச்சமணுங்
கவர்செய்துழலக்கண்டவண்ணங்காரிகைவார்குழலார்
அவர்பூம்பலியோடையம்வவ்வாயானலம்வவ்வுதியே
686 தவர்செய்நெடுவேற்சண்டனாளச்சண்பையமர்ந்தவனே. கூ

நிழலால்மடிந்தகொன்றைசூடிநீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவாரையம்வவ்வாய்கோல்வளைவவ்வுதியே
அழலாயுலகங்கவ்வைதீரஐந்தலைநீண்முடிய
687 கழனாகரையன்காவலாகக்காழியமர்ந்தவனே. க0

கட்டார்துழாயன்தாமரையானென்றிவர்காண்பரிய
சிட்டார்பலிதேர்ந்தையம்வவ்வாய்செய்கலைவவ்வுதியே
நட்டார்நடுவேநந்தனாளநல்வினையாலுயர்ந்த
688 கொட்டாறுடுத்ததண்வயல்சூழ்கொச்சையமர்ந்தவனே. கக

கடையார்கொடிநன்மாடவீதிக்கழுமலவூர்க்கவுணி
நடையார்பனுவல்மாலையாகஞானசம்பந்தன்நல்ல [லார்க்
படையார்மழுவன்மேல்மொழிந்தபல்பெயர்ப்பத்தும்வல்
689 கடையாவினைகளுலகில்நாளுமமருலகாள்பவரே. கஉ

**64** அறையார்புனலுமாமலருமாடரவார்சடைமேல்
குறையார்மதியஞ்சூடிமாதோர்கூறுடையானிடமாம்
முறையார்முடிசேர்தென்னர்சேரர்சோழர்கள்தாம்வணங்கும்
690 திறையாரொளிசேர்செம்மையோங்குந்தென்திருப்பூவணமே

மருவார்மதில்மூன்றொன்றவெய்துமாமலையான்மடந்தை
ஒருபால்பாகமாகச்செய்தவும்பர்பிரானவனூர்
கருவார்சாலியாலைமல்கிக்கழல்மன்னர்காத்தளித்த
691 திருவால்மலிந்தசேடர்வாழுந்தென்திருப்பூவணமே. ௨

போரார்மதமாவுரிவைபோர்த்துப்பொடியணிமேனியனைக்
காரார்கடலின்நஞ்சமுண்டகண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைப்புனல்வாய்பரப்பிப்பன்மணிபொன்கொழித்துச்
692 சீரார்வாரிசேரநின்றதென்திருப்பூவணமே. ௩

கடியாரலங்கற்கொன்றைசூடிக்காதிலோர்வார்குழையன்
கொடியார்வெள்ளையேறுகந்தகோவணவன்னிடமாம்
படியார்கூடிநீடியோங்கும்பல்புகழாற்பரவச்
693 செடியார்வைகைசூழநின்றதென்திருப்பூவணமே. ௪

கூரார்வாளிசிலையிற்கோத்துக்கொடிமதில்கூட்டழித்த
போரார்வில்லிமெல்லியலாளோர்பால்மகிழ்ந்தானிடமாம்
ஆராஅன்பில்தென்னர்சேரர்சோழர்கள்போற்றிசைப்பத்
694 தேரார்வீதிமாடநீடுந்தென்திருப்பூவணமே. ௫

நன்றுதீதென்றொன்றிலாதநான்மறையோன்கழலே
சென்றுபேணியேத்தநின்றதேவர்பிரானிடமாம்
குன்றிலொன்றியோங்கமல்குகுளிர்பொழில்சூழ்மலர்மேல்
695 தென்றலொன்றிமுன்றிலாருந்தென்திருப்பூவணமே. ௬

பைவாயரவமரையிற்சாத்திப்பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனிநீறுபூசியேறுகந்தானிடமாம்
கைவாழ்வளையார்மைந்தரோடுங்கலவியினால்நெருங்கிச்
696 செய்வார்தொழிலின்பாடலோவாத்தென்திருப்பூவணமே. ௭

மாடவீதிமன்னிலங்கைமன்னனைமாண்பழித்துக்
கூடவென்றிவாள்கொடுத்தாள்கொள்கையினார்க்கிடமாம்
பாடலோடுமாடலோங்கிப்பன்மணிபொன்கொழித்து
697 ஓடநீரால்வைகைசூழுமுயர்திருப்பூவணமே. ௮

பொய்யாவேதநாவினானும்பூமகள்காதலனும்
கையாற்றொழுதுகழல்கள்போற்றக்கனலெரியானவனூர்
மையார்பொழிலின்வண்டுபாடவைகைமணிகொழித்துச்
698 செய்யார்கமலந்தேனரும்புந்தென்திருப்பூவணமே. ௯

அலையார்புனலைநீத்தவருந்தோருமன்புசெய்யா
நிலையாவண்ணமாயம்வைத்தநின்மலன்தன்னிடமாம்
மலைபோற்றுன்னிவென்றியோங்குமாளிகைசூழ்ந்தயலே
699 சிலையார்புரிசைபரிசுபண்ணுந்தென்திருப்பூவணமே. க0

திண்ணார்புரிசைமாடமோங்குந்தென்திருப்பூவணத்துப்
பெண்ணார்மேனியெம்மிறையைப்பேரியலின்தமிழால்
நண்ணாருட்கக்காழிமல்குஞானசம்பந்தன்சொன்ன
700 பண்ணார்பாடல்பத்தும்வல்லார்பயில்வதுவானிடையே. கக

65 அடையார்தம்புரங்கள்மூன்றுமாரழலிலழுந்த
விடையார்மேனியராய்ச்சீறும்வித்தகர்மேயவிடங்
கடையார்மாடநீடியெங்குங்கங்குல்புறந்தடவப்
701 படையார்புரிசைப்பட்டினஞ்சேர்பல்லவனீச்சரமே. க

எண்ணாரெயில்கள்மூன்றுஞ்சீறுமெந்தைபிரானிமையோர்
கண்ணாயுலகங்காக்கநின்றகண்ணுதனண்ணுமிடம்
மண்ணார்சோலைக்கோலவண்டுவைகலுந்தேனருந்திப்
702 பண்ணார்செய்யும்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. உ

மங்கையங்கோர்பாகமாகவாணிலவார்சடைமேற்
கங்கையங்கேவாழவைத்தகள்வனிருந்தவிடம்
பொங்கயஞ்சேர்புணரியோதமீதுயர்பொய்கையின்மேற்
703 பங்கயஞ்சேர்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. ந

தாரார்கொன்றைபொன்றயங்கச்சாத்தியமார்பகலம்
நீரார்நீறுசாந்தம்வைத்தநின்மலன்மன்னுமிடம்
போரார்வேற்கண்மாதர்மைந்தர்புக்கிசைபாடலினாற்
704 பாரார்கின்றபட்டினத்துப்பல்லவனீச்சரமே. ச

மைசேர்கண்டரண்டவாணர்வானவருந்துதிப்ப
மெய்சேர்பொடியரடியாரேத்தமேவியிருந்தவிடங்
கைசேர்வளையார்விழைவினோடுகாதன்மையாற்கழலே
705 பைசேரரவாரல்குலார்சேர்பல்லவனீச்சரமே. ரு

குழலினோசைவீணைமொந்தைகொட்டமுழவதிரக்
கழலினோசையார்க்கஆடுங்கடவுளிருந்தவிடஞ்
சுழியிலாருங்கடலிலோதந்தெண்டிரைமொண்டெறியப்
706 பழியிலார்கள்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. சா

வெந்தலாயவேந்தன்வேள்விவேரறச்சாடிவிண்ணோர்
வந்தெலாமுன்பேணநின்றமைந்தன்மகிழ்ந்தஇடம்
மந்தலாயமல்லிகையும்புன்னைவளர்குரவின்
707 பந்தலாரும்பட்டினத்துப்பல்லவனீச்சரமே. ௭

தோராக்கன்மால்வரையைத்தெற்றியெடுக்கவவன்
தாராக்குந்திண்முடிகளூன்றியசங்கரனூர்
காராக்குங்கடல்கிளர்ந்தகாலமெலாமுணரப்
708 பாராக்கம்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. ௮

அங்கமாறும்வேதநான்குமோதுமயன்நெடுமால்
தங்கணாலும்நேடநின்றசங்கரன்றங்குமிடம்
வங்கமாருமுத்தமிப்பிவார்கடலூடலைப்பப்
709 பங்கமில்லார்பயில்புகாரிற்பல்லவனீச்சரமே. ௯

உண்டுடுக்கையின்றியேநின்றார்நகவேதிரிவார்
கண்டுடுக்கைமெய்யிற்போர்த்தார்கண்டறியாதவிடங்
தண்டுடுக்கைதாளந்தக்கைசாரநடம்பயில்வார்
710 பண்டிடுக்கண்தீரநல்கும்பல்லவனீச்சரமே. ௧0

பத்தரேத்தும்பட்டினத்துப்பல்லவனீச்சரத்தெம்
அத்தன்றன்னையணிகொள்காழிஞானசம்பந்தன்சொல்
சித்தஞ்சேரச்செப்புமாந்தர்தீவினைநோயிலராய்
711 ஒத்தமைந்தவும்பர்வானிலுயர்வினொடோங்குவரே. ௧௧

66 பங்கமேறுமதிசேர்சடையார்விடையார்பலவேதம்
அங்கமாறுமறைநான்கவையுமானார்மீனாரும்
வங்கமேவுகடல்வாழ்பரதர்மனைக்கேநுனைமூக்கின்
712 சங்கமேறிமுத்தமீனுஞ்சண்பைநகாரே. ௧

சூதகஞ்சேர்கொங்கையாளோர்பங்கர்சுடர்க்கமலப்
போதகஞ்சேர்புண்ணியனார்பூதகணநாதர்
மேதகஞ்சேர்மேகமந்தண்சோலையில்விண்ணார்ந்த
713 சாதகஞ்சேர்பாளைநீர்சேர்சண்பைநகாரே. ௨

மகாத்தாடுகொடியோனுடலம்பொடிசெய்தவனுடைய
நிகரொப்பில்லாத்தேவிக்கருள்செய்நீலகண்டனார்
பகாத்தாராவன்னம்பகன்றில்பாதம்பணிந்தேத்தத்
714 தகரப்புன்னைதாழைப்பொழில்சேர்சண்பைநகாரே. ௩

மொய்வல்லசுரர்தேவர்கடைந்தமுழுநஞ்சதுவுண்ட
தெய்வர்செய்யவுருவர்கரியகண்டர்திகழ்சுத்திக்
கையர்கட்டங்கத்தர்கரியினுரியர்காதலாற்
715 சைவர்பாசுபதர்கள்வணங்குஞ்சண்பைநகராரே. ௪

கலமார்கடலுள்விடமுண்டமரர்க்கமுதமருள்செய்த
குலமார்கயிலைக்குன்றதுடையகொல்லையெருதேறி
நலமார்வெள்ளைநாளிகேரம்விரியாநறும்பாளை
716 சலமார்கரியின்மருப்புக்காட்டுஞ்சண்பைநகராரே. ௫

மாகாஞ்சேரத்தியின்தோல்போர்த்துமெய்ம்மாலான
சூகாஞ்சேரெயிறுபூண்டசோதியன்மேதக்க
ஆகாஞ்சேரிப்பிமுத்தையந்தண்வயலுக்கே
717 சாகாஞ்சேர்திரைகளுந்துஞ்சண்பைநகராரே. ௬, ௭

இருளைப்புரையுநிறத்திலரக்கன்றனையீடழிவித்து
அருளைச்செய்யுமம்மானேராரந்தண்கந்தத்தின்
மருளைச்சுரும்புபாடியளக்கர்வரையார்திரைக்கையால்
718 தாளத்தோடுபவளமீனுஞ்சண்பைநகராரே. ௮

மண்டான்முழுதுமுண்டமாலுமலர்மிசைமேலயனும்
எண்டானறியாவண்ணநின்றஇறைவன்மறையோதி
தண்டார்குவளைக்கள்ளருந்தித்தாமரைத்தாதின்மேற்
719 பண்டான்கொண்டுவண்டுபாடுஞ்சண்பைநகராரே. ௯

போதியாரும்பிண்டியாரும்புகழலசொன்னலும்
நீதியாகக்கொண்டங்கருளுநிமலனிருகான்கின்
மாதிசித்தர்மாமறையின்மன்னியதொன்னூலர்
720 சாதிகீதவர்த்தமானர்சண்பைநகராரே. ௧௦

வந்தியோடுபூசையல்லாப்போழ்தின்மறைபேசிச்
சந்திபோதிற்சமாதிசெய்யுஞ்சண்பைநகர்மேய
அந்திவண்ணன்றன்னையழகார்ஞானசம்பந்தன்சொற்
721 சிந்தைசெய்துபாடவல்லார்சிவகதிசேர்வாரே. ௧௧

67 வேதமோதிவெண்ணூல்பூண்டுவெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப்பொலியவருவார்புலியினுரிதோலார்
நாதாஎனவும்நக்காஎனவும்நம்பாஎனநின்று
722 பாதந்தொழுவார்பாவந்தீர்ப்பார்பழனநகராரே. ௧

கண்மேற்கண்ணுஞ்சடைமேற்பிறையுமுடையார்காலனைப்
புண்ணாறுதிரமெதிராரோடப்பொன்றப்புறந்தாளால்
எண்ணாதுதைத்தஎந்தைபெருமானிமவான்மகளோடும்
723 பண்ணார்களிவண்டறைபூஞ்சோலைப்பழனநகராரே. ௨

பிறையும்புனலுஞ்சடைமேலுடையார்பறைபோல்விழிகட்பேய்
உறையுமயானமிடமாவுடையாருலகர்தலைமகன்
அறையுமலர்கொண்டடியார்பரவியாடல்பாடல்செய்
724 பறையுஞ்சங்கும்பலியுமோவாப்பழனநகராரே. ௩

உரமன்னுயர்கோட்டுலறுகூகையலறுமயானத்தில்
இரவிற்பூதம்பாடஆடியெழிலாரலர்மேலைப்
பிரமன்றலையினறவமேற்றபெம்மானெமையாளும்
725 பரமன்பகவன்பரமேச்சுவரன்பழனநகராரே. ௪

குலவெஞ்சிலையான்மதில்மூன்றெரித்தகொல்லேறுடையண்ணல்
கலவமயிலுங்குயிலும்பயிலுங்கடல்போற்காவேரி
நலமஞ்சுடையநறுமாங்கனிகள்குதிகொண்டெதிருந்திப்
726 பலவின்கனிகள்திரைமுன்சேர்க்கும்பழனநகராரே. ௫

வீளைக்குரலும்விளிசங்கொலியும்விழவினொலியோவா
மூளைத்தலைகொண்டடியாரேத்தப்பொடியாமதிளெய்தார்
ஈளைப்படுகிலிலையார்தெங்கிற்குலையார்வாழையின்
727 பாளைக்கமுகின்பழம்வீழ்சோலைப்பழனநகராரே. ௬

பொய்யாமொழியார்முறையாலேத்திப்புகழ்வார்திருமேனி
செய்யார்கரியமிடற்றார்வெண்ணூல்சேர்ந்தஅகலத்தார்
கையாடலினார்புனலான்மல்குசடைமேற்பிறையோடும்
728 பையாடரவமுடனேவைத்தார்பழனநகராரே. ௭

மஞ்சோங்குயரமுடையான்மலையைமாறாயெடுத்தான்றோள்
அஞ்சோடஞ்சுமாறுநான்குமடரவூன்றினார்
நஞ்சார்சுடலைப்பொடிநீறணிந்தநம்பான்வம்பாரும்
729 பைந்தாமரைகள்கழனிசூழ்ந்தபழனநகராரே. ௮

கடியார்கொன்றைச்சுரும்பின்மாலைகமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூவடியாலுலகமுழுதுந்தாவிய
நெடியான்நீள்தாமரைமேலயனும்நேடிக்காணாத
730 படியார்பொடியாடகலமுடையார்பழனநகராரே. ௯

கண்டான்கழுவாமுன்னேயோடிக்கலவைக்கஞ்சியை
உண்டாங்கவர்களுரைக்குஞ்சிறுசொல்லோரார்பாராட்ட
வண்டாமரையின்மலர்மேல்நறவமதுவாய்மிகவுண்டு
731 பண்டான்கெழுமவண்டியாழ்செய்யும்பழனநகராரே. க0

வேய்முத்தோங்கிவிரைமுன்பரக்கும்வேணுபுரந்தன்னுள்
நாவுய்த்தனையதிறலால்மிக்கஞானசம்பந்தன்
பேசற்கினியபாடல்பயிலும்பெருமான்பழனத்தை
732 வாயிற்பொலிந்தமாலைபத்தும்வல்லார்நல்லாரே. கக

68 பொடிகொளுருவர்புலியினதளர்புரிநூல்திகழ்மார்பில்
கடிகொள்கொன்றைகலந்தநீற்றர்கறைசேர்கண்டத்தர்
இடியகுரலாலிரியுமடங்கல்தொடங்குமுனைச்சாரல்
733 கடியவிடைமேற்கொடியொன்றுடையார்கயிலைமலையாரே. க

புரிகொள்சடையாரடியர்க்கெளியார்கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில்வைத்துகந்ததேவர்பெருமானார்
பரியகளிற்றையரவுவிழுங்கிமழுங்கஇருள்கூர்ந்த
734 கரியமிடற்றர்செய்யமேனிக்கயிலைமலையாரே. உ

மாவினுரிவைமங்கைவெருவமூடிமுடிதன்மேல்
மேவுமதியுநதியும்வைத்தஇறைவர்கழலுன்னும்
தேவர்தேவர்திரிசூலத்தர்திரங்கன்முகவன்சேர்
735 கரவும்பொழிலுங்கடுங்கற்சுனைசூழ்கயிலைமலையாரே. ந

முங்நீர்சூழ்ந்தநஞ்சமுண்டமுதல்வர்மதனன்றன்
தென்னீருருவமழியத்திருக்கண்சிவந்தநுதலினார்
மன்னீர்மடுவும்படுகல்லறையினுழுவைசினங்கொண்டு
736 கன்னீர்வரைமேலிரைமுன்தேடுங்கயிலைமலையாரே. ச

ஒன்றும்பலவுமாயவேடத்தொருவர்கழல்சேர்வார்
நன்றுநினைந்துநாடற்குரியார்கூடித்திரண்டெங்கும்
தென்றியிருளில்திகைத்தகரிதண்சாரல்நெறியோடிக்
737 கன்றும்பிடியுமடிவாரஞ்சேர்கயிலைமலையாரே. ரு

தாதார்கொன்றைதயங்குமுடியர்முயங்குமடவாளைப்
போதார்பாகமாகவைத்தபுனிதர்பனிமல்கும்
மூதாருலகின்முனிவருடனாயறநான்கருள்செய்த
738 காதார்குழையர்வேதத்திரளர்கயிலைமலையாரே. சு, எ

தொடுத்தார்புரமூன்றெரியச்சிலைமேலெரியொண்பகழியார்
எடுத்தான்திரள்தோள்முடிகள்பத்துமிடியவிரல்வைத்தார்
கொடுத்தார்படைகள்கொண்டாராளாக்குறுகிவருங்கூற்றைக்
739 கடுத்தாங்கவனைக்கழலாலுதைத்தார்கயிலைமலையாரே. ௮

ஊணாப்பலிகொண்டுலகிலேற்றாரிலங்குமணிநாகம்
பூணாணாரமாகப்பூண்டார்புகழுமிருவர்தாம்
பேணாவோடிநேடஎங்கும்பிறங்குமெரியாகிக்
740 காணாவண்ணமுயர்ந்தார்போலுங்கயிலைமலையாரே. ௯

விருதுபகரும்வெஞ்சொற்சமணர்வஞ்சச்சாக்கியர்
பொருதுபகருமொழியைக்கொள்ளார்புகழ்வார்க்கணியராய்
எருதொன்றுகைத்திங்கிடுவார்தம்பாலிரந்துண்டிகழ்வார்கள்
741 கருதும்வண்ணமுடையார்போலுங்கயிலைமலையாரே. ௧௦

போரார்கடலிற்புனல்சூழ்காழிப்புகழார்சம்பந்தன்
காரார்மேகங்குடிகொள்சாரற்கயிலைமலையார்மேல்
தேராவுரைத்தசெஞ்சொன்மாலைசெப்புமடியார்மேல்
742 வாராபிணிகள்வானோருலகின்மருவுமனத்தாரே. ௧௧

69 பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்களெரித்தவன்றுமூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடும்
743 ஆமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. ௧

மஞ்சைப்போழ்ந்தமதியஞ்சூடும்வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத்தடக்குமதுவுநன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும்வேடர்மடவாரிதணமதுவேறி
744 அஞ்சொற்கிளிகளாயோவென்னுமண்ணாமலையாரே. ௨

ஞானத்திரளாய்நின்றபெருமான்நல்லஅடியார்மேல்
ஊனத்திரளைநீக்குமதுவுமுண்மைப்பொருள்போலும்
ஏனத்திரளோடினமான்கரடியிழியுமிரவின்கண்
745 ஆனைத்திரள்வந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. ௩

இழைத்தஇடையாளுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
தழைத்தசடையார்விடையொன்றேறித்தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக்காணாதோடிப்பெருங்கைமதவேழம்
746 அழைத்துத்திரிந்தங்குறங்குஞ்சாரலண்ணாமலையாரே. ௪

உருவிற்றிகழுமுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
செருவில்லொருகால்வளையவூன்றிச்செந்தீயெழுவித்தார்
பருவிற்குறவர்புனத்திற்குவித்தபருமாமணிமுத்தம்
747 அருவித்திரளோடிழியுஞ்சாரலண்ணாமலையாரே. ரு

எனைத்தொருழியடியாரேத்தஇமையோர்பெருமானார்
நினைத்துத்தொழுவார்பாவந்தீர்க்கும்நிமலருறைகோயில்
கனைத்தமேதிகாணாதாயன்கைம்மேற்குழலூத
748 அனைத்துஞ்சென்றுதிரளுஞ்சாரலண்ணாமலையாரே. சு

வந்தித்திருக்குமடியார்தங்கள்வருமேல்வினையோடு
பந்தித்திருந்தபாவந்தீர்க்கும்பரமனுறைகோயில்
முந்தியெழுந்தமுழவினோசைமுதுகல்வரைகள்மேல்
749 அந்திப்பிறைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. எ

மறந்தான்கருதிவலியைநினைந்துமாறாயெடுத்தான்றோள்
நிறந்தான்முரியநெரியவூன்றிநிறையவருள்செய்தார்
திறந்தான்காட்டியருளாயென்றுதேவரவர்வேண்ட
750 அறந்தான்காட்டியருளிச்செய்தாரண்ணாமலையாரே. அ

தேடிக்காணார்திருமால்பிரமன்தேவர்பெருமானை
மூடியோங்கிமுதுவேயுகுத்தமுத்தம்பலகொண்டு
கூடிக்குறவர்மடவார்குவித்துக்கொள்ளவம்மினேன்
751 றூடிப்பாடியளக்குஞ்சாரலண்ணாமலையாரே. கூ

தட்டையிடுக்கித்தலையைப்பறித்துச்சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக்கொள்ளவேண்டாபேணித்தொழுமின்கள்
வட்டமுலையாளுமையாள்பங்கர்மன்னியுறைகோயில்
752 அட்டமாளித்திரள்வந்தணையுமண்ணாமலையாரே. க0

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையாரை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
753 வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வாரே. கக

70 வானத்துயர்தண்மதிதோய்சடைமேல்மத்தமலர்சூடித்
தேனோத்தனமென்மொழிமான்விழியாள்தேவிபாகமாக்
கானத்திரவிலெரிகொண்டாடுங்கடவுளுலகேத்த
754 ஏனத்திரள்வந்திழியுஞ்சாரலீங்கோய்மலையாரே. க

சூலப்படையொன்றேந்தியிரவிற்சுடுகாடிடமாகக்
கோலச்சடைகள் தாழக்குழல்யாழ்மொந்தைகொட்டவே
பாலொத்தனையமொழியாள்காண ஆடும்பரமனார்
755 ஏலத்தொடுநல்லிலவங்கமழுமீங்கோய்மலையாரே. ௨

கண்கொள்நுதலார்கறைகொள்மிடற்றார்கரியினுரிதோலார்
விண்கொள்மதிசேர்சடையார்விடையார்கொடியார்வெண்ணீறு
பெண்கொள்திருமார்பதனிற்பூசும்பெம்மானெமையாள்வார்
756 எண்குமரியுந்திரியுஞ்சாரலீங்கோய்மலையாரே. ௩

மறையின்னிசையார்நெறிமென்கூந்தல்மலையான்மகளோடும்
குறைவெண்பிறையும்புனலுந்நிலவுங்குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங்கழலுமார்ப்பப்படுகாட்டெரியாடும்
757 இறைவர்சிறைவண்டறைபூஞ்சாரலீங்கோய்மலையாரே. ௪

நொந்தசுடலைப்பொடிநீறணிவார்நுதல்சேர்கண்ணினார்
கந்தமலர்கள்பலவுந்நிலவுகமழ்புன்சடைதாழப்
பந்தண்விரலாள்பாகமாகப்படுகாட்டெரியாடும்
758 எந்தம்மடிகள்கடிகொள்சாரலீங்கோய்மலையாரே. ௫

நீறாரகலமுடையார்நிரையார்கொன்றையரவோடும்
ஆறார்சடையாரயில்வெங்கணையாலவுணர்புரமூன்றும்
சீறாவெரிசெய்தேவர்பெருமான்செங்கணடல்வெள்ளை
759 ஏறார்கொடியாருமையாளோடுமீங்கோய்மலையாரே. ௬

வினையாயினதீர்த்தருளேபுரியும்விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேல்மதியஞ்சூடும்நம்பர்நலமல்கு
தனையார்கமலமலர்மேலுறைவான்தலையோடனலேந்தும்
760 எனையாளுடையானுமையாளோடுமீங்கோய்மலையாரே. ௭

பரக்கும்பெருமைஇலங்கையென்னும்பதியிற்பொலிவாய
அரக்கர்க்கிறைவன்முடியுந்தோளுமணியார்விரல்தன்னால்
நெருக்கியடர்த்துநிமலாபோற்றியென்றுநின்றேத்த
761 இரக்கம்புரிந்தாருமையாளோடுமீங்கோய்மலையாரே. ௮

வரியார்புலியினுரிதோலுடையான்மலையான்மகளோடும்
பிரியாதுடனாயாடல்பேணும்பெம்மான்றிருமேனி
அரியோடயனுமறியாவண்ணமளவில்பெருமையோ
762 டெரியாய்நிமிர்ந்தஎங்கள்பெருமானீங்கோய்மலையாரே. ௯

பிண்டியேன்றுபெயராநிற்கும்பிணங்குசமணரும்
மண்டைகலனாக்கொண்டுதிரியும்மதியில்தேரரும்
உண்டிவயிறருரைகள்கொள்ளாதுமையோடுடனாகி
763 இண்டைச்சடையானிமையோர்பெருமானீங்கோய்மலையாரே.

விழவாரொலியுமுழவுமோவாவேணுபுரந்தன்னுள்
அழலார்வண்ணத்தடிகளருள்சேரணிகொள்சம்பந்தன்
எழிலார்சுனையும்பொழிலும்புடைசூழீங்கோய்மலையீசன்
764 கழல்சேர்பாடல்பத்தும்வல்லார்கவலைகளைவாரே. கக

71 பிறைகொள்சடையர்புலியினுரியர்பேழ்வாய்நாகத்தர்
கறைகொள்கண்டர்கபாலமேந்துங்கையர்கங்காளர்
மறைகொள்கீதம்பாடச்சேடர்மனையின்மகிழ்வெய்திச்
765 சிறைகொள்வண்டுதேனார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. க

பொங்கார்சடையர்புனலரனலர்பூதம்பாடவே
தங்காதலியுந்தாமுமுடனாய்த்தனியோர்விடையேறிக்
கொங்கார்கொன்றைவன்னிமத்தஞ்சூடிக்குளிர்பொய்கைச்
766 செங்காலனமும்பெடையுஞ்சேருஞ்சித்தீச்சரத்தாரே. உ

முடிகொள்சடையர்முளைவெண்மதியர்மூவாமேனிமேல்
பொடிகொள்நூலர்புலியினதளர்புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலைவயல்சூழ்மடுவிற்கயலாரினம்பாயக்
767 கொடிகொள்மாடக்குழாமார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. ங

பின்றாழ்சடைமேல்நகுவெண்டலையர்பிரமன்றலையேந்தி
மின்றாழுருவிற்சங்கார்குழைதான்மிளிருமொருகாதர்
பொன்றாழ்கொன்றைசெருந்திபுன்னைபொருந்துசெண்பகம்
768 சென்றார்செல்வத்திருவார்நறையூர்ச்சித்தீச்சரத்தாரே. ச

நீரார்முடியர்கறைகொள்கண்டர்மறைகள்நிறைநாவர்
பாரார்புகழால்பத்தர்சித்தர்பாடியாடவே
தேரார்வீதிமுழவார்விழவினொலியுந்திசைசெல்லச்
769 சீரார்கோலம்பொலியுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. ரு

நீண்டசடையர்நிரைகொள்கொன்றைவிரைகொள்மலர்மாலை
தூண்டுசுடர்பொன்னொளிகொள்மேனிப்பவளத்தெழிலார்
தீண்டுமாடமெழிலார்சோலையிலங்குகோபுரந் [வந்
770 தீண்டுமதியந்திகழுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. சு

குழலார்சடையர்கொக்கினிறகர்கோலநிறமத்தம்
தழலார்மேனித்தவளநீற்றர்சரிகோவணக்கீளர்
எழிலார்நாகம்புலியினுடைமேலிசைத்துவிடையேறிக்
771 கழலார்சிலம்புபுலம்பவருவார்சித்தீச்சரத்தாரே. எ

கரையார்கடல்சூழிலங்கைமன்னன்கயிலைமலைதன்னை
வரையார்தோளாலெடுக்கமுடிகள்நெரித்துமனமொன்றி
உரையார்கீதம்பாடநல்லவுலப்பிலருள்செய்தார்
772 திரையார்புனல்சூழ்செல்வநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. அ

நெடியான்பிரமன்நேடிக்காணார்நினைப்பார்மனத்தாராய்
அடியாரவருமருமாமறையுமண்டத்தமரரும்
முடியால்வணங்கிக்குணங்களேத்திமுதல்வாஅருளென்னச்
773 செடியார்செந்நெல்திகழுநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. கூ

நின்றுண்சமணரிருந்துண்தேரர்நீண்டபோர்வையார்
ஒன்றுமுணராவூமர்வாயிலுரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பாலுண்ணமுலையிற்கபாலமயல்பொழியச்
774 சென்றுண்டார்ந்துசேருநறையூர்ச்சித்தீச்சரத்தாரே. கo

குயிலார்கோலமாதவிகள்குளிர்பூஞ்சுரபுன்னை
செயிலார்பொய்கைசேருநறையூர்ச்சித்தீச்சரத்தாரை
மயிலார்சோலைசூழ்ந்தகாழிமல்குசம்பந்தன்
775 பயில்வார்க்கினியபாடல்வல்லார்பாவநாசமே. கக

72 வாரார்கொங்கைமாதோர்பாகமாகவார்சடை
நீரார்கங்கைதிங்கள்சூடிநெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன்றேந்தியந்தண்குழகன்குடமூக்கில்
776 காரார்கண்டத்தெண்டோளெந்தைகாரோணத்தாரே. க

முடியார்மன்னர்மடமான்விழியார்மூவுலகும்மேத்தும்
படியார்பவளவாயார்பலரும்பரவிப்பணிந்தேத்தக்
கொடியார்விடையார்மாடவீதிக்குடந்தைக்குழகாருங்
777 கடியார்சோலைக்கலவமயிலார்காரோணத்தாரே. உ

மலையார்மங்கைபங்கரங்கையனலர்மடலாரும்
குலையார்தெங்குகுளிர்கொள்வாழையழகார்குடமூக்கில்
முலையாரணிபொன்முளைவெண்ணகையார்மூவாமதியினர்
778 கலையார்மொழியார்காதல்செய்யுங்காரோணத்தாரே. ந

போதார்புனல்சேர்கந்தமுந்திப்பொலியவ்வழகாரும்
தாதார்பொழில்சூழ்ந்தெழிலார்புறவிலந்தண்குடமூக்கில்
மாதார்மங்கைபாகமாகமனைகள்பலிதேர்வார்
779 காதார்குழையர்காளகண்டர்காரோணத்தாரே. ௪

பூவார்பொய்கையலர்தாமரைசெங்கழுநீர்புறவெல்லாம்
தேவார்சிந்தையந்தணாளர்சீராலடிபோற்றக்
கூவார்குயில்களாலும்மயில்களின்சொற்கிளிப்பிள்ளை
780 காவார்பொழில்சூழ்ந்தழகார்குடந்தைக்காரோணத்தாரே. ௫

மூப்பூர்நலியநெதியார்விதியாய்முன்னேயனல்வாளி
கோப்பார்பார்த்தன்நிலைகண்டருளுங்குழகர்குடமூக்கில்
தீர்ப்பாருடலிலடுநோயவலம்வினைகள்நலியாமைக்
781 காப்பார்காலனடையாவண்ணங்காரோணத்தாரே. ௬

ஊனார்தலைகையேந்தியுலகம்பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார்புலியினுடையார்கரியினுரிபோர்வை
தேனார்மொழியார்திளைத்தங்காடித்திகழுங்குடமூக்கில்
782 கானார்நட்டமுடையார்செல்வக்காரோணத்தாரே. ௭

வரையார்திரள்தோள்மதவாளரக்கனெடுப்பமலைசேரும்
விரையார்பாதநுதியாலூன்றநெரிந்துசிரம்பத்தும்
உரையார்கீதம்பாடக்கேட்டங்கொளிவாள்கொடுத்தாரும்
783 கரையார்பொன்னிசூழ்தண்குடந்தைக்காரோணத்தாரே. ௮

கரியமாலுஞ்செய்யபூமேலயனுங்கழறிப்போய்
அரியவண்டந்தேடிப்புக்குமளக்கவொண்கிலார்
தெரியஅரியதேவர்செல்வந்திகழுங்குடமூக்கில்
784 கரியகண்டர்காலகாலர்காரோணத்தாரே. ௯

நாணாரமணர்நல்லதறியார்நாளுங்குரத்திகள்
பேணார்தூய்மைமாசுகழியார்பேசேலவரோடுஞ்
சேணார்மதிதோய்மாடமல்குசெல்வநெடுவீதிக்
785 கோணாகரமொன்றுடையார்குடந்தைக்காரோணத்தாரே. ௧௦

கருவார்பொழில்சூழ்ந்தழகார்செல்வக்காரோணத்தாரைத்
திருவார்செல்வமல்குசண்பைத்திகழுஞ்சம்பந்தன்
உருவார்செஞ்சொல்மாலையிவைபத்துரைப்பாருலகத்துக்
786 கருவாரிடும்பைப்பிறப்பதறுத்துக்கவலைகழிவாரே. ௧௧

73 வானார்சோதிமன்னுசென்னிவன்னிபுனங்கொன்றைத்
தேனார்போதுதானார்கங்கைதிங்களொடுசூடி
மானேர்நோக்கிகண்டங்குவப்பமாலையாடுவார்
787 கானூர்மேயகண்ணார்நெற்றியானூர்செல்வரே. க

நீந்தலாகாவெள்ளமூழ்குநீள்சடைதன்மேலோர்
ஏய்ந்தகோணற்பிறையோடரவுகொன்றையெழிலாரப்
போந்தமென்சொலின்பம்பயந்தமைந்தரவர்போலாங்
788 காந்தள்விம்முகானூர்மேயசாந்தநீற்றாரே. உ

சிறையார்வண்டுந்தேனும்விம்முசெய்யமலர்க்கொன்றை
மறையார்பாடலாடலோடுமால்விடைமேல்வருவார்
இறையார்வந்தெனில்புகுந்தென்னெழில்நலமுங்கொண்டார்
789 கறையார்சோலைக்கானூர்மேயபிறையார்சடையாரே. ங

விண்ணார்திங்கட்கண்ணிவெள்ளைமாலையதுசூடித்
தண்ணாரக்கோடாமைபூண்டுதழைபுன்சடைதாழ
எண்ணாவந்தெனில்புகுந்தங்கெவ்வநோய்செய்தான்
790 கண்ணார்சோலைக்கானூர்மேயவிண்ணோர்பெருமானே. ச

தார்கொள்கொன்றைக்கண்ணியோடுந்தண்மதியஞ்சூடி
சீர்கொள்பாடலாடலோடுசேடராய்வந்து
ஊர்கள்தோறுமையமேற்றென்னுள்வெங்நோய்செய்தார்
791 கார்கொள்சோலைக்கானூர்மேயகறைக்கண்டத்தாரே. ரு

முளிவெள்ளெலும்புநீறுநூலுமூழ்குமார்பாராய்
எளிவந்தார்போலையமென்றெனில்லேபுகுந்துள்ளத்
தெளிவுநாணுங்கொண்டகள்வர்தேறலார்பூவில்
792 களிவண்டியாழ்செய்கானூர்மேயஒளிவெண்பிறையாரே. சு

மூவாவண்ணர்முளைவெண்பிறையர்முறுவல்செய்திங்கே
பூவார்கொன்றைபுனைந்துவந்தார்பொக்கம்பலபேசிப்
போவார்போலமால்செய்துள்ளம்புக்கபுரிநூலர்
793 தேவார்சோலைக்கானூர்மேயதேவதேவரே. எ

தமிழின்நீர்மைபேசித்தாளம்வீணைபண்ணிநல்ல
முழவமொந்தைமல்குபாடல்செய்கையிடமோவார்
குமிழின்மேனிதந்துகோலநீர்மையதுகொண்டார்
794 கமழுஞ்சோலைக்கானூர்மேயபவளவண்ணரே. அ

அந்திமாதியயனுமாலுமார்க்குமறிவரியான்
சிந்தையுள்ளுநாவின்மேலுஞ்சென்னியுமன்னினான்
வந்தென்னுள்ளம்புகுந்துமாலைகாலையாடுவான்
795 கந்தமல்குகானூர்மேயஎந்தைபெம்மானே. ௯

ஆமையரவோடேனவெண்கொம்பக்குமாலைபூண்
டாமோர்கள்வர்வெள்ளர்போலஉள்வெங்நோய்செய்தார்
ஓமவேதநான்முகனுங்கோணாகணையானுஞ்
796 சேமமாயசெல்வர்கானூர்மேயசேடரே. ௰

கழுதுதுஞ்சுங்கங்குலாடுங்கானூர்மேயானைப்
பழுதில்ஞானசம்பந்தன்சொற்பத்தும்பாடியே
தொழுதுபொழுதுதோத்திரங்கள்சொல்லித்துதித்துநின்
797 றழுதுநக்குமன்புசெய்வாரல்லலறுப்பாரே. ௧௧

74 நறவநிறைவண்டறைதார்க்கொன்றைநயந்துநயனத்தாற்
சுறவஞ்செறிவண்கொடியோனுடலம்பொடியாவிழிசெய்தான்
புறவமுறைவண்பதியாமதியார்புரமூன்றெரிசெய்த
798 இறைவனறவனிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௧

உரவன்புலியினுரிதோலாடையுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங்கச்சாஅசைத்தவிகிர்தனுகிர்தன்னாற்
பொருவெங்களிறுபிளிறவுரித்துப்புறவம்பதியாக
799 இரவும்பகலுமிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௨

பந்தமுடையபூதம்பாடப்பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்குகுழலிகாணக்கரிகாட்டெரியாடி
அந்தண்கடல்சூழ்ந்தழகார்புறவம்பதியாவமர்வெய்தி
800 எந்தம்பெருமானிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௩

நினைவார்நினையஇனியான்பனியார்மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையொன்றுடையான்கங்கைதிங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின்முடியான்கடல்சூழ்புறவம்பதியாக
801 எனையாளுடையானிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௪

செங்கணரவும்நகுவெண்டலையும்முகிழ்வெண்டிங்களுந்
தங்குசடையன்விடையனுடையன்சரிகோவணஆடை
பொங்குதிரைவண்கடல்சூழ்ந்தழகார்புறவம்பதியாக
802 எங்கும்பரவியிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௫

பின்னுசடைகள்தாழக்கேழலெயிறுபிறழப்போய்
அன்னநடையார்மனைகள்தோறுமழகாற்பலிதேர்ந்து
புன்னைமடலின்பொழில்சூழ்ந்தழகார்புறவம்பதியாக
803 என்னையுடையானிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௬

உண்ணற்கரியநஞ்சையுண்டொருதோழந்தேவர்
விண்ணிற்பொலியஅமுதமளித்தவிடைசேர்கொடியண்ணல்
பண்ணிற்சிறைவண்டறைபூஞ்சோலைப்புறவம்பதியாக
804 எண்ணிற்சிறந்தஇமையோரேத்தஉமையோடிருந்தானே. ௭

விண்டானதிரவியனார்கயிலைவேரோடெடுத்தான்றன்
திண்டோளுடலும்முடியுநெரியச்சிறிதேயூன்றிய
புண்டானொழியஅருள்செய்பெருமான்புறவம்பதியாக
805 எண்டோளுடையானிமையோரேத்தஉமையோடிருந்தானே.

நெடியான்நீள்தாமரைமேலயனுநேடிக்காண்கில்லாப்
படியாமேனியுடையான்பவளவரைபோல்திருமார்பிற்
பொடியார்கோலமுடையான்கடல்சூழ்புறவம்பதியாக
806 இடியார்முழவாரிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௯

ஆலும்மயிலின்பீலியமணர்அறிவில்சிறுதேரர்
கோலும்மொழிகளொழியக்குழுவுந்தழலுமெழில்வானும்
போலும்வடிவுமுடையான்கடல்சூழ்புறவம்பதியாக
807 ஏலும்வகையாலிமையோரேத்தஉமையோடிருந்தானே. ௧௦

பொன்னார்மாடநீடுஞ்செல்வப்புறவம்பதியாக
மின்னாரிடையாளுமையாளோடுமிருந்தவிமலனைத்
தன்னார்வஞ்செய்தமிழின்விரகனுரைத்ததமிழ்மாலை
808 பன்னாள்பாடியாடப்பிரியார்பரலோகந்தானே. ௧௧

75 காலைநன்மாமலர்கொண்டடிபரவிக்கைதொழுமாணி
யைக்கறுத்தவெங்காலன், ஓலமதிடமுன்னுயிரொடுமாள
வுதைத்தவனுமையவள்விருப்பனெம்பெருமான், மாலைவந்
தணுகஓதம்வந்துலவிமறிதிரைசங்கொடு பவளமுனுந்தி,
வேலைவந்தணையுஞ்சோலைகள்சூழ்ந்தவெங்குருமேவியுள் வீற்
809 றிருந்தாரே. ௧

பெண்ணினைப்பாகமமர்ந்துசெஞ்சடைமேற்பிறையொடு
மரவினையணிந்தழகாகப், பண்ணினைப்பாடியாடிமுன்பலி

கொள்பரமரெம்மடிகளார்பரிசுகள்பேணி, மண்ணினைமூடி
வான்முகடேறிமறிதிரைகடல்முகந்தெடுப்ப மற்றுயர்ந்து,
விண்ணளவோங்கிவந்திழிகோயில்வெங்குருமேவியுள்வீற்
810 றிருந்தாரே. ௨

ஓரியல்பில்லாவுருவமதாகியொண்டிறல்வேடனதுருவது
கொண்டு, காரிகைகாணத்தனஞ்சயன்றன்னைக்கறுத்தவற்
களித்துடன்காதல்செய்பெருமான், நேரிசையாகஅறுபத
முரன்றுநிரைமலர்த்தாதுகள்மூசவிண்டுதிர்ந்து, வேரிகளெங்
811 கும்விம்மியசோலைவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. ௩

வண்டணைகொன்றைவன்னியுமத்தமருவியகூவிளமெருக்
கொடுமிக்க, கொண்டணிசடையர்விடையினர்பூதங்கொடு
கொட்டிகுடமுழாக்கூடியுமுழவப், பண்டிகழ்வாகப்பாடி
யொர்வேதம்பயில்வர்முன்பாய்புனற்கங்கையைச்சடைமேல்,
வெண்பிறைசூடியுமையவளோடும்வெங்குருமேவியுள்வீற்
812 றிருந்தாரே. ௪

சடையினர்மேனிநீறதுபூசித்தக்கைகொள்பொக்கணமிட்
டுடனுக்க், கடைதொறும்வந்துபலியதுகொண்டுகண்டவர்
மனமவைகவர்ந்தழகாகப்,படையதுவேந்திப்பங்கயக்கண்ணி
யுமையவள்பாகமுமமர்ந்தருள்செய்து, விடையொடுபூதஞ்
813 சூழ்தரச்சென்றுவெங்குருமேவியுள்வீற்றிருந்தாரே. ௫

கரைபொருகடலில்திரையதுமோதக்கங்குல்வந்தேறிய
சங்கமுமிப்பி, உரையுடைமுத்தமணலிடைவைகிஒங்குவா
னிருளறத்துரப்பவெண்டிசையும், புரைமலிவேதம்போற்று
பூசுரர்கள்புரிந்தவர்நலங்கொளாகுதியினில்நிறைந்த, விரை
மலிதூபம் விசும்பினைமறைக்கும் வெங்குருமேவியுள்வீற்
814 றிருந்தாரே. ௬

வல்லிநுண்ணிடையாளுமையவள்தன்னைமறுகிடவரு
மதகளிற்றினைமயங்க, ஒல்லையிற்பிடித்தங்குரித்தவள்வெரு
வல்கெடுத்தவர்விரிபொழில்மிகுதிருவாவில்,நல்லறமுரைத்து
ஞானமோடிருப்பநலிந்திடலுற்றுவந்தவக்கருப்பு, வில்லி
யைப்பொடிபட விழித்தவர்விரும்பிவெங்குருமேவியுள்வீற்
815 றிருந்தாரே. ௭

பாங்கிலாவரக்கன்கயிலையன்றெடுப்பப் பலதலைமுடி
யொடுதோளவைநெரிய, ஓங்கியவிரலாலூன்றியன்றவற்கே
ஒளிதிகழ்வாளதுகொடுத்தழகாய, கோங்கொடுசெருந்தி
கூவிளமத்தங்கொன்றையுங்குலாவிய செஞ்சடைச்செல்வர்,
வேங்கைபொன்மலரார்விரைதருகோயில்வெங்குருமேவியுள்
816 வீற்றிருந்தாரே. அ

ஆறுடைச்சடையெம்மடிகளைக்காண அரியொடுபிரமனு
மளப்பதற்காகிச்சேறிடைத்திகழ்வானத்திடைபுக்குஞ்செல
வறத்தவிர்ந்தனரெழிலுடைத்திகழ்வெண்,ணீறுடைக்கோல
மேனியர்நெற்றிக்கண்ணினர்விண்ணவர் கைதொழுதேத்த,
வேறெமையாளவிரும்பியவிகிர்தர் வெங்குருமேவியுள்வீற்
817 றிருந்தாரே. கூ

பாடுடைக்குண்டர்சாக்கியர்சமணர்பயில்தருமறவுரைவிட்
டழகாக, ஏடுடைமலராள்பொருட்டுவன்தக்கன்எல்லையில்
வேள்வியைத்தகர்த்தருள்செய்து, காடிடைக்கடிநாய்கலந்
துடன்சூழக்கண்டவர்வெருவுறவிளித்துவெய்தாய, வேடு
டைக்கோலம்விரும்பியவிகிர்தர்வெங்குருமேவி யுள் வீ ற் றி
818 ருந்தாரே. க0

விண்ணியல்விமானம்விரும்பியபெருமான்வெங்குரு
மேவியுள்வீற்றிருந்தாரை, நண்ணியநூலன்ஞானசம்பந்தன்
நவின்றஇவ்வாய்மொழிநலமிகுபத்தும், பண்ணியல்பாகப்பத்
திமையாலேபாடியுமாடியும்பயிலவல்லார்கள், விண்ணவர்வி
819 மானங்கோடுவரஏறிவியனுலகாண்டுவீற்றிருப்பவர்தாமே. கக

**76** மலையினார்பருப்பதந்துருத்திமாற்பேறுமாசிலாச்சீர்
மறைக்காடுநெய்த்தானம், நிலையினானெனதுரைதனதுரையாக
நீறணிந்தேறுகந்தேறியநிமலன், கலையினார்மடப்பிணைதுணை
யொடுந்துயிலக்கானலம்பெடைபுல்கிக்கணமயிலாலும், இலை
யினார்பைம்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பே ணி
820 யென்னெழில்கொள்வதியல்பே. க

திருமலர்க்கொன்றையான்நின்றியூர்மேயான்தேவர்கள்
தலைமகன்திருக்கழிப்பாலை, நிருமலனெனதுரைதனதுரை
யாகநீறணிந்தேறுகந்தேறியநிமலன், கருமலர்க்கமழ்சுனைநீள்
மலர்க்குவளைகதிர்முலையிளையவர்மதிமுகத்துலவும், இரும

லர்த்தண்பொய்கைஇலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணி
821 யென்னெழில்கொள்வதியல்பே. உ

பாலனும்விருத்தனும்பசுபதிதானும்பண்டுவெங்கூற்று
தைத்தடியவர்க்கருளும், காலனுமெனதுரைதனதுரையாகக்
கனலெரியங்கையிலேந்தியகடவுள், நீலமாமலர்ச்சுனைவண்டு
பண்செய்யநீர்மலர்க்குவளைகள்தாதுவிண்டோங்கும், ஏலநா
றும்பொழிலிலம்பையங்கோட்டு ரிருக்கையாப்பேணியென்
822 னெழில்கொள்வதியல்பே. ௩

உளங்கோள்வாருச்சியார்கச்சியேகம்பன்ஒற்றியூருறையு
மண்ணுமலையண்ணல், விளம்புவானெனதுரைதனதுரையா
கவெள்ளநீர்விரிசடைத்தாங்கியவிமலன், குளம்புறக்கலைதுள
மலைகளுஞ்சிலம்பக்கொழுங்கொடியெழுந்தெங்குங்கூவி ளங்
கொள்ள, இளம்பிறைதவழ்பொழிலிலம்பையங்கோட்டூரி
823 ருக்கையாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே. ௪

தேனுமாயமுதுமாய்த்தெய்வமுந்தானுய்த்தீயொடுநீரு
டன்வாயுவாந்தெரியில், வானுமாமெனதுரைதனதுரையாக
வரியாஅரைக்கசைத்துழிதருமைந்தன், கானமான்வெருவு
றக்கருவிரலூகங்கடுவனோடுகளுமூர்கற்கடுஞ்சாரல், ஏனமா
னுழிதருமிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியென்னெ
824 ழில்கொள்வதியல்பே. ௫

மனமுலாமடியவர்க்கருள்புரிகின்றவகையலாற்பலிதிரிந்
துண்பிலான்மற்றோர், தனமிலானெனதுரைதனதுரையாகத்
தாழ்சடையிளமதிதாங்கியதலைவன், புனமெலாமருவிகளிரு
விசேர்முத்தம்பொன்னொடுமணிகொழித்தீண்டிவந்தெங்
கும், இனவெலாமடைகரைஇலம்பையங்கோட்டூரிருக்கை
825 யாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே. ௬

நீருளான்தீயுளானந்தரத்துள்ளான்நினைப்பவர்மனத்து
ளான்நித்தமாஏத்தும், ஊருளானெனதுரைதனதுரையாகஒற்
றைவெள்ளேறுகந்தேறியவொருவன், பாருளார்பாடலோ
டாடலறாதபண்முரன்றஞ்சிறைவண்டினம்பாடும், ஏருளார்
பைம்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணியென்
826 னெழில்கொள்வதியல்பே. ௭

வேருலாமாழ்கடல்வருதிரையிலங்கைவேந்தன தடக்கைகளடர்த்தவனுலகில், ஆருலாமெனதுரை தனதுரையாகஆகமோரரவணிந்துழிதருமண்ணல், வாருலாநல்லனமாக்களுஞ்சாரவாரணமுழிதருமல்லலங்கானல், ஏருலாம்பொழிலணிஇலம்பையங்கோட்டூரிருக்கையாப் பேணியென்னெழில்கொள்
827 வதியல்பே. அ

கிளர்மழைதாங்கினுன்நான்முகமுடையோன்கீழடிமேல்முடிதேர்ந்தளக்கில்லா, உளமழையெனதுரைதனதுரையாகவெள்ளமலங்கையிலேந்தியவொருவன், வளமழையெனக்கழைவளர்துளிசோரமாசுணமுழிதருமணியணிமாலே, இளமழைதவழ்பொழிலிலம்பையங்கோட்டூரிருக்கையாப்பேணி
828 யென்னெழில்கொள்வதியல்பே. கூ

உரிஞ்சனகூறைகள்உடம்பினராகிஉழிதருசமணருஞ்சாக்கியப்பேய்கள், பெருஞ்செல்வனெனதுரைதனதுரையாகப்பெய்பலிக்கென்றுழல்பெரியவர்பெருமான், கருஞ்சுனேமுல்லேநன்பொன்னடைவேங்கைகளிமுகவண்டொடுதேனினமுரலும், இருஞ்சுனேமல்கியஇலம்பையங்கோட்டூரிருக்கை
829 யாப்பேணியென்னெழில்கொள்வதியல்பே. கo

கந்தனேமலிகனேகடலொலியோதங்கானலங்கழிவளர்கழுமலமென்னும், நந்தியாருறைபதிநான்மறைநாவன்நற்றமிழ்க்கின்றுணேஞானசம்பந்தன், எந்தையார்வளநகரிலம்பையங்கோட்டூரிசையொடுகூடியபத்தும்வல்லார்போய், வெந்துயர்கெடுகிடவிண்ணவரோடும்வீடுபெற்றிம்மையின் வீடெளி
830 தாமே. கக

77 பொன்றிரண்டன்னபுரிசடைபுரளப்பொருகடற்பவளமொடழல்நிறம்புரையக், குன்றிரண்டன்னதோளுடையகலங்குலாயவெண்ணூலொடுகொழும்பொடியணிவர், மின்றிரண்டன்னநுண்ணிடையரிவைமெல்லியலாளேயோர்பாகமாப்பேணி, அன்றிரண்டுருவமாயவெம்மடிகளச்சிறுபாக்கம
831 தாட்சிகொண்டாரே. க

தேனினுமினியர் பாலனநீற்றர்தீங்கரும்பனேயர்தந்திருவடிதொழுவார், ஊன்நயந்துருகஉவகைகள்தருவாருச்சிமே

லுறைபவரொன்றலாதூரார், வானகமிறந்துவையகம்வணங்க
வயங்கொளநிற்பதோர்வடிவினையுடையார், ஆனையினுரிவை
832 போர்த்தவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. உ

காரிருளுருவமால்வரைபுரையக்களிற்றினதுரிவைகொண்
டரிவைமேலோடி, நீருருமகளைநிமிர்சடைத்தாங்கிநீறணிந்
தேறுகந்தேறியநிமலர், பேரருளாளர்பிறவியிற்சேரார்பிணி
யிலர்கேடிலர்பேய்க்கணஞ்சூழ, ஆரிருண்மாலையாடுமெம்மடி
833 களச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. ௩

மைம்மலர்க்கோதைமார்பினரெனவுமலைமகளவளொடு
மருவினரெனவுஞ், செம்மலர்ப்பிறையுஞ்சிறையணிபுனலுஞ்
சென்னிமேலுடையரெஞ்சென்னிமேலுறைவார், தம்மலரடி
யொன்றடியவர்பரவத் தமிழ்சோலும்வடசோலுந் தாள்நிழற்
சேர,அம்மலர்க்கொன்றையணிந்தவெம்மடிகளச்சிறுபாக்கம
834 தாட்சிகொண்டாரே. ௪

விண்ணுலாமதியஞ்சூடினரெனவும்விரிசடையுள்ளது
வெள்ளநீரெனவும், பண்ணுலாமறைகள்பாடினரெனவும்
பலபுகழல்லதுபழியிலரெனவும், எண்ணலாகாதஇமையவர்
நாளுமேத்தாவங்களோடெழில்பெறநின்ற, அண்ணலானூர்
835 தியேறுமெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. ௫

நீடிருஞ்சடைமேலிளம்பிறைதுளங்கநிழல்திகழ்மழு
வொடுநீறுமெய்பூசித், தோடொருகாதினிற்பெய்துவெய்
தாயசுடலையிலாடுவர்தோலுடையாகக், காடரங்காகக்கங்கு
லும்பகலுங்கழுதொடுபாரிடங்கைதொழுதேத்த, ஆடரவாட
836 ஆடுமெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. ௬

ஏறுமொன்றேறிநீறுமெய்பூசியிளங்கிளையரிவையொடொ
ருங்குடனாகிக், கூறுமொன்றருளிக்கொன்றையந்தாருங்குளி
ரிளமதியமுங்கூவிளமலரும், நாறுமல்லிகையுமெருக்கொடு
முருக்குமகிழிளவன்னியுமிவைநலம்பகர, ஆறுமொர்சடை
837 மேலணிந்தவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

கச்சுமொள்வாளுங்கட்டியவுடையர்கதிர்முடிசுடர்வி
டக்கவரியுங்குடையும், பிச்சமும்பிறவும்பெண்ணணங்காய
பிறைநுதலவர்தமைப்பெரியவர்பேணப், பச்சமும்வலியுங்
கருதியஅரக்கன்பருவரையெடுத்ததிண்டோள்களையடர்வித்,

தச்சமுமருளுங்கொடுத்தவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சி
838 கொண்டாரே. அ

நோற்றலாரேனும்வேட்டலாரேனும்நுகர்புகர்சாந்தமொ
டேந்தியமாலைக், கூற்றலாரேனுமின்னவாறென்றுமெய்தலா
காததொரியல்பினையுடையார், தோற்றலார்மாலுநான்முகமு
டையதோன்றலுமடியொடுமுடியுறத்தங்கள், ஆற்றலாற்கா
839 ணாயவெம்மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. கூ

வாதுசெய்சமணுஞ்சாக்கியப்பேய்கள்நல்வினைநீக்கிய
வல்வினையாளர், ஓதியுங்கேட்டுமுணர்வினையிலாதாருள்கலா
காததோரியல்பினையுடையார், வேதமும்வேதநெறிகளுமாகி
விமலவேடத்தொடுகமலமாமதிபோல், ஆதியுமீறுமாயவெம்
840 மடிகளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. கo

மைச்செறிகுவளைதவளைவாய்நிறையமதுமலர்ப்பொய்கை
யிற்புதுமலர்கிழியப்,பச்சிறவெறிவயல்வெறிகமழ்காழிப்பதி
யவாதிபதிகவுணியர்பெருமான்,கைச்சிறுமறியவன்கழலலாற்
பேணுக்கருத்துடைஞானசம்பந்தனதமிழ்கொண், டச்சிறு
841 பாக்கத்தடிகளையேத்துமன்புடையடியவரருவினையிலரே. கக

78 வரிவளரவிரொளியரவரைதாழவார்சடைமுடிமிசைவ
ளர்மதிசூடிக்,கரிவளர்தருகழல்கால்வலனேந்திக்கனலெரியா
டுவர்காடரங்காக, விரிவளர்தருபொழிலிளமயிலாலவெண்
ணிறத்தருவிகள்திண்ணெனவீழும், எரிவளரினமணிபுனம
842 ணிசாரலிடைச்சுரமேவியஇவர்வணமென்னே. க

ஆற்றையுமேற்றதோரவிர்சடையுடையாரழகினையருளு
வர்குழகலதறியார், கூற்றுயிர்செகுப்பதோர்கொடுமையை
யுடையர்நடுவிருளாடுவர்கொன்றையந்தாரார், சேற்றயல்
மிளிர்வனகயலிளவாளைசெருச்செயவோர்ப்பன செம்முக
மந்தி, ஏற்றையொடுழிதருமெழில்திகழ்சாரலிடைச்சுர
843 மேவியஇவர்வணமென்னே. உ

கானமுஞ்சுடலையுங்கற்படுநிலனுங்காதலர்தீதிலர்கனல்
மழுவாளர், வானமுநிலமையுமிருமையுமானார்வணங்கவுமி
ணங்கவும்வாழ்த்தவும்படுவார், நானமும்புகையொளிவிரை
யொடுகமழநளிர்பொழிலிளமஞ்ஞைமன்னியபாங்கர், ஏன

மும்பிணையலுமெழில்திகழ்சாரலிடைச்சுரமேவியஇவர் வண
844 மென்னே. ௩

கடமணிமார்பினர்கடல்தனிலுறைவார்காதலர்தீதிலர்
கனல்மழுவாளர்,விடமணிமிடறினர்மிளிர்வதோரரவர்வேறு
மோர்சரிதையர்வேடமுமுடையர், வடமுலையயலனகருங்
குருந்தேறிவாழையின்தீங்கனிவார்ந்துதேனட்டும், இட
முலையரிவையரெழில்திகழ்சாரலிடைச்சுரமேவிய இவர்வண
845 மென்னே. ௪

கார்கொண்டகடிகமழ்விரிமலர்க்கொன்றைக்கண்ணியர்
வளர்மதிகதிர்விடக்கங்கை, நீர்கொண்டசடையினர்விடை
யுயர்கொடியர்நிழல்திகழ்மழுவினரழல்திகழ்நிறத்தர், சீர்
கொண்டமென்சிறைவண்டுபண்செய்யும் செழும்புனலனை
யனசெங்குலைவாழை, ஏர்கொண்டபலவினொடெழில்திகழ்
846 சாரலிடைச்சுரமேவியஇவர்வணமென்னே. ௫

தோடணிகுழையினர்சுண்ணவெண்ணீற்றர்சுடலையினாடு
வர்தோலுடையாகப், பீடுயர்செய்ததோர்பெருமையையுடை
யர்பேயுடனாடுவர்பெரியவர்பெருமான், கோடல்களொழுகுவ
முழுகுவதும்பிகுரவமுமரவமுமன்னியபாங்கர், ஏடவிழ்புது
847 மலர்கடிகமழ்சாரலிடைச்சுரமேவியஇவர்வணமென்னே. ௬

கழல்மல்குகாலினர்வேலினர்நூலர்கவர்தலையரவொடுகண்
டியும்பூண்பர், அழல்மல்குமெரியொடுமணிமழுவேந்தியாடுவர்
பாடுவாரணங்குடையர், பொழில்மல்குநீடியஅரவமுமரவ
மன்னியகவட்டிடைப்புணர்குயிலாலும், எழில்மல்குசோலை
848 யில்வண்டிசைபாடுமிடைச்சுரமேவியஇவர்வணமென்னே. ௭

தேங்கமழ்கொன்றையந்திருமலர்புனைவார் திகழ்தரு
சடைமிசைத்திங்களுஞ்சூடி, வீந்தவர்சுடலைவெண்ணீறு
மெய்பூசிவேறுமோர்சரிதையர்வேடமுமுடையர், சாந்தமு
மகிலொடுமுகில்பொதிந் தலம்பித்தவழ்கனமணியொடுமிகு
பளிங்கிடறி, ஏந்துவெள்ளருவிகளெழில்திகழ்சாரலிடைச்
849 சுரமேவியஇவர்வணமென்னே. ௮

பலஇலமிடுபலிகையிலொன்றேற்பர்பலபுகழல்லதுபழியி
லர்தாமும், தலையிலங்கவிரொளிநெடுமுடியரக்கன்தடக்கைக

ளடர்த்ததோர்தன்மையையுடையர், மலையிலங்கருவிகள் மண
முழவதிரமழைதவழிளமஞ்ஞைமல்கியசாரல், இலைஇலவங்
850 கமழுமேலமுங்கமழுமிடைச்சுரமேவியஇவர்வணமென்னே. ௯

பெருமைகள்தருக்கியோர்பேதுறுகின்றபெருங்கடல்
வண்ணனும்பிரமனுமோரா, அருமையாடிநிழல்பாவிநின்
றேத்துமன்புடையடியவர்க்கணியருமாவர், கருமைகொள்
வடிவொடுசுனைவளர்குவளைக்கயலினம்வயலிளவாளைகளிரிய,
எருமைகள்படிதாஇளஅனமாலுமிடைச்சுரமேவிய இவர்
851 வணமென்னே. ௧௦

மடைச்சுரமறிவனவாளையுங்கயலும்மருவியவயல்தனில்
வருபுனற்காழிச், சடைச்சுரத்துறைவதோர்பிறையுடையண்
ணல்சரிதைகள்பரவிநின்றுருகுசம்பந்தன், புடைச்சுரத்தருவ
ரைப்பூக்கமழ்சாரற்புணர்மடநடையவர்புடையிடையார்ந்த,
இடைச்சுரமேத்தியஇசையொடுபாடலிவை சொலவல்லவர்
852 பிணியிலர்தாமே. ௧௧

79 அயிலுறுபடையினர்விடையினர்முடிமேலாவமும்மதி
யமும்விரவியஅழகர், மயிலுறுசாயலவனமுலையொருபால்
மகிழ்பவர்வானிடைமுகில்புல்குமிடறர், பயில்வுறுசரிதைய
ரெருதுகந்தேறிப்பாடியுமாடியும்பலிகொள்வர்வலிசேர், கயி
லையும்பொதியிலுமிடமெனவுடையார்கழுமலநினையநம் வினை
853 கரிசறுமே. ௧

கொண்டலுநீலமும்புரைதிருமிடறர்கொடு முடியுறை
பவர்படுதலைக்கையர், பண்டலரயன்சிரமரிந்தவர்பொருந்தும்
படர்சடையடிகளார்பதியதனயலே, வண்டலும்வங்கமுஞ்
சங்கமுஞ்சுறவும்மறிகடல்திரை கொணர்ந்தெற்றியகரைமேற்
கண்டலுங்கைதையும்நெய்தலுங்குலவுங் கழுமலநினையநம்
854 வினைகரிசறுமே. ௨

எண்ணிடையொன்றினர்இரண்டினருருவ மெரியிடை
மூன்றினர்நான்மறையாளர்,மண்ணிடை ஐந்தினராறினரங்
கம்வகுத்தனரேழிசை யெட்டிருங்கலைசேர், பண்ணிடை
யொன்பதுமுணர்ந்தவர்பத்தர்பாடிநின்றடிதொழ மதனனை
வெகுண்ட, கண்ணிடைக்கனலினர்கருதியகோயில்கழுமல
855 நினையநம்வினைகரிசறுமே. ௩

எரியொருகரத்தினரிமையவர்க்கிறைவ ரேறுகந்தேறு
வர்நீறுமெய்பூசித், திரிதருமியல்பினரயலவர்புரங்கள்தீயெழ
விழித்தனர்வேய்புரைதோளி, வரிதருகண்ணிணைமடவரலஞ்
சமஞ்சுறநிமிர்ந்ததோர்வடிவொடும்வந்த, கரியுரிமருவியஅடி
856 களுக்கிடமாங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. ச

ஊரெதிர்ந்திடுபலிதலைகலனாகவுண்பவர்விண்பொலிந்தி
லங்கியவுருவர், பாரெதிர்ந்தடிதொழவிரைதருமார்பிற்பட
அரவாமையக்கணிந்தவர்க்கிடமாம், நீரெதிர்ந்திழிமணிநித்
திலமுத்தம்நிரைசுரிசங்கமொடொண்மணிவாரிக், காரெ
திர்ந்தோதம்வன்றிரைகரைக்கெற்றுங்கழுமலநினையநம்வினை
857 கரிசறுமே. ரு

முன்னுயிர்த்தோற்றமுமிறுதியுமாகிமுடியுடையமரர்க
ளடிபணிந்தேத்தப், பின்னியசடைமிசைப்பிறைநிறைவித்த
பேரருளாளனார்பேணியகோயில், பொன்னியல்நறுமலர்புன
லோடுதூபஞ்சாந்தமுமேந்தியகையினராகிக், கன்னியர்நாள்
858 தோறும்வேடமேபரவுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. சு

கொலைக்கணித்தாவருகூற்றுதைசெய்தார்குரைகழல்
பணிந்தவர்க்கருளியபொருளின், நிலைக்கணித்தாவரநினைய
வல்லார்தங்நெடுந்துயர்தவிர்த்தஎங்நிமலருக்கிடமாம், மலைக்
கணித்தாவரவன்றிரைமுரல மதுவிரிபுன்னைகள்முத்தென
அரும்பக், கலைக்கணங்கானலின்நீழலில்வாழுங்கழுமலநினைய
859 நம்வினைகரிசறுமே. எ

புயம்பலவுடையதென்னிலங்கையர்வேந்தன்பொரு
வரையெடுத்தவன் பொன்முடிதிண்டோள், பயம்பலபட
அடர்த்தருளியபெருமான் பரிவொடுமினிதுறை கோயில
தாகும், வியன்பலவிண்ணினும்மண்ணினுமெங்கும்வேறு
வேறுகங்களிற்பெயருளதென்னக், கயம்பலபடக்கடற்றிரை
860 கரைக்கெற்றுங்கழுமலநினையநம்வினைகரிசறுமே. அ

விலங்கலொன்றேந்திவன்மழைதடுத்தோனும்வெறி
கமழ்தாமரையோனுமென்றிவர்தம், பலங்களால்நேடியுமறி
வரிதாயபரிசினன்மருவிநின்றினிதுறைகோயில், மலங்கிவன்
றிரைவரையெனப்பரந்தெங்குமறிகடலோங்கிவெள்ளிப்பி

யுஞ்சுமந்து, கலங்கடன்சாக்கொடுநிரக்கவந்தேறுங்கழுமல
861 நினையநம்வினைகரிசறுமே. ௯

ஆம்பலதவமுயன்றறவுரைசொல்லுமறிவிலாச்சமணருந்
தேரருங்கணிசேர், நோம்பலதவமறியாதவர்நொடிந்தமூது
ரைகொள்கிலாமுதல்வர்தம்மேனிச், சாம்பலும்பூசிவெண்ட
லைகலனாகத்தையலாரிடுபலிவையகத்தேற்றுக், காம்பனதோ
862 ளியொடினிதுறைகோயில்கழுமலம்நினையநம்வினைகரிசறுமே.

கலிகெழுபாரிடையூரெனவுளதாங் கழுமலம்விரும்பிய
கோயில்கொண்டவர்மேல், வலிகெழுமனமிகவைத்தவன்
மறைசேர்வருங்கலைஞானசம்பந்தனதமிழின், ஒலிகெழுமாலை
யென்றுரைசெய்தபத்துமுண்மையினால் நினைந்தேத்தவல்லார்
மேல், மெலிகெழுதுயரடையாவினைசிந்தும்விண்ணவராற்ற
863 லின்மிகப்பெறுவாரே. ௧௧

80 கற்றாங்கெரியோம்பிக்கலியைவாராமே
செற்றார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கள்முதல்வன்பாதமே
864 பற்றாநின்றாரைப்பற்றாபாவமே. ௧

பறப்பைப்படுத்தெங்கும்பசுவேட்டெரியோம்புஞ்
சிறப்பர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
பிறப்பில்பெருமானைப்பின்றாழ்சடையானை
865 மறப்பிலார்கண்டீர்மையல்தீர்வாரே. ௨

மையாரொண்கண்ணார்மாடநெடுவீதிக்
கையாற்பந்தோச்சுங்கழிசூழ்தில்லையுள்
பொய்யாமறைபாடல்புரிந்தானுலகேத்தச்
866 செய்யானுறைகோயில்சிற்றம்பலந்தானே. ௩

நிறைவெண்கொடிமாடநெற்றிநேர்தீண்டப்
பிறைவந்திறைதாக்கும்பேரம்பலந்தில்லைச்
சிறைவண்டறையோவாச்சிற்றம்பலமேய
867 இறைவன்கழலேத்துமின்பமின்பமே. ௪

செல்வநெடுமாடஞ்சென்றுசேணோங்கிச்
செல்வமதிதோயச்செல்வமுயர்கின்ற
செல்வர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
868 செல்வன்கழலேத்துஞ்செல்வஞ்செல்வமே. ௫

வருமாந்தளிர்மேனிமாதோர்பாகமாந்
திருமாந்தில்லையுட்சிற்றம்பலமேய
கருமானுரியாடைக்கறைசேர்கண்டத்தெம்
869 பெருமான்கழலல்லாற்பேணாதுள்ளமே. ௬

அலையார்புனல்சூடியாகத்தொருபாக
மலையான்மகளோடுமகிழ்ந்தானுலகேத்தச்
சிலையாலெயிலெய்தான்சிற்றம்பலந்தன்னைத்
870 தலையால்வணங்குவார்தலையானார்களே. ௭

கூர்வாளரக்கன்றன்வலியைக்குறைவித்துச்
சீராலேமல்குசிற்றம்பலமேய
நீரார்சடையானைநித்தலேத்துவார்
871 தீராநோயெல்லாந்தீர்தல்திண்ணமே. ௮

கோணாகணையானுங்குளிர்தாமரையானுங்
காணார்கழலேத்தக்கனலாய்ஓங்கினான்
சேணார்வாழ்தில்லைச்சிற்றம்பலமேத்த
872 மாணாநோயெல்லாம்வாளாமாயுமே. ௯

பட்டைத்துவராடைப்படிமங்கொண்டாடும்
முட்டைக்கட்டுரைமொழிவகேளாதே
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலமேய
873 நட்டப்பெருமானைநாளுந்தொழுவோமே. ௧0

ஞாலத்துயர்காழிஞானசம்பந்தன்
சீலத்தார்கொள்கைச்சிற்றம்பலமேய
சூலப்படையானைச்சொன்னதமிழ்மாலை
874 கோலத்தாற்பாடவல்லார்நல்லாரே. ௧௧

**81** நல்லார்தீமேவுந்தொழிலார்நால்வேதஞ்
சொல்லார்கேண்மையார்சுடர்பொற்கழலேத்த
வில்லாற்புரஞ்செற்றான்மேவும்பதிபோலுங்
875 கல்லார்மதில்சூழ்ந்தகாழிந்நகர்தானே. ௧

துளிவண்டேன்பாயுமிதழிதூமத்தந்
தெளிவெண்திங்கள்மாசுணநீர்திகழ்சென்னி
ஒளிவெண்டலைமாலையுகந்தானூர்போலுங்
876 களிவண்டியாழ்செய்யுங்காழிந்நகர்தானே. ௨

ஆலக்கோலத்தின்நஞ்சுண்டமுதத்தைச்
சாலத்தேவர்க்கீந்தளித்தான்தன்மையால்
பாலற்காய்நன்றும்பரிந்துபாதத்தால்
877 காலற்காய்ந்தானூர்காழிநகர்தானே. ௩,௪,௫,௬,௭

இரவில்திரிவோர்கட்கிறைதோளிணைபத்தும்
நிரவிக்கரவாளைநேர்ந்தானிடம்போலும்
பரவித்திரிவோர்க்கும்பால்நீறணிவோர்க்குங்
878 கரவில்தடக்கையார்காழிநகர்தானே. ௮

மாலும்பிரமனுமறியாமாட்சியான்
தோலும்புரிநூலுந்துதைந்தவரைமார்பன்
ஏலும்பதிபோலுமிரந்தோர்க்கெந்நாளுங்
879 காலம்பகராதார்காழிநகர்தானே. ௯

தங்கையிடவுண்பார்தாழ்சீவாத்தார்கள்
பெங்கையுணாதேபேணித்தொழுமின்கள்
மங்கையொருபாகமகிழ்ந்தான்மலர்ச்சென்னிக்
880 கங்கைதரித்தானூர்காழிநகர்தானே. ௧௦

வாசங்கமழ்காழிமதிசெஞ்சடைவைத்த
ஈசன்நகர்தன்னையிணையில்சம்பந்தன்
பேசுந்தமிழ்வல்லோர்பெருநீருலகத்துப்
881 பாசந்தனையற்றுப்பழியில்புகழாரே. ௧௧

**82** இரும்பொன்மலைவில்லாஎரியம்பாநாணில்
திரிந்தபுரமூன்றுஞ்செற்றானுறைகோயில்
தெரிந்தஅடியார்கள்சென்றதிசைதோறும்
882 விரும்பியெதிர்கொள்வார்வீழிமிழலையே. ௧

வாதைப்படுகின்றவானோர்துயர்தீர
ஓதக்கடல்நஞ்சையுண்டானுறைகோயில்
கீதத்திசையோடுங்கேள்விக்கிடையோடும்
883 வேதத்தொலியோவாவீழிமிழலையே. ௨

பயிலும்மறையாளன்தலையிற்பலிகொண்டு
துயிலும்பொழுதாடுஞ்சோதியுறைகோயில்
மயிலும்மடமானும்மதியும்மிளவேயும்
884 வெயிலும்போல்மாதர்வீழிமிழலையே. ௩

இரவன்பகலோனுமெச்சத்திமையோரை
நிரவிட்டருள்செய்தநிமலனுறைகோயில்
குரவஞ்சுரபுன்னைகுளிர்கோங்கிளவேங்கை
885 விரவும்பொழிலந்தண்வீழிமிழலையே. ௪

கண்ணிற்கனலாலேகாமன்பொடியாகப்
பெண்ணுக்கருள்செய்தபெருமானுறைகோயில்
மண்ணிற்பெருவேள்விவளர்தீப்புகைநாளும்
886 விண்ணிற்புயல்காட்டும்வீழிமிழலையே. ௫

மாலாயிரங்கொண்டுமலர்க்கண்ணிடஆழி
ஏலாவலயத்தோடீந்தானுறைகோயில்
சேலாகியபொய்கைச்செழுநீர்க்கமலங்கள்
887 மேலாலெரிகாட்டும்வீழிமிழலையே. ௬

மதியால்வழிபட்டான்வாணாள்கொடுபோவான்
கொதியாவருகூற்றைக்குமைத்தானுறைகோயில்
நெதியான்மிகுசெல்வர்நித்தநியமங்கள்
888 விதியால்நிற்கின்றார்வீழிமிழலையே. ௭

எடுத்தான்தருக்கினையிழித்தான்விரலூன்றிக்
கொடுத்தான்வாளாளாக்கொண்டானுறைகோயில்
படித்தார்மறைவேள்வியயின்றார்பாவத்தை
889 விடுத்தார்மிகவாழும்வீழிமிழலையே. ௮

கிடந்தானிருந்தானுங்கீழ்மேற்காணாது
தொடர்ந்தாங்கவரேத்தச்சுடராயவன்கோயில்
படந்தாங்கரவல்குற்பவளத்துவர்வாய்மேல்
890 விடந்தாங்கியகண்ணார்வீழிமிழலையே. ௯

சிக்கார்துவராடைச்சிறுதட்டுடையாரும்
நக்காங்கலர்தூற்றுநம்பானுறைகோயில்
தக்கார்மறைவேள்வித்தலையாயுலகுக்கு
891 மிக்காரவர்வாழும்வீழிமிழலையே. ௧௦

மேனின்றிழிகோயில்வீழிமிழலையுள்
ஏனத்தெயிற்றானையெழிலார்பொழிற்காழி
ஞானத்துயர்கின்றநலங்கொள்சம்பந்தன்
892 வாய்மைத்திவைசொல்லவல்லோர்நல்லோரே. ௧௧

**83** அடையார்புரமூன் றுமனல்வாய்விழவெய்து
மடையார்புனலம்பர்மாகாளம்மேய
விடையார்கொடியெந்தைவெள்ளைப்பிறைசூடும்
893 சடையான்கழலேத்தச்சாராவினை தானே. க

தேனார்மதமத்தந்திங்கள் புனல்சூடி
வானார்பொழிலம்பர்மாகாளம்மேய
ஊனார்தலைதன்னிற்பலிகொண்டுழல்வாழ்க்கை
894 ஆனான்கழலேத்த அல்லலடையாவே. உ

திரையார்புனலோடுசெல்வமதிசூடி
விரையார்பொழிலம்பர்மாகாளம்மேய
நரையார்விடையூருநம்பான்கழல்நாளும்
895 உரையாதவர்கண்மேலொழியாவூனம்மே. ங

கொந்தண்பொழிற்சோலைக்கோலவரிவண்டு
மந்தம்மலியம்பர்மாகாளம்மேய
கந்தங்கமழ்கொன்றைகமழ்புன்சடைவைத்த
896 எந்தைகழலேத்தஇடர்வந்தடையாவே. ச

அணியார்மலைமங்கையாகம்பாகமாய்
மணியார்புனலம்பர்மாகாளம்மேய
துணியாருடையினன் துதைபொற்கழல்நாளும்
897 பணியாதவர்தம்மேற்பறையாபாவம்மே. ரு

பண்டாழ்கடல்நஞ்சையுண்டுகளிமாந்தி
வண்டார்பொழிலம்பர்மாகாளம்மேய
விண்டார்புரம்வேவமேருச்சிலையாகக்
898 கொண்டான்கழலேத்தக்குறுகாகுற்றம்மே. சு

மிளிரும்மரவோடுவெள்ளைப்பிறைசூடி
வளரும்பொழிலம்பர்மாகாளம்மேய
கிளருஞ்சடையண்ணல்கேடில்கழலேத்தத்
899 தளரும்முறுநோய்கள்சாருந்தவந்தானே. எ

கொலையார்மழுவோடுகோலச்சிலையேந்தி
மலையார்புனலம்பர்மாகாளம்மேய
இலையார்திரிசூலப்படையான்கழல்நாளும்
900 நிலையாநினைவார்மேல்நில்லாவினை தானே. அ

சிறையார்வரிவண்டுதேனுண்டிசைபாட
மறையார்நிறையம்பர்மாகாளம்மேய
நறையார்மலரானும்மாலுங்காண்பொண்ணா
901 இறையான்கழலேத்தஎய்துமின்பம்மே. ௯

மாசூர்வடிவின்னார்மண்டையுணல்கொள்வார்
கூசாதுரைக்குஞ்சொற்கொள்கைகுணமல்ல
வாசார்பொழிலம்பர்மாகாளம்மேய
902 ஈசாஎன்பார்கட்கில்லையிடர்தானே. ௧௦

வெருநீர்கொளவோங்கும்வேணுபுரந்தன்னுள்
திருமாமறைஞானசம்பந்தனசேணார்
பெருமான்மலியம்பர்மாகாளம்பேணி
903 உருகாவுரைசெய்வாருயர்வானடைவாரே. ௧௧

84 புனையும்விரிகொன்றைக்கடவுள்புனல்பாய
நனையுஞ்சடைமேலோர்நகுவெண்டலைசூடி
வினையில்லடியார்கள்விதியால்வழிபட்டுக்
904 கனையுங்கடல்நாகைக்காரோணத்தானே. ௧

பெண்ணாணெனநின்றபெம்மான்பிறைச்சென்னி
அண்ணாமலைநாடனாரூருறையம்மான்
மண்ணார்முழவோவாமாடந்நெடுவீதிக்
905 கண்ணார்கடல்நாகைக்காரோணத்தானே. ௨

பாரோர்தொழவிண்ணோர்பணியம்மதில்மூன்றும்
ஆராரழலூட்டியடியார்க்கருள்செய்தான்
தேரார்விழவோவாச்செல்வன்திரைசூழ்ந்த
906 காரார்கடல்நாகைக்காரோணத்தானே. ௩

மொழிசூழ்மறைபாடிமுதிருஞ்சடைதன்மேல்
அழிசூழ்புனலேற்றஅண்ணலணியாய
பழிசூழ்விலாயபத்தர்பணிந்தேத்தக்
907 கழிசூழ்கடல்நாகைக்காரோணத்தானே. ௪

ஆணும்பெண்ணுமாய்அடியார்க்கருள்நல்கிச்
சேணின்றவர்க்கின்னஞ்சிந்தைசெயவல்லான்
பேணிவழிபாடுபிரியாதெழுந்தொண்டர்
908 காணுங்கடல்நாகைக்காரோணத்தானே. ௫

ஏனத்தெயிறோடும்மரவமெய்பூண்டு
வானத்திளந்திங்கள்வளருஞ்சடையண்ணல்
ஞானத்துரைவல்லார்நாளும்பணிந்தேத்தக்
909 கானற்கடல்நாகைக்காரோணத்தானே. ௬

அரையாரழல்நாகமக்கோடசைத்திட்டு
விரையார்வரைமார்பின்வெண்ணீறணியண்ணல்
வரையார்வனபோலவளரும்வங்கங்கள்
910 கரையார்கடல்நாகைக்காரோணத்தானே.

வலங்கொள்புகழ்பேணிவரையாலுயர்திண்டோள்
இலங்கைக்கிறைவாட அடர்த்தங்கருள்செய்தான்
பலங்கொள்புகழ்மண்ணிற்பத்தர்பணிந்தேத்தக்
911 கலங்கொள்கடல்நாகைக்காரோணத்தானே. ௮

திருமாலடிவீழத்திசைநான்முகனேத்தப்
பெருமானெனநின்றபெம்மான்பிறைச்சென்னிச்
செருமால்விடையூருஞ்செல்வன்திரைசூழ்ந்த
912 கருமால்கடல்நாகைக்காரோணத்தானே. ௯

நல்லாரறஞ்சொல்லப்பொல்லார்புறங்கூற
அல்லாரலர்தூற்றஅடியார்க்கருள்செய்வான்
பல்லார்தலைமாலையணிவான்பணிந்தேத்தக்
913 கல்லார்கடல்நாகைக்காரோணத்தானே. ௧௦

கரையார்கடல்நாகைக்காரோணம்மேய
நரையார்விடையானைநவிலுஞ்சம்பந்தன்
உரையார்தமிழ்மாலைபாடும்மவரெல்லாம்
914 கரையாவுருவாகிக்கலிவானடைவாரே. ௧௧

85 கல்லால்நிழல்மேயகறைசேர்கண்டாவென்
றெல்லாமொழியாலுமிமையோர்தொழுதேத்த
வில்லாலரண்மூன்றும்வெந்துவிழவெய்த
915 நல்லான்நமையாள்வான்நல்லநகரானே. ௧

தக்கன்பெருவேள்விதன்னிலமரரைத்
துக்கம்பலசெய்துசுடற்பொற்சடைதாழக்
கொக்கின்னிறகோடுகுளிர்வெண்பிறைசூடும்
916 நக்கன்நமையாள்வான்நல்லநகரானே. ௨

அந்திமதியோடுமரவச்சடைதாழ
முந்தியனலேந்திமுதுகாட்டெரியாடி
சிந்தித்தெழவல்லார்தீராவினைதீர்க்கும்
917 நந்திநமையாள்வான்நல்லநகரானே. ௩

குளிரும்மதிசூடிக்கொன்றைச்சடைதாழ
மிளிரும்மரவோடுவெண்ணூல்திகழ்மார்பில்
தளிருந்திகழ்மேனித்தையல்பாகமாய்
918 நளிரும்வயல்சூழ்ந்தநல்லநகரானே. ௪

மணியார்திகழ்கண்டம்முடையான்மலர்மல்கு
பிணிவார்சடையெந்தைபெருமான்கழல்பேணித்
துணிவார்மலர்கொண்டுதொண்டர்தொழுதேத்த
919 நணியான்நமையாள்வான்நல்லநகரானே. ௫

வாசம்மலர்மல்குமலையான்மகளோடும்
பூசுஞ்சுடுநீறுபுனைந்தான்விரிகொன்றை
ஈசன்னெனவுள்கியெழுவார்வினைகட்கு
920 நாசன்நமையாள்வான்நல்லநகரானே. ௬

அங்கோல்வளைமங்கைகாண அனலேந்திக்
கொங்கார்நறுங்கொன்றைசூடிக்குழகாக
வெங்காடிடமாகவெந்தீவிளையாடும்
921 நங்கோன்நமையாள்வான்நல்லநகரானே. ௭

பெண்ணார்திருமேனிப்பெருமான்பிறைமல்கு
கண்ணார்நுதலினன்கயிலைகருத்தினால்
எண்ணாதெடுத்தானையிறையேவிரலூன்றி
922 நண்ணார்புரமெய்தான்நல்லநகரானே. ௮

நாகத்தணையானும்நளிர்மாமலரானும்
போகத்தியல்பினாற்பொலியஅழகாகும்
ஆகத்தவளோடுமமர்ந்தங்கழகாரும்
923 நாகம்மரையார்த்தான்நல்லநகரானே. ௯

குறியில்சமணோடுகுண்டர்வண்தேரர்
அறிவில்லுரைகேட்டங்கவமேகழியாதே
பொறிகொள்ளரவார்த்தான்பொல்லாவினைதீர்க்கும்
924 நறைகொள்பொழில்சூழ்ந்தநல்லநகரானே. ௧௦

நலமார்மறையோர்வாழ்நல்லநகர்மேய
கொலைசேர்மழுவானைக்கொச்சையமர்ந்தோங்கு
தலமார்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
925 களைகளிவைவல்லார்கவலைகழிவாரே. கக

86 கொட்டும்பறைசீராற்குழுமஅனலேந்தி
நட்டம்பயின்றாடுநல்லூர்ப்பெருமானை
முட்டின்றிருபோதுமுனியாதெழுந்தன்பு
926 பட்டமனத்தார்களறியார்பாவமே. க

ஏறிலெருதேறுமெழிலாயிழையோடும்
வேறும்முடனுமாம்விகிர்தரவரென்ன
நாறும்மலர்ப்பொய்கைநல்லூர்ப்பெருமானைக்
927 கூறும்மடியார்கட்கடையாகுற்றமே. உ

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதாழ
ஓடுண்கலனாகவூரூரிடுபிச்சை
நாடுந்நெறியானைநல்லூர்ப்பெருமானைப்
928 பாடும்மடியார்கட்கடையாபாவமே. ௩

நீத்தநெறியானைநீங்காத்தவத்தானை
நாத்தநெறியானைநல்லூர்ப்பெருமானைக்
காத்தநெறியானைக்கைகூப்பித்தொழு
929 தேத்துமடியார்கட்கில்லையிடர்தானே. ச

ஆகத்துமைகேள்வனரவச்சடைதாழ
நாகம்மசைத்தானைநல்லூர்ப்பெருமானைத்
தாகம்புகுந்தண்மித்தாள்கள்தொழுந்தொண்டர்
930 போகம்மனத்தராய்ப்புகழத்திரிவாரே. ரு

கொல்லுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
நல்லநெறியானைநல்லூர்ப்பெருமானைச்
செல்லுநெறியானைச்சேர்ந்தாரிடர்தீரச்
931 சொல்லுமடியார்களறியார்துக்கமே. சா

எங்கள் பெருமானையிமையோர்தொழுதேத்தும்
நங்கள்பெருமானைநல்லூர்பிரிவில்லாத்
தங்கைதலைக்கேற்றியாளென்றடிநீழல்
932 தங்குமனத்தார்கள்தடுமாற்றறுப்பாரே. எ

காமனெழில்வாட்டிக்கடல்சூழிலங்கைக்கோன்
நாமமிறுத்தானைநல்லூர்ப்பெருமானை
ஏமமனத்தாராயிகழாதெழுந்தொண்டர்
933 தீபமனத்தார்களறியார்தீயவே. ௮

வண்ணமலரானும்வையமளந்தானும்
நண்ணலரியானைநல்லூர்ப்பெருமானைத்
தண்ணமலர்தூவித்தாள்கள்தொழுதேத்த
934 எண்ணுமடியார்கட்கில்லையிடுக்கணே. ௯

பிச்சக்குடைநீழற்சமணர்சாக்கியர்
நிச்சமலர்தூற்றநின்றபெருமானை
நச்சுமிடற்றானைநல்லூர்ப்பெருமானை
935 எச்சுமடியார்கட்கில்லையிடர்தானே. ௧௦

தண்ணம்புனற்காழிஞானசம்பந்தன்
நண்ணும்புனல்வேலிநல்லூர்ப்பெருமானை
வண்ணம்புனைமாலைவைகலேத்துவார்
936 விண்ணுந்நிலனுமாய்விளங்கும்புகழாரே. ௧௧

**87** சூடுகூரெரிமாலையணிவர்சுடர்வேலர்
கொடுகூர்மழுவாளொன்றுடையார்விடையூர்வர்
கடுகூர்பசிகாமங்கவலைபிணியில்லார்
937 வடுகூர்புனல்சூழ்ந்தவடுகூரடிகளே. ௧

பாலுந்நறுநெய்யுந்தயிரும்பயின்றாடி
ஏலுஞ்சுடுநீறுமென்புமொளிமல்கக்
கோலம்பொழிற்சோலைக்கூடிமடஅன்னம்
938 ஆலும்வடுகூரிலாடும்மடிகளே. ௨

சூடுமிளந்திங்கட்சுடர்பொற்சடைதன்மேல்
ஓடுங்களியானையுரிபோர்த்துமையஞ்ச
ஏடுமலர்மோந்தங்கெழிலார்வரிவண்டு
939 பாடும்வடுகூரிலாடும்மடிகளே. ௩

துவரும்புரிசையுந்துதைந்தமணிமாடம்
கவரவெரியோட்டிக்கடியமதிலெய்தார்
கவருமணிகொல்லைக்கடியமுலைநல்லார்
940 பவரும்வடுகூரிலாடும்மடிகளே. ௪

துணியாருடையாடைதுன்னியரைதன்மேல்
தணியாஅழல்நாகந்தரியாவகைவைத்தார்
பணியாரடியார்கள்பலரும்பயின்றேத்த
941 அணியார்வடுகூரிலாடும்மடிகளே. ரு

தளருங்கொடியன்னாள் தன்னோடுடனாகிக்
கிளருமரவார்த்துக்கிளருமுடிமேலோர்
வளரும்பிறைசூடிவரிவண்டிசைபாட
942 ஒளிரும்வடுகூரிலாடும்மடிகளே. சு

நெடியர்சிறிதாயவிரம்பாமதிசூடும்
முடியர்விடையூர்வர்கொடியர்மொழிகொள்ளார்
கடியதொழிற்காலன்மடியவுதைகொண்ட
943 அடியர்வடுகூரிலாடும் அடிகளே. எ

பிறையுநெடுநீரும்பிரியாமுடியினார்
மறையும்பலபாடிமயானத்துறைவாரும்
பறையுமதிர்குழலும்போலப்பலவண்டாங்
944 கறையும்வடுகூரிலாடும்மடிகளே. அ

சந்தம்மலர்வேய்ந்தசடையின்னிடைவிம்மு
கந்தம்மிகுதிங்கட்சிந்துகதிர்மாலை
வந்துநயந்தெம்மைநன்றுமருள்செய்வார்
945 அந்தண்வடுகூரிலாடும்மடிகளே. கூ

திருமாலடிவீழத்திசைநான்முகனாய
பெருமானுணர்கில்லாப்பெருமான்நெடுமுடிசேர்
செருமால்விடையூருஞ்செம்மான்திசைவில்லா
946 அருமாவடுகூரிலாடும்மடிகளே. க0

படிநோன்பவையாவர்பழியில்புகழான
கடிநாணிகழ்சோலைகமழும்வடுகூரைப்
படியானசிந்தைமொழியார்சம்பந்தன்
947 அடிஞானம்வல்லாரடிசேர்வார்களே. கக

88 முற்றுஞ்சடைமுடிமேல்முதிராஇளம்பிறையன்
ஒற்றைப்படவரவமதுகொண்டரைக்கணிந்தான்
செற்றமில்சீரானைத்திருவாப்பனூரானைப்
948 பற்றுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. க

குரவங்கமழ்குழலாள்குடிகொண்டுநின் றுவிண்ணோர்
விரவுந்திருமேனிவிளங்கும்வளையெயிற்றின்
அரவமணிந்தானையணியாப்பனூரானைப்
949 பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. உ

முருகுவிரிகுழலார்மனங்கொளநங்கனைமுன்
பெரிதுமுனிந்துகந்தான்பெருமான்பெருங்காட்டின்
அரவமணிந்தானையணியாப்பனூரானைப்
950 பரவுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. ௩

பிணியும்பிறப்பறுப்பான்பெருமான்பெருங்காட்டில்
துணியினுடைதாழச்சுடரேந்தியாடுவான்
அணியும்புனலானையணியாப்பனூரானைப்
951 பணியுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. ௪

தகரமணியருவித்தடமால்வரைசிலையா
நகரமொருமூன்றும்நலங்குன்றவென் றுகந்தான்
அகரமுதலானையணியாப்பனூரானைப்
952 பகருமனமுடையார்வினைபற்றறுப்பாரே. ரு

ஓடுந்திரிபுரங்களுடனேயுலந்தவியக்
காடதிடமாகக்கனல்கொண்டுநின்றிரவில்
ஆடுந்தொழிலானையணியாப்பனூரானைப்
953 பாடுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. ௬

இயலும்விடையேறியெரிகொள்மழுவீசிக்
கயவினிணைக்கண்ணுளொருபாற்கலந்தாட
இயலுமிசையானையெழிலாப்பனூரானைப்
954 பயிலுமனமுடையார்வினைபற்றறுப்பாரே. எ

கருக்குமணிமிடறன்கதநாகக்கச்சையினான்
உருக்குமடியவரையொளிவெண்பிறைசூடி
அரக்கன்றிறலழித்தானணியாப்பனூரானைப்
955 பருக்குமனமுடையார்வினைபற்றறுப்பாரே. அ

கண்ணன்கடிக்கமலமலர்மேவினிதுறையும்
அண்ணற்களப்பரிதாய்நின்றங்கடியார்மேல்
எண்ணில்வினைகளைவானெழிலாப்பனூரானைப்
956 பண்ணின்னிசைபகர்வார்வினைபற்றறுப்பாரே. ௯

செய்யகலிங்கத்தார்சிறுதட்டுடையார்கள்
பொய்யர்புறங்கூறப்புரிந்தவடியாரை
ஐயமகற்றுவானணியாப்பனூரானைப்
957 பையநினைந்தெழுவார்வினைபற்றறுப்பாரே. ௧௦

அந்தண்புனல்வைகையணியாப்பனூர்மேய
சந்தமலர்க்கொன்றைசடைமேலுடையானை
நந்தியடிபரவும்நலஞானசம்பந்தன்
958 சந்தமிவைவல்லார்தடுமாற்றறுப்பாரே. ௧௧

89 படையார்தருபூதப்பகடாருரிபோர்வை
உடையானுமையோடுமுடனாயிடுகங்கைச்
சடையானெருக்கத்தம்புலியூர்த்தகுகோயில்
959 விடையானடியேத்தமேவாவினைதானே. ௧

இலையார்தருசூலப்படையெம்பெருமானாய்
நிலையார்மதில்மூன்றுநீறாய்விழவெய்த
சிலையானெருக்கத்தம்புலியூர்த்திகழ்கோயில்
960 கலையானடியேத்தக்கருதாவினைதானே. ௨

விண்ணோர்பெருமானேவிகிர்தாவிடையூர்தீ
பெண்ணாணலியாகும்பித்தாபிறைசூடீ
எண்ணாரெருக்கத்தம்புலியூருறைகின்ற
961 அண்ணாவெனவல்லார்க்கடையாவினைதானே. ௩

அரையார்தருநாகமணிவானலர்மாலை
விரையார்தருகொன்றையுடையான்விடையேறி
வரையானெருக்கத்தம்புலியூர்மகிழ்கின்ற
962 திரையார்சடையானைச்சேரத்திருவாமே. ௪

வீறார்முலையாளைப்பாகமிகவைத்துச்
சீறார்வருகாலன்சினத்தையழிவித்தான்
ஏறானெருக்கத்தம்புலியூரிறையானை
963 வேறாநினைவாரைவிரும்பாவினைதானே. ௫

நகுவெண்டலையேந்திநானாவிதம்பாடிப்
புகுவானயம்பெய்யப்புலித்தோல்பியற்கிட்டுத்
தகுவானெருக்கத்தம்புலியூர்த்தகைந்தங்கே
964 தொகுவான்கழலேத்தத்தொடாவினைதானே. ௬, ௭

ஆவாவெனவரக்கனலறவடர்த்திட்டுத்
தேவாவெனவருளார்செல்வங்கொடுத்திட்ட
கோவேயெருக்கத்தம்புலியூர்மிகுகோயில்
965 தேவேயென அல்லல்தீர்தல்திடமாமே. அ

மறையான்நெடுமால்காண்பரியான்மழுவேந்தி
நிறையாமதிசூடிநிகழ்முத்தின்றொத்தே
இறையானெருக்கத்தம்புலியூரிடங்கொண்ட
966 கறையார்மிடற்றானைக்கருதக்கெடும்வினையே. கூ

புத்தருகர்தம்பொய்கள்புறம்போக்கிச்
சுத்திதரித்துறையுஞ்சோதியுமையோடும்
நித்தனெருக்கத்தம்புலியூர்நிகழ்வாய
967 அத்தனறவன்றன்னடியேயடைவோமே. க0

ஏராரெருக்கத்தம்புலியூருறைவானைச்
சீரார்திகழ்காழித்திருவார்சம்பந்தன்
ஆராவருந்தமிழ்மாலையிவைவல்லார்
968 பாராசவரேத்தப்பதிவானுறைவாரே. கக

90 அரனையுள்குவீர், பிரமனூருளெம்
969 பரனையேமனம், பரவியும்மினே. க

காணவுள்குவீர், வேணுநற்புரத்
970 தாணுவின்கழல், பேணியும்மினே. உ

நாதனென்பிர்காள், காதலொண்புகல்
971 ஆதிபாதமே, ஓதியும்மினே. ங

அங்கமாதுசேர், பங்கமாயவன்
972 வெங்குருமன்னும், எங்களீசனே. ச

வாணிலாச்சடைத், தோணிவண்புரத்
973 தாணிநற்பொனைக், காணுமிண்களே. ரு

பாந்தளார்சடைப், பூந்தராய்மன்னும்
974 ஏந்துகொங்கையாள், வேந்தனென்பரே. சு

கரியகண்டனைச், சிரபுரத்துளெம்
975 அரசைநாள்தொறும், பரவியும்மினே. எ

நறவமார்பொழிற், புறவநற்பதி
976 இறைவன்நாமமே, மறவல்நெஞ்சமே. அ

தென்றிலரக்கனைக், குன்றிற்சண்பைமன்
977 அன்றுநெரித்தவா, நின்றுநினைமினே. கூ

அயனுமாலுமாய், முயலுங்காழியான்
978 பெயல்வையெய்தின், றியலுமுள்ளமே. க௦

தேரரமணரைச், சேர்வில்கொச்சைமன்
979 நேரில்கழல்நினைந், தோருமுள்ளமே. கக

தொழுமனத்தவர், கழுமலத்துறை
980 பழுதில்சம்பந்தன், மொழிகள்பத்துமே. கஉ

91 சித்தந்தெளிவீர்காள், அத்தனாரூரைப்
981 பத்திமலர்தூவ, முத்தியாகுமே. க

பிறவியறுப்பீர்காள், அறவனாரூரை
982 மறவாதேத்துமின், துறவியாகுமே. உ

துன்பந்துடைப்பீர்காள், அன்பனணியாரூர்
983 நன்பொன்மலர்தூவ, இன்பமாகுமே. ங

உய்யலுறுவீர்காள்ஐயனாரூரைக்
984 கையினாற்றொழ, நையும்வினைதானே. ச

பிண்டமறுப்பீர்காள், அண்டனாரூரைக்
985 கண்டுமலர்தூவ, விண்டுவினைபோமே. ரு

பாசமறுப்பீர்காள், ஈசனணியாரூர்
986 வாசமலர்தூவ, நேசமாகுமே. சு

வெய்யவினைதீர, ஐயனணியாரூர்
987 செய்யமலர்தூவ, வையமுமதாமே. எ

அரக்கனாண்மையை, நெருக்கினானாரூர்
988 கரத்தினாற்றொழத், திருத்தமாகுமே. அ

துள்ளுமிருவர்க்கும், வள்ளலாரூரை
989 உள்ளுமவர்தம்மேல், விள்ளும்வினைதானே. கூ

கடுக்கொள்சீவரை, அடக்கினானூர்
990 எடுத்துவாழ்த்துவார், விடுப்பர்வேட்கையே. ௧௦

சீரூர்சம்பந்தன், ஆரூரைச்சொன்ன
991 பாரூர்பாடலார், பேராரின்பமே. ௧௧

**92** வாசிதீரவே, காசுநல்குவீர்
992 மாசின்மிழலையீர், ஏசலில்லையே. ௧

இறைவராயினீர், மறைகொள்மிழலையீர்
993 கறைகோள்காசினை, முறைமைநல்குமே. ௨

செய்யமேனியீர், மெய்கொள்மிழலையீர்
994 பைகொளரவினீர், உய்யநல்குமே. ௩

நீறுபூசினீர், ஏறதேறினீர்
995 கூறுமிழலையீர், பேறுமருளுமே. ௪

காமன்வேவவோர், தூமக்கண்ணினீர்
996 நாமமிழலையீர், சேமநல்குமே. ௫

பிணிகொள்சடையினீர், மணிகொள்மிடறினீர்
997 அணிகொள்மிழலையீர், பணிகொண்டருளுமே. ௬

மங்கைபங்கினீர், துங்கமிழலையீர்
998 கங்கைமுடியினீர், சங்கைதவிர்மினே. ௭

அரக்கன்னெரிதர, இரக்கமெய்தினீர் -
999 பரக்குமிழலையீர், கரக்கைதவிர்மினே. ௮

அயனுமாலுமாய், முயலுமுடியினீர்
1000 இயலுமிழலையீர், பயனுமருளுமே. ௯

பறிகொள்தலையினார், அறிவதறிகிலார்
1001 வெறிகொள்மிழலையீர், பிறிவதரியதே. ௧௦

காழிமாநகர், வாழிசம்பந்தன்
1002 வீழிமிழலைமேல், தாழுமொழிகளே. ௧௧

**93** நின்றுமலர்தூவி, இன்றுமுதுகுன்றை
1003 நன்றுமேத்துவீர்க், கென்றுமின்பமே. ௧

அத்தன்முதுகுன்றைப், பத்தியாகிநீர்
1004 நித்தமேத்துவீர்க், குய்த்தல்செல்வமே. உ

ஐயன்முதுகுன்றைப், பொய்கள்கெடநின்று
1005 கைகள்கூப்புவீர், வையமுமதாமே. ங

ஈசன்முதுகுன்றை, நேசமாகிநீர்
1006 வாசமலர்தூவப், பாசவினைபோமே. ச

மணியார்முதுகுன்றைப், பணிவாளவர்கண்டீர்
1007 பிணியாயினகெட்டுத், தணிவாருலகிலே. ரு

மொய்யார்முதுகுன்றில், ஐயாவெனவல்லார்
1008 பொய்யாரிரவோர்க்குச், செய்யாளணியாளே. சு

விடையான்முதுகுன்றை, இடையாதேத்துவார்
1009 படையாயினசூழ, உடையாருலகமே. எ

பத்துத்தலையோனைக், கத்தவிரலூன்றும்
1010 அத்தன்முதுகுன்றை, மொய்த்துப்பணிமினே. அ

இருவரறியாத, ஒருவன்முதுகுன்றை
1011 உருகிநினைவார்கள், பெருகிநிகழ்வோரே. கூ

தேரரமணரும், சேரும்வகையில்லான்
1012 நேரின்முதுகுன்றை, நீர்நின்றுள்குமே. க0

நின்றுமுதுகுன்றை, நன்றுசம்பந்தன்
1013 ஒன்றுமுரைவல்லார், என்றுமுயர்வாரே. கக

94 நீலமாமிடற், றாலவாயிலான்
1014 பாலதாயினர், ஞாலமாள்வரே. க

ஞாலமேழுமாம், ஆலவாயிலார்
1015 சீலமேசொலீர், காலன்வீடவே. உ

ஆலநீழலார், ஆலவாயிலார்
1016 காலகாலனர், பாலதாமினே. ங

அந்தமில்புகழ், எந்தையாலவாய்
1017 பந்தியார்கழல், சிந்தைசெய்ம்மினே. ச

ஆடலேற்றினான், கூடலாலவாய்
1018 பாடியேமனம், நாடிவாழ்மினே. ௫

அண்ணலாலவாய், நண்ணினான்றனை
1019 எண்ணியேதொழத், திண்ணமின்பமே. ௬

அம்பொனாலவாய், நம்பனார்கழல்
1020 நம்பிவாழ்பவர், துன்பம்வீடுமே. ௭

அரக்கனார்வலி, நெருக்கனாலவாய்
1021 உரைக்குமுள்ளத்தார்க், கிரக்கமுண்மையே. ௮

அருவனாலவாய், மருவினான்றனை
1022 இருவரேத்தநின், றுருவமோங்குமே. ௯

ஆரநாகமாம், சீரனாலவாய்த்
1023 தேரமண்செற்ற, வீரனென்பரே. ௧௦

அடிகளாலவாய்ப், படிகொள்சம்பந்தன்
1024 முடிவிலின்தமிழ், செடிகள்நீக்குமே. ௧௧

95 தோடொர்காதினன், பாடுமறையினன்
1025 காடுபேணிநின், றாடுமருதனே. ௧

கருதார்புரமெய்வர், எருதேயினிதூர்வர்
1026 மருதேயிடமாகும், விருதாம்வினைதீர்ப்பே. ௨

எண்ணுமடியார்கள், அண்ணல்மருதரைப்
1027 பண்ணின்மொழிசொல்ல, விண்ணுந்தமதாமே. ௩

விரியார்சடைமேனி, எரியார்மருதரைத்
1028 தரியாதேத்துவார், பெரியாருலகிலே. ௪

பந்தவிடையேறும், எந்தைமருதரைச்
1029 சிந்தைசெய்பவர், புந்திநல்லரே. ௫

கழலுஞ்சிலம்பார்க்கும், எழிலார்மருதரைத்
1030 தொழலேபேணுவார்க், குழலும்வினைபோமே. ௬

பிறையார்சடையண்ணல். மறையார்மருதரை
1031 நிறையால்நினைபவர், குறையாரின்பமே. ௭

எடுத்தான்புயந்தன்னை, அடுத்தார்மருதரைத்
1032 தொடுத்தார்மலர்சூட்ட, விடுத்தார்வேட்கையே. அ

இருவர்க்கெரியாய, உருவமருதரைப்
1033 பரவியேத்துவார், மருவிவாழ்வரே. கூ

நின்றுண்சமண்தேரர், என்றுமருதரை
1034 அன்றியுரைசொல்ல, நன்றுமொழியாரே. க0

கருதுசம்பந்தன், மருதரடிபாடிப்
1035 பெரிதுந்தமிழ்சொல்லப், பொருதவினைபோமே. கக

96 மன்னியூரிறை, சென்னியார்பிறை
1036 அன்னியூரமர், மன்னுசோதியே. க

பழகுந்தொண்டர்வம், அழகனன்னியூர்க்
1037 குழகன்சேவடி, தொழுதுவாழ்மினே. உ

நீதிபேணுவீர், ஆதியன்னியூர்ச்
1038 சோதிநாமமே, ஓதியுய்ம்மினே. ந

பத்தராயினீர், அத்தரன்னியூர்ச்
1039 சித்தர்தாள்தொழ, முத்தராவரே. ச

நிறைவுவேண்டுவீர், அறவனன்னியூர்
1040 மறையுளான்கழற், குறவுசெய்ம்மினே. ரு

இன்பம்வேண்டுவீர், அன்பனன்னியூர்
1041 நன்பொனென்னுமின், உம்பராகவே. சா

அந்தணாளர்தம், தந்தையன்னியூர்
1042 எந்தையேயெனப், பந்தநீங்குமே. எ

தூர்த்தனைச்செற்ற, தீர்த்தனன்னியூர்
1043 ஆர்த்தமாஅடைந், தேத்திவாழ்மினே. அ

இருவர்நாடிய, அரவனன்னியூர்
1044 பரவுவார்விண்ணுக், கொருவராவரே. கூ

குண்டர்தேரருக், கண்டனன்னியூர்த்
1045 தொண்டுளார்வினை, விண்டுபோகுமே. க0

பூந்தராய்ப்பந்தன், ஆய்ந்தபாடலால்
1046 வேந்தனன்னியூர், சேர்ந்துவாழ்மினே. கக

97 எய்யாவென்றித்தானவரூர்மூன்றெரிசெய்த
மையார்கண்டன்மாதுமைவைகுந்திருமேனிச்
செய்யான்வெண்ணீறணிவான்றிகழ்பொற்பதிபோலும்
1047 பொய்யாநாவினந்தணர்வாழும்புறவம்மே. ௧

மாதோருபாலும்மாலோருபாலும்மகிழ்கின்ற
நாதனென்றேத்துநம்பரன்வைகுந்நகர்போலும்
மாதவிமேயவண்டிசைபாடமயிலாடப்
1048 போதலர்செம்பொன்புன்னைகொடுக்கும்புறவம்மே. ௨

வற்றாநதியும்மதியும்பொதியுஞ்சடைமேலே
புற்றாடரவின்படமாடவுமிப்புவனிக்கோர்
பற்றாயிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
1049 பொற்றாமரையின்பொய்கைநிலாவும்புறவம்மே. ௩

துன்னார்புரமும்பிரமன்சிரமுந்துணிசெய்து
மின்னார்சடைமேலரவும்மதியும்விளையாடப்
பன்னாளிடுமின்பலியென்றடைவார்பதிபோலும்
1050 பொன்னார்புரிநூலந்தணர்வாழும்புறவம்மே. ௪

தேவாஅரனேசரணென்றிமையோர்திசைதோறுங்
காவாயென்றுவந்தடையக்கார்விடமுண்டு
பாவார்மறையும்பயில்வோருறையும்பதிபோலும்
1051 பூவார்கோலச்சோலைசுலாவும்புறவம்மே. ௫

கற்றறிவெய்திக்காமன்முன்னாகும்முகவெல்லாம்
அற்றரனேநின்னடிசரணென்னுமடியோர்க்குப்
பற்றதுவாயபாசுபதன்சேர்பதியென்பர்
1052 பொற்றிகழ்மாடத்தொளிகள்நிலாவும்புறவம்மே. ௬

எண்டிசையோரஞ்சிடுவகைகார்சேர்வரையென்னக்
கொண்டெழுகோலமுகில்போற்பெரியகரிதன்னைப்
பண்டுரிசெய்தோன்பாவனைசெய்யும்பதியென்பர்
1053 புண்டரிகத்தோன்போன்மறையோர்சேர்புறவம்மே. ௭

பரக்குந்தொல்சீர்த்தேவர்கள்சேனைப்பௌவத்தைத்
துரக்குஞ்செந்தீப்போலமர்செய்யுந்தொழில்மேவும்
அரக்கன்திண்டோளழித்தானக்காலத்திற்
1054 புரக்கும்வேந்தன்சேர்தருமூதூர்புறவம்மே. ௮

மீத்திகழண்டந்தயனோடுமிகுமாலும்
மூர்த்தியைநாடிக்காணவொணாதுமுயல்விட்டாங்
கேத்தவெளிப்பாடெய்தியவன்றனிடமென்பர்
1055 பூத்திகழ்சோலைத்தென்றலுலாவும்புறவம்மே. ௯

வையகநீர்தீவாயுவும்விண்ணும்முதலானான்
மெய்யலதேரருண்டிலையென்றேநின்றேதங்
கையினிலுண்போர்காணவொணாதான்நகரென்பர்
1056 பொய்யகமில்லாப்பூசுரர்வாழும்புறவம்மே. ௰

பொன்னியல்மாடப்புரிசைநிலாவும்புறவத்து
மன்னியஈசன்சேவடிநாளும்பணிகின்ற
தன்னியல்பில்லாச்சண்பையர்கோன்சீர்ச்சம்பந்தன்
1057 இன்னிசையீரைந்தேத்தவல்லோர்கட்கிடர்போமே. ௧௧

98 நன்றுடையானைத்தீயதிலானைநரைவெள்ளே
றொன்றுடையானையுமையொருபாகமுடையானைச்
சென்றடையாததிருவுடையானைச்சிராப்பள்ளிக்
1058 குன்றுடையானைக்கூறவென்னுள்ளங்குளிருமே. ௧

கைம்மகவேந்திக்கடுவனொடூடிக்கழைபாய்வான்
செம்முகமந்திகருவரையேறுஞ்சிராப்பள்ளி
வெம்முகவேழத்தீருரிபோர்த்தவிகிர்தாநீ
1059 பைம்முகநாகம்மதியுடன்வைத்தல்பழியன்றே. ௨

மந்தம்முழவம்மழலைததும்பவரைநீழல்
செந்தண்புனமுஞ்சுனையுஞ்சூழ்ந்தசிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள்சடைமேலுடையார்விடையூரும்
1060 எந்தம்மடிகளடியார்க்கல்லலில்லையே. ௩

துறைமல்குசாரற்சுனைமல்குநீலத்திடைவைகிச்
சிறைமல்குவண்டுந்தும்பியும்பாடுஞ்சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன்கனலெரியாடுங்கடவுளெம்
1061 பிறைமல்குசென்னியுடையவனெங்கள்பெருமானே. ௪

கொலைவரையாதகொள்கையர்தங்கள்மதில்மூன்றும்
சிலைவரையாகச்செற்றனரேனுஞ்சிராப்பள்ளித்
தலைவரைநாளுந்தலைவரல்லாமையுரைப்பீர்காள்
1062 நிலைவரைநீலமுண்டதும்வெள்ளைநிறமாமே. ௫

வெய்யதண்சாரல்விரிநிறவேங்கைத்தண்போது
செய்யபொன்சேருஞ்சிராப்பள்ளிமேயசெல்வனர்
தையலோர்பாகமகிழ்வர்நஞ்சுண்பர்தலையோட்டில்
1063 ஐயமுங்கொள்வராரிவர்செய்கையறிவாரே. சு

வேயுயர்சாரற்கருவிரலூகம்விளையாடும்
சேயுயர்கோயிற்சிராப்பள்ளிமேயசெல்வனர்
பேயுயர்கொள்ளிகைவிளக்காகப்பெருமானர்
1064 தீயுகந்தாடல்திருக்குறிப்பாயிற்றாகாதே. எ

மலைமல்குதோளன்வலிகெடவூன்றிமலரோன்றன்
தலைகலனாகப்பலிதிரிந்துண்பர்பழியோரார்
சொலவலவேதஞ்சொலவலகீதஞ்சொல்லுங்கால்
1065 சிலவலபோலுஞ்சிராப்பள்ளிச்சேடர்செய்கையே. அ

அரப்பள்ளியானுமலருறைவானுமறியாமைக்
கரப்புள்ளிநாடிக்கண்டிலரேனுங்கல்சூழ்ந்த
சிரப்பள்ளிமேயவார்சடைச்செல்வர்மனைதோறும்
1066 இரப்புள்ளீருமைமபேதிலர்கண்டாலிகழாரே. கூ

நாணாதுடைநீத்தோர்களுங்கஞ்சிநாட்காலை
ஊணாப்பகலுண்டோதுவோர்களுரைக்குஞ்சொல்
பேணாதுறுசீர்பெறுதுமென்பீரெம்பெருமானர்
1067 சேணார்கோயில்சிராப்பள்ளிசென்றுசேர்மினே. கஂ

தேனயம்பாடுஞ்சிராப்பள்ளியானைத்திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங்கழுமலவூரிற்கவுணியன்
ஞானசம்பந்தன்நலமிகுபாடலிவைவல்லார்
1068 வானசம்பந்தத்தவரொடுமன்னிவாழ்வாரே. கக

99 வம்பார்குன்றம்நீடுயர்சாரல்வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக்கோலவண்டியாழ்செய்குற்றாலம்
அம்பால்நெய்யோடாடலமர்ந்தானலர்கொன்றை
1069 நம்பான்மேயநன்னகர்போலுநமரங்காள். க

பொடிகள்பூசித்தொண்டர்பின்செல்லப்புகழ்விம்மக்
கொடிகளோடுநாள்விழமல்குகுற்றாலம்
கடிகொள்கொன்றைகூவிளமாலைகாதல்செய்
1070 அடிகள்மேயநன்னகர்போலுமடியீர்காள். உ

செல்வமல்குசெண்பகம்வேங்கைசென்றேறிக்
கொல்லைமுல்லைமெல்லரும்பீனுங்குற்றாலம்
வில்லினொல்கமும்மதிலெய்துவினைபோக
1071 நல்குநம்பான்நன்னகர்போலுநமரங்காள். ௩

பக்கம்வாழைப்பாய்கனியோடுபலவின்றேன்
கொக்கின்கோட்டுப்பைங்கனிதூங்குங்குற்றாலம்
அக்கும்பாம்புமாமையும்பூண்டோரானமேலேந்தும்
1072 நக்கன்மேயநன்னகர்போலுநமரங்காள். ௪

மலையார்சாரல்மகவுடன்வந்தமடமந்தி
குலையார்வாழைத்தீங்கனிமாந்துங்குற்றாலம்
இலையார்சூலமேந்தியகையானெயிலெய்த
1073 சிலையான்மேயநன்னகர்போலுஞ்சிறுதொண்டீர். ௫

மைம்மாநீலக்கண்ணியர்சாரல்மணிவாரிக்
கொய்ம்மாவேனலுண்கிளியோப்புங்குற்றாலம்
கைம்மாவேழத்தீருரிபோர்த்தகடவுள்ளெம்
1074 பெம்மான்மேயநன்னகர்போலும்பெரியீர்காள். ௬

நீலநெய்தல்தண்சுனைசூழ்ந்தநீள்சோலைக்
கோலமஞ்ஞைபேடையொடாடுங்குற்றாலம்
காலன்றன்னைக்காலாற்காய்ந்தகடவுள்ளெம்
1075 சூலபாணிநன்னகர்போலுந்தொழுவீர்காள். ௭

போதும்பொன்னுமுந்தியருவிபுடைசூழக்
கூதன்மாரிநுண்டுளிதூங்குங்குற்றாலம்
மூதூரிலங்கைமுட்டியகோனைமிறைசெய்த
1076 நாதன்மேயநன்னகர்போலுநமரங்காள். ௮

அரவின்வாயின்முள்ளெயிறேய்ப்பஅரும்பீன்று
குரவம்பாவைமுருகமர்சோலைக்குற்றாலம்
பிரமன்னோடுமாலறியாதபெருமையெம்
1077 பரமன்மேயநன்னகர்போலும்பணிவீர்காள். ௯

பெருந்தண்சாரல்வாழ்சிறைவண்டுபெடைபுல்கிக்
குருந்தம்மேறிச்செவ்வழிபாடுங்குற்றாலம்
இருந்துண்தேரும்நின்றுண்சமணுமெடுத்தார்ப்ப
1078 அருந்தண்மேயநன்னகர்போலுமடியீர்காள். ௧௦

மாடவீதிவருபுனற்காழியார்மன்னன்
கோடலீன்றுகொழுமுனைகூம்புங்குற்றாலம்
நாடவல்லநற்றமிழ்ஞானசம்பந்தன்
1079 பாடல்பத்தும்பாடநம்பாவம்பறையுமே. கக

**100** நீடலர்சோதிவெண்பிறையோடுநிரைகொன்றை
சூடலனந்திச்சுடரெரியேந்திச்சுடுகானில்
ஆடலனஞ்சொலணியிழையாளையொருபாகம்
1080 பாடலன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. க

அங்கமோராறும்மருமறைநான்கும்மருள்செய்து
பொங்குவெண்ணூலும்பொடியணிமார்பிற்பொலிவித்துத்
திங்களும்பாம்புந்திகழ்சடைவைத்தோர்தேன்மொழி
1081 பங்கினன்மேயநன்னகர்போலும்பரங்குன்றே. உ

நீரிடங்கொண்டநிமிர்சடைதன்மேல்நிரைகொன்றை
சீரிடங்கொண்டஎம்மிறைபோலுஞ்சேய்தாய
ஓருடம்புள்ளேயுமையொருபாகமுடனாகிப்
1082 பாரிடம்பாடஇனிதுறைகோயில்பரங்குன்றே. ங

வளர்பூங்கோங்கமாதவியோடுமல்லிகைக்
குளிர்பூஞ்சாரல்வண்டறைசோலைப்பரங்குன்றம்
தளிர்போல்மேனித்தையல்நல்லாளோடொருபாகம்
1083 நளிர்பூங்கொன்றைசூடினன்மேயநகர்தானே. ச

பொன்னியல்கொன்றைபொறிகிளர்நாகம்புரிசடைத்
துன்னியசோதியாகியஈசன்தொன்மறை
பன்னியபாடலாடலன்மேயபரங்குன்றை
1084 உன்னியசிந்தையுடையவர்க்கில்லையுறுநோயே. ரு

கடைநெடுமாடக்கடியரண்மூன்றுங்கனல்மூழ்கத்
தொடைநவில்கின்றவில்லினனந்திச்சுடுகானில்
புடைநவில்பூதம்பாடநின்றாடும்பொருசூலப்
1085 படைநவில்வான்றன்நன்னகர்போலும்பரங்குன்றே. சு

அயிலுடைவேலோனனல்புல்குகையினம்பொன்றால்
எயில்படவெய்தஎம்மிறைமேயஇடம்போலும்
மயில்பெடைபுல்கிமாநடமாடும்வளர்சோலைப்
1086 பயில்பெடைவண்டுபாடலறாதபரங்குன்றே. எ

மைத்தகுமேனிவாளரக்கன்றன்மகுடங்கள்
பத்தினதிண்டோளிருபதுஞ்செற்றான்பரங்குன்றைச்
சித்தமதோன்றிச்செய்கழலுன்னிச்சிவனென்று
1087 நித்தலுமேத்தத்தொல்வினைநம்மேல்நில்லாவே. ௮

முந்தியிவ்வையந்தாவியமாலுமொய்யொளி
உந்தியில்வந்திங்கருமறையீந்தவுரவோனும்
சிந்தையினாலுந்தெரிவரிதாகித்திகழ்சோதி
1088 பந்தியலங்கைமங்கையொர்பங்கன்பரங்குன்றே. ௯

குண்டாய்முற்றுந்திரிவார்கூறைமெய்போர்த்து
மிண்டாய்மிண்டர்பேசியபேச்சுமெய்யல்ல
பண்டால்நீழல்மேவியஈசன்பரங்குன்றைத்
1089 தொண்டாயேத்தத்தொல்வினைநம்மேல்நில்லாவே. ௰

தடமலிபொய்கைச்சண்பைமன்ஞானசம்பந்தன்
படமலிநாகமரைக்கசைத்தான்றன்பரங்குன்றைத்
தொடைமலிபாடல்பத்தும்வல்லார்தந்துயர்போகி
1090 விடமலிகண்டனருள்பெறுந்தன்மைமிக்கோரே. ௧௧

**101** தண்ணார்திங்கட்பொங்கரவந்தாழ்புனல்சூடிப்
பெண்ணாணாயபேரருளாளன்பிரியாத
கண்ணார்கோயில்கைதொழுவோர்கட்கிடர்பாவம்
1091 நண்ணாவாகுந்நல்வினையாயநணுகும்மே. ௧

கந்தமர்சந்துங்காரகிலுந்தண்கதிர்முத்தும்
வந்தமர்தெண்ணீர்மண்ணிவளஞ்சேர்வயல்மண்டிக்
கொந்தலர்சோலைக்கோகிலமாடக்குளிர்வண்டு
1092 செந்திசைபாடுஞ்சீர்திகழ்கண்ணார்கோயிலே. ௨

பல்வியல்பாணிப்பாரிடமேத்தப்படுகானின்
எல்விநடஞ்செய்யீசனெம்மான்றன்னிடமென்பர்
கொல்லையின்முல்லைமல்லிகைமௌவற்கொடிபின்னிக்
1093 கல்வியலிஞ்சிமஞ்சமர்கண்ணார்கோயிலே. ௩

தருவளர்கானந்தங்கியதுங்கப்பெருவேழம்
மருவளர்கோதையஞ்சவுரித்துமறைநால்வர்க்
குருவளராலநீழலமர்ந்தீங்குறைசெய்தார்
1094 கருவளர்கண்ணார்கோயிலடைந்தோர்கற்றோரே. ௪

மறுமாணுருவாய்மற்றிணையின்றிவானோரைச்
செறுமாவலிபாற்சென்றுலகெல்லாமளவிட்ட
குறுமாணுருவன்தற்குறியாகக்கொண்டாடுங்
1095 கறுமாகண்டன்மேயதுகண்ணார்கோயிலே. ௫

விண்ணவருக்காய்வேலையுள்நஞ்சம்விருப்பாக
உண்ணவனைத்தேவர்க்கமுதீந்தெவ்வுலகிற்குங்
கண்ணவனைக்கண்ணார்திகழ்கோயிற்கனிதன்னை
1096 நண்ணவல்லோர்கட்கில்லைநமன்பால்நடலையே. ௬

முன்னொருகாலத்திந்திரனுற்றமுனிசாபம்
பின்னொருநாளவ்விண்ணவரேத்தப்பெயர்வெய்தித்
தன்னருளாற்கண்ணாயிரமீந்தோன்சார்பென்பர்
1097 கன்னியர்நாளுந்துன்னமர்கண்ணார்கோயிலே. ௭

பெருக்கெண்ணாதபேதையரக்கன்வரைக்கீழால்
நெருக்குண்ணாத்தன்னீள்கழல்நெஞ்சில்நினைந்தேத்த
முருக்குண்ணாதோர்மொய்கதிர்வாள்தேர்முன்னீந்த
1098 திருக்கண்ணாரென்பார்சிவலோகஞ்சேர்வாரே. ௮

செங்கமலப்போதிற்றிகழ்செல்வன்திருமாலும்
அங்கமலக்கண்ணோக்கரும்வண்ணத்தழலானான்
தங்கமலக்கண்ணார்திகழ்கோயில்தமதுள்ளம்
1099 அங்கமலத்தோடேத்திடஅண்டத்தமர்வாரே. ௯

தாறிடுபெண்ணைத்தட்டுடையாருந்தாமுண்ணுஞ்
சோறுடையார்சொல்தேறன்மின்வெண்ணூல்சேர்மார்பன்
ஏறுடையன்பரனென்பணிவானீள்சடைமேலோர்
1100 ஆறுடையண்ணல்சேர்வதுகண்ணார்கோயிலே. ௰

காமருகண்ணார்கோயிலுளானைக்கடல்சூழ்ந்த
பூமருசோலைப்பொன்னியல்மாடப்புகலிக்கோன்
நாமருதொன்மைத்தன்மையுள்ஞானசம்பந்தன்
1101 பாமருபாடல்பத்தும்வல்லார்மேற்பழிபோமே. ௧௧

**102** உரவார்கலையின்கவிதைப்புலவர்க்கோருநாளுங்
கரவாவண்கைக்கற்றவர்சேருங்கலிக்காழி
அரவாரரையாவவுணர்புரமூன்றெரிசெய்த
1102 சரவாஎன்பார்தத்துவஞானத்தலையாரே.

மொய்சேர்வண்டுண்மும்மதநால்வாய்முரண்வேழக்
கைபோல்வாழைகாய்க்குலையீனுங்கலிக்காழி
மைசேர்கண்டத்தெண்டோள்முக்கண்மறையோனே
1103 ஐயாவென்பார்க்கல்லல்களான அடையாவே. உ

இளகக்கமலத்தீன்களியங்குங்கழிசூழக்
களகப்புரிசைக்கவினார்சாருங்கலிக்காழி
அளகத்திருநன்னுதலிபங்கா அரனேயென்
1104 றுளகப்பாடுமடியார்க்குறுநோயடையாவே. ௩

எண்ணார்முத்தமீன்றுமரகதம்போற்காய்த்துக்
கண்ணார்கமுகுபவளம்பழுக்குங்கலிக்காழிப்
பெண்ணோர்பாகாபித்தாபிரானேயென்பார்க்கு
1105 நண்ணாவினைகள்நாடொறுமின்பந்நணுகும்மே. ௪

மழையார்சாரற்செம்புனல்வந்தங்கடிவருடக்
கழையார்கரும்புகண்வளர்சோலைக்கலிக்காழி
உழையார்கரவாவுமையாள்கணவாவொளிர்சங்கக்
1106 குழையாஎன்றுகூறவல்லார்கள் குணவோரே. ௫

குறியார்திரைகள்வரைகள்நின்றுங்கோட்டாறு
கறியார்கழிசம்பிரசங்கொடுக்குங்கலிக்காழி
வெறியார்கொன்றைச்சடையாவிடையாஎன்பாரை
1107 அறியாவினைகளருநோய்பாவம்மடையாவே. ௬, ௭

உலங்கொள்சங்கத்தார்கலியோதத்துதையுண்டு
கலங்கள்வந்துகார்வயலேறுங்கலிக்காழி
இலங்கைமன்னன்றன்னையிடர்கண்டருள்செய்த
1108 சலங்கொள்சென்னிமன்னாஎன்னத்தவமாமே. ௮

ஆவிக்கமலத்தன்னமியங்குங்கழிசூழக்
காவிக்கண்ணார்மங்கலமோவாக்கலிக்காழிப்
பூவிற்றோன்றும்புத்தேளொடுமாலவன்றானும்
1109 மேவிப்பரவுமரசேயென்னவினைபோமே. ௯

பலையார்மாடநீடுயரிஞ்சிமஞ்சாருங்
கலையார்மதியஞ்சேர்தருமந்தண்கலிக்காழித்
தலைவாசமணர்சாக்கியர்க்கென்றுமறிவொண்ணா
1110 நிலையாயென்னத்தொல்வினையாயநில்லாவே. ௧௦

வடிகொள்வாவிச்செங்கழுநீரிற்கொங்காடிக்
கடிகொடென்றன்முன்றினில்வைகுங்கலிக்காழி
அடிகள்தம்மையந்தமிழ்ஞானசம்பந்தன்
1111 படிகொள்பாடல்வல்லவர்தம்மேற்பழிபோமே. கக

103 தோடுடையானொருகாதிற்றூயகுழைதாழ
ஏடுடையான்றலைகலனாகஇரந்துண்ணும்
நாடுடையான்நள்ளிருளேமநடமாடுங்
1112 காடுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. க

கேணவல்லான்கேழல்வெண்கொம்புகுறளாமை
பூணவல்லான்புரிசடைமேலோர்புனல்கொன்றை
பேணவல்லான்பெண்மகள்தன்னையொருபாகம்
1113 காணவல்லான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. உ

தேனகத்தார்வண்டதுவுண்டதிகழ்கொன்றை
தானகத்தார்தண்மதிசூடித்தலைமேலோர்
வானகத்தார்வையகத்தார்கள்தொழுதேத்துங்
1114 கானகத்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. ங

துணையல்செய்தான்தூயவண்டியாழ்செய்சுடர்கொன்றை
பிணையல்செய்தான்பெண்ணினல்லாளையொருபாகம்
இணையல்செய்யாவிலங்கெயில்மூன்றுமெரியுண்ணக்
1115 கணையல்செய்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. ச

பையுடையபாம்பொடுநீறுபயில்கின்ற
மெய்யுடையான்வெண்பிறைசூடிவிரிகொன்றை
மையுடையமாமிடற்றண்ணல்மறிசேர்ந்த
1116 கையுடையான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. ரு

வெள்ளமெல்லாம்விரிசடைமேலோர்விரிகொன்றை
கொள்ளவல்லான்குரைகழலேத்துஞ்சிறுத்தொண்டர்
உள்ளமெல்லாமுள்கிநின்றாங்கேயுடனாடுங்
1117 கள்ளம்வல்லான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. சு, எ

ஆதல்செய்தானரக்கர்தங்கோனையருவரையின்
நோதல்செய்தான்நொடிவரையின்கண்விரலூன்றிப்
பேர்தல்செய்தான்பெண்மகள்தன்னோடொருபாகம்
1118. காதல்செய்தான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. அ

இடந்தபெம்மானேனமதாயுமனமாயும்
தொடர்ந்தபெம்மான்றூமதிசூடிவரையார்தம்
மடந்தைபெம்மான்வார்கழலோச்சிக்காலனைக்
1119 கடந்தபெம்மான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. ௬

தேயநின்றான்றிரிபுரங்கங்கைசடைமேலே
பாயநின்றான்பலர்புகழ்ந்தேத்தவுலகெல்லாம்
சாயநின்றான்வன்சமண்குண்டர்சாக்கியர்
1120 காயநின்றான்காதல்செய்கோயில்கழுக்குன்றே. ௧௦

கண்ணுதலான்காதல்செய்கோயில்கழுக்குன்றை
நண்ணியசீர்ஞானசம்பந்தன்றமிழ்மாலை
பண்ணியல்பாற்பாடியபத்துமிவைவல்லார்
1121 புண்ணியராய்விண்ணவரோடும்புகுவாரே. ௧௧

104 ஆடலரவசைத்தானருமாமறைதான்விரித்தான்கொன்றை
சூடியசெஞ்சடையான்சுடுகாடமர்ந்தபிரான்
ஏடவிழ்மாமலையாளொருபாகமமர்ந்தடியாரேத்த
1122 ஆடியஎம்மிறையூர்புகலிப்பதியாமே. ௧

ஏலமலிகுழலாரிசைபாடியெழுந்தருளாற்சென்று
சோலைமலிசுனையிற்குடைந்தாடித்துதிசெய்ய
ஆலைமலிபுகைபோயண்டர்வானத்தைமூடிநின்றுநல்ல
1123 மாலையதுசெய்யும்புகலிப்பதியாமே. ௨

ஆறணிசெஞ்சடையானழகார்புரமூன்றுமன்றுவேவ
நீறணியாகவைத்தநிமிர்புன்சடையெம்மிறைவன்
பாறணிவெண்டலையிற்பகலேபலியென்றுவந்துநின்ற
1124 வேறணிகோலத்தினான்விரும்பும்புகலியதே. ௩

வெள்ளமதுசடைமேற்கரந்தான்விரவார்புரங்கள்மூன்றுங்
கொள்ளஎரிமடுத்தான்குறைவின்றியுறைகோயில்
அள்ளல்விளைகழனியழகார்விரைத்தாமரைமேலன்னம்
1125 புள்ளினம்வைகியெழும்புகலிப்பதிதானே. ௪

சூடுமதிச்சடைமேற்சுரும்பார்மலர்க்கொன்றைதுன்றநட்டம்
ஆடுமமரர்பிரானழகாருமையோடுமுடன்
வேடபடநடந்தவிகிர்தன்குணம்பரவித்தொண்டர்
1126 பாடஇனிதுறையும்புகலிப்பதியாமே. ௫

மைந்தணிசோலையின்வாய்மதுப்பாய்வரிவண்டினங்கள்வந்து
நந்திசைபாடநடம்பயில்கின்றநம்பனிடம்
அந்திசெய்மந்திரத்தாலடியார்கள்பரவியெழவிரும்பும்
1127 புந்திசெய்நான்மறையோர்புகலிப்பதிதானே. ௬

மங்கையோர்கூறுகந்தமழுவாளன்வார்சடைமேற்றிங்கள்
கங்கைதனைக்கரந்தகறைக்கண்டன்கருதுமிடஞ்
செங்கயல்வார்கழனிதிகழும்புகலிதனைச்சென்றுதம்
1128 அங்கையினாற்றொழுவாரவலமறியாரே. ௭

வல்லியநுண்ணிடையாளுமையாள்விருப்பனவனண்ணும்
நல்லிடமென்றறியானலியும்விறலரக்கன்
பல்லொடுதோள்நெரியவிரலூன்றிப்பாடலுமேகைவாள்
1129 ஒல்லையருள்புரிந்தானுறையும்புகலியதே. ௮

தாதலர்தாமரைமேலயனுந்திருமாலுந்தேடி
ஓதியுங்காண்பரியவுமைகோனுறையுமிடம்
மாதவிவான்வகுளமலர்ந்தெங்கும்விரைதோயவாய்ந்த
1130 போதலர்சோலைகள்சூழ்புகலிப்பதிதானே. ௯

வெந்துவர்மேனியினார்விரிசோவணநீத்தார்சொல்லும்
அந்தரஞானமெல்லாமவையோர்பொருளென்னேல்
வந்தெதிரும்புரமூன்றெரித்தானுறைகோயில்வாய்ந்த
1131 புந்தியினார்பயிலும்புகலிப்பதிதானே. ௧௦

வேதமோர்கீதமுணர்வாணர்தொழுதேத்தமிகுவாசப்
போதனைப்போல்மறையோர்பயிலும்புகலிதன்னுள்
நாதனைஞானமிகுசம்பந்தன்தமிழ்மாலைநாவில்
1132 ஓதவல்லாருலகிலுறுநோய்களைவாரே. ௧௧

105 பாடலன்நான்மறையன்படிபட்டகோலத்தன்திங்கள்
சூடலன்மூவிலையசூலம்வலனேந்திக்
கூடலர்மூவெயிலும்மெரியுண்ணக்கூரெரிகொண்டெல்லி
1133 ஆடலனாதிரையனாரூரமர்ந்தானே. ௧

சோலையில்வண்டினங்கள்சுரும்போடிசைமுரலச்சூழ்ந்த
ஆலையின்வெம்புகைபோய்முகில்தோயுமாரூரில்
பாலொடுநெய்தயிரும்பயின்றாடும்பரமேட்டிபாதம்
1134 காலையுமாலையும்போய்ப்பணிதல்கருமமே. ௨

உள்ளமோரிச்சையினாலுகந்தேத்தித்தொழுமின்தொண்டீர்
கள்ளமொழிந்திடுமின்கரவாதிருபொழுதும் [மெய்யே
வெள்ளமோர்வார்சடைமேற்கரந்திட்டவெள்ளேற்றான்
1135 அள்ளலகன்கழனியாரூரடைவோமே. [மேய

வெந்துறுவெண்மழுவாட்படையான்மணிமிடற்றானரை
ஐந்தலையாடரவமசைத்தானணியாரூர்ப் [யின்
பைந்தளிர்க்கொன்றையந்தார்ப்பரமனடிபரவப்பாவம்
1136 நைந்தறும்வந்தணையுநாடொறும்நல்லனவே. ௪

வீடுபிறப்பெளிதாமதனைவினவுதிரேல்வெய்ய
காடிடமாகநின்றுகனலேந்திக்கைவீசி
ஆடுமவிர்சடையானவன்மேயஆரூரைச்சென்று
1137 பாடுதல்கைதொழுதல்பணிதல்கருமமே. ௫

கங்கையோர்வார்சடைமேற்கரந்தான்கிளிமழலைக்கேடில்
மங்கையோர்கூறுடையான்மறையான்மழுவேந்தும்
அங்கையினானடியேபரவியவன்மேயஆரூர்
1138 தங்கையினாற்றொழுவார்தடுமாற்றறுப்பாரே. ௬

நீறணிமேனியனாய்நிரம்பாமதிசூடிநீண்ட
ஆறணிவார்சடையானாரூரினிதமர்ந்தான்
சேறணிமாமலர்மேற்பிரமன்சிரமரிந்தசெங்கண்
1139 ஏறணிவெல்கொடியானவனெம்பெருமானே. ௭, ௮

வல்லியந்தோலுடையான்வளர்திங்கட்கண்ணியினான்வாய்த்த
நல்லியனான்முகத்தோன்தலையின்னறவேற்றான்
அல்லியங்கோதைதன்னையாகத்தமர்ந்தருளிஆரூர்ப்
1140 புல்லியபுண்ணியனைத்தொழுவாரும்புண்ணியரே. ௯

செந்துவராடையினாருடைவிட்டுநின்றுழல்வார்சொன்ன
இந்திரஞாலமொழிந்தின்புறவேண்டுதிரேல்
அந்தரமூவெயிலும்அரணம்மெரியூட்டிஆரூர்த்
1141 தந்திரமாவுடையானவனெந்தலைமையனே. ௧௦

நல்லபுனற்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்நல்ல
அல்லிமலர்க்கழனிஆரூரமர்ந்தானை
வல்லதோரிச்சையினால்வழிபாடிவைபத்தும்வாய்க்கச்
1142 சொல்லுதல்கேட்டல்வல்லார்துன்பந்துடைப்பாரே. ௧௧

106 மாறிலவுணரரணம்மவைமாயவோர்வெங்கணையாலன்று
நீறெழவெய்தவெங்கள் நிமலனிடம்வினவில்
தேறலிரும்பொழிலுந்திகழ்செங்கயல்பாய்வயலுஞ்சூழ்ந்த
1143 ஊறலமர்ந்தபிரானொலியார்கழலுள்குதுமே. ௧

மத்தமதக்கரியைமலையான்மகளஞ்சவன்றுகையால்
மெத்தவுரித்தவெங்கள்விமலன்விரும்புமிடம்
தொத்தலரும்பொழில்சூழ்வயல்சேர்ந்தொளிர்நீலநாளுந்நயனம்
1144 ஒத்தலருங்கழனித்திருவூறலையுள்குதுமே. ௨

ஏனமருப்பினொடுமெழிலாமையும்பூண்டழகார்நன்றும்
கானமர்மான்மறிக்கைக்கடவுள்கருதுமிடம்
வானமதிதடவும்வளர்சோலைகள்சூழ்ந்தழகார்நம்மை
1145 ஊனமறுத்தபிரான்திருவூறலையுள்குதுமே. ௩

நெய்யணிமூவிலைவேல்நிறைவெண்மழுவும்மனலுமன்று
கையணிகொள்கையினான்கடவுள்ளிடம்வினவில்
மையணிகண்மடவார்பலர்வந்திறைஞ்சமன்னிநம்மை
1146 உய்யும்வகைபுரிந்தான்திருவூறலையுள்குதுமே. ௪

எண்டிசையோர்மகிழஎழில்மாலையும்போனகமும்பண்டு
சண்டிதொழஅளித்தானவன்தாழுமிடம்வினவில்
கொண்டல்கள்தங்குபொழிற்குளிர்பொய்கைகள்சூழ்ந்துநஞ்சை
1147 உண்டபிரானமருந்திருவூறலையுள்குதுமே. ௫, ௬, ௭

கறுத்தமனத்தினொடுங்கடுங்காலன்வந்தெய்துதலுங்கலங்கி
மறுக்குறுமாணிக்கருளமகிழ்ந்தானிடம்வினவில்
செறுத்தெழுவாளரக்கன்சிரந்தோளுமெய்யுந்நெரிய அன்று
1148 ஒறுத்தருள்செய்தபிரான்திருவூறலையுள்குதுமே. ௮

நீரின்மிசைத்துயின்றோன்நிறைநான்முகனும்மறியாதன்று
தேரும்வகைநிமிர்ந்தானவன்சேருமிடம்வினவில்
பாரின்மிசையடியார்பலர்வந்திறைஞ்சமகிழ்ந்தாகம்
1149 ஊருமரவசைத்தான்திருவூறலையுள்குதுமே. ௯

பொன்னியல்சீவரத்தார்புளித்தட்டையர்மோட்டமணர்குண்டர்
என்னுமிவர்க்கருளாவீசனிடம்வினவில்
தென்னெனவண்டினங்கள்செறியார்பொழில்சூழ்ந்தழகார்தன்னை
1150 உன்னவினைகேடுப்பான்திருவூறலையுள்குதுமே. ௧௦

கோடவிரும்புறவிற்கொடிமாடக்கொச்சையர்மன்மெச்ச
ஓடுபுனற்சடைமேற்கரந்தான்றிருவூறல்
காடலரும்புகழான்மிகுஞானசம்பந்தன்சொன்னநல்ல
1151 பாடல்கள்பத்தும்வல்லார்பரலோகத்திருப்பாரே. ௧௧

**107** வெந்தவெண்ணீறணிந்துவிரிநூல்திகழ்மார்பினல்ல
பந்தணவும்விரலாளொருபாகமமர்ந்தருளிக்
கொந்தணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
1152 அந்தணனைத்தொழுவாரவலமறுப்பாரே. ௧

அலைமலிதண்புனலோடரவஞ்சடைக்கணிந்தாகம்
மலைமகள்கூறுடையான்மலையாரிளவாழைக்
குலைமலிதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
1153 தலைமகனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. ௨

பாலனநீறுபுனைதிகழ்மார்பிற்பல்வளைக்கைநல்ல
ஏலமலர்க்குழலாளொருபாகமமர்ந்தருளிக் [கும்
கோலமலர்ப்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மல்
1154 நீலநன்மாமிடற்றான்கழலேத்தல்நீதியே. ௩

வாருறுகொங்கைநல்லமடவாள்திகழ்மார்பில்நண்ணும்
காருறுகொன்றையொடுங்கதநாகம்பூண்டருளிச்
சீருறுமந்தணர்வாழ்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
1155 நீருறுசெஞ்சடையான்கழலேத்தல்நீதியே. ௪

பொன்றிகழாமையொடுபுரிநூல்திகழ்மார்பில்நல்ல
பன்றியின்கொம்பணிந்துபணைத்தோளியோர்பாகமாகக்
குன்றனமாளிகைசூழ்கொடிமாடச்செங்குன்றூர்வானில்
1156 மின்றிகழ்செஞ்சடையான்கழலேத்தல்மெய்ப்பொருளே.

ஓங்கியமூவிலைநற்சூலமொருகையன்சென்னி
தாங்கியகங்கையொடுமதியஞ்சடைக்கணிந்து
கோங்கணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்வாய்ந்த
1157 பாங்கனதாள்தொழுவார்வினையாயபற்றறுமே. ௬

நீடலர்கொன்றையொடுநிமிர்புன்சடைதாழவெள்ளை
வாடலுடைதலையிற்பலிகொள்ளும்வாழ்க்கையனுக்
கோடல்வளம்புறவிற்கொடிமாடச்செங்குன்றூர்நின்ற
1158 சேடனதாள்தொழுவார்வினையாயதேயுமே. ௭

மத்தநன்மாமலரும்மதியும்வளர்கொன்றையுடன்துன்று
தொத்தலர்செஞ்சடைமேல்துதையவுடன்சூடிக்
கொத்தலர்தண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்மேய
1159 தத்துவனைத்தொழுவார்தடுமாற்றறுப்பாரே. அ

செம்பொனின்மேனியனும்பிரமன்றிருமாலுந்தேடநின்ற
அம்பவளத்திரள்போலொளியாயஆதிபிரான் [மேய
கொம்பணவும்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்
1160 நம்பனதாள்தொழுவார்வினையாயநாசமே. கூ

போதியர்பிண்டியரென்றிவர்கள்புறங்கூறும்பொய்ந்நூல்
ஓதியகட்டுரைகேட்டுழல்வீர்வரிக்குயில்கள் [நின்ற
கோதியதண்பொழில்சூழ்கொடிமாடச்செங்குன்றூர்
1161 வேதியனைத்தொழநும்வினையானவீடுமே. க௦

அலைமலிதண்புனல்சூழ்ந்தழகார்புகலிந்நகர்பேணும்
தலைமகனாகிநின்றதமிழ்ஞானசம்பந்தன்
கொலைமலிமூவிலையான்கொடிமாடச்செங்குன்றூரேத்தும்
1162 நலமலிபாடல்வல்லார்வினையானநாசமே. கக

**108** மின்னியல்செஞ்சடைமேல்விளங்கும்மதிமத்தமொடுநல்ல
பொன்னியல்கொன்றையினான்புனல்சூடிப்பொற்பமரும்
அன்னமனநடையாளொருபாகத்தமர்ந்தருளிநாளும்
1163 பன்னியபாடலினானுறைகோயில்பாதாளே. க

நீடலர்கொன்றையொடுநிரம்பாமதிசூடிவெள்ளைத்
தோடமர்காதில்நல்லகுழையான்சுடுநீற்றான்
ஆடரவம்பெருகஅனலேந்திக்கைவீசிவேதம்
1164 பாடலினாலினியானுறைகோயில்பாதாளே. உ

நாகமும்வான்மதியுந்நலமல்குசெஞ்சடையான்சாமம்
போகநல்வில்வரையாற்புரமூன்றெரித்துகந்தான் [கூடப்
தோகைநன்மாமயில்போல்வளர்சாயல்தூமொழியைக்
1165 பாகமும்வைத்துகந்தானுறைகோயில்பாதாளே. ௩

அங்கமுநான்மறையுமருள்செய்தழகார்ந்தஅஞ்சொல்
மங்கையோர்கூறுடையான்மறையோனுறைகோயில்
செங்கயல்நின்றுகளுஞ்செறுவில்திகழ்கின்றசோதிப்
1166 பங்கயநின்றலரும்வயல்சூழ்ந்தபாதாளே. ச

பேய்பலவுந்நிலவப்பெருங்காடரங்காகவுன்னிநின்று
தீயொடுமான்மறியும்மழுவுந்திகழ்வித்துத்
தேய்பிறையும்மரவும்பொலிகொன்றைச்சடைதன்மேற்சேரப்
1167 பாய்புனலும்முடையானுறைகோயில்பாதாளே. ௫

கண்ணமர்நெற்றியினான்கமழ்கொன்றைச்சடைதன்மேல்நின்றும்
விண்ணியல்மாமதியும்முடன்வைத்தவன்விரும்பும்
பெண்ணமர்மேனியினான்பெருங்காடரங்காகஆடும்
1168 பண்ணியல்பாடலினானுறைகோயில்பாதாளே. ௬

விண்டலர்மத்தமொடுமிளிரும்இளநாகம்வன்னிதிகழ்
வண்டலர்கொன்றைநகுமதிபுல்குவார்சடையான்
விண்டவர்தம்புரமூன்றெரிசெய்துரைவேதநான்கும்மவை
1169 பண்டிசைபாடலினானுறைகோயில்பாதாளே. ௭

மல்கியநுண்ணிடையாளுமைநங்கைமறுகஅன்றுகையால்
தொல்லைமலையெடுத்தஅரக்கன்றலைதோள்நெரித்தான்
கொல்லைவிடையுகந்தான்குளிர்திங்கள்சடைக்கணிந்தோன்
1170 பல்லிசைபாடலினானுறைகோயில்பாதாளே. ௮

தாமரைமேலயனும்மரியுந்தமதாள்வினையால்தேடிக்
காமனைவீடுவித்தான்கழல்காண்பிலராயகன்றார்
பூமருவுங்குழலாளுமைநங்கைபொருந்தியிட்டநல்ல
1171 பாமருவுங்குணத்தானுறைகோயில்பாதாளே. ௯

காலையிலுண்பவருஞ்சமண்கையருங்கட்டுரைவிட்டன்
றாலவிடநுகர்ந்தானவன்றன்னடியேபரவி
மாலையில்வண்டினங்கள்மதுவுண்டிசைமுரலவாய்த்த
1172 பாலையாழ்ப்பாட்டுகந்தானுறைகோயில்பாதாளே. ௧௦

பன்மலர்வைகுபொழில்புடைசூழ்ந்தபாதாளைச்சேரப்
பொன்னியன்மாடமல்குபுகலிந்நகர்மன்னன்
தன்னொளிமிக்குயர்ந்ததமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
1173 இன்னிசைபத்தும்வல்லாரெழில்வானத்திருப்பாரே. ௧௧

**109** வாருறுவனமுலைமங்கைபங்கன்
நீருறுசடைமுடிவிமலனிடங்
காருறுகடிபொழில்சூழ்ந்தழகார்
1174 சீருறுவளவயற்சிரபுரமே. ௧

அங்கமொடருமறையருள்புரிந்தான்
திங்களொடரவணிதிகழ்முடியன்
மங்கையொடினிதுறைவளநகரஞ்
1175 செங்கயல்மிளிர்வயற்சிரபுரமே. உ

பரிந்தவன்பன்முடியமரர்க்காகித்
திரிந்தவர்புரமவைதீயின்வேவ
வரிந்தவெஞ்சிலைபிடித்தடுசரத்தைத்
1176 தெரிந்தவன்வளநகர்சிரபுரமே. ௩

நீறணிமேனியனீள்மதியோ
டாறணிசடையினனணியிழையோர்
கூறணிந்தினிதுறைகுளிர்நகரஞ்
1177 சேறணிவளவயற்சிரபுரமே. ௪

அருந்திறலவுணர்களரணழியச்
சரந்துரந்தெரிசெய்தசங்கரனூர்
குருந்தொடுகொடிவிடுமாதவிகள்
1178 திருந்தியபுறவணிசிரபுரமே. ௫

கலையவன்மறையவன்காற்றொடுதீ
மலையவன்விண்ணொடுமண்ணுமவன்
கொலையவன்கொடிமதில்கூட்டழித்த
1179 சிலையவன்வளநகர்சிரபுரமே. ௬

வானமர்மதியொடுமத்தஞ்சூடித்
தானவர்புரமெய்தசைவனிடங்
கானமர்மடமயில்பெடைபயிலுஞ்
1180 தேனமர்பொழிலணிசிரபுரமே. ௭

மறுத்தவர்திரிபுரமாய்ந்தழியக்
கறுத்தவன்காரரக்கன்முடிதோள்
இறுத்தவனிருஞ்சினக்காலனைமுன்
1181 செறுத்தவன்வளர்நகர்சிரபுரமே. ௮

வண்ணநன்மலருறைமறையவனுங்
கண்ணனுங்கழல்தொழக்கனலுருவாய்
விண்ணுறவோங்கியவிமலனிடந்
1182 திண்ணநன்மதிலணிசிரபுரமே. ௯

வெற்றரையுழல்பவர்விரிதுகிலார்
கற்றிலரறவுரைபுறனுரைக்கப்
பற்றலர்திரிபுரமூன்றும்வேவச்
1183 செற்றவன்வளநகர்சிரபுரமே. க0

அருமறைஞானசம்பந்தனந்தண்
சிரபுரநகருறைசிவனடியைப்
பரவியசெந்தமிழ்பத்தும்வல்லார்
1184 திருவொடுபுகழ்மல்குதேசினரே. கக

**110** மருந்தவன்வானவர்தானவர்க்கும்
பெருந்தகைபிறவினொடிறவுமானான்
அருந்தவமுனிவரொடால்நீழற்கீழ்
1185 இருந்தவன்வளநகரிடைமருதே. க

தோற்றவன்கேடவன்துணைமுலையாள்
கூற்றவன்கொல்புலித்தோலசைத்த
நீற்றவன்நிறைபுனல்நீள்சடைமேல்
1186 ஏற்றவன்வளநகரிடைமருதே. உ

படையுடைமழுவினன்பால்வெண்ணீற்றன்
நடைநவிலேற்றினன்ஞாலமெல்லாம்
உடைதலையிடுபலிகொண்டுழல்வான்
1187 இடைமருதினிதுறையெம்மிறையே. ௩

பணைமுலையுமையொருபங்கனொன்னார்
துணைமதில்மூன்றையுஞ்சுடரின்மூழ்கக்
கணைதுரந்தடுதிறற்காலற்செற்ற
1188 இணையிலிவளநகரிடைமருதே. ச

பொழிலவன்புயலவன்புயலியக்குந்
தொழிலவன்துயரவன்துயரகற்றுங்
கழலவன்கரியுரிபோர்த்துகந்த
1189 எழிலவன்வளநகரிடைமருதே. ரு

நிறையவன்புனலொடுமதியும்வைத்த
பொறையவன்புகழவன்புகழநின்ற
மறையவன்மறிகடல்நஞ்சையுண்ட
1190 இறையவன்வளநகரிடைமருதே. சு

நனிவளர்மதியொடுநாகம்வைத்த
பனிமலர்க்கொன்றையம்படர்சடையன்
முனிவரொடமரர்கள்முறைவணங்க
1191 இனிதுறைவளநகரிடைமருதே. எ

தருக்கின அரக்கன தாளுந்தோளும்
நெரித்தவன்நெடுங்கைமாமதகரியன்
றுரித்தவனொன்னலர்புரங்கள்மூன்றும்
1192 எரித்தவன்வளநகரிடைமருதே. அ

பெரியவன்பெண்ணினொடாணுமானான்
வரியரவணைமறிகடல்துயின்ற
கரியவனலரவன்காண்பரிய
1193 எரியவன்வளநகரிடைமருதே. கூ

சிந்தையில்சமணொடுதேரர்சொன்ன
புந்தியிலுரையவைபொருள்கொளாதே
அந்தணரோத்தினோடரவமோவா
1194 எந்தைதன்வளநகரிடைமருதே. கo

இலைமலிபொழிலிடைமருதிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
பலமிகுதமிழிவைபத்தும்வல்லார்
1195 உலகுறுபுகழினோடோங்குவரே. கக

**111** அருத்தனையறவனையமுதனைநீர்
விருத்தனைப்பாலனைவினவுதிரேல்
ஒருத்தனையல்லதிங்குலகமேத்தும்
1196 கருத்தவன்வளநகர்கடைமுடியே. க

திரைபொருதிருமுடிதிங்கள்விம்மும்
அரைபொருபுலியதளடிகளிடம்
திரையொடுநுரைபொருதெண்சுனைநீர்
1197 கரைபொருவளநகர்கடைமுடியே. உ

ஆலிளமதியினொடரவுகங்கை
கோலவெண்ணீற்றனைத்தொழுதிறைஞ்சி
ஏலநன்மலரொடுவிரைகமழும்
1198 காலனவளநகர்கடைமுடியே. ௩

கொய்யணிநறுமலர்க்கொன்றையந்தார்
மையணிமிடறுடைமறையவனூர்
பையணியரவொடுமான்மழுவாள்
1199 கையணிபவனிடங்கடைமுடியே. ௪

மறையவனுலகவன்மாயமவன்
பிறையவன்புனலவனனலுமவன்
இறையவனெனவுலகேத்துங்கண்டம்
1200 கறையவன்வளநகர்கடைமுடியே. ௫

படவரவேரல்குற்பல்வளைக்கை
மடவரலாளையொர்பாகம்வைத்துக்
குடதிசைமதியதுசூடுசென்னிக்
1201 கடவுள்தன்வளநகர்கடைமுடியே. ௬

பொடிபுல்குமார்பினிற்புரிபுல்குநூல்
அடிபுல்குபைங்கழலடிகளிடம்
கொடிபுல்குமலரொடுகுளிர்சுனைநீர்
1202 கடிபுல்குவளநகர்கடைமுடியே. ௭

நோதல்செய்தரக்கனைநோக்கழியச்
சாதல்செய்தவனடிசரணெனலும்
ஆதரவருள்செய்தஅடிகளவர்
1203 காதல்செய்வளநகர்கடைமுடியே. ௮

அடிமுடிகாண்கிலரோரிருவர்
புடைபுல்கியருளென்றுபோற்றிசைப்பச்
சடையிடைப்புனல்வைத்தசதுரனிடம்
1204 கடைமுடியதனயல்காவிரியே. ௯

மண்ணுதல்பறித்தலுமாயமிவை
எண்ணியகாலவையின்பமல்ல
ஒண்ணுதலுமையையொர்பாகம்வைத்த
1205 கண்ணுதல்வளநகர்கடைமுடியே. ௧0

பொன்திகழ்காவிரிப்பொருபுனல்சீர்
சென்றடைகடைமுடிச்சிவனடியை
நன்றுணர்ஞானசம்பந்தன்சொன்ன
1206 இன்தமிழிவைசொலஇன்பமாமே. ௧௧

**112** இன்குரலிசைகெழும்யாழ்முரலத்
தன்கரமருவியசதுரன்நகர்
பொன்கரைபொருபழங்காவிரியின்
1207 தென்கரைமருவியசிவபுரமே. க

அன்றடற்காலனைப்பாலனுக்காய்ப்
பொன்றிடவுதைசெய்தபுனிதன்நகர்
வென்றிகொளெயிற்றுவெண்பன்றிமுன்னாள்
1208 சென்றடிவீழ்தருசிவபுரமே. உ

மலைமகள்மறுகிடமதகரியைக்
கொலைமல்கவுரிசெய்தகுழகன்நகர்
அலைமல்குமரிசிலினதனயலே
1209 சிலைமல்குமதிளணிசிவபுரமே. ௩

மண்புனலனலொடுமாருதமும்
விண்புனைமருவியவிகிர்தன்நகர்
பண்புனைகுரல்வழிவண்டுகிண்டிச்
1210 செண்பகமலர்பொழிற்சிவபுரமே. ச

வீறுநன்குடையவள்மேனிபாகம்
கூறுநன்குடையவன்குளிர்நகர்தான்
நாறுநன்குரவிரிவண்டுகிண்டித்
1211 தேறலுண்டெழுதருசிவபுரமே. ரு

மாறெதிர்வருதிரிபுரமெரித்து
நீறதுவாக்கியநிமலன்நகர்
நாறுடைநடுபவருழவரொடும்
1212 சேறுடைவயலணிசிவபுரமே. சூ

ஆவிலைந்தமர்ந்தவனரிவையொடு
மேவிநன்கிருந்ததொர்வியன்நகர்தான்
பூவில்வண்டமர்தருபொய்கையன்னச்
1213 சேவல்தன்பெடைபுல்குசிவபுரமே. எ

எழில்மலையெடுத்தவல்லிராவணன்றன்
முழுவலியடக்கியமுதல்வன்நகர்
விழவினிலெடுத்தவெண்கொடிமிடைந்து
1214 செழுமுகிலடக்கும்வண்சிவபுரமே. அ

சங்களவியகையன்சதுர்முகனும்
அங்களவறிவரியவன்நகர்தான்
கங்குலும்பறவைகள்கமுகுதொறும்
1215 செங்கனிநுகர்தருசிவபுரமே. ௯

மண்டையிற்குண்டிகைமாசுதரும்
மிண்டரைவிலக்கியவிமலன்நகர்
பண்டமர்தருபழங்காவிரியின்
1216 தெண்டிரைபொருதெழுசிவபுரமே. ௧0

சிவனுறைதருசிவபுரநகரைக்
கவுணியர்குலபதிகாழியர்கோன்
தவமல்குதமிழிவைசொல்லவல்லார்
1217 நவமொடுசிவகதிநண்ணுவரே. ௧௧

113 எரித்தவன்முப்புரமெரியின்மூழ்கத்
தரித்தவன்கங்கையைத்தாழ்சடைமேல்
விரித்தவன்வேதங்கள்வேறுவேறு
1218 தெரித்தவனுறைவிடந்திருவல்லமே. ௧

தாயவனுலகுக்குத்தன்னொப்பிலாத்
தூயவன்தூமதிசூடியெல்லாம்
ஆயவனமரர்க்கும்முனிவர்கட்கும்
1219 சேயவனுறைவிடந்திருவல்லமே. ௨

பார்த்தவன்காமனைப்பண்பழியப்
போர்த்தவன்போதகத்தின்னுரிவை
ஆர்த்தவன்நான்முகன்தலையையன்று
1220 சேர்த்தவனுறைவிடந்திருவல்லமே. ௩

கொய்தவம்மலரடிகூடுவார்தம்
மைதவழ்திருமகள்வணங்கவைத்துப்
பெய்தவன்பெருமழையுலகமுய்யச்
1221 செய்தவனுறைவிடந்திருவல்லமே. ௪

சார்ந்தவர்க்கின்பங்கள்தழைக்கும்வண்ணம்
நேர்ந்தவன்நேரிழையோடுங்கூடித்
தேர்ந்தவர்தேடுவார்தேடச்செய்தே
1222 சேர்ந்தவனுறைவிடந்திருவல்லமே. ௫

பதைத்தெழுகாலனைப்பாதமொன்றால்
உதைத்தெழுமாமுனிக்குண்மைநின்று
விதிர்த்தெழுதக்கன்றன்வேள்வியன்று
1223 சிதைத்தவனுறைவிடந்திருவல்லமே. சு, எ

இகழ்ந்தருவரையினையெடுக்கலுற்றாங்
ககழ்ந்தவல்லரக்கனையடர்த்தபாதம்
நிகழ்ந்தவர்நேடுவார்நேடச்செய்தே
1224 திகழ்ந்தவனுறைவிடந்திருவல்லமே. அ

பெரியவன்சிறியவர்சிந்தைசெய்ய
அரியவனருமறையங்கமானான்
கரியவன்நான்முகன்காணவொண்ணாத்
1225 தெரியவன்வளநகர்திருவல்லமே. கூ

அன்றிய அமணர்கள்சாக்கியர்கள்
குன்றிய அறவுரைகூறுவண்ணம்
வென்றவன்புலனைந்தும்விளங்களங்கும்
1226 சென்றவனுறைவிடந்திருவல்லமே. கo

கற்றவர்திருவல்லங்கண்டுசென்று
நற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
குற்றமில்செந்தமிழ்கூறவல்லார்
1227 பற்றுவரீசன்பொற்பாதங்களே. கக

114 குருந்தவன்குருகவன்கூர்மையவன்
பெருந்தகைபெண்ணவனாணுமவன்
கருந்தடமலர்க்கண்ணிகாதல்செய்யும்
1228 மருந்தவன்வளநகர்மாற்பேறே. க

பாறணிவெண்டலைகையிலேந்தி
வேறணிபலிகொளும்வேட்கையனாய்
நீறணிந்துமையொருபாகம்வைத்த
1229 மாறிலிவளநகர்மாற்பேறே. உ

கருவுடையாருலகங்கள்வேவச்
செருவிடையேறியுஞ்சென்றுநின்
றுருவுடையாளுமையாளுந்தானும்
1230 மருவியவளநகர்மாற்பேறே. ந

தலையவன்தலையணிமாலைபூண்டு
கொலைநவில்கூற்றினைக்கொன்றுகந்தான்
கலைநவின்றான்கயிலாயமென்னும்
1231 மலையவன்வளநகர்மாற்பேறே. ௪

துறையவன்தொழிலவன்தொல்லுயிர்க்கும்
பிறையணிசடைமுடிப்பெண்ணோர்பாகன்
கறையணிமிடற்றண்ணல்காலற்செற்ற
1232 மறையவன்வளநகர்மாற்பேறே. ௫

பெண்ணினல்லாளையோர்பாகம்வைத்துக்
கண்ணினாற்காமனைக்காய்ந்தவன்றன்
விண்ணவர்தானவர்முனிவரொடு
1233 மண்ணவர்வணங்குநன்மாற்பேறே. ௬, ௭

தீதிலாமலையெடுத்தவ்வரக்கன்
நீதியால்வேதகீதங்கள்பட
ஆதியானாகிய அண்ணலெங்கள்
1234 மாதிதன்வளநகர்மாற்பேறே. ௮

செய்யதண்டாமரைக்கண்ணனொடும்
கொய்யணிநறுமலர்மேலயனும்
ஐயனன்சேவடியதனையுள்க
1235 மையல்செய்வளநகர்மாற்பேறே. ௯

குளித்துணாஅமணர்குண்டாக்கரென்றும்
களித்துநன்கழலடிகாணலுற்றார்
முளைத்தவெண்மதியினொடரவஞ்சென்னி
1236 வளைத்தவன்வளநகர்மாற்பேறே. ௧௦

அந்தமில்ஞானசம்பந்தன்நல்ல
செந்திசைபாடல்செய்மாற்பேற்றைச்
சந்தமின்றமிழ்கள்கொண்டேத்தவல்லார்
1237 எந்தைதன்கழலடியெய்துவரே. ௧௧

**115** சங்கொளிர்முன்கையர்தம்மிடையே
அங்கிடுபலிகொளுமவன்கோபப்
பொங்கரவாடலோன்புவனியோங்க
1238 எங்குமனிராமனதீச்சரமே. ௧

சந்தநன்மலரணிதாழ்சடையன்
தந்தமதத்தவன்றாதையோதான்
அந்தமில்பாடலோனழகனல்ல
1239 எந்தவனிராமன தீச்சரமே. ௨

தழைமயிலேறவன்றாதையோதான்
மழைபொழிசடையவன்மன்னுகாதில்
குழையது இலங்கியகோலமார்பின்
1240 இழையவனிராமன தீச்சரமே. ௩

சத்தியுளாதியோர்தையல்பங்கன்
முத்தியதாகியமூர்த்தியோதான்
அத்தியகையினிலழகுசூலம்
1241 வைத்தவனிராமன தீச்சரமே. ௪

தாழ்ந்தகுழற்சடைமுடியதன்மேல்
தோய்ந்தஇளம்பிறைதுளங்குசென்னிப்
பாய்ந்தகங்கையொடுபடவரவம்
1242 ஏய்ந்தவனிராமன தீச்சரமே. ௫

சரிகுழலிலங்கியதையல்காணும்
பெரியவன்காளிதன்பெரியகூத்தை
அரியவனாடலோனங்கையேந்தும்
1243 எரியவனிராமன தீச்சரமே. ௬

மாறிலாமாதொருபங்கன்மேனி
நீறதுவாடலோனீள்சடைமேல்
ஆறதுசூடுவானழகன்விடை
1244 ஏறவனிராமன தீச்சரமே. ௭

தடவரையரக்கனைத்தலைநெரித்தோன்
படவரவாட்டியபடர்சடையன்
நடமதுவாடலானான்மறைக்கும்
1245 இடமவனிராமன தீச்சரமே. ௮

தனமணிதையல்தன்பாகன்றன்னை
அனமணியயனணிமுடியுங்காணான்
பனமணி அரவரிபாதங்காணான்
1246 இனமணியிராமன தீச்சரமே. ௯

தறிபோலாஞ்சமணர்சாக்கியர்சொற்கொளேல்
அறிவோரானுமமறிந்துரைமின்
மறிகையோன்றன்முடிமணியார்கங்கை
1247 எறிபவனிராமனதீச்சரமே. க0

தேன்மலர்க்கொன்றையோன்* *
* * * *
* * * *
1248 * * முந்தமக்கூனமன்றே. கக

116 அவ்வினைக்கிவ்வினையாமென்றுசொல்லுமஃதறிவீர்
உய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே
கைவினைசெய்தெம்பிரான்கழல்போற்றுதும்நாமடியோம்
1249 செய்வினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். க

காவினையிட்டுங்குளம்பலதொட்டுங்கனிமனத்தால்
ஏவினையாலெயில்மூன்றெரித்தீரென்றிருபொழுதும்
பூவினைக்கொய்துமலரடிபோற்றுதும்நாமடியோம்
1250 தீவினைவந்தெமைத்தீண்டப்பெறாதிருநீலகண்டம். உ

மூலைத்தடமூழ்கியபோகங்களுமற்றெவையுமெல்லாம்
விலைத்தலையாவணங்கொண்டெமையாண்டவிரிசடையீர்
இலைத்தலைச்சூலமுந்தண்டுமழுவுமிவையுடையீர்
1251 சிலைத்தெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௩

விண்ணுலகாள்கின்றவிச்சாதரர்களும்வேதியரும்
புண்ணியரென்றிருபோதுந்தொழப்படும்புண்ணியரே
கண்ணிமையாதனமூன்றுடையீருங்கழலடைந்தோம்
1252 திண்ணியதீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ச

மற்றிணையில்லாமலைதிரண்டன்னதிண்டோளுடையீர்
கிற்றெமையாட்கொண்டுகேளாதொழிவதுந்தன்மைகொல்லோ
சொற்றுணைவாழ்க்கைதுறந்துந்திருவடியேயடைந்தோம்
1253 செற்றெமைத்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ரு

மறக்குமனத்தினைமாற்றியெம்மாவியைவற்புறுத்திப்
பிறப்பில்பெருமான்றிருந்தடிக்கீழ்ப்பிழையாதவண்ணம்
பறித்தமலர்கொடுவந்துமையேத்தும்பணியடியோம்
1254 சிறப்பிலித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். சு, எ

கருவைக்கழித்திட்டுவாழ்க்கைகடிந்துங்கழலடிக்கே
உருகிமலர்கொடுவந்துமையேத்துதுநாமடியோம்
செருவிலரக்கனைச்சீரிலடர்த்தருள்செய்தவரே
1255 திருவிலித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௮

நாற்றமலர்மிசைநான்முகன்நாரணன்வாதுசெய்து
தோற்றமுடைய அடியுமுடியுந்தொடர்வரியீர்
தோற்றினுந்தோற்றுந்தொழுதுவணங்குதும்நாமடியோம்
1256 சீற்றமதாம்வினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௯

சாக்கியப்பட்டுஞ்சமணுருவாகியுடையொழிந்தும்
பாக்கியமின்றியிருதலைப்போகமும்பற்றும்விட்டார்
பூக்கமழ்கொன்றைப்புரிசடையீரடிபோற்றுகின்றோம்
1257 தீக்குழித்தீவினைதீண்டப்பெறாதிருநீலகண்டம். ௧௦

பிறந்தபிறவியிற்பேணியெஞ்செல்வன்கழலடைவான்
இறந்தபிறவியுண்டாகிவிமையவர்கோனடிக்கண்
திறம்பயில்ஞானசம்பந்தனசெந்தமிழ்பத்தும்வல்லார்
1258 நிறைந்தவுலகினில்வானவர்கோனொடுங்கூடுவரே. ௧௧

**117** காடதணிகலங்காரரவம்பதிகாலதனில்
தோடதணிகுவர்சுந்தரக்காதினிற்றூச்சிலம்பர்
வேடதணிவர்விசயற்குருவம்வில்லுங்கொடுப்பர்
1259 பீடதணிமணிமாடப்பிரமபுரத்தாரே. ௧

கற்றைச்சடையதுகங்கணமுன்கையிற்றிங்கள்கங்கை
பற்றித்துமுப்புரம்பார்படைத்தோன்றலைசுட்டதுபண்
டெற்றித்துப்பாம்பையணிந்ததுகூற்றையெழில்விளங்கும்
1260 வெற்றிச்சிலைமதில்வேணுபுரத்தெங்கள்வேதியரே. ௨

கூவிளங்கையதுபேரிசடைமுடிக்கூட்டத்தது
தூவிளங்கும்பொடிப்பூண்டதுபூசிற்றுத்துத்திநாகம்
ஏவிளங்குந்நுதலாளையும்பாகமுரித்தனரின்
1261 பூவிளஞ்சோலைப்புகலியுள்மேவியபுண்ணியரே. ௩

உரித்ததுபாம்பையுடல்மிசையிட்டதோரொண்களிற்றை
எரித்ததொராமையையின்புறப்பூண்டதுமுப்புரத்தைச்
செருத்ததுசூலத்தையேந்திற்றுத்தக்கனைவேள்விபன்னூல்
1262 விரித்தவர்வாழ்தருவெங்குருவில்வீற்றிருந்த்வரே. ௪

கொட்டுவரக்கரையார்ப்பதுதக்கைகுறுந்தாளன
விட்டுவர்பூதங்கலப்பிலரின்புகழென்புலவின்
மட்டுவருந்தழல்சூடுவர்மத்தமுமேந்துவர்வான்
1263 தொட்டுவருங்கொடித்தோணிபுரத்துறைசுந்தரரே. ௫

சாத்துவர்பாசந்தடக்கையிலேந்துவர்கோவணந்தங்
கூத்தவர்கச்சுக்குலவிநின்றாடுவர்கொக்கிறகும்
பேர்த்தவர்பல்படைபேயவைசூடுவர்பேரெழிலார்
1264 பூத்தவர்கைதொழுபூந்தராய்மேவியபுண்ணியரே. ௬

காலதுகங்கைகற்றைச்சடையுள்ளாற்கழற்சிலம்பு
மாலதுவேந்தல்மழுவதுபாகம்வளர்கொழுங்கோட்
டாலதுவூர்வாடலேற்றிருப்பாணிமணிநீர்ச்
1265 சேலதுகண்ணியொர்பங்கர்சிரபுரமேயவரே. ௭

நெருப்புருவெள்விடைமேனியரேறுவர்நெற்றியின்கண்
மருப்புறுவன்கண்ணர்தாதையைக்காட்டுவர்மாமுருகன்
விருப்புறுபாம்புக்குமெய்த்தந்தையார்விறல்மாதவர்வாழ்
1266 பொருப்புறுமாளிகைத்தென்புறவத்தணிபுண்ணியரே. ௮

இலங்கைத்தலைவனையேந்திற்றிறுத்ததிரலையின்னாள்
கலங்கியகூற்றுயிர்பெற்றதுமாணிகுமைபெற்றது
கலங்கிளர்மொந்தையினாடுவர்கொட்டுவர்காட்டகத்துச்
1267 சலங்கிளர்வாழ்வயற்சண்பையுள்மேவியதத்துவரே. ௯

அடியிணைகண்டிலன்தாமரையோன்மால்முடிகண்டிலன்
கொடியணியும்புலியேறுகந்தேறுவர்தோலுடுப்பர்
பிடியணியுந்நடையாள்வெற்பிருப்பதோர்கூறுடையர்
1268 கடியணியும்பொழிற்காழியுள்மேயகறைக்கண்டரே. ௧௦

கையதுவெண்குழைகாததுசூலமமணர்புத்தர்
எய்துவர்தம்மையடியவரெய்தாரொரேனக்கொம்பு
மெய்திகழ்கோவணம்பூண்பதுடுப்பதுமேதகைய
1269 கொய்தலர்பூம்பொழிற்கொச்சையுள்மேவியகொற்றவரே.

கல்லுயர்கழுமலவிஞ்சியுள்மேவியகடவுள்தன்னை
நல்லுரைஞானசம்பந்தன்ஞாநத்தமிழ்நன்குணரச்
சொல்லிடல்கேட்டல்வல்லோர்தொல்லைவானவர்தங்களொடுஞ்
1270 செல்குவர்சீரருளாற்பெறலாஞ்சிவலோகமதே. ௧௧

118 சுடுமணியுமிழ்நாகஞ்சூழ்தரவரைக்கசைத்தான்
இடுமணியெழிலானையேறலனெருதேறி
விடமணிமிடறுடையான்மேவியநெடுங்கோட்டுப்
1271 படுமணிவிடுசுடரார்பருப்பதம்பரவுதுமே. க

நோய்புல்குதோல்திரையநரைவருநுகருடம்பில்
நீபுல்குதோற்றமெல்லாநினையுள்குமடநெஞ்சே
வாய்புல்குதோத்திரத்தால்வலஞ்செய்துதலைவணங்கிப்
1272 பாய்புலித்தோலுடையான்பருப்பதம்பரவுதுமே. உ

துனியுறுதுயர்தீரத்தோன்றியோர்நல்வினையால்
இனியுறுபயனாதலிரண்டுறமனம்வையேல்
கனியுறுமரமேறிக்கருமுசுக்கழையுகளும்
1273 பனியுறுகதிர்மதியான்பருப்பதம்பரவுதுமே. ௩

கொங்கணிநறுங்கொன்றைத்தொங்கலன்குளிர்சடையான்
எங்கள்நோயகலநின்றானெனவருளீசனிடம்
ஐங்கணைவரிசிலையானநங்கனையழகழித்த
1274 பைங்கண்வெள்ளேறுடையான்பருப்பதம்பரவுதுமே. ௪

துறைபலசுனைமூழ்கித்தூமலர்சுமந்தோடி
மறையொலிவாய்மொழியால்வானவர்மகிழ்ந்தேத்தச்
சிறையொலிகிளிபயிலுந்தேனினமொலியோவாப்
1275 பறைபடுவிளங்கருவிப்பருப்பதம்பரவுதுமே. ௫

சீர்கெழுசிறப்போவாச்செய்தவநெறிவேண்டில்
ஏர்கெழுமடநெஞ்சேயிரண்டுறமனம்வையேல்
கார்கெழுநறுங்கொன்றைக்கடவுளதிடம்வகையால்
1276 பார்கெழுபுகழோவாப்பருப்பதம்பரவுதுமே. ௬

புடைபுல்குபடர்கமலம்புகையொடுவிரைகமழத்
தொடைபுல்குநறுமாலைதிருமுடிமிசையேற
விடைபுல்குகொடியேந்திவெந்தவெண்ணீறணிவான்
1277 படைபுல்குமழுவாளன்பருப்பதம்பரவுதுமே. ௭

நினைப்பெனுநெடுங்கிணற்றைநின்றுநின்றயராதே
மனத்தினைவலித்தொழிந்தேனவலம்வந்தடையாமைக்
கனைத்தெழுதிரள்கங்கைகமழ்சடைக்கரந்தான்றன்
1278 பனைத்திரள்பாயருவிப்பருப்பதம்பரவுதுமே. ௮

மருவியவல்வினைநோயவலம்வந்தடையாமல்
திருவுருவமர்ந்தானுந்திசைமுகமுடையானும்
இருவருமறியாமையெழுந்ததோரெரிநடுவே
1279 பருவரையுறநிமிர்ந்தான்பருப்பதம்பரவுதுமே. ௯

சடங்கொண்டசாத்திரத்தார்சாக்கியர்சமண்குண்டர்
மடங்கொண்டவிரும்பியராய்மயங்கியோர்பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டுநீர்க்குச்செல்வார்போதுமின்குஞ்சரத்தின்
1280 படங்கொண்டபோர்வையினான்பருப்பதம்பரவுதுமே. ௧0

வெண்செநெல்விளைகழனிவிழவொலிகழுமலத்தான்
பண்செலப்பலபாடலிசைமுரல்பருப்பதத்தை
நன்சொலினாற்பரவுஞானசம்பந்தன்நல்ல
1281 ஒண்சொலினிவைமாலையுருவெணத்தவமாமே. ௧௧

119 முள்ளின்மேல்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூறைக்கொடிவிளைந்த
கள்ளில்மேயஅண்ணல்கழல்கள்நாளும்
1282 உள்ளுமேலுயர்வெய்தலொருதலையே. ௧

ஆடலான்பாடலானரவங்கள்பூண்டான்
ஓடலாற்கலனில்லானுறைபதியால்
காடலாற்கருதாதகள்ளில்மேயான்
1283 பாடெலாம்பெரியார்கள்பரசுவாரே. ௨

எண்ணார்மும்மதிலெய்தவிமையாமுக்கண்
பண்ணார்நான்மறைபாடும்பரமயோகி
கண்ணார்நீறணிமார்பன்கள்ளில்மேயான்
1284 பெண்ணாணும்பெருமானெம்பிஞ்ஞகனே. ௩

பிறைபெற்றசடையண்ணல்பெடைவண்டாலும்
நறைபெற்றவிரிகொன்றைத்தார்நயந்த
கறைபெற்றமிடற்றண்ணல்கள்ளில்மேயான்
1285 நிறைபெற்றஅடியார்கள்நெஞ்சுளானே. ௪

விரையாலுமலராலும்விழுமைகுன்றா
உரையாலுமெதிர்கொள்ளவூாரம்மாக்
கரையார்பொன்புனல்வேலிக்கள்ளில்மேயான்
1286 அரையார்வெண்கோவணத்தவண்ணல்தானே. ௫

நலனுயபலிகொள்கைநம்பான்நல்ல
வலனுயமழுவாளும்வேலும்வல்லான்
கலனுயதலையோட்டான்கள்ளில்மேயான்
1287 மலனுயதீர்த்தேய்துமாதவத்தோர்க்கே. சு

பொடியார்மெய்பூசினும்புறவின்நறவம்
குடியாவூர்திரியினுங்கூப்பிடினும்
கடியார்பூம்பொழிற்சோலைக்கள்ளில்மேயான்
1288 அடியார்பண்பிகழ்வார்களாதர்களே. எ

திருநீலமலரொண்கண்தேவிபாகம்
புரிநூலுந்திருநீறும்புல்குமார்பில்
கருநீலமலர்விம்முகள்ளிலென்றும்
1289 பெருநீலமிடற்றண்ணல்பேணுவதே. அ

வரியாயமலரானும்வையந்தன்னை
உரிதாயஅளந்தானுமுள்ளுதற்கங்
கரியானுமறியாதகள்ளில்மேயான்
1290 பெரியானென்றறிவார்கள்பேசுவாரே. கூ

ஆச்சியப்பேய்களோடமணர்குண்டர்
பேச்சிவைநெறியல்லபேணுமின்கள்
மாச்செய்தவளவயல்மல்குகள்ளில்
1291 தீச்செய்தசடையண்ணல்திருந்தடியே. கo

திகைநான்கும்புகழ்காழிச்செல்வமல்கு
பகல்போலும்பேரொளியான்பந்தன்நல்ல
முகைமேவுமுதிர்சடையான்கள்ளிலேத்தப்
1292 புகழோடும்பேரின்பம்புகுதுமன்றே. கக

**120** பணிந்தவரருவினைபற்றறுத்தருள்செயத்
துணிந்தவன்றோலொடுநூல்துதைமார்பினில்
பிணிந்தவனரவொடுபேரெழிலாமைகொண்
1293 டணிந்தவன்வளநகரந்தணையாறே. க

கீர்த்திமிக்கவனகர்கிளரொளியுடனடப்
பார்த்தவன்பனிமதிபடர்சடைவைத்துப்
போர்த்தவன்கரியுரிபுலியதளரவரை
1294 ஆர்த்தவன்வளநகரந்தணையாறே. உ

வரிந்தவெஞ்சிலைபிடித்தவுணர்தம்வளநகர்
எரிந்தறவெய்தவனெழில்திகழ்மலர்மேல்
இருந்தவன்சிரமதுஇமையவர்குறைகொள
1295 அரிந்தவன்வளநகரந்தணையாறே. ௩

வாய்ந்தவல்லவுணர்தம்வளநகரெரியிடை
மாய்ந்தறவெய்தவன்வளர்பிறைவிரிபுனல்
தோய்ந்தெழுசடையினன்றொன்மறையாறங்கம்
1296 ஆய்ந்தவன்வளநகரந்தணையாறே. ௪

வானமர்மதிபுல்குசடையிடையரவொடு
தேனமர்கொன்றையன்திகழ்தருமார்பினன்
மானனமென்விழிமங்கையொர்பாகமும்
1297 ஆனவன்வளநகரந்தணையாறே. ௫

முன்பனைமுனிவரோடமரர்கள்தொழுதெழும்
இன்பனையிணையிலவிறைவனையெழில்திகழ்
என்பொனையேதமில்வேதியர்தாந்தொழும்
1298 அன்பனவளநகரந்தணையாறே. ௬

வன்றிறலவுணர்தம்வளநகரெரியிடை
வெந்தறவெய்தவன்விளங்கியமார்பினில்
பந்தமர்மெல்விரல்பாகமதாகிதன்
1299 அந்தமில்வளநகரந்தணையாறே. ௭

விடைத்தவல்லரக்கனல்வெற்பினையெடுத்தலும்
அடித்தலத்தாலிறையூன்றிமற்றவனது
முடித்தலைதோளவைநெரிதாமுறைமுறை
1300 அடர்த்தவன்வளநகரந்தணையாறே. ௮

விண்ணவர்தம்மொடுவெங்கதிரோனல
எண்ணிலிதேவர்களிந்திரன்வழிபடக்
கண்ணனும்பிரமனுங்காண்பரிதாகிய
1301 அண்ணல்தன்வளநகரந்தணையாறே. ௯

மருளுடைமனத்துவன்சமணர்கள்மாசரு
இருளுடையிணைத்துவர்ப்போர்வையினர்களும்
தெருளுடைமனத்தவர்தேறுமின்திண்ணமா
1302 அருளுடையடிகள்தமந்தணையாறே. ௧0

நலமலிஞானசம்பந்தனதின்றமிழ்
அலைமலிபுனல்மல்குமந்தணையாற்றினைக்
கலைமலிதமிழிவைகற்றுவல்லார்மிக
1303 நலமலிபுகழ்மிகுநன்மையர்தாமே. கக

**121** நடைமருதிரிபுரமெரியுணநகைசெய்த
படைமருதழலெழமழுவலபகவன்
புடைமருதிளமுகில்வளமமர்பொதுளிய
1304 இடைமருதடையநம்மிடர்கெடலெளிதே. க

மழைநுழைமதியமொடழிதலைமடமஞ்ஞை
கழைநுழைபுனல்பெய்தகமழ்சடைமுடியன்
குழைநுழைதிகழ்செவியழகொடுமிளிர்வதோர்
1305 இழைநுழைபுரியணலிடமிடைமருதே. உ

அருமையனெளிமையனழல்விடமிடறினன்
கருமையினொளிபெறுகமழ்சடைமுடியன்
பெருமையன்சிறுமையன்பிணைபெணொடொருமையின்
1306 இருமையுமுடையணலிடமிடைமருதே. ௩

பொரிபடுமுதுகுறமுளிகளிபுடைபுல்கு
நரிவளர்சுடலையுள்நடமெனநவில்வோன்
வரிவளர்குளிர்மதியொளிபெறமிளிர்வதோர்
1307 எரிவளர்சடையணலிடமிடைமருதே. ௪

வருநலமயிலனமடநடைமலைமகள்
பெருநலமுலையிணைபிணைசெய்தபெருமான்
செருநலமதிலெய்தசிவனுறைசெழுநகர்
1308 இருநலபுகழ்மல்குமிடமிடைமருதே. ௫

கலையுடைவிரிதுகில்கமழ்குழலகில்புகை
மலையுடைமடமகள்தனையிடமுடையோன்
விலையுடையணிகலனிலனெனமழுவினொ
1309 டிலையுடைபடையவனிடமிடைமருதே. ௬

வளமெனவளர்வனவரிமுரல்பறவைகள்
இளமணலணைகரையிசைசெயுமிடைமரு
துளமெனநினைபவரொலிகழலிணையடி
1310 குளமணலுறமூழ்கிவழிபடல்குணமே. ௭

மறையவனுலகவன்மதியவன்மதிபுல்கு
துறையவனெனவலவடியவர்துயரிலர்
கறையவன்மிடறதுகனல்செய்தகமழ்சடை
1311 இறையவனுறைதருமிடமிடைமருதே. அ

மருதிடைநடவியமணிவணர்பிரமரும்
இருதுடையகலமொடிகலினரினதெனக்
கருதிடலரியதொருருவொடுபெரியதொர்
1312 எருதுடையடிகள்தமிடமிடைமருதே. கூ

துவருறுவிரிதுகிலுடையருமமணரும்
அவருறுசிறுசொலைநயவன்மினிடுமணல்
கவருறுபுனலிடைமருதுகைதொழுதெழும்
1313 அவருறுவினைகெடலணுகுதல்குணமே. க0

தடமலிபுகலியர்தமிழ்கெழுவிரகினன்
இடமலிபொழிலிடைமருதினையிசைசெய்த
படமலிதமிழிவைபரவவல்லவர்வினை
1314 கெடமலிபுகழொடுகிளரொளியினரே. கக

122 விரிதருபுலியுரிவிரவியஅரையினர்
திரிதருமெயிலவைபுனைகணையினிலெய்த
எரிதருசடையினரிடைமருதடைவுனல்
1315 புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. க

மறிதிரைபடுகடல்விடமடைமிடறினர்
எறிதிரைகரைபொருமிடைமருதெனுமவர்
செறிதிரைநரையொடுசெலவிலருலகினில்
1316 பிறிதிரைபெறுமுடல்பெறுகுவதரிதே. உ

சலசலசொரிபுனல்சடையினர்மலைமகள்
நிலவியவுடலினர்நிறைமறைமொழியினர்
இலரெனவிடுபலியவரிடைமருதினை
1317 வலமிடவுடல்நலிவிலதுளவினையே. ங

விடையினர்வெளியதொர்தலைகலனெனநனி
கடைகடைதொறுபலியிடுகெனமுடுகுவர்
இடைவிடலரியவரிடைமருதெனுநகர்
1318 உடையவரடியிணைதொழுவதெம்முயர்வே. ச

உரையருமுருவினருணர்வருவகையினர்
அரைபொருபுலியதளுடையினரதன்மிசை
இரைமருமரவினரிடைமருதெனவுளம்
1319 உரைகளதுடையவர்புகழ்மிகவுளதே. ரு

ஒழுகியபுனல்மதியரவமொடுறைதரும்
அழகியமுடியுடையடிகளதறைகழல்
எழிலினருறையிடைமருதினைமலர்கொடு
1320 தொழுதல்செய்தெழுமவர்துயருறவிலரே. சு

கலைமலிவிரலினர்கடியதொர்மழுவொடும்
நிலையினர்சலமகளுலவியசடையினர்
மலைமகள்முலையிணைமருவியவடிவினர்
1321 இலைமலிபடையவரிடமிடைமருதே. எ

செருவடையிலவலசெயல்செயத்திறலொடும்
அருவரையினிலொருபதுமுடிநெரிதர
இருவகைவிரனிறியவரிடைமருதது
1322 பரவுவாருவினையொருவுதல்பெரிதே. அ

அரியொடுமலரவனெனவிவரடிமுடி
தெரிவகையரியவர்திருவடிதொழுதெழ
எரிதருமுருவர்தமிடைமருதடைவுறல்
1323 புரிதருமனனவர்புகழ்மிகவுளதே. கூ

குடைமயிலினதழைமருவியவுருவினர்
உடைமருதுவரினர்பலசொலவுறவிலை
அடைமருதிருவினர்தொழுதெழுகழலவர்
1324 இடைமருதெனமனம்நினைவதுமெழிலே. க0

பொருகடலடைதருபுகலியர்தமிழொடு
விரகினன்விரிதருபொழிலிடைமருதினைப்
பரவியவொருபதுபயிலவல்லவரிடர்
1325 விரவிலர்வினையொடுவியனுலகுறவே. கக

123 பூவியல்புரிகுழல்வரிசிலைநிகர்நுதல்
ஏவியல்கணைபிணையெதிர்விழியுமையவள்
மேவியதிருவுருவுடையவன்விரைமலர்
1326 மாவியல்பொழில்வலிவலமுறையிறையே. க

இட்டமதமர்பொடியிசைதலினசைபெறு
பட்டவிர்பவளநன்மணியெனஅணிபெறு
விட்டொளிர்திருவுருவுடையவன்விரைமலர்
1327 மட்டமர்பொழில்வலிவலமுறையிறையே. ௨

உருமலிகடல்கடைவுழியுலகமருயிர்
வெருவுறுவகையெழுவிடம்வெளிமலையணி
கருமணிநிகர்களமுடையவன்மிடைதரு
1328 மருமலிபொழில்வலிவலமுறையிறையே. ௩

அனல்நிகர்சடையழலவியுறவெனவரு
புனல்நிகழ்வதுமதிநனைபொறியரவமும்
எனநினைவொடுவருமிதுமெலமுடிமிசை
1329 மனமுடையவர்வலிவலமுறையிறையே. ௪

பிடியதனுருவுமைகொளமிகுகரியது
வடிகொடுதனதடிவழிபடுமவரிடர்
கடிகணபதிவரவருளினன்மிகுகொடை
1330 வடிவினர்பயில்வலிவலமுறையிறையே. ௫

தரைமுதலுலகினிலுயிர்புணர்தகைமிக
விரைமலிகுழலுமையொடுவிரவதுசெய்து
நரைதிரைகெடுதகையதுஅருளினனெழில்
1331 வரைதிகழ்மதில்வலிவலமுறையிறையே. ௬

நலிதருதரைவரநடைவருமிடையவர்
பொலிதருமடவரலியர்மனையதுபுகு
பலிகொளவருபவனெழில்மிகுதொழில்வளர்
1332 வலிவருமதில்வலிவலமுறையிறையே. ௭

இரவணனிருபதுகரமெழில்மலைதனின்
இரவணநினைதரவவன்முடிபொடிசெய்து
இரவணமமர்பெயரருளினனகநெதி
1333 இரவணநிகர்வலிவலமுறையிறையே. ௮

தேனமர்தருமலரணைபவன்வலிமிகும்
ஏனமதாய்நிலமகழரியடிமுடி
தானணையாவுருவுடையவன்மிடைகொடி
1334 வானணைமதில்வலிவலமுறையிறையே. ௯

இலைமலிதரமிகுதுவருடையவர்களும்
நிலைமையிலுணலுடையவர்களுநினைவது
தொலைவிலிநெடுமறைதொடர்வகையுருவினன்
1335 மலைமலிமதில்வலிவலமுறையிறையே. ௧௦

மன்னியவலிவலநகருறையிறைவனை
இன்னியல்கழுமலநகரிறையெழில்மறை
தன்னியல்கலைவலதமிழ்விரகனதுரை
1336 உன்னியவொருபதுமுயர்பொருள்தருமே. ௧௧

124 அலர்மகள்மலிதரஅவனியில்நிகழ்பவர்
மலர்மலிகுழலுமைதனையிடமகிழ்பவர்
நலமலியுருவுடையவர்நகர்மிகுபுகழ்
1337 நிலமலிமிழலையைநினையவலவரே. ௧

இருநிலமிதன்மிசையெழில்பெறுமுருவினர்
கருமலிதருமிகுபுவிமுதலுலகினில்
இருளறுமதியினரிமையவர்தொழுதெழு
1338 நிருபமன்மிழலையைநினையவலவரே. ௨

கலைமகள்தலைமகனிவனெனவருபவர்
அலைமலிதருபுனலரவொடுநகுதலை
இலைமலியிதழியுமிசைதருசடையினர்
1339 நிலைமலிமிழலையைநினையவலவரே. ௩

மாடமர்சனமகிழ்தருமனமுடையவர்
காடமர்கழுதுகளவைமுழவொடுமிசை
பாடலினவில்பவர்மிகுதருமுலகினில்
1340 நீடமர்மிழலையைநினையவலவரே. ௪

புகழ்மகள்துணையினர்புரிகுழலுமைதனை
இகழ்வுசெய்தவனுடையெழின்மறைவழிவளர்
முகமதுசிதைதரமுனிவுசெய்தவன்மிகு
1341 நிகழ்தருமிழலையைநினையவலவரே. ௫

அன்றினரரியெனவருபவரரிதினில்
ஒன்றியதிரிபுரமொருநொடியினிலெரி
சென்றுகொள்வகைசிறுமுறுவல்கொடொளிபெற
1342 நின்றவன்மிழலையைநினையவலவரே. ௬

கரம்பயில்கொடையினர்கடிமலரயனதொர்
சிரம்பயில்வறவெறிசிவனுறைசெழுநகர்
வரம்பயில்கலைபலமறைமுறையறநெறி
1343 நிரம்பினர்மிழலையைநினையவலவரே. ௭

ஒருக்கியவுணர்வினொடொளிநெறிசெலுமவர்
அரக்கனன்மணிமுடியொருபதுமிருபது
கரக்கனநெரிதரமலரடிவிரல்கொடு
1344 நெருக்கினன்மிழலையைநினையவலவரே. ௮

அடியவர்குழுமிடஅவனியில்நிகழ்பவர்
கடிமலரயனரிகருதருவகைதழல்
வடிவுருவியல்பினொடுலகுகள்நிறைதரு
1345 நெடியவன்மிழலையைநினையவலவரே. ௯

மன்மதனெனவொளிபெறுமவர்மருதமர்
வன்மலர்துவருடையவர்களுமதியிலர்
துன்மதியமணர்கள்தொடர்வருமிகுபுகழ்
1346 நின்மலன்மிழலையைநினையவலவரே. ௧௦

நித்திலன்மிழலையைநிகரிலிபுகலியுள்
வித்தகமறைமலிதமிழ்விரகனமொழி
பத்தியில்வருவனபத்திவைபயில்வொடு
1347 கற்றுவல்லவருலகினிலடியவரே. ௧௧

125 கலைமலியகலல்குலரிவைதனுருவினன்
முலைமலிதருதிருவுருவமதுடையவன்
சிலைமலிமதில்பொதிசிவபுரநகர்தொழ
1348 இலைநலிவினையிருமையுமிடர்கெடுமே. ௧

படரொளிசடையினன்விடையினன்மதிலவை
சுடரெரிகொளுவியசிவனவனுறைபதி
திடவிடுபுனல்வயல்சிவபுரமடையநம்
1349 இடர்கெடுமுயர்கதிபெறுவதுதிடனே. ௨

வரைதிரிதரவரவகடழலெழவரு
நுரைதருகடல்விடநுகர்பவனெழில்திகழ்
திரைபொருபுனலரிசிலதடைசிவபுரம்
1350 உரைதருமடியவருயர்கதியினரே. ௩

துணிவுடையவர்சுடுபொடியினருடலடு
பிணியடைவிலர்பிறவியுமறவிசிறுவர்
தணிவுடையவர்பயில்சிவபுரமருவிய
1351 மணிமிடறனதடியிணைதொழுமவரே. ௪

மறையவன்மதியவன்மலையவன்நிலையவன்
நிறையவனுமையவள்மகிழ்நடநவில்பவன்
இறையவனிமையவர்பணிகொடுசிவபுரம்
1352 உறைவெனவுடையவனெமையுடையவனே. ௫

முதிர்சடையிளமதிநதிபுனல்பதிவுசெய்
ததிர்கழலொலிசெயவருநடநவில்பவன்
எதிர்பவர்புரமெய்தஇணையிலியணைபதி
1353 சதிர்பெறுமுளமுடையவர்சிவபுரமே. ௬

வடிவுடைமலைமகள்சலமகளுடனமர்
பொடிபடுமுழையதள்பொலிதிருவுருவினன்
செடிபடுபலிதிரிசிவனுறைசிவபுரம்
1354 அடைதருமடியவருவினையிலரே. ௭

கரமிருபதுமுடியொருபதுமுடையவன்
உரநெரிதரவரையடர்வுசெய்தவனுறை
பரனெனஅடியவர்பணிதருசிவபுர
1355 நகரதுபுகுதல்நம்முயர்கதியதுவே. ௮

அன்றியலுருவுகொளரியயனெனுமவர்
சென்றளவிடலரியவனுறைசிவபுரம்
என்றிருபொழுதுமுன்வழிபடுமவர்துயர்
1356 ஒன்றிலர்புகழொடுமுடையரிவ்வுலகே. ௯

புத்தரொடமணர்களறவுரைபுறவுரை
வித்தகமொழிகிலவிடையுடையடிகள்தம்
இத்தவமுயல்வுறிலிறைவனசிவபுரம்
1357 மெய்த்தகவழிபடல்விழுமியகுணமே. ௧௦

புந்தியர்மறைநவில்புகலிமன்ஞானசம்
பந்தனதமிழ்கொடுசிவபுரநகருறை
எந்தையையுரைசெய்தவிசைமொழிபவர்வினை
1358 சிந்திமுனுறவுயர்கதிபெறுவர்களே. ௧௧

126 பந்தத்தால்வந்தெப்பால்பயின்றுநின்றவும்பரப்
பாலேசேர்வாயேனோர்கான்பயில்கணமுனிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப்பச்சிலம்பின்மங்கைதன்னொடுஞ்
சேர்வார்நாள்நாள்நீள்கயிலைத்திகழ்தருபரிசதெலாஞ்
சந்தித்தேயிந்தப்பார்சனங்கள்நின்றுதங்கணாற்
றூமேகாணாவாழ்வாரத்தகவுசெய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக்
1359 காடார்பூவார்சீர்மேவுங்கழுமலவளநகரே. க

பிச்சைக்கேயிச்சித்துப்பிசைந்தணிந்தவெண்பொடிப்
பீடார்நீடார்மாடாரும்பிறைநுதலரிவையொடும்
உச்சத்தானச்சிப்போல்தொடர்ந்தடர்ந்தவெங்கணே
றூராவூராநீள்வீதிப்பயில்வொடுமொலிசெயிசை
வச்சத்தானச்சுச்சேர்வடங்கொள்கொங்கைமங்கைமார்
வாராநேரேமாலாகும்வசிவலவவனதிடங்
கச்சத்தான்மெச்சிப்பூக்கலந்திலங்குவண்டினங்
1360 காரார்காரார்நீள்சோலைக்கழுமலவளநகரே. உ

திங்கட்கேதும்பைக்கேதிகழ்ந்திலங்குமத்தையின்
சேரேசேரேநீராகச்செறிதருசுரநதியோ
டங்கைச்சேர்வின்றிக்கேயடைந்துடைந்தவெண்டலைப்
பாலேமேலேமாலேயப்படர்வுறுமவனிறகும்
பொங்கப்பேர்நஞ்சைச்சேர்புயங்கமங்கள்கொன்றையின்
போதார்தாரேதாமேவிப்புரிதருசடையனிடங்
கங்கைக்கேயும்பொற்பார்கலந்துவந்தபொன்னியின்
1361 காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. ௩

அண்டத்தாலெண்டிக்குமமைந்தடங்குமண்டலத்
தாறேவேறேவானுள்வாரவரவரிடமதெலாம்
மண்டிப்போய்வென்றிப்போர்மலைந்தலைந்தவும்பரு
மாறேலாதார்தாமேவும்வலிமிகுபுரமெரிய
முண்டத்தேவெந்திட்டேமுடிந்திடிந்தஇஞ்சிசூழ்
மூவாமூதூர்மூதூராமுனிவுசெய்தவனதிடங்
கண்டிட்டேசெஞ்சொற்சேர்கவின்சிறந்தமந்திரக்
1362 காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே. ௪

திக்கிற்றேவற்றற்றேதிகழ்ந்திலங்குமண்டலச்
சீரூர்வீரூர்போரார்தாரகனுடலவனெதிரே
புக்கிட்டேவெட்டிட்டேபுகைந்தெழுந்தசண்டத்தீப்
போலேபூநீர்தீகான்மீப்புணர்தருமுயிர்கள்திறஞ்
சொக்கத்தேநிர்த்தத்தேதொடர்ந்தமங்கைசெங்கதத்
தோடேயாமேமாலோகத்துயர்களைபவனதிடங்
கைக்கப்பேர்யுக்கத்தேகனன்றுமிண்டுதண்டலைக்
1363 காடேயோடாவூரேசேர்கழுமலவளநகரே. ரு

செற்றிட்டேவெற்றிச்சேர்திகழ்ந்ததும்பிமொய்ம்புறுஞ்
சேரேவாராநீள்கோதைத்தெரியிழைபிடியதுவாய்
ஒற்றைச்சேர்முற்றற்கொம்புடைத்தடக்கைமுக்கண்மிக்
கோவாதேபாய்மாதானத்துறுபுகர்முகவிறையைப்
பெற்றிட்டேமற்றிப்பார்பெருத்துமிக்கதுக்கமும்
போராநோய்தாமேயாமைப்பிரிவுசெய்தவனதிடங்
கற்றிட்டேயெட்டெட்டுக்கலைத்துறைக்கரைச்செலக்
1364 காணாதாரேசேராமெய்க்கழுமலவளநகரே. சு

பத்திப்பேர்வித்திட்டேபரந்தஐம்புலன்கள்வாய்ப்
பாலேபோகாமேகாவாப்பகையறும்வகைநினையா
முத்திக்கேவிக்கத்தேமுடிக்குமுக்குணங்கள்வாய்
மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்ச்
சித்திக்கேயுய்த்திட்டுத்திகழ்ந்தமெய்ப்பரம்பொருள்
சேர்வார்தாமேதானாகச்செயுமவனுறையுமிடங்
கத்திட்டோர்சட்டங்கங்கலந்திலங்குநற்பொருள்
1365 காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே. எ

செம்பைச்சேரிஞ்சிச்சூழ்செறிந்திலங்குபைம்பொழிற்
சேரேவாராவாரீசத்திரையெறிநகரிறைவன்
இம்பர்க்கேதஞ்செய்திட்டிருந்தான்பயின்றவெற்
பேரார்பூநேரோர்பாதத்தெழில்விரலவணிறுவிட்
டம்பொற்பூண்வென்றித்தோளழிந்துவந்தனஞ்செய்தாற்
காரார்கூர்வாள்வாணாளன்றருள்புரிபவனதிடங்
கம்பத்தார்தும்பித்திண்கவுட்சொரிந்தமும்மதக்
1366 காரார்சேரூர்மாவீதிக்கழுமலவளநகரே. அ

பன்றிக்கோலங்கொண்டிப்படித்தடம்பயின்றிடப்
பானுமால்தானுமேயப்பறவையினுருவுகொள
ஒன்றிட்டேயம்புச்சேருயர்ந்தபங்கயத்தவ
னோதானோதானஃதுணராதுருவினதடிமுடியுஞ்
சென்றிட்டேவந்திப்பத்திருக்களங்கொள்பைங்கணின்
றேசால்வேறோராகாரந்தெரிவுசெய்தவனதிடம்
கன்றுக்கேமுன்றிற்கேகலந்திலங்கிறைக்கவுங்
1367 காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. கூ

தட்டிட்டேமுட்டிக்கைத்தடுக்கிடுக்கிநின்றுணத்
தாமேபேணாதேநாளுஞ்சமணொடுமுழல்பவரும்
இட்டத்தாலத்தந்தானிதன்றதென்றுநின்றவர்க்
கேயாமேவாயேதுச்சொலிலைமலிமருதம்பூப்
புட்டத்தேயட்டிட்டுப்புதைக்குமெய்க்கொள்புத்தரும்
போல்வார்தாமோராமேபோய்ப்புணர்வுசெய்தவனதி
கட்டிக்கால்வெட்டித்தீங்கரும்புதந்தபைம்புனற் [டங்
1368 காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. க0

கஞ்சத்தேனுண்டிட்டேகளித்துவண்டுசண்பகக்
கானேதேனேபோராருங்கழுமலநகரிறையைத்
தஞ்சைச்சார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத்துறை
தாமேபோல்வார்தேனேரார்தமிழ்விரகனமொழிகள்
எஞ்சத்தேய்வின்றிக்கேயிமைத்திசைத்தமைத்தகொண்
டேழேயேழேநாலேமூன்றியலிசையிசையியல்பா
வஞ்சத்தேய்வின்றிக்கேமனங்கொளப்பயிற்றுவோர்
1369 மார்பேசேர்வாள்வானோர்சீர்மதிநுதல்மடவரலே. கக

**127** பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
பிரமபுரத்துறைபெம்மானெம்மான்
1370 பிரமபுரத்துறைபெம்மானெம்மான். க

விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான்
1371 விண்டலர்பொழிலணிவேணுபுரத்தான். உ

புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
புண்டரிகத்தவன்மேவியபுகலியே
1372 புண்டரிகத்தவன்மேவியபுகலியே. ௩

விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன்
1373 விளங்கொளிதிகழ்தருவெங்குருமேவினன். ௪

சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன்
1374 சுடர்மணிமாளிகைத்தோணிபுரத்தவன். ௫

பூசுரர்சேர்பூந்தாரயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தாரயவன்பொன்னடி
பூசுரர்சேர்பூந்தாரயவன்பொன்னடி
1375 பூசுரர்சேர்பூந்தாரயவன்பொன்னடி. ௬

செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில்
1376 செருக்குவாய்ப்புடையான்சிரபுரமென்னில். ௭

பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன்
1377 பொன்னடிமாதவர்சேர்புறவத்தவன். ௮

தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
தசமுகனெரிதரவூன்றுசண்பையான்
1378 தசமுகனெரிதரவூன்றுசண்பையான். ௯

காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே
காழியானயனுள்ளவாகாண்பரே
1379 காழியானயனுள்ளவாகாண்பரே. ௧0

கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே
1380 கொச்சையண்ணலைக்கூடகிலாருடன்மூடரே. கக

கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
1381 கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை. கஉ

**128** ஓருருவாயினைமானாங்காரத்
ஈரியல்பாயொருவிண்முதல்பூதலம்
ஒன்றியவிருசுடரும்பர்கள்பிறவும்
படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை
இருவரோடொருவனாகிநின்றனை
ஓரால்நீழலுன்கழலிரண்டும்
முப்பொழுதேத்தியநால்வர்க்கொளிநெறி
காட்டினைநாட்டமூன்றாகக்கோட்டினை
இருநதிஅரவமோடொருமதிசூடினை
ஒருதாளீரயின்மூவிலைச்சூலம்
நாற்கால்மான்மறிஐந்தலையரவம்
ஏந்தினைகாய்ந்தநால்வாய்மும்மதத்
திருகோட்டொருகரியீடழித்துரித்தனை
ஒருதனுவிருகால்வளையவாங்கி
முப்புரத்தோடுநானிலமஞ்சக்
கொன்றுதலத்துறஅவுணரையறுத்தனை
ஐம்புலன்நாலாம்அந்தக்கரணம்
முக்குணமிருவளியொருங்கியவானோர்
ஏத்தநின்றனையொருங்கியமனத்தோ
டிருபிறப்போர்ந்துமுப்பொழுதுகுறைமுடித்து
நான்மறையோதிஐவகைவேள்வி
அமைத்தாறங்கமுதலெழுத்தோதி
வரன்முறைபயின்றெழுவான்றனைவளர்க்கும்
பிரமபுரம்பேணினை
அறுபதமுரலும்வேணுபுரம்விரும்பினை
இகலியமைந்துணர்புகலியமர்ந்தனை

பொங்குநாற்கடல்சூழ்வெங்குருவிளங்கினை
பாணிமூவுலகும்புதையமேல்மிதந்த
தோணிபுரத்துறைந்தனைதொலையாவிருநிதி
வாய்ந்தபூந்தராயேய்ந்தனை
வரபுரமென்றுணர்சிரபுரத்துறைந்தனை
ஒருமலையெடுத்தவிருதிறலரக்கன்
விறல்கெடுத்தருளினைபுறவம்புரிந்தனை
முந்நீர்த்துயின்றோன்நான்முகனறியாப்
பண்பொடுநின்றனைசண்பையமர்ந்தனை
ஐயுறுமமணருமறுவகைத்தேரும்
ஊழியுமுணராக்காழியமர்ந்தனை
எச்சனேழிசையோன்கொச்சையைமெச்சினை
ஆறுபதமுமைந்தமர்கல்வியும்
மறைமுதல்நான்கும்
மூன்றுகாலமுந்தோன்றநின்றனை
இருமையின்ஒருமையும்ஒருமையின்பெருமையும்
மறுவிலாமறையோர்
கழுமலமுதுபதிக்கவுணியன்கட்டுரை
கழுமலமுதுபதிக்கவுணியனறியும்
அனையதன்மையையாதலின்நின்னை
1382 நினையவல்லவரில்லைநீணிலத்தே.

**129** சேவுயருந்திண்கொடியான்திருவடியேசரணென்று
சிறந்தஅன்பால், நாவியலுமங்கையொடுநான்முகன்றான்
வழிபட்டநலங்கொள்கோயில், வாவிதொறும்வண்கமல
முகங்காட்டச்செங்குமுதம்வாய்கள்காட்டக், காவியிருங்
1383 கருங்குவளைகருநெய்தல்கண்காட்டுங்கழுமலமே. க

பெருந்தடங்கண்செந்துவர்வாய்ப்பீடுடையமலைச்செல்வி
பிரியாமேனி, அருந்தகையசுண்ணவெண்ணீறலங்கரித்தா
னமரர்தொழஅமருங்கோயில், தருந்தடக்கைமுத்தழலோர்
மனைகள்தோறுமிறைவனதுதன்மைபாடிக், கருந்தடங்கண்
1384 ணார்கழல்பந்தம்மானைப்பாட்டயருங்கழுமலமே. உ

அலங்கல்மலிவானவருந்தானவருமலைகடலைக்கடையப்பூ
தங், கலங்கஎழுகடுவிடமுண்டிருண்டமணிகண்டத்தோன்

கருதுங்கோயில், விலங்கலமர்புயன்மறந்துமீன்சனிபுக்கூன்
சலிக்குங்காலாந்தானுங், கலங்கலிலாமனப்பெருவண்கை
1385 யுடையமெய்யர்வாழ்சழுமலமே. ௩

பாரிதனைநலிந்தமரர்பயமெய்தச்சயமெய்தும்பரிசுவெம்
மைப், போரிசையும்புரமூன்றும்பொன்றவொருசிலைவளைத்
தோன்பொருந்துங்கோயில், வாரிசைமென்முலைமடவார்
மாளிகையின்சூளிகைமேல்மகப்பாராட்டக், காரிசையும்
1386 விசும்பியங்குங்கணங்கேட்டுமகிழ்வெய்துங்கழுமலமே. ௪

ஊர்கின்றஅரவமொளிவிடுதிங்களொடுவன்னிமத்தமன்
னும், நீர்நின்றகங்கைநகுவெண்டலைசேர்செஞ்சடையான்
நிகழுங்கோயில்,ஏர்தங்கிமலர்நிலவியிசைவெள்ளிமலையென்
னநிலவிநின்ற, கார்வண்டின்கணங்களாற்கவின்பெருகு
1387 சுதைமாடக்கழுமலமே. ௫

தருஞ்சரதந்தருளென்றடிநினைந்துதழலணைந்துதவங்
கள்செய்த, பெருஞ்சதுரர்பெயலர்க்கும்பீடார்தோழமைய
ளித்தபெருமான்கோயில், அரிந்தவயலரவிந்தம்மதுவுகுப்ப
அதுகுடித்துக்களித்துவாளை, கருஞ்சகடமிளகவளர்கரும்
1388 பிரிய அகம்பாயுங்கழுமலமே. ௬

புவிமுதலைம்பூதமாய்ப்புலனைந்தாய்நிலனைந்தாய்க்கரண
நான்காய், அவையவைசேர்பயனுருவாயல்லவுருவாய்நின்றா
னமருங்கோயில், தவமுயல்வோர்மலர்பறிப்பத்தாழவிடு
கொம்புதைப்பக்கொக்கின்காய்கள், கவணெறிகற்போற்
1389 சுனையிற்கரைசேரப்புள்ளிரியுங்கழுமலமே. ௭

அடல்வந்தவானவரையழித்துலகுதெழித்துழலும்
அரக்கர்கோமான், மிடல்வந்தஇருபதுதோள்நெரியவிரற்
பணிகொண்டோன்மேவுங்கோயில், நடவந்தவுழவரிதுநட
வொணாவகைபாலாய்த்தென்றுதன்று, கடல்வந்தசங்கீன்ற
1390 முத்துவயற்கரைகுவிக்குங்கழுமலமே. ௮

பூமகள்தன்கோனயனும்புள்ளினொடுகேழலுருவாகிப்
புக்கிட், டாமளவுஞ்சென்றுமுடியடிகாணாவகைநின்றானம
ருங்கோயில், பாமருவுங்கலைப்புலவோர்பன்மலர்கள்கொண்

டணிந்துபரிசினாலே, காமனைகள்பூரித்துக்களிகூர்ந்துநின்
1391 றேத்துங்கழுமலமே. ௯

குணமின்றிப்புத்தர்களும்பொய்த்தவத்தைமெய்த்தவ
மாய்நின்றுகையில், உணல்மருவுஞ்சமணர்களுமுணராத
வகைநின்றானுறையுங்கோயில், மணமருவும்வதுவையொலி
விழவினொலியிவையிசையமண்மேற்றேவர், கணமருவுமறை
1392 யினொலிகீழ்ப்படுக்கமேற்படுக்குங்கழுமலமே. ௧௦

கற்றவர்கள்பணிந்தேத்துங்கழுமலத்துளீசன்றன்கழல்
மேல்நல்லோர், நற்றுணையாம்பெருந்தன்மைஞானசம்பந்
தன்றான்நயந்துசொன்ன, சொற்றுணையோரைந்தினொ
டைந்திவைவல்லார்தூமலராள்துணைவராகி, முற்றுலகமது
1393 ஆண்டுமுக்கணனடிசேரமுயல்கின்றாரே. ௧௧

130 புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைம்
மேலுந்தி, அலமந்தபோதாகஅஞ்சேலென்றருள்செய்வா
னமருங்கோயில், வலம்வந்தமடவார்கள்நடமாடமுழவதிர
மழையென்றஞ்சிச், சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்
1394 குந்திருவையாறே. ௧

விடலேறுபடநாகமரைக்கசைத்துவெற்பரையன்பாவை
யோடும், அடலேறொன்றதுவேறியஞ்சொலீர்பலியென்னு
மடிகள்கோயில், கடலேறித்திரைமோதிக்காவிரியினுடன்
வந்துகங்குல்வைகித், திடலேறிச்சுரிசங்கஞ்செழுமுத்தங்
1395 கீன்றலைக்குந்திருவையாறே. ௨

கங்காளர்கயிலாயமலையாளர்கானப்பேராளர்மங்கை, பங்
காளர்திரிசூலப்படையாளர் விடையாளர்பயிலுங்கோயில்,
கொங்காளப்பொழில்நுழைந்து கூர்வாயாலிறகுலர்த்திக்
கூதனீங்கிச், செங்கானல்வெண்குருகுபைங்கானலிரைதே
1396 ருந்திருவையாறே. ௩

ஊன்பாயுமுடைதலைகொண் டூரூரின்பலிக்குழல்வா
ருமையாள்பங்கர், தான்பாயும்விடையேறுஞ்சங்கரனார்தழ
லுருவர்தங்குங்கோயில், மான்பாயவயலருகேமரமேறிமந்தி

பாய்மடுக்கள்தோறும், தேன்பாயமீன்பாயச்செழுங்கமல
1397 மொட்டலருந்திருவையாறே. ௪

நீரோடுகூவிளமும்நிலாமதியும்வெள்ளெருக்கும்நிறைந்தகொன்றைத், தாரோடுதண்கரந்தைசடைக்கணிந்தஅத்துவனார்தங்குங்கோயில், காரோடிவிசும்பளந்துகடிநாறும்பொழிலணைந்தகமழ்தார்வீதித், தேரோடுமரங்கேறிச்சே
1398 யிழையார்நடம்பயிலுந்திருவையாறே. ௫

வேந்தாகிவிண்ணவர்க்கும்மண்ணவர்க்கும்நெறிகாட்டும்விகிர்தனாகிப், பூந்தாமநறுங்கொன்றைசடைக்கணிந்தபுண்ணியனார்நண்ணுங்கோயில், காந்தாரமிசையமைத்துக்காரிகையார்பண்பாடக்கவினார்வீதித், தேந்தாமென்றரங்
1399 கேறிச்சேயிழையார்நடமாடுந்திருவையாறே. ௬

நின்றுலாநெடுவிசும்பினெருக்கிவருபுரமூன்றும்நீள்வாயம்பு, சென்றுலாம்படிதொட்டசிலையாளிமலையாளிசேருங்கோயில், குன்றெலாங்குயில்கூவக்கொழும்பிரசமலர்பாய்ந்துவாசமல்கு, தென்றலாரடிவருடச்செழுங்கரும்புகண்வள
1400 ருந்திருவையாறே. ௭

அஞ்சாதேகயிலாயமலையெடுத்தஅரக்கர்கோன்தலைகள்பத்தும், மஞ்சாடுதோள்நெரியஅடர்த்தவனுக்கருள்புரிந்தமைந்தர்கோயில், இஞ்சாயலிளந்தெங்கின்பழம்வீழஇளமேதியிரிந்தங்கோடிச், செஞ்சாலிக்கதிருழக்கிச்செழுங்
1401 கமலவயல்படியுந்திருவையாறே. ௮

மேலோடிவிசும்பணவிவியன்நிலத்தைமிகஅகழ்ந்துமிக்குநாடும், மாலோடுநான்முகனுமறியாதவகைநின்றான்மன்னுங்கோயில், கோலோடக்கோல்வளையார்கூத்தாடக்குவிமுலையார்முகத்தினின்று, சேலோடச்சிலையாடச்சேயிழை
1402 யார்நடமாடுந்திருவையாறே. ௯

குண்டாடுகுற்றுடுக்கைச்சமணரொடுசாக்கியருங்குணமொன்றில்லா, மிண்டாடுமிண்டருரைகேளாதேயாளாமின்மேவித்தொண்டீர், எண்டோளர்முக்கண்ணரெம்மீசரிறைவ

ரினிதமருங்கோயில், செண்டாடுபுனற்பொன்னிச்செழு
1403 மணிகள்வந்தலைக்குந்திருவையாறே. ௧௦

அன்னமலிபொழில்புடைசூழையாற்றெம்பெருமானை
யந்தண்காழி, மன்னியசீர்மறைநாவன்வளர்ஞானசம்பந்
தன்மருவுபாடல், இன்னிசையாலிவைபத்துமிசையுங்கா
லீசனடியேத்துவார்கள், தன்னிசையோடமருலகில்தவ
1404 நெறிசென்றெய்துவார்தாழாதன்றே. ௧௧

131 மெய்த்தாறுசுவையுமேழிசையுமெண்குணங்களும்
விரும்புநால்வே, தத்தாலுமறிவோண்ணாநடைதெளியப்
பளிங்கேபோலரிவைபாகம், ஒத்தாறுசமயங்கட்கொருதலை
வன்கருதுமூருலவுதெண்ணீர், முத்தாறுவெதிருதிரநித்
1405 திலம்வாரிக்கொழிக்கும்முதுகுன்றமே. ௧

வேரிமிகுகுழலியொடுவேடுவனாய்வெங்கானில்விசயன்
மேவு, போரின்மிகுபொறையளந்துபாசுபதம்புரிந்தளித்த
புராணர்கோயில், காரின்மலிகடிபொழில்கள்கனிகள்பலமல
ருதிர்த்துக்கயமுயங்கி, ஊரிவளங்கிளர்தென்றல்திருமுன்
1406 றிற்புகுந்துலவும்முதுகுன்றமே. ௨

தக்கனதுபெருவேள்விச்சந்திரனிந்திரனெச்சனருக்க
னங்கி, மிக்கவிதாதாவினொடும்விதிவழியேதண்டித்தவிம
லர்கோயில், கொக்கினியகொழும்வருக்கைகதலிகமுகுயர்
தெங்கின்குலைகொள்சோலை, முக்கனியின்சாறொழுகிச்சே
1407 றுலராநீள்வயல்சூழ்முதுகுன்றமே. ௩

வெம்மைமிகுபுரவாணர்மிகைசெய்யவிறலழிந்துவிண்
ணுளோர்கள், செம்மலரோனிந்திரன்மால்சென்றிரப்பத்
தேவர்களேதேரதாக, மைம்மருவுமேருவிலுமாசுணநா
ணரியெரிகால்வாளியாக, மும்மதிலும்கொடியளவிற்பொடி
1408 செய்தமுதல்வனிடம்முதுகுன்றமே. ௪

இழைமேவுகலையல்குலேந்திழையாளொருபாலாயொரு
பாலெள்கா, உழைமேவுமுரியுடுத்தவொருவனிருப்பிட
மென்பரும்பரோங்கு, கழைமேவுமடமந்திமழைகண்டுமகவி

ஞெடும்புகவொண்கல்லின், முழைமேவும்மால்யானையிரை
1409 தேரும்வளர்சாரல்முதுகுன்றமே. ரு

நகையார்வெண்டலைமாலைமுடிக்கணிந்தநாதனிடநன்
முத்தாறு, வகையாரும்வரைப்பண்டங்கொண்டிரண்டுகரை
யருகுமறியமோதித், தகையாரும்வரம்பிடறிச்சாலிகழுநீர்
குவளைசாயப்பாய்ந்து, முகையார்செந்தாமரைகள்முகமலர
1410 வயல்தழுவுமுதுகுன்றமே. சு

அறங்கிளரும்நால்வேத மாலின்கீழிருந்தருளியமரர்
வேண்ட, நிறங்கிளர்செந்தாமரையோன்சிரமைந்திலொன்ற
றுத்தநிமலர்கோயில், திறங்கொள்மணித்தரளங்கள்வரத்
திரண்டங்கெழிற்குறவர்சிறுமிமார்கள், முறங்களினாற்கொ
1411 ழித்துமணிசெலவிலக்கிமுத்துலைப்பெய்முதுகுன்றமே. எ

கதிரொளியநெடுமுடிபத்துடையகடலிலங்கையர்கோன்
கண்ணும்வாயும், பிதிரொளியகனல்பிறங்கப்பெருங்கயிலைம
லையைநிலைபெயர்த்தஞான்று, மதிலளகைக்கிறைமுரலமலர
டியொன்றூன்றிமறைபாடஆங்கே, முதிரொளியசுடர்நெடு
1412 வாள்முன்னீந்தான்வாய்ந்தபதிமுதுகுன்றமே. அ

பூவார்பொற்றவிசின்மிசையிருந்தவனும்பூந்துழாய்புனைந்
தமாலும், ஓவாதுகழுகேனமாயுயர்ந்தாழ்ந்துறநாடியுண்மை
காணாத், தேவாருந்திருவுருவன்சேருமலைசெழுநிலத்தை
மூடவந்த, மூவாதமுழங்கொலிநீர்கீழ்தாழமேலுயர்ந்த
1413 முதுகுன்றமே. கூ

மேனியிற்சீவரத்தாரும்விரிதருதட்டுடையாரும்விரவ
லாகா, ஊனிகளாயுள்ளார்சொற்கொள்ளாதுமுள்ளுணர்ந்
தங்குய்மின்தொண்டர், ஞானிகளாயுள்ளார்கள்நான்மறை
யைமுழுதுணர்ந்தைம்புலன்கள்செற்று, மோனிகளாய்முனிச்
1414 செல்வர்தனித்திருந்துதவம்புரியும்முதுகுன்றமே. க0

முழங்கொலிநீர்முத்தாறுவலஞ்செய்யுமுதுகுன்றத்தி
றையைமூவாப், பழங்கிழமைப்பன்னிருபேர்படைத்துடை
யகழுமலமேபதியாக்கொண்டு, தழங்கெரிமூன்றோம்புதொ
ழில்தமிழ்ஞானசம்பந்தன்சமைத்தபாடல், வழங்குமிசை
1415 கூடும்வகைபாடுமவர்நீடுலகமாள்வர்தாமே. கக

132 ஏரிசையும்வடவாலின்கீழிருந்தங்கீரிருவர்க்கிரங்கிநின்று, நேரியநான்மறைப்பொருளையுரைத்தொளிசேர்நெறியளித்தோன்நின்றகோயில், பாரிசையும்பண்டிதர்கள்பன்னாளும் பயின்றேதுமோசைகேட்டு, வேரிமலிபொழிற்கிள்ளைவே
1416 தங்கள்பொருட்சொல்லும்மிழலையாமே. க

பொறிபரவமதுசுற்றிப்பொருப்பேமத்தாகப்புத்தேளிர் கூடி, மறிகடலைக்கடைந்திட்டவிடமுண்டகண்டத்தோன் மன்னுங்கோயில், செறியிதழ்த்தாமரைத்தவிசில்திகழ்ந் தோங்குமிலைக்குடைக்கீழ்ச்செய்யார்செந்நெல், வெறிகதிர்ச்
1417 சாமரையிரட்டஇளவன்னம்வீற்றிருக்கும்மிழலையாமே. உ

எழுந்துலகைநலிந்துழலுமவுணர்கள்தம்புரமூன்று மெழிற்கணுடி, உழுந்துருளுமளவையினொள்ளெரிகொள வெஞ்சிலைவளைத்தோனுறையுங்கோயில், கொழுந்தரளம் நகைகாட்டக்கோகநதம்முகங்காட்டக்குதித்துநீர்மேல், விழுந்
1418 தகயல்விழிகாட்டவிற்பவளம்வாய்காட்டும்மிழலையாமே. ௩

உரைசேருமெண்பத்துநான்குநூருயிரமாம்யோனிபேதம், நிரைசேரப்படைத்தவற்றினுயிர்க்குயிராயங்கங்கேநின்ருன் கோயில், வரைசேரும்முகில்முழவமயில்கள்பலநடமாடவண் டுபாட, விரைசேர்பொன்னிதழிதரமேன்காந்தள்கையேற்
1419 கும்மிழலையாமே. ௪

காணுமாறரியபெருமானாகிக்காலமாய்க்குணங்கள்மூன் ருய்ப், பேணுமூன்றுருவாகிப்பேருலகம்படைத்தளிக்கும் பெருமான்கோயில், தாணுவாய்நின்றபரதத்துவனையுத்த மனையிறைஞ்சீரேன்று, வேணுவார்கொடிவிண்ணோர்தமை
1420 விளிப்பபோலோங்குமிழலையாமே. ரு

அகனமர்ந்தஅன்பினராயறுபகைசெற்றைம்புலனுமடக்கி ஞானம், புகலுடையோர்தம்முள்ளப்புண்டரிகத்துள்ளிருக் கும்புராணர்கோயில், தகவுடைநீர்மணித்தலத்துச்சங்குள வர்க்கந்திகழச்சலசத்தீயுள், மிகவுடையபுன்குமலர்ப்பொரி
1421 யட்டமணஞ்செய்யும்மிழலையாமே. சு

ஆறுசேடைமுடியனனலாடுமேலர்க்கையனிமயப்பாவை[யில் கூறுடேதிருவுருவன்கூத்தாடுங்குணமுடையோன்குளிருங்கோ

சேருடசெங்கழுநீர்த்தாதாடிமதுவுண்டுசிவந்தவண்டு
1422 வேருயவுருவாகிச்சேவ்வழிநற்பண்பாடும்மிழலையாமே. எ

கருப்பமிகுமுடலடர்த்துக்காலூன்றிக்கைமறித்துக் கயிலையென்னும், பொருப்பெடுக்கலுறுமரக்கன்பொன்முடிதோள்நெரித்தவிரற்புனிதர்கோயில், தருப்பமிகுசலந்தரன்றனுடல்தடிந்தசக்கரத்தைவேண்டியீண்டு, விருப்பொடுமால்வழிபாடுசெய்யவிழிவிமானஞ்சேர்மிழலையாமே.
1423 அ

செந்தளிர்மாமலரோனுந்திருமாலுமேனமோடன்னமாகி, அந்தமடிகாணுதேயவரேத்தவெளிப்பட்டோனமருங்கோயில், புந்தியினல்மறைவழியேபுற்பரப்பிநெய்சமிதைகையிற்கொண்டு, வேந்தழலின்வேட்டுலகின்மிகஅளிப்போர்சேருமூர்மிழலையாமே.
1424 கூ

எண்ணிறந்தஅமணர்களுமிழிதொழில்சேர்சாக்கியருமென்றுந்தன்னை, நண்ணரியவகைமயக்கித்தன்னடியார்க்கருள்புரியும்நாதன்கோயில், பண்ணமரும்மென்மொழியார்பாலகரைப்பாராட்டுமோசைகேட்டு, விண்ணவர்கள்வியப்பெய்திவிமானத்தோடும்மிழியுமிழலையாமே.
1425 கO

மின்னியலும்மணிமாடமிடைவீழிமிழலையான்விரையார்பாதம், சென்னிமிசைக்கொண்டொழுகுஞ்சிரபுரக்கோன்செழுமறைகள்பயிலுநாவன், பன்னியசீர்மிகுஞானசம்பந்தன்பரிந்துரைத்தபத்துமேத்தி, இன்னிசையாற்பாடவல்லாரிருநிலத்திலீசனெனுமியல்பினேரே.
1426 கக

133 வெந்தவெண்பொடிப்பூசுமார்பின்விரிநூலொருபால்பொருந்தக்
கந்தமல்குகுழலியோடுங்கடிபொழிற்கச்சிதன்னுள்
அந்தமில்குணத்தாரவர்போற்றஅணங்கினொடாடல்புரி
1427 எந்தைமேவியஏகம்பந்தொழுதேத்தஇடர்கெடுமே. க

வரந்திகழுமவுணர்மாநகர்மூன்றுடன்மாய்ந்தவியச்
சரந்துரந்தெரிசெய்ததாழ்சடைச்சங்கரன்மேயஇடம்
குருந்தமல்லிகைகோங்குமாதவிநல்லகுராமரவம்
1428 திருந்துபைம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே. உ

வண்ணவெண்பொடிப்பூசுமார்பின்வரியரவம்புனைந்து
பெண்ணமர்ந்தெரியாடல்பேணியபிஞ்ஞகன்மேயவிடம்
விண்ணமர்நெடுமாடமோங்கிவிளங்கியகச்சிதன்னுள்
1429 திண்ணமாம்பொழில்சூழ்ந்தஏகம்பஞ்சேரஇடர்கெடுமே. ௩

தோலுநூலுந்துதைந்தவரைமார்பிற்சுடலைவெண்ணீறணிந்து
காலன்மாள்வுறக்காலாற்காய்ந்தகடவுள்கருதுமிடம்
மாலைவெண்மதிதோயுமாமதிற்கச்சிமாநகருள்
1430 ஏலநாறியசோலைசூழேகம்பமேத்தஇடர்கெடுமே. ௪

தோடணிம்மலர்க்கொன்றைசேர்சடைத்தூமதியம்புனைந்து
பாடல்நான்மறையாகப்பல்கணப்பேய்களவைசூழ
வாடல்வெண்டலையோடனலேந்திமகிழ்ந்துடனாடல்புரி
1431 சேடர்சேர்கலிக்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே. ௫

சாகம்பொன்வரையாகத்தானவர்மும்மதில்சாயவெய்து
ஆகம்பெண்ணொருபாகமாகஅரவொடுநூலணிந்து
மாகந்தோய்மணிமாடமாமதிற்கச்சிமாநகருள்
1432 ஏகம்பத்துறையீசன்சேவடியேத்தஇடர்கெடுமே. ௬, ௭

வாணிலாமதிபுல்குசெஞ்சடைவாளரவம்மணிந்து
நாணிடத்தினில்வாழ்க்கைபேணிநகுதலையிற்பலிதேர்ந்
தேணிலாஅரக்கன்றன்நீள்முடிபத்துமிறுத்தவனூர்
1433 சேணுலாம்பொழிற்கச்சியேகம்பஞ்சேரஇடர்கெடுமே. ௮

பிரமனுந்திருமாலுங்கைதொழப்பேரழலாயபெம்மான்
அரவஞ்சேர்சடையந்தணனணங்கினோடமருமிடம்
கரவில்வண்கையினார்கள்வாழ்கலிக்கச்சிமாநகருள்
1434 மரவஞ்சூழ்பொழிலேகம்பந்தொழவல்வினைமாய்ந்தறுமே.

குண்டுபட்டமணாயவரொடுங்கூறைதம்மெய்போர்க்கும்
மிண்டர்கட்டியகட்டுரையவைகொண்டுவிரும்பேன்மின்
விண்டவர்புரமூன்றும்வெங்கணையொன்றினாலவியக்
1435 கண்டவன்கலிக்கச்சியேகம்பங்காணஇடர்கெடுமே. ௧௦

ஏரினார்பொழில்சூழ்ந்தகச்சியேகம்பமேயவனைக்
காரினார்மணிமாடமோங்குகழுமலநன்னகருள்
பாரினார்தமிழ்ஞானசம்பந்தன்பரவியபத்தும்வல்லார்
1436 சீரினார்புகழோங்கிவிண்ணவரோடுஞ்சேர்பவரே. ௧௧

**134** கருத்தன்கடவுள்கனலேந்தியாடும்
நிருத்தன்சடைமேல்நிரம்பாமதியன்
திருத்தமுடையார்திருப்பறியலூரில்
1437 விருத்தனெனத்தகும்வீரட்டத்தானே. க

மருந்தனமுதன்மயானத்துள்மைந்தன்
பெருந்தண்புனற்சென்னிவைத்தபெருமான்
திருந்துமறையோர்திருப்பறியலூரில்
1438 விரிந்தமலர்ச்சோலைவீரட்டத்தானே. உ

குளிர்ந்தார்சடையன்கொடுஞ்சிலைவிற்காமன்
விளிந்தானடங்கவீந்தெய்தச்செற்றான்
தெளிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
1439 மிளிர்ந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. ௩

பிறப்பாதியில்லான்பிறப்பார்பிறப்புச்
சேறப்பாதியந்தஞ்சேலச்செய்யுந்தேசன்
சிறப்பாடுடையார்திருப்பறியலூரில்
1440 விறற்பாரிடஞ்சூழவீரட்டத்தானே. ச

கரிந்தாரிடுகாட்டிலாடுங்கபாலி
புரிந்தார்படுதம்புறங்காட்டிலாடும்
தெரிந்தார்மறையோர்திருப்பறியலூரில்
1441 விரிந்தார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. ரு

அரவுற்றநாணாஅனலம்பதாகச்
செருவுற்றவர்புரந்தீயெழச்செற்றான்
தெருவிற்கொடிசூழ்திருப்பறியலூரில்
1442 வெருவுற்றவர்தொழும்வீரட்டத்தானே. சு

நரையார்விடையான்நலங்கொள்பெருமான்
அரையாரரவமழகாஅசைத்தான்
திரையார்புனல்சூழ்திருப்பறியலூரில்
1443 விரையார்மலர்ச்சோலைவீரட்டத்தானே. எ

வளைக்கும்மெயிற்றின்னரக்கன்வரைக்கீழ்
இளைக்கும்படிதானிருந்தேழையன்னம்
திளைக்கும்படுகர்த்திருப்பறியலூரில்
1444 விளைக்கும்வயல்சூழ்ந்தவீரட்டத்தானே. அ

வளங்கொள்மலர்மேலயன்ஓதவண்ணன்
துளங்கும்மனத்தார்தொழத்தழலாய்நின்றான்
இளங்கொம்பனாளோடிணைந்தும்பிணைந்தும்
1445 விளங்குந்திருப்பறியல்வீரட்டத்தானே. ௯

சடையன்பிறையன்சமண்சாக்கியரோ
டடையன்பிலாதானடியார்பெருமான்
உடையன்புலியினுரிதோலரைமேல்
1446 விடையன்திருப்பறியல்வீரட்டத்தானே. ௧௦

நறுநீருகுங்காழிஞானசம்பந்தன்
வெறிநீர்த்திருப்பறியல்வீரட்டத்தானைப்
பொறிநீடரவன்புனைபாடல்வல்லார்க்
1447 கறுநீடவலமறும்பிறப்புத்தானே. ௧௧

135 நீறுசேர்வதொர்மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர்கோலமாய்ப்
பாறுசேர்தலைக்கையர்பராய்த்துறை
1448 ஆறுசேர்சடைஅண்ணலே. ௧

கந்தமாமலர்க்கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல்வைத்தவர்
பைந்தண்மாதவிசூழ்ந்தபராய்த்துறை
1449 அந்தமில்லஅடிகளே. ௨

வேதர்வேதமெல்லாமுறையால்விரித்
தோதநின்றவொருவனார்
பாதிபெண்ணுருவாவர்பராய்த்துறை
1450 ஆதியாயஅடிகளே. ௩

தோலுந்தம்மரையாடைசுடர்விடு
நூலுந்தாமணிமார்பினர்
பாலுநெய்பயின்றாடுபராய்த்துறை
1451 ஆலநீழலடிகளே. ௪

விரவிநீறுமெய்பூசுவர்மேனிமேல்
இரவில்நின்றெரியாடுவர்
பரவினாரவர்வேதம்பராய்த்துறை
1452 அரவமார்த்தஅடிகளே. ௫

மறையுமோதுவர்மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டமுடையவர்
பறையுஞ்சங்குமொலிசெய்பாய்த்துறை
1453 அறையநின்றஅடிகளே. ௬

விடையுமேறுவர்வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கைதரித்தவர்
படைகொள்வெண்மழுவாளர்பாய்த்துறை
1454 அடையநின்றஅடிகளே. ௭

தருக்கின்மிக்கதசக்கிரிவன்றனை
நெருக்கினார்விரலொன்றினால்
பருக்கினாரவர்போலும்பாய்த்துறை
1455 அரக்கன்றன்னை அடிகளே. ௮

நாற்றமாமலரானொடுமாலுமாய்த்
தோற்றமும்மறியாதவர்
பாற்றினார்வினையானபாய்த்துறை
1456 ஆற்றல்மிக்கஅடிகளே. ௯

திருவிலிச்சிலதேரமணாதர்கள்
உருவிலாவுரைகொள்ளேலும்
பருவிலாலெயிலெய்துபாய்த்துறை
1457 மருவினான்றனைவாழ்த்துமே. ௧௦

செல்வமல்கியசெல்வர்பாய்த்துறைச்
செல்வர்மேற்சிதையாதன
செல்வன்ஞானசம்பந்தனசெந்தமிழ்
1458 செல்வமாமிவைசெப்பவே. ௧௧

136 மாதர்மடப்பிடியும்மடஅன்னமுமன்னதோர்
நடையுடைம்மலைமகள் துணையெனமகிழ்வர்
பூதஇனப்படைநின்றிசைபாடவுமாடுவர்
அவர்படர்சடைந்நெடுமுடியதொர்புனலர்
வேதமொடேழிசைபாடுவராழ்கடல்வெண்டிரை
யிரைந்நுரைகரைபொருதுவிம்மிநின்றயலே
தாதவிழ்புன்னைதயங்குமலர்ச்சிறைவண்டறை
1459 யெழில்பொழில்குயில்பயில்தருமபுரம்பதியே. ௧

பொங்குநடைப்புகலில்விடையாமவரூர்திவெண்
பொடியணிதடங்கொள்மார்புபூணநூல்புரள
மங்குலிடைத்தவழும்மதிசூடுவராடுவர்
வளங்கிளர்புனலரவம்வைகியசடையர்
சங்குகடற்றிரையாலுதையுண்டுசரிந்திரிந்
தொசிந்தசைந்திசைந்துசேரும்வெண்மணற்குவைமேல்
தங்குகதிர்ம்மணிநித்திலமெல்லிருளொல்கநின்
1460 றிலங்கொளிநலங்கெழில்தருமபுரம்பதியே. ௨

விண்ணுறுமால்வரைபோல்விடையேறுவாறுசூ
டுவர்விரிசுரியொளிகொள்தோடுநின்றிலங்கக்
கண்ணுறநின்றொளிருங்கதிர்வெண்மதிக்கண்ணியர்
கழிந்தவரிழிந்திடும்முடைதலைகலனாப்
பெண்ணுறநின்றவர்தம்முருவம்மயன்மால்தொழவ்
வரிவையைப்பிணைந்திணைந்தணைந்ததும்பிரியார்
தண்ணிதழ்முல்லையொடெண்ணிதழ்மௌவல்மருங்கலர்
1461 கருங்கழிநெருங்குநல்தருமபுரம்பதியே. ௩

வாருறுமென்முலைநன்னுதலேழையொடாடுவர்
வளங்கிளர்விளங்குதிங்கள்வைகியசடையர்
காருறநின்றலரும்மலர்க்கொன்றையங்கண்ணியர்
கடுவ்விடைகொடிவெடிகொள்காடுறைபதியர்
பாருறவிண்ணுலகம்பரவப்படுவோரவர்
படுதலைப்பலிகொளல்பரிபவந்நினையார்
தாருறுநல்லரவம்மலர்துன்னியதாதிர்
1462 தழைபொழில்மழைந்நுழைதருமபுரம்பதியே. ௪

நேருமவர்க்குணரப்புகிலில்லைநெடுஞ்சடைக்
கடும்புனல்படர்ந்திடம்படுவ்வதொர்நிலையர்
பேருமவர்க்கெனையாயிரமுன்னைப்பிறப்பிறப்
பிலரதவருடல்தடர்த்தபெற்றியாரறிவார்
ஆரமவர்க்கழல்வாயதொர்நாகமழஃகுறவ்
வெழுஃகொழும்மலர்கொள்பொன்னிதழிநல்லலங்கல்
தாரமவர்க்கிமவான்மகளூர்வதுபோர்விடை
1463 கடிபடுசெடிபொழில்தருமபுரம்பதியே. ௫

கூழையங்கோதைகுலாயவள் தம்பிணைபுல்கமல்
குமென்முலைப்பொறிகொள்பொற்கொடியிடைத்துவர்வாய்
மாழையொண்கண்மடவாளையோர்பாகமகிழ்ந்தவர்
வலம்மலிபடைவிடைகொடிகொடும்மழுவ்வாள்
யாழையும்மெள்கிடவேழிசைவண்டுமுரன்றினந்
துவன்றிமென்சிறைகறையுறந்நறவ்விரியுந்நல்
தாழையுஞாழலுந்நீடியகானலினள்ளலி
1464 சைபுள்ளினந்துயில்பயில்தருமபுரம்பதியே. ௬

தேமருவார்குழலன்னநடைப்பெடைமான்விழித்
திருந்திழைபொருந்துமேனிசெங்கதிர்விரியத்
தூமருசெஞ்சடையில்துதைவெண்மதிதுன்றுகொன்
றைதொல்புனல்சிரங்கரந்துரித்ததோலுடையர்
காமருதண்கழிநீடியகானலகண்டகங்
கடல்லடைகழியிழியமுண்டகத்தயலே
தாமரைசேர்குவளைப்படுகிற்கழுநீர்மலர்
1465 வெறிகமழ்செறிவ்வயல்தருமபுரம்பதியே. ௭

தூவணநீறகலம்பொலியவ்விரைபுல்கமல்
குமென்மலர்வரைபுரைதிரள்புயம்மணிவர்
கோவணமும்முழையின்னதளும்முடையாடையர்
கொலைம்மலிபடையொர்சூலமேந்தியகுழகர்
பாவணமாவலறத்தலைபத்துடையவ்வரக்
கனவ்வலியொர்கவ்வைசெய்தருள்புரிதலைவர்
தாவணஏறுடையெம்மடிகட்கிடம்வன்தடங்
1466 கடல்விடுந்தடங்கரைத்தருமபுரம்பதியே. ௮

வார்மலிமென்முலைமாதொருபாகமதாகுவர்
வளங்கிளர்மதியரவம்வைகியசடையர்
கூர்மலிசூலமும்வெண்மழுவும்மவர்வெல்படை
குனிசிலைதனிம்மலையதேந்தியகுழகர்
ஆர்மலியாழிகொள்செல்வனுமல்லிகொள்தாமரைம்
மிசையவன்னடிம்முடியளவுதாமறியார்
தார்மலிகொன்றையலங்கலுகந்தவர்தங்கிடந்
1467 தடங்கடல்விடுந்திரைத்தருமபுரம்பதியே. ௯

புத்தர்கள்தத்துவர்மொய்த்துறிபுல்கியகையர்பொய்ம்
மொழிந்தழிவில்பெற்றியுற்றநற்றவர்புலவோர்
பத்தர்களத்தவமெய்ப்பயனாகவுகந்தவர்
நிகழ்ந்தவர்சிவந்தவர்சுடலைப்பொடியணிவர்
முத்தனவெண்ணகையொண்மலைமாதுமைபொன்னணி
புணர்முலையிணைதுணையணைவதும்பிரியார்
தத்தருவித்திரளுந்தியமால்கடலோதம்வந்
1468 தடர்ந்திடுந்தடம்பொழில்தருமபுரம்பதியே. ௧௦

பொன்னெடுநன்மணிமாளிகைசூழ்விழவம்மலீ
பொருஉபுனல்திருஉவமர்புகலியென்றுலகில்
தன்னொடுநேர்பிறவில்பதிஞானசம்பந்தனஃ
துசெந்தமிழ்த்தடங்கடல்தருமபுரம்பதியைப்
பின்னெடுவார்சடையிற்பிறையும்மரவும்முடை
யவன்பிணைதுணைகழல்கள்பேணுதலுரியார்
இன்னெடுநன்னுலகெய்துவரெய்தியேபோகமும்
1469 உறுவர்கள்இடர்பிணிதுயரணைவ்விலரே. ௧௧

முதல் திருமுறை முற்றிற்று.

இதில் பண்கள் எட்டு; நட்டபாடை 1—238, தக்கராகம் 239—503, பழந்தக்கராகம் 504—677, தக்கேசி 678—808, 1047—1057, குறிஞ்சி 809—1046, 1058—1121, வியாழக் குறிஞ்சி 1122—1382, மேகராகக்குறிஞ்சி 1383—1458, யாழ்மூரி 1459—1469. அற்புதத் தேவாரப் பதிகங்கள் எட்டு (1—11, 239—249, 470—480, 526—536, 580—590, 992—1002, 1249—1258, 1459—1469).

திருச்சிற்றம்பலம்

# இரண்டாந் திருமுறை 1470—2800

## பண் இந்தளம் 1470—1894

திருச்சிற்றம்பலம்

1 செங்கலங்கழனிப்பழனத்தயலேசெழும்
புன்னைவெண்கிழியிற்பவளம்புரைபூந்தராய்
துன்னிநல்லிமையோர்முடிதோய்கழலீர்சொலீர்
1470 பின்னுசெஞ்சடையிற்பிறைபாம்புடன்வைத்ததே. க

எற்றுதெண்டிரையேறியசங்கினொடிப்பிகள்
பொற்றிகழ்கமலப்பழனம்புகுபூந்தராய்ச்
சுற்றிநல்லிமையோர்தொழுபொற்கழலீர்சொலீர்
1471 பெற்றமேறுதல்பெற்றிமையோபெருமானிரே. உ

சங்குசெம்பவளத்திரள்முத்தவைதாங்கொடு
பொங்குதெண்டிரைவந்தலைக்கும்புனற்பூந்தராய்த்
துங்கமால்களிற்றின்னுரிபோர்த்துகந்தீர்சொலீர்
1472 மங்கைபங்கமுமங்கத்தொடொன்றியமாண்பதே. ௩

சேமவன்மதில்பொன்னணிமாளிகைசேணுயர்
பூமணங்கமழும்பொழில்சூழ்தருபூந்தராய்ச்
சோமனும்மரவுந்தொடர்செஞ்சடையீர்சொலீர்
1473 காமன்வெண்பொடியாகக்கடைக்கண்சிவந்ததே. ௪

பள்ளமீனிரைதேர்ந்துழலும்பகுவாயன
புள்ளுநாடொறுஞ்சேர்பொழில்சூழ்தருபூந்தராய்த்
துள்ளுமான்மறியேந்தியசெங்கையினீர்சொலீர்
1474 வெள்ளநீரொருசெஞ்சடைவைத்தவியப்பதே. ௫

மாதிலங்கியமங்கையராடமருங்கெலாம்
போதிலங்கமலம்மதுவார்புனற்பூந்தராய்ச்
சோதியஞ்சுடர்மேனிவெண்ணீறணிவீர்சொலீர்
1475 காதிலங்குழைசங்கவெண்டோடுடன்வைத்ததே. ௬, எ

வருக்கமார்தருவான்கடுவன்னொடுமந்திகள்
தருக்கொள்சோலைதருங்கனிமாந்தியபூந்தராய்த்
துரக்குமால்விடைமேல்வருவீரடிகேள்சொலீர்
1476 அரக்கனாற்றலழித்தருளாக்கியஆக்கமே. அ

வரிகொள்செங்கயல்பாய்புனல்சூழ்ந்தமருங்கெலாம்
புரிசைநீடுயர்மாடநிலாவியபூந்தராய்ச்
சுருதிபாடியபாணியல்தூமொழியீர்சொலீர்
1477 கரியமாலயன்நேடியுமைக்கண்டிலாமையே. ௯

வண்டலங்கழனிம்மடைவாளைகள்பாய்புனற்
புண்டரீகமலர்ந்துமதுத்தருபூந்தராய்த்
தொண்டர்வந்தடிபோற்றிசெய்தொல்கழலீர்சொலீர்
1478 குண்டர்சாக்கியர்கூறியதாங்குறியின்மையே. ௧௦

மகரவார்கடல்வந்தணவும்மணற்கானல்வாய்ப்
புகலிஞானசம்பந்தனெழில்மிகுபூந்தராய்ப்
பகவனாரைப்பரவுசொன்மாலைபத்தும்வல்லார்
1479 அகல்வர்தீவினைநல்வினையோடுடனாவரே. ௧௧

**2** **வி**ண்டெலாமலரவ்விரைநாறுதண்டேன்விம்மி
வண்டெலாநசையாலிசைபாடும்வலஞ்சுழித்
தொண்டெலாம்பரவுஞ்சுடர்போலொளியீர்சொலீர்
1480 பண்டெலாம்பலிதேர்ந்தொலிபாடல்பயின்றதே. ௧

பாரல்வெண்குருகும்பகுவாயனநாரையும்
வாரல்வெண்டிரைவாயிரைதேரும்வலஞ்சுழி
மூரல்வெண்முறுவல்நகுமொய்யொளியீர்சொலீர்
1481 ஊரல்வெண்டலைகொண்டுலகொக்கவுழன்றதே. ௨

கிண்ணவண்ணமலருங்கிளர்தாமரைத்தாதளாய்
வண்ணநுண்மணல்மேலனம்வைகும்வலஞ்சுழிச்
சுண்ணவெண்பொடிக்கொண்டுமெய்பூசவலீர்சொலீர்
1482 விண்ணவர்தொழவெண்டலையிற்பலிகொண்டதே. ௩

கோடெலாநிறையக்குவளைம்மலருங்குழி
மாடெலாமலிநீர்மணநாறும்வலஞ்சுழிச்
சேடெலாமுடையீர்சிறுமான்மறியீர்சொலீர்
1483 நாடெலாமறியத்தலையின்னறவேற்றதே. ௪

கொல்லைவென்றபுனத்திற்குருமாமணிகொண்டுபோய்
வல்லைநுண்மணல்மேலனம்வைகும்வலஞ்சுழி
முல்லைவெண்முறுவல்நகையாளொளியீர்சொலீர்
1484 சில்லைவெண்டலையிற்பலிகொண்டுழல்செல்வமே. ௫

பூசநீர்பொழியுப்புனற்பொன்னியிற்பன்மலர்
வாசநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழித்
தேசநீர்திருநீர்சிறுமான்மறியீர்சொலீர்
1485 ஏசவெண்டலையிற்பலிகொள்வதிலாமையே. ௬

கந்தமாமலர்ச்சந்தொடுகாரகிலுந்தழீஇ
வந்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
அந்தநீர்முதல்நீர்நடுவாமடிகேள்சொலீர்
1486 பந்தநீர்கருதாதுலகிற்பலிகொள்வதே. ௭

தேனுற்றநறுமாமலர்ச்சோலையில்வண்டினம்
வானுற்றநசையாலிசைபாடும்வலஞ்சுழிக்
கானுற்றகளிற்றின்னுரிபோர்க்கவல்லீர்சொலீர்
1487 ஊனுற்றதலைகொண்டுலகொக்கவுழன்றதே. ௮

தீர்த்தநீர்வந்திழிபுனற்பொன்னியிற்பன்மலர்
வார்த்தநீர்குடைவாரிடர்தீர்க்கும்வலஞ்சுழி
ஆர்த்துவந்தஅரக்கனையன்றடர்த்தீர்சொலீர்
1488 சீர்த்தவெண்டலையிற்பலிகொள்வதுஞ்சீர்மையே. ௯

உரமனுஞ்சடையீர்விடையீருமதின்னருள்
வரமனும்பெறலாவதுமெந்தைவலஞ்சுழிப்
பிரமனுந்திருமாலுமளப்பரியீர்சொலீர்
1489 சிரமெனுங்கலனிற்பலிவேண்டியசெல்வமே. ௧௦

வீடுஞானமும்வேண்டுதிரேல்விரதங்களால்
வாடிஞானமென்னாவதுமெந்தைவலஞ்சுழி
நாடிஞானசம்பந்தனசெந்தமிழ்கொண்டிசை
1490 பாடுஞானம்வல்லாரடிசேர்வதுஞானமே. ௧௧

3 பூவலர்ந்தனகொண்டுமுப்போதுமும்பொற்கழல்
தேவர்வந்துவணங்குமிகுதெளிச்சேரியீர்
மேவருந்தொழிலாளொடுகேழற்பின்வேடனாம்
1491 பாவகங்கொடுநின்றதுபோலுநும்பான்மையே. ௧

விளைக்கும்பத்திக்குவிண்ணவர்மண்ணவரேத்தவே
திளைக்குந்தீர்த்தமறுதிகழ்தெளிச்சேரியீர்
வளைக்குந்திண்சிலைமேலைந்துபாணமுந்தானெய்து
1492 களிக்குங்காமனையெங்ஙனநீர்கண்ணிற்காய்ந்ததே. ௨

வம்படுத்தமலர்ப்பொழில்சூழமதிதவழ்
செம்படுத்தசெழும்புரிசைத்தெளிச்சேரியீர்
கொம்படுத்ததொர்கோலவிடைமிசைக்கூர்மையோ
1493 டம்படுத்தகண்ணுளொடுமேவலழகிதே. ௩

காருலாங்கடலிப்பிகள்முத்தங்கரைப்பெயும்
தேருலாநெடுவீதியதார்தெளிச்சேரியீர்
ஏருலாம்பலிக்கேகிடைவைப்பிடமின்றியே
1494 வாருலாமுலையாளையொர்பாகத்துவைத்ததே. ௪

பக்கநுந்தமைப்பார்ப்பதியேத்திமுன்பாவிக்கும்
செக்கர்மாமதிசேர்மதில்சூழ்தெளிச்சேரியீர்
மைக்கொள்கண்ணியர்கைவளைமால்செய்துவெளவவே
1495 நக்கராயுலகெங்கும்பலிக்குநடப்பதே. ௫

தவளவெண்பிறைதோய்தருதாழ்பொழில்சூழநல்
திவளமாமணிமாடந்திகழ்தெளிச்சேரியீர்
குவளைபோற்கண்ணிதுண்ணெனவந்துகுறுகிய
1496 கவளமால்கரியெங்ஙனநீர்கையிற்காய்ந்ததே. ௬

கோடடுத்தபொழிலின்மிசைக்குயில்கூவிடும்
சேடடுத்ததொழிலின்மிகுதெளிச்சேரியீர்
மாடடுத்தமலர்க்கண்ணினாள்கங்கைநங்கையைத்
1497 தோடடுத்தமலர்ச்சடையென்கொல்நீர்சூடிற்றே. ௭

கொத்திரைத்தமலர்க்குழலாள்குயில்கோலஞ்சேர்
சித்திரக்கொடிமாளிகைசூழ்தெளிச்சேரியீர்
வித்தகப்படைவல்லஅரக்கன்விறற்றலை
1498 பத்திரட்டிக்கரநெரித்திட்டதும்பாதமே. ௮

காலெடுத்ததிரைக்கைகரைக்கெறிகானல்சூழ்
சேலடுத்தவயற்பழனத்தெளிச்சேரியீர்
மாலடித்தலம்மாமலரான்முடிதேடியே
1499 ஓலமிட்டிடஎங்ஙனமோருருக்கொண்டதே. ௯

மந்திரந்தருமாமறையோர்கள்தவத்தவர்
செந்திலங்குமொழியவர்சேர்தெளிச்சேரியீர்
வெந்தலாகியசாக்கியரோடுசமணர்கள்
1500 தந்திறத்தனநீக்குவித்தீரோர்சதிரரே. ௧௦

திக்குலாம்பொழில்சூழ்தெளிச்சேரியெஞ்செல்வனை
மிக்ககாழியுள்ஞானசம்பந்தன்விளம்பிய
தக்கபாடல்கள்பத்தும்வல்லார்கள்தடமுடித்
1501 தொக்கவானவர்சூழஇருப்பவர்சொல்லிலே. கக

4 கரையுலாங்கடலிற்பொலிசங்கம்வெள்ளிப்பிவன்
திரையுலாங்கழிமீனுகளுந்திருவான்மியூர்
உரையுலாம்பொருளாயுலகாளுடையீர்சொலீர்
1502 வரையுலாமடமாதுடனாகியமாண்பதே. க

சந்துயர்ந்தெழுகாரகில்தண்புனல்கொண்டுதம்
சிந்தைசெய்தடியார்பரவுந்திருவான்மியூர்ச்
சுந்தரக்கழல்மேற்சிலம்பார்க்கவல்லீர்சொலீர்
1503 அந்தியின்னொளியின்னிறமாக்கியவண்ணமே. உ

கானயங்கியதண்கழிசூழ்கடலின்புறம்
தேனயங்கியபைம்பொழில்சூழ்திருவான்மியூர்த்
தோனயங்கமராடையினீரடிகேள்சொலீர்
1504 ஆனையங்கவ்வுரிபோர்த்தனலாடவுகந்ததே. ங

மஞ்சுலாவியமாடமதிற்பொலிமாளிகைச்
செஞ்சொலாளர்கள்தாம்பயிலுந்திருவான்மியூர்த்
துஞ்சுவஞ்சிருளாடலுகக்கவல்லீர்சொலீர்
1505 வஞ்சநஞ்சுண்டுவானவர்க்கின்னருள்வைத்ததே. ச

மண்ணினிற்புகழ்பெற்றவர்மங்கையர்தாம்பயில்
திண்ணெனப்புரிசைத்தொழிலார்திருவான்மியூர்த்
துண்ணெனத்திரியுஞ்சரிதைத்தொழிலீர்சொலீர்
1506 விண்ணினிற்பிறைசெஞ்சடைவைத்தவியப்பதே. ரு

போதுலாவியதண்பொழில்சூழ்புரிசைப்புறம்
தீதிலந்தணரோத்தொழியாத்திருவான்மியூர்ச்
சூதுலாவியகொங்கையொர்பங்குடையீர்சொலீர்
1507 மூதெயில்லொருமூன்றெரியூட்டியமொய்ம்பதே. சா

வண்டிரைத்ததடம்பொழிலின்னிழற்கானல்வாய்த்
தெண்டிரைக்கடலோதமல்குந்திருவான்மியூர்த்
தொண்டிரைத்தெழுந்தேத்தியதொல்கழலீர்சொலீர்
1508 பண்டிருக்கொருநால்வர்க்குநீருரைசெய்ததே. எ

தக்கில்வந்ததசக்கிரிவன்றலைபத்திறத்
திக்கில்வந்தலறவ்வடர்த்தீர்திருவான்மியூர்த்
தொக்கமாதொடும்வீற்றிருந்தீருளென்சொலீர்
1509 பக்கமேபலபாரிடம்பேய்கள்பயின்றதே. ௮

பொருதுவார்கடலெண்டிசையுந்தருவாரியால்
திரிதரும்புகழ்செல்வமல்குந்திருவான்மியூர்ச்
சுருதியாரிருவர்க்குமறிவரியீர்சொலீர்
1510 எருதுமேல்கொடுழன்றுகந்தில்பலியேற்றதே. ௯

மைதழைத்தெழுசோலையின்மாலைசேர்வண்டினம்
செய்தவத்தொழிலாரிசைசேர்திருவான்மியூர்
மெய்தவப்பொடிபூசியமேனியினீர்சொலீர்
1511 கைதவச்சமண்சாக்கியர்கட்டுரைக்கின்றதே. ௧௦

மாதொர்கூறுடைநற்றவனைத்திருவான்மியூர்
ஆதியெம்பெருமானருள்செய்யவினாவுரை
ஓதியன்றெழுகாழியுள்ஞானசம்பந்தன்சொல்
1512 நீதியால்நினைவார்நெடுவானுலகாள்வரே. ௧௧

5 நீடல்மேவுநிமிர்புன்சடைமேலோர்நிலாமுளை
சூடல்மேவுமறையின்முறையாலோர்சுலாவழல்
ஆடல்மேவுமவர்மேயஅனேகதங்காவதம்
1513 பாடல்மேவுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. ௧

சூலமுண்டுமழுவுண்டவர்தொல்படைசூழ்கடல்
ஆலமுண்டபெருமான்றனனேகதங்காவதம்
நீலமுண்டதடங்கண்ணுமைபாகம்நிலாயதோர்
1514 கோலமுண்டளவில்லைகுலாவியகொள்கையே. ௨

செம்பினாருமதில்மூன்றெரியச்சினவாயதோர்
அம்பினாலெய்தருள்வில்லியனேகதங்காவதம்
கொம்பின்நேரிடையாளொடுங்கூடிக்கொல்லேறுடை
1515 நம்பன்நாமநவிலாதனநாவெனலாகுமே. ௩

தந்தத்திந்தத்தடமென்றருவித்திரள்பாய்ந்துபோய்ச்
சிந்தவெந்தகதிரோனொடுமாசறுதிங்களார்
அந்தமில்லவளவில்லஅனேகதங்காவதம்
1516 எந்தைவெந்தபொடிநீறணிவார்க்கிடமாவதே. ௪

பிறையுமாசில்கதிரோனறியாமைப்பெயர்ந்துபோய்
உறையுங்கோயில்பசும்பொன்னணியாரசும்பார்புனல்
அறையுமோசைபறைபோலுமனேகதங்காவதம்
1517 இறையெம்மீசனெம்மானிடமாகவுகந்ததே. ரு

தேனையேறுநறுமாமலர்கொண்டடிசேர்த்துவீர்
ஆனையேறுமணிசாரலனேகதங்காவதம்
வானையேறுநெறிசென்றுணருந்தனைவல்லிரேல்
1518 ஆனையேறுமுடியானருள்செய்வதும்வானையே. சு

வெருவிவேழமிரியக்கதிர்முத்தொடுவெண்பளிங்
குருவிவீழவயிரங்கொழியாவகிலுந்திவெள்
அருவிபாயுமணிசாரலனேகதங்காவதம்
1519 மருவிவாழும்பெருமான்கழல்சேர்வதுவாய்மையே. எ

ஈரமேதுமிலனாகியெழுந்தஇராவணன்
வீரமேதுமிலனாகவிளைத்தவிலங்கலான்
ஆரம்பாம்பதணிவான்றனனேகதங்காவதம்
1520 வாரமாகிநினைவார்வினையாயினமாயுமே. அ

கண்ணன்வண்ணமலரானொடுங்கூடியோர்க்கையமாய்
எண்ணும்வண்ணமறியாமையெழுந்ததோராரழல்
அண்ணல்நண்ணுமணிசாரலனேகதங்காவதம்
1521 நண்ணும்வண்ணமுடையார்வினையாயினநாசமே. கூ

மாபதம்மறியாதவர்சாவகர்சாக்கியர்
ஏபதம்படநின்றிறுமாந்துழல்வார்கள்தாம்
ஆபதம்மறிவீருளிராகிலனேகதங்
1522 காபதம்மமர்ந்தான்கழல்சேர்தல்கருமமே. கo

தொல்லையூழிப்பெயர்தோன்றியதோணிபுரத்திறை
நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தன்நல்லார்கள்முன்
அல்லல்தீரவுரைசெய்தஅனேகதங்காவதம்
1523 சொல்லநல்லஅடையும்மடையாசுடுதுன்பமே. கக

6 கோடல்கோங்கங்குளிர்கூவிளமாலைகுலாய்சீர்
ஓடுகங்கைஒளிவெண்பிறைசூடுமொருவனார்
பாடல்வீணைமுழவங்குழல்மொந்தைபண்ணாகவே
1524 ஆடுமாறுவல்லானுமையாறுடையையனே. க

தன்மையாருமறிவாரில்லைதாம்பிறரெள்கவே
பின்னுமுன்னுஞ்சிலபேய்க்கணஞ்சூழத்திரிதர்வர்
துன்னவாடையுடுப்பர்சுடலைப்பொடிப்பூசுவர்
1525 அன்னமாலுந்துறையானுமையாறுடையையனே. ௨

கூறுபெண்ணுடைகோவணமுண்பதும்வெண்டலை
மாறிலாருங்கொள்வாரில்லைமார்பிலணிகலம்
ஏறுமேறித்திரிவரிமையோர்தொழுதேத்தவே
1526 ஆறுநான்குஞ்சொன்னானுமையாறுடையையனே. ௩

பண்ணினல்லமொழியார்பவளத்துவர்வாயினார்
எண்ணினல்லகுணத்தாரிணைவேல்வென்றகண்ணினார்
வண்ணம்பாடிவலிபாடித்தம்வாய்மொழிபாடவே
1527 அண்ணல்கேட்டுகந்தானுமையாறுடையையனே. ௪

வேனலானைவெருவவுரிபோர்த்துமையஞ்சவே
வானையூடறுக்கும்மதிசூடியமைந்தனார்
தேனெய்பால்தயிர்தெங்கிளநீர்கரும்பின்றெளி
1528 ஆனஞ்சாடுமுடியானுமையாறுடையையனே. ௫

எங்குமாகிநின்றானுமியல்பறியப்படா
மங்கைபாகங்கொண்டானுமதிசூடுமைந்தனும்
பங்கமில்பதினெட்டொடுநான்குக்குணர்வுமாய்
1529 அங்கமாறுஞ்சொன்னானுமையாறுடையையனே. ௬

ஓதியாருமறிவாரில்லையோதியுலகெலாம்
சோதியாய்நிறைந்தான்சுடர்ச்சோதியுட்சோதியான்
வேதியாகிவிண்ணாகிமண்ணோடெரிகாற்றுமாய்
1530 ஆதியாகிநின்றானுமையாறுடையையனே. ௭

குரவநாண்மலர்கொண்டடியார்வழிபாடுசெய்
விரவிநீறணிவார்சிலதொண்டர்வியப்பவே
பரவிநாள்தொறும்பாடநம்பாவம்பறைதலால்
1531 அரவமார்த்துகந்தானுமையாறுடையையனே. ௮

உரைசெய்தொல்வழிசெய்தறியாவிலங்கைக்குமன்
வரைசெய்தோளடர்த்தும்மதிசூடியமைந்தனார்
கரைசெய்காவிரியின்வடபாலதுகாதலான்
1532 அரைசெய்மேகலையானுமையாறுடையையனே. ௯

மாலுஞ்சோதிமலரானுமறிகிலாவாய்மையான்
காலங்காம்புவயிரங்கடிகையன்பொற்கழல்
கோலமாய்க்கொழுந்தீன்றுபவளந்திரண்டதோர்
1533 ஆலநீழலுளானுமையாறுடையையனே. ௧0

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையால்
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யல [தவே
மைகொள்கண்டத்தெண்டோள்முக்கணன்கழல்வாழ்த்
1534 ஐயந்தேர்ந்தளிப்பானுமையாறுடையையனே. ௧௧

பலிதிரிந்துழல்பண்டங்கன்மேயஐயாற்றினைக்
கலிகடந்தகையான்கடற்காழியர்காவலன்
ஒலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்தும்வல்லார்கள்போய்
1535 மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே. ௧௨

7 வன்னிகொன்றைமதமத்தமெருக்கொடுகூவிளம்
பொன்னியன்றசடையிற்பொலிவித்தபுராணனார்
தென்னவென்றுவரிவண்டிசைசெய்திருவாஞ்சியம்
1536 என்னையாளுடையானிடமாகவுகந்ததே. ௧

காலகாலர்கரிகானிடைமாநடமாடுவர்
மேலர்வேலைவிடமுண்டிருள்கின்றமிடற்றினர்
மாலைகோலமதிமாடமன்னுந்திருவாஞ்சியம்
1537 ஞாலம்வந்துபணியப்பொலிகோயில்நயந்ததே. ௨

மேவிலொன்றர்விரிவுற்றஇரண்டினர்மூன்றுமாய்
நாவின்நாலருடலஞ்சினராறரேழோசையர்
தேவிலெட்டர்திருவாஞ்சியம்மேவியசெல்வனார்
1538 பாவந்தீர்ப்பர்பழிபோக்குவர்தம்மடியார்கட்கே. ௩

சூலமேந்திவளர்கையினர்மெய்சுவண்டாகவே
சாலநல்லபொடிப்பூசுவர்பேசுவர்மாமறை
சீலமேவுபுகழாற்பெருகுந்திருவாஞ்சியம்
1539 ஆலமுண்டஅடிகள்ளிடமாகஅமர்ந்ததே. ௪

கையிலங்குமறியேந்துவர்காந்தளம்மெல்விரல்
தையல்பாகமுடையாரடையார்புரஞ்செற்றவர்
செய்யமேனிக்கரியம்மிடற்றார்திருவாஞ்சியத்
1540 தையர்பாதமடைவார்க்கடையாஅருநோய்களே. ௫

அரவம்பூண்பரணியுஞ்சிலம்பார்க்கஅகந்தொறும்
இரவில்நல்லபலிபேணுவர்நாணிலர்நாமமே
பரவுவார்வினைதீர்க்கநின்றூர்திருவாஞ்சியம்
1541 மருவியேத்தமடமாதொடுநின்றவெம்மைந்தரே. ௬

விண்ணிலானபிறைசூடுவர்தாழ்ந்துவிளங்கவே
கண்ணினாலநங்கன்னுடலம்பொடியாக்கினார்
பண்ணிலானஇசைபாடல்மல்குந்திருவாஞ்சியத்
1542 தண்ணலார்தம்மடிபோற்றவல்லார்க்கில்லையல்லலே. ௭

மாடநீடுகொடிமன்னியதென்னிலங்கைக்குமன்
வாடியூடவரையாலடர்த்தன்றருள்செய்தவர்
வேடவேடர்திருவாஞ்சியமேவியவேந்தரைப்
1543 பாடநீடுமனத்தார்வினைபற்றறுப்பார்களே. ௮

செடிகொள்நோயின்னடையார்திறம்பார்செறுதீவினை
கடியகூற்றமுங்கண்டகலும்புகல்தான்வரும்
நெடியமாலொடயனேத்தநின்றூர்திருவாஞ்சியத்
1544 தடிகள்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே. ௯

பிண்டமுண்டுதிரிவார்பிரியுந்துவராடையார்
மிண்டர்மிண்டும்மொழிமெய்யலபொய்யிலையெம்மிறை
வண்டுகெண்டிமருவும்பொழில்சூழ்திருவாஞ்சியத்
1545 தண்டவாணனடிகைதொழுவார்க்கில்லையல்லலே. ௧௦

தென்றல்துன்றும்பொழில்சென்றணையுந்திருவாஞ்சியத்
தென்றுநின்றஇறையானையுணர்ந்தடியேத்தலால்
நன்றுகாழிமறைஞானசம்பந்தனசெந்தமிழ்
1546 ஒன்றுமுள்ளமுடையாரடைவாருயர்வானமே. ௧௧

8 **வா**னுலாவும்மதிவந்துலாவும்மதில்மாளிகை
தேனுலாவும்மலர்ச்சோலைமல்குந்திகழ்சிக்கலுள்
வேனல்வேளைவிழித்திட்டவெண்ணெய்ப்பெருமானடி
1547 ஞானமாகந்நினைவார்வினையாயினநையுமே. ௧

மடங்கொள்வாளைகுதிகொள்ளும்மணமலர்ப்பொய்கைசூழ்
திடங்கொள்மாமறையோரவர்மல்கியசிக்கலுள் [யே
விடங்கொள்கண்டத்துவெண்ணெய்ப்பெருமானடிமேவி
1548 அடைந்துவாழும்மடியாரவரல்லலறுப்பரே. ௨

நீலநெய்தல்நிலவிம்மலருஞ்சுனைநீடிய
சேலுமாலுங்கழனிவ்வளமல்கியசிக்கலுள்
வேலொண்கண்ணியினாளையொர்பாகன்வெண்ணெய்ப்பிரான்
1549 பாலவண்ணன்கழலேத்தநம்பாவம்பறையுமே. ௩

கந்தமுந்தக்கைதைபூத்துக்கமழ்ந்துசேரும்பொழிற்
செந்துவண்டின்னிசைபாடல்மல்குந்திகழ்சிக்கலுள்
வெந்தவெண்ணீற்றண்ணல்வெண்ணெய்ப்பிரான்விரையார்கழல்
1550 சிந்தைசெய்வார்வினையாயினதேய்வதுதிண்ணமே. ௪

மங்குல்தங்கும்மறையோர்கள்மாடத்தயலேமிகு
தெங்குதுங்கப்பொழிற்செல்வமல்குந்திகழ்சிக்கலுள்
வெங்கண்வெள்ளேறுடைவெண்ணெய்ப்பிரானடிமேவவே
1551 தங்குமேற்சரதந்திருநாளுந்தகையுமே. ௫

வண்டிரைத்தும்மதுவிம்மியமாமலர்ப்பொய்கைசூழ்
தெண்டிரைக்கொள்புனல்வந்தொழுகும்வயற்சிக்கலுள்
விண்டிரைத்தம்மலராற்றிகழ்வெண்ணெய்ப்பிரானடி
1552 கண்டிரைத்தும்மனமேமதியாய்கதியாகவே. ௬

முன்னுமாடம்மதில்மூன்றுடனேயெரியாய்விழத்
துன்னுவார்வெங்கணையொன்றுசெலுத்தியசோதியான்
செந்நெலாரும்வயற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
1553 உன்னிநீடம்மனமேநினையாய்வினைஓயவே. ௭

தெற்றலாகியதென்னிலங்கைக்கிறைவன்மலை
பற்றினான்முடிபத்தொடுதோள்கள்நெரியவே
செற்றதேவன்நஞ்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடி
1554 உற்றுநீநினையாய்வினையாயினஓயவே. ௮

மாலினோடருமாமறைவல்லமுனிவனும்
கோலினார்குறுகச்சிவன்சேவடிகோலியும்
சீலந்தாமறியார்திகழ்சிக்கல்வெண்ணெய்ப்பிரான்
1555 பாலும்பன்மலர்தூவப்பறையுநம்பாவமே. ௯

பட்டைநற்றுவராடையினாரொடும்பாங்கிலாக்
கட்டமண்கழுக்கள்சொல்லினைக்கருதாதுநீர்
சிட்டன்சிக்கல்வெண்ணெய்ப்பெருமான்செழுமாமறைப்
1556 பட்டன்சேவடியேபணிமின்பிணிபோகவே. ௧௦

கந்தமார்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனல்
செந்தண்பூம்பொழிற்சிக்கல்வெண்ணெய்ப்பெருமானடிச்
சந்தமாச்சொன்னசெந்தமிழ்வல்லவர்வானிடை
1557 வெந்தநீறணியும்பெருமானடிமேவரே. ௧௧

9 களையும்வல்வினையஞ்சல்நெஞ்சேகருதார்புரம்
உளையும்பூசல்செய்தானுயர்மால்வரைநல்விலா
வளையவெஞ்சரம்வாங்கியெய்தான்மதுத்தும்பிவண்
1558 டளையுங்கொன்றையந்தார்மழபாடியுளண்ணலே. ௧

காச்சிலாதபொன்னோக்குங்கனவயிரத்திரள்
ஆச்சிலாதபளிங்கினனஞ்சுமுன்னாடினான்
பேச்சினாலுமக்காவதென்பேதைகாள்பேணுமின்
1559 வாச்சமாளிகைசூழ்மழபாடியைவாழ்த்துமே. ௨

உரங்கெடுப்பவனும்பர்களாயவர்தங்களைப்
பரங்கெடுப்பவன்நஞ்சையுண்டுபகலோன்றனை
முரண்கெடுப்பவன்முப்புரந்தீயெழச்செற்றுமுன்
1560 வரங்கொடுப்பவன்மாமழபாடியுள்வள்ளலே. ௩

பள்ளமார்சடையிற்புடையேயடையப்புனல்
வெள்ளமாதரித்தான்விடையேறியவேதியன்
வள்ளல்மாமழபாடியுள்மேயமருந்தினை
1561 உள்ளமாதரிமின்வினையாயின ஓயவே. ௪

தேனுலாமலர்கொண்டுமெய்த்தேவர்கள்சித்தர்கள்
பால்நெயஞ்சுடனாட்டமுன்னாடியபால்வணன்
வானநாடர்கள்கைதொழுமாமழபாடியெங் -
1562 கோனைநாள்தொறுங்கும்பிடவேகுறிகூடுமே. ௫

தெரிந்தவன்புரமூன்றுடன்மாட்டியசேவகன்
பரிந்துகைதொழுவாரவர்தம்மனம்பாவினான்
வரிந்தவெஞ்சிலையொன்றுடையான்மழபாடியைப்
1563 புரிந்துகைதொழுமின்வினையாயினபோகுமே. ௬

சந்தவார்குழலாளுமைதன்னொருகூறுடை
எந்தையானிமையாதமுக்கண்ணினனெம்பிரான்
மைந்தன்வார்பொழில்சூழ்மழபாடிமருந்தினைச்
1564 சிந்தியாவெழுவார்வினையாயினதேயுமே. ௭

இரக்கமொன்றுமிலானிறையான்றிருமாமலை
உரக்கையாலெடுத்தான்றனதோண்முடிபத்திற
விரற்றலைந்நிறுவியுமையாளொடுமேயவன்
1565 வரத்தையேகொடுக்கும்மழபாடியுள்வள்ளலே. அ

ஆலமுண்டமுதம்மமரர்க்கருளண்ணலார்
காலனாருயிர்வீட்டியமாமணிகண்டனார்
சாலநல்லடியார்தவத்தார்களுஞ்சார்விடம்
1566 மாலயன்வணங்கும்மழபாடியெம்மைந்தனே. கூ

கலியின்வல்லமணுங்கருஞ்சாக்கியப்பேய்களும்
நலியுநாள்கெடுத்தாண்டஎன்நாதனார்வாழ்பதி
பலியும்பாட்டொடுபண்முழவும்பலவோசையும்
1567 மலியுமாமழபாடியைவாழ்த்திவணங்குமே. க0

மலியுமாளிகைசூழ்மழபாடியுள்வள்ளலைக்
கலிசெய்மாமதில்சூழ்கடற்காழிக்கவுணியன்
1568 * * * * கக

10 சீரினார்மணியுமகில்சந்துஞ்செறிவரை
வாரிநீர்வருபொன்னிவடமங்கலக்குடி
நீரின்மாமுனிவன்நெடுங்கைகொடுநீர்தனைப்
1569 பூரித்தாட்டியர்ச்சிக்கவிருந்தபுராணனே. க

பணங்கொளாடரவல்குல்நல்லார்பயின்றேத்தவே
மணங்கொள்மாமயிலாலும்பொழில்மங்கலக்குடி
இணங்கிலாமறையோரிமையோர்தொழுதேத்திட
1570 அணங்கினோடிருந்தானடியேசரணாகுமே. உ

கருங்கையானையினீருரிபோர்த்திடுகள்வனார்
மருங்கெலாமணமார்பொழில்சூழ்மங்கலக்குடி
அரும்புசேர்மலர்க்கொன்றையினானடியன்போடு
1571 விரும்பியேத்தவல்லார்வினையாயினவீடுமே. ங

பறையினோடொலிபாடலுமாடலும்பாரிடம்
மறையினோடியல்மல்கிடுவார்மங்கலக்குடிக்
குறைவிலாநிறைவேகுணமில்குணமேயென்று
1572 முறையினால்வணங்குமவர்முன்னெறிகாண்பரே. ச

ஆனிலங்கிளரைந்துமவிர்முடியாடியோர்
மானிலங்கையினன் மணமார்மங்கலக்குடி
ஊனில்வெண்டலைக்கையுடையானுயர்பாதமே
1573 ஞானமாகநின்றேத்தவல்லார்வினைநாசமே. ரு

தேனுமாயமுதாகிநின்றான்தெளிசிந்தையுள்
வானுமாய்மதிசூடவல்லான்மங்கலக்குடி
கோனைநாள்தொறுமேத்திக்குணங்கொடுகூறுவார்
1574 ஊனமானவைபோயறுமுய்யும்வகையதே. சு

வேள்படுத்திடுகண்ணினன்மேருவில்லாகவே
வாளரக்கர்புரமெரித்தான்மங்கலக்குடி
ஆளுமாதிப்பிரானடிகள்ளடைந்தேத்தவே
1575 கோளுநாளவைபோயறுங்குற்றமில்லார்களே. எ

பொலியுமால்வரைபுக்கெடுத்தான்புகழ்ந்தேத்திட
வலியும்வாளொடுநாள்கொடுத்தான்மங்கலக்குடிப்
புலியினாடையினானடியேத்திடும்புண்ணியர்
1576 மலியும்வானுலகம்புகவல்லவர்காண்மினே. அ

ஞாலமுன்படைத்தான்நளிர்மாமலர்மேலயன்
மாலுங்காணவொணாவெரியான்மங்கலக்குடி
ஏலவார்குழலாளொருபாகமிடங்கொடு
1577 கோலமாகிநின்றான்குணங்கூறுங்குணமதே. கூ

மெய்யின்மாசினர்மேனிவிரிதுவராடையர்
பொய்யைவிட்டிடும்புண்ணியர்சேர்மங்கலக்குடிச்
செய்யமேனிச்செழும்புனற்கங்கைசெறிசடை
1578 ஐயன்சேவடியேத்தவல்லார்க்கழகாகுமே. க0

மந்தமாம்பொழில்சூழ்மங்கலக்குடிமன்னிய
எந்தையையெழிலார்பொழிற்காழியர்காவலன்
சிந்தைசெய்தடிசேர்த்திடுஞானசம்பந்தன்சொல்
1579 முந்தியேத்தவல்லாரிமையோர்முதலாவரே. கக

**11** நல்லானைநான்மறையோடியலாறங்கம்
வல்லானைவல்லவர்பால்மலிந்தோங்கிய
சொல்லானைத்தொன்மதிற்காழியேகோயிலாம்
1580 இல்லானையேத்தநின்றார்க்குளதின்பமே. க

நம்மானமாற்றிநமக்கருளாய்நின்ற
பெம்மானைப்பேயுடனாடல்புரிந்தானை
அம்மானையந்தணர்சேருமணிகாழி
1581 எம்மானையேத்தவல்லார்க்கிடரில்லையே. ௨

அருந்தானையன்புசெய்தேத்தகில்லார்பாற்
பொருந்தானைப்பொய்யடிமைத்தொழில்செய்வாருள்
விருந்தானைவேதியரோதிமிடைகாழி
1582 இருந்தானையேத்துமின்நும்வினையேகவே. ௩

புற்றானைப்புற்றரவம்மரையின்மிசைச்
சுற்றானைத்தொண்டுசெய்வாரவர்தம்மொடும்
அற்றானையந்தணர்காழியமர்கோயில்
1583 பற்றானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. ௪

நெதியானைநெஞ்சிடங்கொள்ளநினைவார்தம்
விதியானைவிண்ணவர்தாம்வியந்தேத்திய
கதியானைக்காருலவும்பொழிற்காழியாம்
1584 பதியானைப்பாடுமின்நும்வினைபாறவே. ௫

செப்பானமென்முலையாளைத்திகழ்மேனி
வைப்பானைவார்கழலேத்திநினைவார்தம்
ஒப்பானையோதமுலாவுகடற்காழி
1585 மெய்ப்பானைமேவியமாந்தர்வியந்தாரே. ௬

துன்பானைத்துன்பமழித்தருளாக்கிய
இன்பானையேழிசையின்னிலைபேணுவார்
அன்பானையணிபொழிற்காழிநகர்மேய
1586 நம்பானைநண்ணவல்லார்வினைநாசமே. ௭

குன்றானைக்குன்றெடுத்தான்புயநாலைந்தும்
வென்றானைமென்மலரானொடுமால்தேட
நின்றானைநேரிழையாளொடுங்காழியுள்
1587 நன்றானைநம்பெருமானைநணுகுமே. ௮

சாவாயும்வாதுசெய்சாவகர்சாக்கியர்
மேவாதசொல்லவைகேட்டுவெகுளேன்மின்
பூவாயகொன்றையினானைப்புனற்காழிக்
1588 கோவாயகொள்கையினானடிகூறுமே. ௯, ௧0

கழியார்சீரோதமல்குங்கடற்காழியுள்
ஒழியாதுகோயில்கொண்டானையுகந்துள்கித்
தழியார்சொல்ஞானசம்பந்தன்தமிழார
1589 மொழிவார்கள்மூவுலகும்பெறுவார்களே. கக

**12** மறையானைமாசிலாப்புன்சடைமல்குவெண்
பிறையானைப்பெண்ணொடாணாகியபெம்மானை
இறையானையேர்கொள்கச்சித்திருவகம்பத்
1590 துறைவானையல்லதுள்காதெனதுள்ளமே. க

நொச்சியேவன்னிகொன்றைமதிகூவிளம்
உச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பம்மேயகறைக்கண்டனை
1591 நச்சியேதொழுமின்நும்மேல்வினைநையுமே. உ

பாராருமுழவமொந்தைகுழல்யாழொலி
சீராலேபாடலாடல்சிதைவில்லதோர்
ஏரார்பூங்கச்சியேகம்பனையெம்மானைச்
1592 சேராதாரின்பமாயங்நெறிசேராரே. ங

குன்றேய்க்குநெடுவெண்மாடக்கொடிகூடிப்போய்
மின்றேய்க்குமுகில்கள்தோயும்வியன்கச்சியுள்
மன்றேய்க்குமல்குசீரான்மலியேகம்பம்
1593 சென்றேய்க்கும்சிந்தையார்மேல்வினைசேராவே. ச

சடையானைத்தலைகையேந்திப்பலிதருவார்தம்
கடையேபோய்மூன்றுங்கொண்டான்கலிக்கச்சியுள்
புடையேபொன்மலருங்கம்பைக்கரையேகம்பம்
1594 உடையானையல்லதுள்காதெனதுள்ளமே. ரு

மழுவாளோடெழில்கொள்சூலப்படைவல்லார்தம்
கெழுவாளோரிமையாருச்சியுமையாள்கங்கை
வழுவாமேமல்குசீரால்வளரேகம்பம்
1595 தொழுவாரேவிழுமியார்மேல்வினைதுன்னாவே. சு

விண்ணுளார்மறைகள்வேதம்விரித்தோதுவார்
கண்ணுளார்கழலின்வெல்வார்கரிகாலனை
நண்ணுவாரெழில்கொள்கச்சிநகரேகம்பத்
1596 தண்ணலாராடுகின்றஅலங்காரம்மே. எ

தூயானைத் தூயவாயம்மறையோதிய
வாயானைவாளரக்கன்வலிவாட்டிய
தீயானைத் தீதில்கச்சித்திருவேகம்பம்
1597 மேயானைமேவுவாரென் தலைமேலாரே. அ

நாகம்பூணேறதேறல்நறுங்கொன்றைதார்
பாகம்பெண்பலியுமேற்பர்மறைபாடுவர்
ஏகம்பமேவியாடுமிறையிருவர்க்கும்
1598 மாகம்பமறியும்வண்ணத்தவனல்லனே. கூ

போதியார்பிண்டியாரென்றிவர்பொய்ந்நூலை
வாதியாவம்மினம்மாவெனுங்கச்சியுள்
ஆதியார்மேவியாடுந்திருவேகம்பம்
1599 நீதியாற்றொழுமின்நும்மேல்வினைநில்லாவே. க0

அந்தண்பூங்கச்சியேகம்பனையம்மானைக்
கந்தண்பூங்காழியூரன்கலிக்கோவையால்
சந்தமேபாடவல்லதமிழ்ஞானசம்
1600 பந்தன்சொற்பாடியாடக்கெடும்பாவமே. கக

13 நீற்றானைநீள்சடைமேல்நிறைவுள்ளதோர்
ஆற்றானையழகமர்மென்முலையாளையோர்
கூற்றானைக்குளிர்பொழிற்கோழம்பமேவிய
1601 ஏற்றானையேத்துமினும்மிடரேகவே. க

மையானகண்டனைமான்மறியேந்திய
கையானைக்கடிபொழிற்கோழம்பமேவிய
செய்யானைத்தேனெய்பாலுந்திகழ்ந்தாடிய
1602 மெய்யானைமேவுவார்மேல்வினைமேவாவே. உ

ஏதனையேதமிலாவிமையோர்தொழும்
வேதனைவெண்குழைதோடுவிளங்கிய
காதனைக்கடிபொழிற்கோழம்பமேவிய
1603 நாதனையேத்துமினும்வினைநையவே. ந

சடையானைத்தண்மலரான்சிரமேந்திய
விடையானைவேதமும்வேள்வியுமாயநன்
குடையானைக்குளிர்பொழில்சூழ்திருக்கோழம்பம்
1604 உடையானையுள்குமினுள்ளங்குளிரவே. ச

காரானைக்கடிகமழ்கொன்றையம்போதணி
தாரானைத்தையலோர்பால்மகிழ்ந்தோங்கிய
சீரானைச்செறிபொழிற்கோழம்பமேவிய
1605 ஊரானையேத்துமினும்மிடர்சொல்கவே. ௫

பண்டாலின்கீழலானைப்பரஞ்சோதியை
விண்டார்கள்தம்புரம்மூன்றுடனேவேவக்
கண்டானைக்கடிகமழ்கோழம்பங்கோயிலாக்
1606 கொண்டானைக்கூறுமினுள்ளங்குளிரவே. ௬

சொல்லானைச்சுடுகணையாற்புரமூன்றெய்த
வில்லானைவேதமும்வேள்வியுமானானைக்
கொல்லானையுரியானைக்கோழம்பமேவிய
1607 நல்லானையேத்துமினும்மிடர்நையவே. ௭

விற்றானைவல்லரக்கர்விறல்வேந்தனைக்
குற்றானைத்திருவிரலாற்கொடுங்காலனைச்
செற்றானைச்சீர்திகழுந்திருக்கோழம்பம்
1608 பற்றானைப்பற்றுவார்மேல்வினைபற்றாவே. ௮

நெடியானோடயனறியாவகைநின்றதோர்
படியானைப்பண்டங்கவேடம்பயின்றானைக்
கடியாருங்கோழம்பமேவியவெள்ளேற்றின்
1609 கொடியானைக்கூறுமினுள்ளங்குளிரவே. ௯

புத்தருந்தோகையம்பீலிகொள்பொய்ம்மொழிப்
பித்தரும்பேசுவபேச்சல்லபீடுடைக்
கொத்தலர்தண்பொழிற்கோழம்பமேவிய
1610 அத்தனையேத்துமினல்லலறுக்கவே. ௧௦

தண்புனலோங்குதண்ணந்தராய்மாநகர்
நண்புடைஞானசம்பந்தன்நம்பானுறை
விண்பொழிற்கோழம்பமேவியபத்திவை
1611 பண்கொளப்பாடவல்லார்க்கில்லைபாவமே. ௧௧

**14** சடையானைச்சந்திரனோடுசெங்கண்ணரா
உடையானையுடைதலையிற்பலிகொண்டூரும்
விடையானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியை
1612 உடையானையல்லதுள்காதெனதுள்ளமே. ௧

சோதியைச்சுண்ணவெண்ணீறணிந்திட்டவெம்
ஆதியையாதியுமந்தமுமில்லாத
வேதியைவேதியர்தாந்தொழும்வெண்ணியில்
1613 நீதியைநினையவல்லார்வினைநில்லாவே. ௨

கனிதனைக்கனிந்தவரைக்கலந்தாட்கொள்ளும்
முனிதனைமூவுலகுக்கொருமூர்த்தியை
நனிதனைநல்லவர்தாந்தொழும்வெண்ணியில்
1614 இனிதனையேத்துவரேதமிலாதாரே. ௩

மூத்தானைமூவுலகுக்கொருமூர்த்தியாய்க்
காத்தானைக்கனிந்தவரைக்கலந்தாளாக
ஆர்த்தானையழகமர்வெண்ணியம்மான்றன்னை
1615 ஏத்தாதாரென்செய்வாரேழையப்பேய்களே. ௪

நீரானைநிறைபுனல்சூழ்தருநீள்கொன்றைத்
தாரானைத்தையலோர்பாகமுடையானைச்
சீரானைத்திகழ்தருவெண்ணியமர்ந்துறை
1616 ஊரானையுள்கவல்லார்வினையோயுமே. ௫

முத்தினைமுழுவயிரத்திரள்மாணிக்கத்
தொத்தினைத்துளக்கமிலாதவிளக்காய
வித்தினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியில்
1617 அத்தனையடையவல்லார்க்கில்லையல்லலே. ௬

காய்ந்தானைக்காமனையுஞ்செறுகாலனைப்
பாய்ந்தானைப்பரியகைமாவுரித்தோல்மெய்யில்
மேய்ந்தானைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியில்
1618 நீந்தானைநினையவல்லார்வினைநில்லாவே. ௭

மறுத்தானைமாமலையைமதியாதோடிச்
செறுத்தானைத்தேசழியத்திகழ்தோள்முடி
இறுத்தானையெழிலமர்வெண்ணியெம்மானெனப்
1619 பொறுத்தானைப்போற்றுவாராற்றலுடையாரே. ௮

மண்ணினைவானவரோடுமனிதர்க்கும்
கண்ணினைக்கண்ணனுநான்முகனுங்காணா
விண்ணினைவிண்ணவர்தாந்தொழும்வெண்ணியில்
1620 அண்ணலையடையவல்லார்க்கில்லையல்லலே. ௯

குண்டருங்குணமிலாதசமண்சாக்கிய
மிண்டர்கள்மிண்டவைகேட்டுவெருளேன்மின்
விண்டவர்தம்புரமெய்தவன்வெண்ணியில்
1621 தொண்டராயேத்தவல்லார்துயர்தோன்றாவே. ௧௦

மருவாருமல்குகாழித்திகழ்சம்பந்தன்
திருவாருந்திகழ்தருவெண்ணியமர்ந்தானை
உருவாருமொண்டமிழ்மாலையிவைவல்லார்
1622 பொருவாகப்புக்கிருப்பார்புவலோகத்தே. ௧௧

15 நீரானேநீள்சடைமேலொருநிரைகொன்றைத்
தாரானேதாமரைமேலயதான்தொழும்
சீரானேசீர்திகழுந்திருக்காறாயில்
1623 ஊரானேயென்பவரூனமிலாதாரே. ௧

மதியானேவரியரவோடுடன்மத்தஞ்சேர்
விதியானேவிதியுடைவேதியர்தாந்தொழும்
நெதியானேநீர்வயல்சூழ்திருக்காறாயிற்
1624 பதியானேயென்பவர்பாவமிலாதாரே. ௨

விண்ணானேவிண்ணவரேத்திவிரும்புஞ்சீர்
மண்ணானேமண்ணிடைவாழுமுயிர்க்கெல்லாம்
கண்ணானேகடிபொழில்சூழ்திருக்காறாயில்
1625 எண்ணானேயென்பவரேதமிலாதாரே. ௩

தாயானேதந்தையுமாகியதன்மைகள்
ஆயானேயாயகல்லன்பர்க்கணியானே
சேயானேசீர்திகழுந்திருக்காறாயில்
1626 மேயானேயென்பவர்மேல்வினைமேவாவே. ௪

கலையானேகலைமலிசெம்பொற்கயிலாய
மலையானேமலைபவர்மும்மதில்மாய்வித்த
சிலையானேசீர்திகழுந்திருக்காறாயில்
1627 நிலையானேயென்பவர்மேல்வினைநில்லாவே. ௫

ஆற்றானேயாறணிசெஞ்சடையாடரா
வேற்றானேயேழுலகும்மிமையோர்களும்
போற்றானேபொழில்திகழுந்திருக்காறாயில்
1628 நீற்றானேயென்பவர்மேல்வினைநில்லாவே. ௬

சேர்த்தானே தீவினைதேய்ந்தறத்தேவர்கள்
ஏத்தானேயேத்துநன்மாமுனிவர்க்கிடர்
காத்தானேகார்வயல்சூழ் திருக்காறாயில்
1629 ஆர்த்தானேயென்பவர்மேல்வினையடாராவே. எ

கடுத்தானேகாலனைக்காலாற்கயிலாயம்
எடுத்தானேயேதமாகம்முனிவர்க்கிடர்
கெடுத்தானேகேழ்கிளருந்திருக்காறாயில்
1630 அடுத்தானேயென்பவர்மேல்வினையடாராவே. அ

பிறையானேபேணியபாடலொடின்னிசை
மறையானேமாலொடுநான்முகன்காணாத
இறையானேயெழில்திகழுந்திருக்காறாயில்
1631 உறைவானேயென்பவர்மேல்வினையோடுமே. சு

செடியாரும்புன்சமண்சீவரத்தார்களும்
படியாரும்பாவிகள்பேச்சுப்பயனில்லை
கடியாரும்பூம்பொழில்சூழ் திருக்காறாயில்
1632 குடியாருங்கொள்கையினார்க்கில்லைகுற்றமே. க0

ஏய்ந்தசீரெழில்திகழுந்திருக்காறாயில்
ஆய்ந்தசீரானடியேத்தியருள்பெற்ற
பாய்ந்தநீர்க்காழியுள்ஞானசம்பந்தன்சொல்
1633 வாய்ந்தவாறேத்துவார்வானுலகாள்வாரே. கக

16 அயிலாருமம்பதனாற்புராமூன்றெய்து
குயிலாருமென்மொழியாளொருகூறாகி
மயிலாருமல்கியசோலைமணஞ்சேரிப்
1634 பயில்வானைப்பற்றிநின்றார்க்கில்லைபாவமே. க

விதியானைவிண்ணவர்தாந்தொழுதேத்திய
நெதியானைநீள்சடைமேல்நிகழ்வித்தவான்
மதியானைவண்பொழில்சூழ்ந்தமணஞ்சேரிப்
1635 பதியானைப்பாடவல்லார்வினைபாறுமே. உ

எய்ப்பானார்க்கின்புறுதேனளித்தூறிய
இப்பாலாயெனையுமாளவுரியானை
வைப்பானமாடங்கள்சூழ்ந்தமணஞ்சேரி
1636 மெய்ப்பானைமேவிநின்றார்வினைவீடுமே. ங

விடையானைமேலுலகேழுமிப்பாரெல்லாம்
உடையானையூழிதோறூழியுளதாய
படையானைப்பண்ணிசைபாடுமணஞ்சேரி
1637 அடைவானையடையவல்லார்க்கில்லையல்லலே. ௪

எறியார்பூங்கொன்றையினோடுமிளமத்தம்
வெறியாருஞ்செஞ்சடையாரமிலைத்தானை
மறியாருங்கையுடையானைமணஞ்சேரிச்
1638 செறிவானைச்செப்பவல்லார்க்கிடர்சேராவே. ௫

மொழியானைமுன்னொருநான்மறையாறங்கம்
பழியாமைப்பண்ணிசையானபகர்வானை
வழியானைவானவரேத்துமணஞ்சேரி
1639 இழியாமையேத்தவல்லார்க்கெய்துமின்பமே. ௬

எண்ணானையெண்ணமர்சீரிமையோர்கட்குக்
கண்ணானைக்கண்ணொருமூன்றுமுடையானை
மண்ணானைமாவயல்சூழ்ந்தமணஞ்சேரிப்
1640 பெண்ணானைப்பேசநின்றார்பெரியோர்களே. ௭

எடுத்தானையெழில்முடியெட்டுமிரண்டுந்தோள்
கெடுத்தானைக்கேடிலாச்செம்மையுடையானை
மடுத்தாரவண்டிசைபாடுமணஞ்சேரி
1641 பிடித்தாரப்பேணவல்லார்பெரியோர்களே. ௮

சொல்லானைத்தோற்றங்கண்டானுநெடுமாலும்
கல்லானைக்கற்றனசொல்லித்தொழுதோங்க
வல்லார்நன்மாதவரேத்துமணஞ்சேரி
1642 எல்லாமாமெம்பெருமான்கழலேத்துமே. ௯

சற்றேயுந்தாமறிவில்சமண்சாக்கியர்
சொற்றேயும்வண்ணமொர்செம்மையுடையானை
வற்றாதவாவிகள்சூழ்ந்தமணஞ்சேரி
1643 பற்றாகவாழ்பவர்மேல்வினைபற்றாவே. ௧௦

கண்ணாருங்காழியர்கோன்கருத்தார்வித்த
தண்ணார்சீர்ஞானசம்பந்தன்தமிழ்மாலை
மண்ணாருமாவயல்சூழ்ந்தமணஞ்சேரி
1644 பண்ணாரப்பாடவல்லார்க்கில்லைபாவமே. ௧௧

17 நிலவும்புனலுந்நிறைவாளரவும்
இலகுஞ்சடையார்க்கிடமாமெழிலார்
உலவும்வயலுக்கொளியார்முத்தம்
1645 விலகுங்கடலார்வேணுபுரமே. க

அரவார்கரவன்னமையார்திரள்தோள்
குரவார்குழலாளொருகூறனிடங்
கரவாதகொடைக்கலந்தாரவர்க்கு
1646 விரவாகவல்லார்வேணுபுரமே. உ

ஆகம்மழகாயவள்தான்வெருவ
நாகமுரிபோர்த்தவனண்ணுமிடம்
போகந்தருசீர்வயல்சூழ்பொழில்கள்
1647 மேகந்தவழும்வேணுபுரமே. ங

காசக்கடலில்விடமுண்டகண்டத்
தீசர்க்கிடமாவதுஇன்னறவ
வாசக்கமலத்தனம்வன்றிரைகள்
1648 வீசத்துயிலும்வேணுபுரமே. ச

அரையார்கலைசேரனமென்னடையை
உரையாவுகந்தானுறையுமிடமாம்
நிரையார்கமுகின்னிகழ்பாளையுடை
1649 விரையார்பொழில்சூழ்வேணுபுரமே. ரு

ஒளிரும்பிறையும்முறுகூவிளவின்
தளிருஞ்சடைமேலுடையானிடமாம்
நளிரும்புனலின்னலசெங்கயல்கள்
1650 மிளிரும்வயல்சூழ்வேணுபுரமே. சு, எ

ஏவும்படைவேந்தனிராவணனை
ஆவென்றலறஅடர்த்தானிடமாந்
தாவும்மறிமானொடுதண்மதியம்
1651 மேவும்பொழில்சூழ்வேணுபுரமே. அ

கண்ணன்கடிமாமலரிற்றிகழும்
அண்ணல்விருவரறியாவிறையூர்
வண்ணச்சுதைமாளிகைமேற்கொடிகள்
1652 விண்ணிற்றிகழும்வேணுபுரமே. கூ

போகம் மறியார்துவர்போர்த்துழல்வார்
ஆகம்மறியாவடியாரிறையூர்
மூகம்மறிவார்கலைமுத்தமிழ்நூல்
1653 மீகம்மறிவார்வேணுபுரமே. கo

கலமார்கடல்போல்வளமார்தருநற்
புலமார்தருவேணுபுரத்திறையை
நலமார்தருஞானசம்பந்தன்சொன்ன
1654 குலமார்தமிழ்கூறுவர்கூர்மையரே. கக

18 சடையாயெனுமால்சரண்நீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைமலரும்மருகல்
1655 உடையாய்தகுமோஇவளுண்மெலிவே. க

சிந்தாயெனுமால்சிவனேயெனுமால்
முந்தாயெனுமால்முதல்வாஎனுமால்
கொந்தார்குவளைகுலவும்மருகல்
1656 எந்தாய்தகுமோஇவளேசறவே. உ

அறையார்கழலும்மழல்வாயரவும்
பிறையார்சடையும்முடையாய்பெரிய
மறையார்மருகல்மகிழ்வாயிவளை
1657 இறையார்வளைகொண்டெழில்வவ்வினையே. ங

ஒலிநீர்சடையிற்கரந்தாயுலகம்
பலிநீதிரிவாய்பழியில்புகழாய்
மலிநீர்மருகல்மகிழ்வாயிவளை
1658 மெலிநீர்மையளாக்கவும்வேண்டினையே. ச

துணிநீலவண்ணம்முகில்தோன்றியன்ன
மணிநீலகண்டமுடையாய்மருகல்
கணிநீலவண்டார்குழலாளிவள்தன்
1659 அணிநீலவொண்கண்ணயர்வாக்கினையே. ரு

பலரும்பரவப்படுவாய்சடைமேல்
மலரும்பிறையொன்றுடையாய்மருகல்
புலருந்தனையுந்துயிலாள்புடைபோந்
1660 தலரும்படுமோஅடியாளிவளே. சு

வழுவாள்பெருமான்கழல்வாழ்கவென
எழுவாள்நினைவாளிரவும்பகலும்
மழுவாளுடையாய்மருகற்பெருமான்
1661 தொழுவாளிவளைத்துயராக்கினையே. எ

இலங்கைக்கிறைவன்விலங்கல்லெடுப்பத்
துலங்கவ்விரலூன்றலுந்தோன்றலனாய்
வலங்கொள்மதில்சூழ்மருகற்பெருமான்
1662 அலங்கல்லிவளையலராக்கினையே. அ

எரியார்சடையும்மடியுமிருவர்
தெரியாததொர்தீத்திரளாயவனே
மரியார்பிரியாமருகற்பெருமான்
1663 அரியாளிவளையயர்வாக்கினையே. கூ

அறிவில்சமணும்மலர்சாக்கியரும்
நெறியல்லனசெய்தனர்நின்றுழல்வார்
மறியேந்துகையாய்மருகற்பெருமான்
1664 நெறியார்குழலியிறைநீக்கினையே. க0

வயஞானம்வல்லார்மருகற்பெருமான்
உயர்ஞானமுணர்ந்தடியுள்குதலால்
இயன்ஞானசம்பந்தனபாடல்வல்லார்
1665 வியன்ஞாலமெல்லாம்விளங்கும்புகழே. கக

19 அறத்தாலுயிர்காவலமர்ந்தருளி
மறத்தான்மதில்மூன்றுடன்மாண்பழித்த
திறத்தாற்றெரிவெய்தியதீவெண்டிங்கள்
1666 நிறத்தான்நெல்விக்காவுள்நிலாயவனே. க

பதிதானிடுகாடுபைங்கொன்றைதொங்கல்
மதிதானதுசூடியமைந்தனுந்தான்
விதிதான்வினைதான்விழுப்பம்பயக்கும்
1667 நெதிதான்நெல்விக்காவுள்நிலாயவனே. உ

நலந்தானவன்நான்முகன்றன்தலையைக்
கலந்தானதுகொண்டகபாலியுந்தான்
புலந்தான்புகழாலெரிவிண்புகழும்
1668 நிலந்தான்நெல்விக்காவுள்நிலாயவனே. ங

தலைதானதுவந்தியதம்மடிகள்
கலைதான்திரிகாடிடம்நாடிடமா
மலைதானெடுத்தான்மதில்மூன்றுடைய
1669 நிலைதான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௪

தவந்தான்கதிதான்மதிவார்சடைமேல்
உவந்தான்சுறவேந்தனுருவழியச்
சிவந்தான்செயச்செய்துசெறுத்துலகில்
1670 நிவந்தான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௫

வெறியார்மலர்க்கொன்றையந்தார்விரும்பி
மறியார்மலைமங்கைமகிழ்ந்தவன்றான்
குறியாற்குறிகொண்டவர்போய்க்குறுகும்
1671 நெறியான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௬

பிறைதான்சடைசேர்த்தியஎந்தைபெம்மான்
இறைதானிறவாக்கயிலைமலையான்
மறைதான்புனலொண்மதிமல்குசென்னி
1672 நிறைதான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௭

மறைத்தான்பிணிமாதொருபாகந்தன்னை
மிறைத்தான்வரையாலரக்கன்மிகையைக்
குறைத்தான்சடைமேற்குளிர்கோல்வளையை
1673 நிறைத்தான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௮

தழல்தாமரையான்வையந்தாயவனும்
கழல்தான்முடிகாணியநாணொளிரும்
அழல்தானடியார்க்கருளாய்ப்பயக்கும்
1674 நிழல்தான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௯

கனத்தார்திரைமாண்டழற்கான்றநஞ்சை
எனத்தாவெனவாங்கியதுண்டகண்டன்
மனத்தாற்சமண்சாக்கியர்மாண்பழிய
1675 நினைத்தான்நெல்லிக்காவுள்நிலாயவனே. ௧௦

புகரேதுமிலாதபுத்தேளுலகில்
நிகராநெல்லிக்காவுள்நிலாயவனை
நகராநலஞானசம்பந்தன்சொன்ன
1676 பகர்வாரவர்பாவமிலாதவரே. ௧௧

20 தொழுமாறுவல்லார் துயர்தீரநினைந்
தெழுமாறுவல்லாரிசைபாடவிம்மி
அழுமாறுவல்லாரழுந்தைமறையோர்
1677 வழிபாடுசெய்மாமடமன்னினையே. க

கடலேறியநஞ்சமுதுண்டவனே
உடலேயுயிரேயுணர்வேயெழிலே
அடலேறுடையாயழுந்தைமறையோர்
1678 விடலேதொழமாமடமேவினையே. உ

கழிகாடலனேகனலாடலினாய்
பழிபாடிலனேயவையேபயிலும்
அழிபாடிலராயழுந்தைமறையோர்
1679 வழிபாடுசெய்மாமடமன்னினையே. ங

வானேமலையேயெனமன்னுயிரே
தானேதொழுவார்தொழுதாள்மணியே
ஆனேசிவனேயழுந்தையவரெம்
1680 மானேயெனமாமடமன்னினையே. ச

அலையார்புனல்சூழழுந்தைப்பெருமான்
நிலையார்மறியுந்நிறைவெண்மழுவும்
இலையார்படையும்மிவையேந்துசெல்வ
1681 நிலையாவதுகொள்கெனநீநினையே. ரு

நறவார்தலையின்நயவாவுலகில்
பிறவாதவனேபிணியில்லவனே
அறையார்கழலாயழுந்தைமறையோர்
1682 மறவாதெழமாமடமன்னினையே. சு

தடுமாறுவல்லாய்தலைவாமதியம்
சுடுமாறுவல்லாய்சுடரார்சடையில்
அடுமாறுவல்லாயழுந்தைமறையோர்
1683 நெடுமாநகர்கைதொழநின்றனையே. எ

பெரியாய்சிறியாய்பிறையாய்மிடறும்
கரியாய்கரிகாடுயர்வீடுடையாய்
அரியாயெளியாயழுந்தைமறையோர்
1684 வெரியார்தொழமாமடமேவினையே. அ

மணிநீள்முடியான்மலையையரக்கன்
தணியாதெடுத்தானுடலந்நெரித்த
அணியார்விரலாயழுந்தைமறையோர்
1685 பணிமாமடமன்னியிருந்தனையே. ௯

முடியார்சடையாய்முனநாளிருவர்
நெடியான்மலரான்நிகழ்வாலிவர்கள்
அடிமேலறியாரழுந்தைமறையோர்
1686 படியாற்றொழுமாமடம்பற்றினையே. ௧0

அருஞானம்வல்லாரழுந்தைமறையோர்
பெருஞானமுடைப்பெருமானவனைத்
திருஞானசம்பந்தனசெந்தமிழ்கள்
1687 உருஞானமுண்டாமுணர்ந்தார்தமக்கே. ௧௧

21 புனலாடியபுன்சடையாயரணம்
அனலாகவிழித்தவனேயழகார்
கனலாடலினாய்கழிப்பாலையுளாய்
1688 உனவார்கழல்கைதொழுதுள்குதுமே. ௧

துணையாகவொர்தூவளமாதினையும்
இணையாகவுகந்தவனேயிறைவா
கணையாலெயிலெய்கழிப்பாலையுளாய்
1689 இணையார்கழலேத்தஇடர்கெடுமே. ௨

நெடியாய்குறியாய்நிமிர்புன்சடையின்
முடியாய்சுடுவெண்பொடிமுற்றணிவாய்
கடியார்பொழில்சூழ்கழிப்பாலையுளாய்
1690 அடியார்க்கடையா அவலம்மவையே. ௩

எளியாயரியாய்நிலநீரொடுதீ
வளிகாயமெனவெளிமன்னியதூ
ஒளியாயுனையேதொழுதுன்னுமவர்க்
1691 களியாய்கழிப்பாலையமர்ந்தவனே. ௪

நடம்நண்ணியொர்நாகமசைத்தவனே
விடம்நண்ணியதூமிடறாவிகிர்தா
கடல்நண்ணுகழிப்பதிகாவலனே
1692 உடன்நண்ணிவணங்குவனுன்னடியே. ௫

பிறையார்சடையாய்பெரியாய்பெரியம்
மறையார்தருவாய்மையினாயுலகிற்
கறையார்பொழில்சூழ்கழிப்பாலையுளாய்
1693 இறையார்கழலேத்தஇடர்கெடுமே. ௬

முதிருஞ்சடையின்முடிமேல்விளங்குங்
கதிர்வெண்பிறையாய்கழிப்பாலையுளாய்
எதிர்கொள்மொழியாலிரந்தேத்துமவர்க்
1694 கதிரும்வினையாயின ஆசறுமே. ௭

எரியார்கணையாலெயிலெய்தவனே
விரியார்தருவீழ்சடையாயிரவிற்
கரிகாடலினாய்கழிப்பாலையுளாய்
1695 உரிதாகிவணங்குவனுன்னடியே. ௮

நலநாரணன்நான்முகன்நண்ணலுறக்
கனலானவனேகழிப்பாலையுளாய்
உனவார்கழலேதொழுதுன்னுமவர்க்
1696 கிலதாம்வினைதானெயிலெய்தவனே. ௯

தவர்கொண்டதொழிற்சமண்வேடரொடுந்
துவர்கொண்டனநுண்துகிலாடையரும்
அவர்கொண்டனவிட்டடிகளுறையும்
1697 உவர்கொண்டகழிப்பதியுள்குதுமே. ௧௦

கழியார்பதிகாவலனைப்புகலிப்
பழியாமறைஞானசம்பந்தனசொல்
வழிபாடிவைகொண்டடிவாழ்த்தவல்லார்
1698 கெழியாரிமையோரொடுகேடிலரே. ௧௧

**22** திகழுந்திருமாலொடுநான்முகனும்
புகழும்பெருமானடியார்புகல
மகிழும்பெருமான்குடவாயில்மன்னி
1699 நிகழும்பெருங்கோயில்நிலாயவனே. ௧

ஓடுந்நதியும்மதியோடுரகம்
சூடுஞ்சடையன்விடைதொல்கொடிமேல்
கூடுங்குழகன்குடவாயில்தனில்
1700 நீடும்பெருங்கோயில்நிலாயவனே. ௨

கலையான்மறையான்கனலேந்துகையான்
மலையாளவள்பாகமகிழ்ந்தபிரான்
கொலையார்சிலையான்குடவாயில்தனில்
1701 நிலையார்பெருங்கோயில்நிலாயவனே. ௩

சுலவுஞ்சடையான்சுடுகாடிடமா
நலமென்முலையாள்நகைசெய்யநடம்
குலவுங்குழகன்குடவாயில்தனில்
1702 நிலவும்பெருங்கோயில்நிலாயவனே. ௪

என்றன்னுளமேவியிருந்தபிரான்
கன்றன்மணிபோல்மிடறன்கயிலைக்
குன்றன்குழகன்குடவாயில்தனில்
1703 நின்றபெருங்கோயில்நிலாயவனே. ௫

அலைசேர்புனலன்னனலன்னமலன்
தலைசேர்பலியன்சதுரன்விதிரும்
கொலைசேர்படையன்குடவாயில்தனில்
1704 நிலைசேர்பெருங்கோயில்நிலாயவனே. ௬

அறையார்கழலன்னழலன்னியலின்
பறையாழ்முழவும்மறைபாடநடம்
குறையாவழகன்குடவாயில்தனில்
1705 நிறையார்பெருங்கோயில்நிலாயவனே. ௭

வரையார்திரள்தோளரக்கன்மடியவ்
வரையாரவொர்கால்விரல்வைத்தபிரான்
வரையார்மதில்சூழ்குடவாயில்மன்னும்
1706 வரையார்பெருங்கோயில்மகிழ்ந்தவனே. ௮

பொன்னொப்பவனும்புயலொப்பவனும்
தன்னொப்பறியாத்தழலாய்நிமிர்ந்தான்
கொன்னற்படையான்குடவாயில்தனில்
1707 மன்னும்பெருங்கோயில்மகிழ்ந்தவனே. ௯

வெயிலின்நிலையார்விரிபோர்வையினார்
பயிலும்முரையேபகர்பாவிகள்பால்
குயிலன்குழகன்குடவாயில்தனில்
1708 உயரும்பெருங்கோயிலுயர்ந்தவனே. ௧௦

கடுவாய்மலிநீர்குடவாயில்தனில்
நெடுமாபெருங்கோயில்நிலாயவனைத்
தடமார்புகலித்தமிழார்விரகன்
1709 வடமார்தமிழ்வல்லவர்நல்லவரே. கக

23 மழையார்மிடறாமழுவாளுடையாய்
உழையார்கரவாஉமையாள்கணவா
விழவாரும்வெண்நாவலின்மேவியஎம்
1710 அழகாஎனுமாயிழையாளவளே. க

கொலையார்கரியின்னுரிமூடியனே
மலையார்சிலையாவளைவித்தவனே
விலையாலெனையாளும்வெண்நாவலுளாய்
1711 நிலையாஅருளாயெனுநேரிழையே. உ

காலாலுயிர்காலனைவீடுசெய்தாய்
பாலோடுநெய்யாடியபால்வணனே
வேலாடுகையாயெம்வெண்நாவலுளாய்
1712 ஆலார்நிழலாயெனுமாயிழையே. ங

சுறவக்கொடிகொண்டவனீறதுவாய்
உறநெற்றிவிழித்தவெமுத்தமனே
விறல்மிக்ககரிக்கருள்செய்தவனே
1713 அறமிக்கதுவென்னுமெனாயிழையே. ச

செங்கட்பெயர்கொண்டவன்செம்பியர்கோன்
அங்கட்கருணைபெரிதாயவனே
வெங்கண்விடையாயெம்வெண்நாவலுளாய்
1714 அங்கத்தயர்வாயினளாயிழையே. ரு

குன்றேயமர்வாய்கொலையார்புலியின்
தன்தோலுடையார்சடையாய்பிறையாய்
வென்றாய்புரமூன்றைவெண்நாவலுளே
1715 நின்றாயருளாயெனுநேரிழையே. சு, எ

மலையன்றெடுத்தஅரக்கன்முடிதோள்
தொலையவ்விரலூன்றியதூமழுவா
விலையாலெனையாளும்வெண்நாவலுளாய்
1716 அலசாமனல்காயெனுமாயிழையே. அ

திருவார்தருநாரணன் நான்முகனும்
மருவாவெருவா அழலாய்நிமிர்ந்தாய்
விரையாரும்வெண்நாவலுள்மேவியஎம்
1717 அரவாஎனுமாயிழையாளவளே. ௯

புத்தர்பலரோடமண்பொய்த்தவர்கள்
ஒத்தவ்வுரைசொல்லிவையோரகிலார்
மெய்த்தேவர்வணங்கும்வெண்நாவலுளாய்
1718 அத்தா அருளாயெனுமாயிழையே. ௧0

வெண்நாவலமர்ந்துறைவேதியனைக்
கண்ணார்கமழ்காழியர்தந்தலைவன்
பண்ணோடிவைபாடியபத்தும்வல்லார்
1719 விண்ணோரவரேத்தவிரும்புவரே. ௧௧

**24** பொன்னேர்தருமேனியனேபுரியும்
மின்னேர்சடையாய்விரைகாவிரியின்
நன்னீர்வயல்நாகேச்சரநகரின்
1720 மன்னேயெனவல்வினைமாய்ந்தறுமே. ௧

சிறவார்புரமூன்றெரியச்சிலையில்
உறவார்கணையுய்த்தவனேயுயரும்
நறவார்பொழில்நாகேச்சரநகருள்
1721 அறவாஎனவல்வினையாசறுமே. ௨

கல்லால்நிழல்மேயவனேகரும்பின்
வில்லானெழில்வேவவிழித்தவனே
நல்லார்தொழுநாகேச்சரநகரில்
1722 செல்வாவெனவல்வினைதேய்ந்தறுமே. ௩

நகுவான்மதியோடரவும்புனலும்
தகுவார்சடையின்முடியாய்தளவம்
நகுவார்பொழில்நாகேச்சரநகருள்
1723 பகவாஎனவல்வினைபற்றறுமே. ௪

கலைமான்மறியுங்கனலும்மழுவும்
நிலையாகியகையினனேநிகழும்
நலமாகியநாகேச்சரநகருள்
1724 தலைவாஎனவல்வினைதானறுமே. ௫

குரையார்கழலாடநடங்குலவி
வரையான்மகள்காணமகிழ்ந்தவனே
நரையார்விடையேறுநாகேச்சரத்தெம்
1725 அரைசேயெனநீங்குமருந்துயரே. ௬

முடையார்தருவெண்டலைகொண்டுலகில்
கடையார்பலிகொண்டுழல்காரணனே
நடையார்தருநாகேச்சரநகருள்
1726 சடையாஎனவல்வினைதானறுமே. ௭

ஓயாதஅரக்கனொடிந்தலற
நீயாருள்செய்துநிகழ்ந்தவனே
வாயாரவழுத்துவர்நாகேச்சரத்
1727 தாயேயெனவல்வினைதானறுமே. ௮

நெடியானொடுநான்முகன்நேடலுறச்
சுடுமாலெரியாய்நிமிர்சோதியனே
நடுமாவயல்நாகேச்சரநகரே
1728 இடமாவுறைவாயெனஇன்புறுமே. ௯

மலம்பாவியகையொடுமண்டையதுண்
கலம்பாவியர்கட்டுரைவிட்டுலகில்
நலம்பாவியநாகேச்சரநகருள்
1729 சிலம்பாஎனத்தீவினைதேய்ந்தறுமே. ௧௦

கலமார்கடல்சூழ்தருகாழியர்கோன்
தலமார்தருசெந்தமிழின்விரகன்
நலமார்தருநாகேச்சரத்தானைச்
1730 சொலமாலைகள்சொல்லநிலாவினையே. ௧௧

**25** உகலியாழ்கடலோங்குபாருளீர்
அகலியாவினையல்லல்போயறும்
இகலியார்புரமெய்தவன்னுறை
1731 புகலியாநகர்போற்றிவாழ்மினே. ௧

பண்ணியாள்வதோரேற்றர்பால்மதிக்
கண்ணியார்கமழ்கொன்றைசேர்முடிப்
புண்ணியன்னுறையும்புகலியை
1732 நண்ணுமின்நலமானவேண்டிலே. ௨

வீசுமின்புரைகாதன்மேதகு
பாசவல்வினைதீர்த்தபண்பினன்
பூசுநீற்றினன்பூம்புகலியைப்
1733 பேசுமின்பெரிதின்பமாகவே. ௩

கடிகொள்கூவிளமத்தம்வைத்தவன்
படிகொள்பாரிடம்பேசும்பான்மையன்
பொடிகொள்மேனியன்பூம்புகலியுள்
1734 அடிகளையடைந்தன்புசெய்யுமே. ௪

பாதத்தாரொலிபல்சிலம்பினன்
ஓதத்தார்விடமுண்டவன்படைப்
பூதத்தான்புகலிந்நகர்தொழ
1735 ஏதத்தார்க்கிடமில்லையென்பரே. ௫

மறையினானொலிமல்குவீணையன்
நிறையினார்நிமிர்புன்சடையனெம்
பொறையினானுறையும்புகலியை
1736 நிறையினாற்றொழநேசமாகுமே. ௬

கரவிடைமனத்தாரைக்காண்கிலான்
இரவிடைப்பலிகொள்ளுமெம்மிறை
பொருவிடையுயர்த்தான்புகலியைப்
1737 பரவிடப்பயில்பாவம்பாறுமே. ௭

அருப்பினார்முலைமங்கைபங்கினன்
விருப்பினானரக்கனுரஞ்செகும்
பொருப்பினான்பொழிலார்புகலியூர்
1738 இருப்பினானடியேத்திவாழ்த்துமே. ௮

மாலுநான்முகன்றானும்வார்கழற்
சிலமும்முடிதேடநீண்டெரி
போலுமேனியன்பூம்புகலியுள்
1739 பாலதாடியபண்பனல்லனே. ௯

நின்றுதுய்ப்பவர்நீசர்தேரர்சொல்
ஒன்றதாகவையாவுணர்வினுள்
நின்றவன்நிகழும்புகலியைச்
1740 சென்றுகைதொழச்செல்வமாகுமே. ௧௦

புல்லமேறிதன்பூம்புகலியை
நல்லஞானசம்பந்தன்நாவினற்
சொல்லும்மாலையீரைந்தும்வல்லவர்க்
1741 கில்லையாம்வினையிருநிலத்துளே. கக

26 புடையினற்புள்ளிகால்பொருந்திய
மடையினர்மணிநீர்நெல்வாயிலார்
நடையினல்விரற்கோவணநயந்
1742 துடையினரெமதுச்சியாரே. க

வாங்கினர்மதில்மேற்கணைவெள்ளந்
தாங்கினர்தலையாயதன்மையர்
நீங்குநீரநெல்வாயிலார்தொழ
1743 ஓங்கினரெமதுச்சியாரே. உ

நிச்சலேத்துநெல்வாயிலார்தொழ
இச்சையாலுறைவாரெம்மீசனர்
கச்சையாவதோர்பாம்பினர்கவின்
1744 இச்சையாரெமதுச்சியாரே. ங

மறையினர்மழுவாளினர்மல்கு
பிறையினர்பிறையோடிலங்கிய
நிறையினரநெல்வாயிலார்தொழும்
1745 இறைவனரெமதுச்சியாரே. ச

விருத்தனகிவெண்ணீறுபூசிய
கருத்தனர்கனலாட்டுகந்தவர்
நிருத்தனரநெல்வாயில்மேவிய
1746 ஒருத்தனரெமதுச்சியாரே. ரு

காரினர்கொன்றைக்கண்ணியார்மல்கு
பேரினர்பிறையோடிலங்கிய
நீரினர்நெல்வாயிலார்தொழும்
1747 ஏரினரெமதுச்சியாரே. சு

ஆதியாரந்தமாயினர்வினை
கோதியார்மதில்கூட்டழித்தவர்
நீதியாரநெல்வாயிலார்மறை
1748 ஓதியாரெமதுச்சியாரே. எ

பற்றினாரக்கன்கயிலையை
ஒற்றினாரொருகால்விரலுற
நெற்றியாரநெல்வாயிலார்தொழும்
1749 பெற்றியாரெமதுச்சியாரே. ௯

நாடினார்மணிவண்ணன்நான்முகன்
கூடினார்குறுகாதகொள்கையர்
நீடினாரநெல்வாயிலார்தலை
1750 ஓடினாரெமதுச்சியாரே. ௯

குண்டமண்துவர்க்கூறைமூடர்சொல்
பண்டமாகவையாதபண்பினர்
விண்டயங்குநெல்வாயிலார்நஞ்சை
1751 உண்டகண்டரெம்முச்சியாரே. க0

தெண்பயங்குநெல்வாயிலீசனைச்
சண்பைஞானசம்பந்தன்சொல்லிவை
பண்பயன்கொளப்பாடவல்லவர்
1752 விண்பயன்கொளும்வேட்கையாளரே. கக

27 குலவுபாரிடம்போற்றவீற்றிருந்
திலகுமான்மழுவேந்துமங்கையன்
நிலவுமிந்திரநீலப்பர்ப்பதத்
1753 துலவினானடியுள்கநல்குமே. க

குறைவிலார்மதிசூடியாடல்வண்
டறையுமாமலர்க்கொன்றைசென்னிசேர்
இறைவனிந்திரநீலப்பர்ப்பதத்
1754 துறைவினான்றனையோதியுய்ம்மினே. உ

என்பொனென்மணியென்னவேத்துவார்
நம்பனான்மறைபாடுநாவினான்
இன்பனிந்திரநீலப்பர்ப்பதத்
1755 தன்பன்பாதமேயடைந்துவாழ்மினே. ௩

நாசமாம்வினைநன்மைதான்வரும்
தேசமார்புகழாயசெம்மையெம்
ஈசனிந்திரநீலப்பர்ப்பதம்
1756 கூசிவாழ்த்துதுங்குணமதாகவே. ௪

மருவுமான்மடமாதொர்பாகமாய்ப்
பரவுவார்வினைதீர்த்தபண்பினன்
இரவனிந்திரநீலப்பர்ப்பதத்
1757 தருவிசூடிடுமடிகள்வண்ணமே. ரு

வெண்ணிலாமதிசூடும்வேணியன்
எண்ணிலார்மதிலெய்தவில்லினன்
அண்ணவிந்திரநீலப்பர்ப்பதத்
1758 துண்ணிலாவுறுமொருவன்நல்லனே. சு

கொடிகொளேற்றினர்கூற்றுதைத்தவர்
பொடிகொள்மேனியிற்பூண்டபாம்பினர்
அடிகளிந்திரநீலப்பர்ப்பதம்
1759 உடையவாணருகந்தகொள்கையே. எ

எடுத்தவல்லரக்கன்கரம்புயம்
அடர்த்ததோர்விரலானவனையாட்
படுத்தனிந்திரநீலப்பர்ப்பதம்
1760 முடித்தலம்முறமுயலுமின்பமே. அ

பூவினானொடுமாலும்போற்றுறும்
தேவனிந்திரநீலப்பர்ப்பதம்
பாவியாதெழுவாரைத்தம்வினை
1761 கோவியாவருங்கொல்லுங்கூற்றமே. சு

கட்டர்குண்டமண்தேரர்சீரிலர்
விட்டரிந்திரநீலப்பர்ப்பதம்
எட்டனைநினையாததென்கொலோ
1762 சிட்டதாயுறையாதிசீர்களே. க0

கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியான்
இந்திரன்தொழுநீலப்பர்ப்பதத்
தந்தமில்லியையேத்துஞானசம்
1763 பந்தன்பாடல்கொண்டோதிவாழ்மினே. கக

28 தொண்டெலர்மலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை
1764 அண்டனாருளீயுமன்பரே. க

நீதியார்நினைந்தாயநான்மறை
ஓதியாரொடுங்கூடிலார்குழைக்
காதினார்கருவூருளானிலை
1765 ஆதியாரடியார்தமன்பரே. உ

விண்ணுலாமதிசூடிவேதமே
பண்ணுளார்பரமாயபண்பினர்
கண்ணுளார்கருவூருளானிலை
1766 அண்ணலாரடியார்க்குநல்லரே. ௩

முடியர்மும்மதயானையீருரி
பொடியர்பூங்கணைவேளைச்செற்றவர்
கடியுளார்கருவூருளானிலை
1767 அடிகள்யாவையுமாயஈசரே. ௪

பங்கயம்மலர்ப்பாதர்பாதியோர்
மங்கையர்மணிநீலகண்டர்வான்
கங்கையர்கருவூருளானிலை
1768 அங்கையாடரவத்தெம்மண்ணலே. ௫

தேவர்திங்களும்பாம்புஞ்சென்னியில்
மேவர்மும்மதிலெய்தவில்லியர்
காவலர்கருவூருளானிலை
1769 மூவராகியமொய்ம்பரல்லரே. ௬

பண்ணினார்படியேற்றநீற்றர்மெய்ப்
பெண்ணினார்பிறைதாங்குநெற்றியர்
கண்ணினார்கருவூருளானிலை
1770 நண்ணினார்நமையாளுநாதரே. ௭

கடுத்தவாளரக்கன்கயிலையை
எடுத்தவன்தலைதோளுந்தாளினால்
அடர்த்தவன்கருவூருளானிலை
1771 கொடுத்தவன்னருள்கூத்தனல்லனே. அ

உழுதுமாநிலத்தேனமாகிமால்
தொழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுதினன்கருவூருளானிலை
1772 முழுதுமாகியமூர்த்திபாதமே. ௯

புத்தர்புன்சமணதர்பொய்யுரைப்
பித்தர்பேசியபேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கருவூருளானிலை
1773 அத்தர்பாதமடைந்துவாழ்மினே. ௧0

கந்தமார்பொழில்காழிஞானசம்
பந்தன்சேர்கருவூருளானிலை
எந்தையைச்சொன்னபத்தும்வல்லவர்
1774 சிந்தையிற்றுயராயதீர்வரே. ௧௧

29 முன்னியகலைப்பொருளும்மூவுலகில்வாழ்வும்
பன்னியவொருத்தர்பழவூர்வினவின்ஞாலந்
துன்னியிமையோர்கள்துதிசெய்துமுன்வணங்குஞ்
1775 சென்னியர்விருப்புறுதிருப்புகலியாமே. ௧

வண்டிரைமதிச்சடைமிலைத்தபுனல்சூடிப்
பண்டெரிகையாடுபரமன்பதியதென்பர்
புண்டரிகவாசமதுவீசமலர்சோலைத்
1776 தெண்டிரைகடற்பொலிதிருப்புகலியாமே. ௨

பாவணவுசிந்தையவர்பத்தரொடுகூடி
நாவணவுமந்தணன்விருப்பிடமதென்பர்
பூவணவுசோலையிருள்மாலையெதிர்கூரத்
1777 தேவணவிழாவளர்திருப்புகலியாமே. ௩

மைதவழுமாமிடறன்மாநடமதாடி
கைவளையினாளொடுகலந்தபதியென்பர்
செய்பணிபெருத்தெழுமுருத்திரர்கள்கூடித்
1778 தெய்வமதிணக்குறுதிருப்புகலியாமே. ௪

முன்னமிருமூன்றுசமயங்களவையாகிப்
பின்னையருள்செய்தபிறையாளனுறைகோயில்
புன்னையமலர்ப்பொழில்களக்கினொளிகாட்டச்
1779 செந்நெல்வயலார்தருதிருப்புகலியாமே. ௫

வங்கமலியுங்கடல்விடத்தினைநுகர்ந்த
அங்கணனருத்திசெய்திருக்குமிடமென்பர்
கொங்கணவியன்பொழிலின்மாசுபனிமூசத்
1780 தெங்கணவுதேன்மலிதிருப்புகலியாமே. ௬

நல்குரவுமின்பமுநலங்களவையாகி
வல்வினைகள்தீர்த்தருளுமைந்தனிடமென்பர்
மல்குமடியார்கள்படியாரஇசைபாடிச்
1781 செல்வமறையோருறைதிருப்புகலியாமே. ௭

பரப்புறுபுகழ்ப்பெருமையாளன்வரைதன்னால்
அரக்கனையடர்த்தருளுமண்ணலிடமென்பர்
நெருக்குறுகடற்றிரைகள்முத்தமணிசிந்தச்
1782 செருக்குறுபொழிற்பொலிதிருப்புகலியாமே. ௮

கோடலொடுகூன்மதிகுலாயசடைதன்மேல்
ஆடரவம்வைத்தருளுமப்பனிருவர்க்கும்
நேடவெரியாகியிருபாலுமடிபேணித்
1783 தேடவுறையுங்நகர்திருப்புகலியாமே. ௯

கற்றமணருற்றுலவுதேரருரைசெய்த
குற்றமொழிகொள்கையதிலாதபெருமானூர்
பொற்றொடிமடந்தையருமைந்தர்புலனைந்துஞ்
1784 செற்றவர்விருப்புறுதிருப்புகலியாமே. ௧௦

செந்தமிழ்பரப்புறுதிருப்புகலிதன்மேல்
அந்தமுதலாகிநடுவாயபெருமானைப்
பந்தனுரைசெந்தமிழ்கள்பத்துமிசைகூர
1785 வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. ௧௧

**30** மறம்பயமலைந்தவர்மதிற்பரிசறுத்தனை
நிறம்பசுமைசெம்மையொடிசைந்தனதுநீர்மை
திறம்பயனுறும்பொருள்தெரிந்துணருநால்வர்க்
1786 கறம்பயனுரைத்தனைபுறம்பயமமர்ந்தோய். ௧

விரித்தனைதிருச்சடையரித்தொழுகுவெள்ளம்
தரித்தனையதன்றியுமிகப்பெரியகாலன்
எருத்திறவுதைத்தனையிலங்கிழையொர்பாகம்
1787 பொருத்துதல்கருத்தினைபுறம்பயமமர்ந்தோய். ௨

விரிந்தனைகுவிந்தனைவிழுங்குயிருமிழ்ந்தனை
திரிந்தனைகுருந்தொசிபெருந்தகையுநீயும்
பிரிந்தனைபுணர்ந்தனைபிணம்புகுமயானம்
1788 புரிந்தனைமகிழ்ந்தனைபுறம்பயமமர்ந்தோய். ௩

வளங்கெழுகடும்புனலொடுஞ்சடையொடுங்கத்
துளங்கமரிளம்பிறைசுமந்ததுவிளங்க
உளங்கொளவளைந்தவர்சுடுஞ்சுடலைநீறு
1789 புளங்கொளவிளங்கினைபுறம்பயமமர்ந்தோய். ௪

பெரும்பிணிபிறப்பினொடிறப்பிலையொர்பாகம்
கரும்பொடுபடுஞ்சொலின்மடந்தையைமகிழ்ந்தோய்
சுரும்புணஅரும்பவிழ்திருந்தியெழுகொன்றை
1790 விரும்பினைபுறம்பயமமர்ந்தஇறையோனே. ௫

அனற்படுதடக்கையவரெத்தொழிலரேனும்
நினைப்புடைமனத்தவர்வினைப்பகையுநீயே
தனற்படுசுடர்ச்சடைதனிப்பிறையொடொன்றப்
1791 புனற்படுகிடைக்கையைபுறம்பயமமர்ந்தோய். ௬

மறத்துறைமறுத்தவர்தவத்தடியருள்ளம்
அறத்துறையொறுத்துனதருட்கிழமைபெற்றோர்
திறத்துளதிறத்தினைமதித்தகலநின்றும்
1792 புறத்துளதிறத்தினைபுறம்பயமமர்ந்தோய். ௭

இலங்கையரிறைஞ்சிறைவிலங்கலின்முழங்க
உலங்கெழுதடக்கைகளடர்த்திடலுமஞ்சி
வலங்கொளஎழுந்தவன்நலங்கவினஅஞ்சு
1793 புலங்களைவிலங்கினைபுறம்பயமமர்ந்தோய். ௮

வடங்கெடநுடங்குணஇடந்தவிடையல்லிக்
கிடந்தவனிருந்தவனளந்துணரலாகார்
தொடர்ந்தவருடம்பொடுநிமிர்ந்துடன்வணங்கப்
1794 புடங்கருள்செய்தொன்றினைபுறம்பயமமர்ந்தோய். ௯

விடக்கொருவர்நன்றெனவிடக்கொருவர்தீதென
உடற்குடைகளைந்தவருடம்பினைமறைக்கும்
படக்கர்கள்பிடக்குரைபடுத்துமையொர்பாகம்
1795 அடக்கினைபுறம்பயமமர்ந்தவுரவோனே. ௧0

கருங்கழிபொருந்திரைகரைக்குலவுமுத்தம்
தருங்கழுமலத்திறைதமிழ்க்கிழமைஞானன்
சுரும்பவிழ்புறம்பயமமர்ந்ததமிழ்வல்லார்
1796 பெரும்பிணிமருங்கறஒருங்குவர்பிறப்பே. ௧௧

31 சுற்றமொடுபற்றவைதுயக்கறஅறுத்துக்
குற்றமில்குணங்களொடுகூடுமடியார்கள்
மற்றவரைவானவர்தம்வானுலகமேற்றக்
1797 கற்றவனிருப்பதுகருப்பறியலூரே. க

வண்டணைசெய்கொன்றையதுவார்சடைகள்மேலே
கொண்டணைசெய்கோலமதுகோளரவினோடும்
விண்டணைசெய்மும்மதிலும்வீழ்தரவொரம்பால்
1798 கண்டவனிருப்பதுகருப்பறியலூரே. உ

வேதமொடுவேதியர்கள்வேள்விமுதலாகப்
போதினொடுபோதுமலர்கொண்டுபுனைகின்ற
நாதனெனநள்ளிருண்முனாடுகுழைதாழும்
1799 காதவனிருப்பதுகருப்பறியலூரே. ௩

மடம்படுமலைக்கிறைவன்மங்கையொருபங்கன்
உடம்பினைவிடக்கருதிநின்றமறையோனைத்
தொடர்ந்தணவுகாலனுயிர்காலவொருகாலால்
1800 கடந்தவனிருப்பதுகருப்பறியலூரே. ச

ஒருத்தியுமையோடுமொருபாகமதுவாய
நிருத்தனவன்நீதியவன்நித்தன்நெறியாய
விருத்தனவன்வேதமென அங்கமவையோதும்
1801 கருத்தவனிருப்பதுகருப்பறியலூரே. ரு

விண்ணவர்கள்வெற்பரசுபெற்றமகள்மெய்த்தேன்
பண்ணமருமென்மொழியினாளையணைவிப்பான்
எண்ணிவருகாமனுடல்வேவவளரிகாலும்
1802 கண்ணவனிருப்பதுகருப்பறியலூரே. சு

ஆதியடியைப்பணிய அப்பொடுமலர்ச்சேர்
சோதியொளிநற்புகைவளர்க்குவடுபுக்குத்
தீதுசெயவந்தணையுமந்தகனரங்கக்
1803 காதினனிருப்பதுகருப்பறியலூரே.

வாய்ந்தபுகழ்விண்ணவருமண்ணவருமஞ்சப்
பாய்ந்தமர்செயுந்தொழிலிலங்கைநகர்வேந்தற்
கேய்ந்தபுயமத்தனையுமிற்றுவிழமேனாள்
1804 காய்ந்தவனிருப்பதுகருப்பறியலூரே. அ

பரந்தநிரந்துவருபாய்திரையகங்கை
கரந்தொர்சடைமேன்மிசையுகந்தவளைவைத்து
நிரந்தரநிரந்திருவர்நேடியறியாமல்
1805 கரந்தவனிருப்பதுகருப்பறியலூரே. ௯

அற்றமறையாவமணராதமிலிபுத்தர்
சொற்றமறியாதவர்கள்சொன்னசொலைவிட்டுக்
குற்றமறியாதபெருமான்கொகுடிக்கோயில்
1806 கற்றெனவிருப்பதுகருப்பறியலூரே. ௰

நலந்தருபுனற்புகலிஞானசம்பந்தன்
கலந்தவர்கருப்பறியல்மேயகடவுளைப்
பலந்தருதமிழ்க்கிளவிபத்துமிவைகற்று
1807 வலந்தருமவர்க்குவினைவாடலெளிதாமே. ௧௧

**32** திருத்திகழ்மலைச்சிறுமியோடுமிகுதேசர்
உருத்திகழெழிற்கயிலைவெற்பிலுறைதற்கே
விருப்புடையஅற்புதரிருக்குமிடமோரார்
1808 மருத்திகழ்பொழிற்குலவுவண்திருவையாறே. ௧

கந்தமரவுந்துபுகையுந்தவில்விளக்கேர்
இந்திரனுணர்ந்துபணியெந்தையிடமெங்கும்
சந்தமலியுந்தருமிடைந்தபொழில்சார
1809 வந்தவளிநந்தணவுவண்திருவையாறே. ௨

கட்டுவடமெட்டுமுறுவட்டமுழவத்தில்
கொட்டுகரமிட்டவொலிதட்டும்வகைநந்திக்
கிட்டமிகநட்டமவையிட்டவரிடஞ்சீர்
1810 வட்டமதிலுள்திகழும்வண்திருவையாறே. ௩

நண்ணியொர்வடத்தின்நிழல்நால்வர்முனிவர்க்கன்
றெண்ணிலிமறைப்பொருள்விரித்தவரிடஞ்சீர்த்
தண்ணின்மலிசந்தகிலொடுந்திவருபொன்னி
1811 மண்ணின்மிசைவந்தணவுவண்திருவையாறே. ௪

வென்றிமிகுதாரகனதாருயிர்மடங்கக்
கன்றிவருகோபமிகுகாளிகதமோவ
நின்றுநடமாடியிடநீடுமலர்மேலால்
1812 மன்றல்மலியும்பொழில்கொள்வண்திருவையாறே. ௫

பூதமொடுபேய்கள்பலபாடநடமாடிப்
பாதமுதல்பையரவுகொண்டணிபெறுத்திக்
கோதையரிடும்பலிகொளும்பரனிடம்பூ
1813 மாதவிமணங்கமழும்வண்டிருவையாறே. சு

துன்னுகுழல்மங்கையுமைநங்கைசுளிவெய்தப்
பின்னொருதவஞ்செய்துழல்பிஞ்ஞகனுமங்கே
என்னசதியென்றுரைசெயங்கணனிடஞ்சீர்
1814 மன்னுகொடையாளர்பயில்வண்டிருவையாறே. எ

இரக்கமில்குணத்தொடுலகெங்குநலிவெம்போர்
அரக்கன்முடியத்தலைபுயத்தொடுமடங்கத்
துரக்கவிரலிற்சிறிதுவைத்தவரிடஞ்சீர்
1815 வரக்கருணையாளர்பயில்வண்டிருவையாறே. அ

பருத்துருவதாகிவிண்ணடைந்தவனொர்பன்றிப்
பெருத்துருவதாயுலகிடந்தவனுமென்றும்
கருத்துருவொணாவகைநிமிர்ந்தவனிடங்கார்
1816 வருத்துவகைதீர்கொள்பொழில்வண்டிருவையாறே. கூ

பாக்கியமதொன்றுமில்சமண்பதகர்புத்தர்
சாக்கியர்களென்றுடல்பொதிந்துதிரிவார்தாம்
நோக்கரியதத்துவனிடம்படியின்மேலால்
1817 மாக்கமுறநீடுபொழில்வண்டிருவையாறே. க0

வாசமலியும்பொழில்கொள்வண்டிருவையாற்றுள்
ஈசனையெழிற்புகலிமன்னவன்மெய்ஞ்ஞானப்
பூசுரனுரைத்ததமிழ்பத்துமிவைவல்லார்
1818 நேசமலிபத்தரவர்நின்மலனடிக்கே. கக

**33** ஏடுமலிகொன்றையரவிந்துவிளவன்னி
மாடவலசெஞ்சடையெம்மைந்தனிடமென்பர்
கோடுமலிஞாழல்குரவேறுசுரபுன்னை
1819 நாடுமலிவாசமதுவீசியநள்ளாறே. க

விண்ணியல்பிறைப்பிளவறைப்புனல்முடித்த
புண்ணியனிருக்குமிடமென்பர்புவிதன்மேல்
பண்ணியநடத்தொடிசைபாடுமடியார்கள்
1820 நண்ணியமனத்தின்வழிபாடுசெய்நள்ளாறே. உ

விளங்கிழைமடந்தைமலைமங்கையொருபாகத்
துளங்கொளஇருத்தியவொருத்தனிடமென்பர்
வளங்கெழுவுதீபமொடுதூபமலர்தூவி
1821 நளன்கெழுவிநாளும்வழிபாடுசெய்நள்ளாறே. ௩

கொக்கரவர்கூன்மதியர்கோபர்திருமேனிச்
செக்கரவர்சேருமிடமென்பர்தடமூழ்கிப்
புக்கரவர்விஞ்சையரும்விண்ணவருநண்ணி
1822 நக்கரவர்நாமநினைவெய்தியநள்ளாறே. ௪

நெஞ்சமிதுகண்டுகொளுனக்கெனநினைந்தார்
வஞ்சமதறுத்தருளுமற்றவனைவானோர்
அஞ்சமுதுகாகியவர்கைதொழஎழுந்த
1823 நஞ்சமுதுசெய்தவனிருப்பிடநள்ளாறே. ௫

பாலனடிபேணவவனாருயிர்குறைக்குங்
காலனுடன்மாளமுனுதைத்தஅரனூராம்
கோலமலர்நீர்க்குடமெடுத்துமறையாளர்
1824 நாவின்வழிநின்றுதொழில்பேணியநள்ளாறே. ௬

நீதியர்நெடுந்தகையர்நீள்மலையர்பாவை
பாதியர்பராபரர்பரம்பரரிருக்கை
வேதியர்கள்வேள்வியொழியாதுமறைநாளும்
1825 ஓதியரன்நாமமுமுணர்த்திடுநள்ளாறே. ௭

கடுத்துவல்லரக்கன்முன்நெருக்கிவரைதன்னை
எடுத்தவன்முடித்தலைகள்பத்துமிகுதோளும்
அடர்த்தவர்தமக்கிடமதென்பரளிபாட
1826 நடத்தகலவைத்திரள்கள்வைகியநள்ளாறே. ௮

உயர்ந்தவனுருக்கொடுதிரிந்துலகமெல்லாம்
பயந்தவன்நினைப்பரியபண்பனிடமென்பர்
வியந்தமரர்மெச்சமலர்மல்குபொழிலெங்கும்
1827 நயந்தருமவேதவொலியார்திருநள்ளாறே. ௯

சிந்தைதிருகற்சமணர்தேரர்தவமென்னும்
பந்தனையறுத்தருளுகின்றபரமனூர்
மந்தமுழவந்தருவிழாவொலியும்வேதச்
1828 சந்தம்விரவிப்பொழில்முழங்கியநள்ளாறே. ௧௦

ஆடலரவார்சடையனுயிழைதன்னேடும்
நாடுமலிவெய்திடஇருந்தவன்நள்ளாற்றை
மாடமலிகாழிவளர்பந்தனதுசெஞ்சொல்
1829 பாடலுடையாரையடையாபழிகள்நோயே. கக

**34** முத்தன்மிகுமூவிலைநல்வேலன்விரிநூலன்
அத்தனெமையாளுடையஅண்ணலிடமென்பர்
மைத்தழைபெரும்பொழிலின்வாசமதுவீசப்
1830 பத்தரொடுசித்தர்பயில்கின்றபழுவூரே. க

கோடலொடுகோங்கவைகுலாவுமுடிதன்மேல்
ஆடரவம்வைத்தபெருமானதிடமென்பர்
மாடமலிசூளிகையிலேறிமடவார்கள்
1831 பாடலொலிசெய்யமலிகின்றபழுவூரே. உ

வாலியபுரத்திலவர்வேவவிழிசெய்த
போலியவொருத்தர்புரிநூலரிடமென்பர்
வேலியின்விரைக்கமலமன்னமுகமாதர்
1832 பாலெனமிழற்றிநடமாடுபழுவூரே. ௩

எண்ணுமொரெழுத்துமிசையின்கிளவிதேர்வார்
கண்ணுமுதலாயகடவுட்கிடமதென்பர்
மண்ணின்மிசையாடிமலையாளர்தொழுதேத்திப்
1833 பண்ணினெலிகொண்டுபயில்கின்றபழுவூரே. ச

சாதல்புரிவார்சுடலைதன்னில்நடமாடும்
நாதன்நமையாளுடையநம்பனிடமென்பர்
வேதமொழிசொல்லிமறையாளரிறைவன்றன்
1834 பாதமவையேத்தநிகழ்கின்றபழுவூரே. ரு

மேயவருமும்மதிலும்வெந்தழல்விளைத்து
மாவயரவன்றுரிசெய்மைந்தனிடமென்பர்
பூவையைமடந்தையர்கள்கொண்டுபுகழ்சொல்லிப்
1835 பாவையர்கள்கற்பொடுபொலிந்தபழுவூரே. சு

மந்தணமிருந்துபுரிமாமடிதன்வேள்வி
சிந்தவிளையாடுசிவலோகனிடமென்பர்
அந்தணர்களாகுதியிலிட்டஅகில்மட்டார்
1836 பைந்தொடிநன்மாதர்சுவடொற்றுபழுவூரே. எ

உரக்கடல்விடத்தினைமிடற்றிலுறவைத்தன்
றரக்கனையடர்த்தருளுமப்பனிடமென்பர்
குரக்கினம்விரைப்பொழிலின்மீதுகனியுண்டு
1837 பரக்குறுபுனற்செய்விளையாடுபழுவூரே. அ

நின்றநெடுமாலுமொருநான்முகனுநேட
அன்றுதழலாய்நிமிருமாதியிடமென்பர்
ஒன்றுமிருமூன்றுமொருநாலுமுணர்வார்கள்
1838 மன்றினிலிருந்துடன்மகிழ்ந்தபழுவூரே. கூ

மொட்டையமணாதர்துகில்மூடுவிரிதேரர்
முட்டைகண்மொழிந்தமுனிவான்றனிடமென்பர்
மட்டைமலிதாழையிளநீரதிசைபூகம்
1839 பட்டையொடுதாறுவிரிகின்றபழுவூரே. க0

அந்தணர்களானமலையாளரவரேத்தும்
பந்தமலிகின்றபழுவூரரனையாரச்
சந்தமிகுஞானமுணர்பந்தனுரைபேணி
1840 வந்தவணமேத்துமவர்வானமுடையாரே. கக

35 பரவக்கெடும்வல்வினைபாரிடஞ்சூழ
இரவிற்புறங்காட்டிடைநின்றெரியாடி
அரவச்சடையந்தணன்மேயஅழகார்
1841 குரவப்பொழில்சூழ்குரங்காடுதுறையே. க

விண்டார்புரமூன்றுமெரித்தவிமலன்
இண்டார்புறங்காட்டிடைநின்றெரியாடி
வண்டார்கருமென்குழல்மங்கையொர்பாகம்
1842 கொண்டான்நகர்போல்குரங்காடுதுறையே. உ

நிறைவில்புறங்காட்டிடைநேரிழையோடும்
இறைவில்லெரியான்மழுவேந்திநின்றாடி
மறையின்னொலிவானவர்தானவரேத்தும்
1843 குறைவில்லவனூர்குரங்காடுதுறையே. ங

விழிக்குந்நுதன்மேலொருவெண்பிறைசூடித்
தெழிக்கும்புறங்காட்டிடைச்சேர்ந்தெரியாடிப்
பழிக்கும்பரிசேபலிதேர்ந்தவனூர்பொன்
1844 கொழிக்கும்புனல்சூழ்குரங்காடுதுறையே. ச

நீரூர்தருமேனியன்நெற்றியொர்கண்ணன்
ஏரூர்கொடியெம்மிறையீண்டெரியாடி
ஆரூர்சடையந்தணனாயிழையாளோர்
1845 கூரூன்நகர்போல்குரங்காடுதுறையே. ௫

நளிரும்மலர்க்கொன்றையுநாறுகரந்தைத்
துளிருஞ்சுலவிச்சுடுகாட்டெரியாடி
மிளிரும்மரவார்த்தவன்மேவியகோயில்
1846 குளிரும்புனல்சூழ்குரங்காடுதுறையே. ௬

பழகும்வினைதீர்ப்பவன்பார்ப்பதியோடும்
முழவங்குழல்மொந்தைமுழங்கெரியாடும்
அழகன்னயில்மூவிலைவேல்வலனேந்தும்
1847 குழகன்நகர்போல்குரங்காடுதுறையே. ௭

வரையார்த்தெடுத்தவ்வரக்கன்வலியொல்க
நிரையார்விரலானெரித்திட்டவனூராம்
கரையார்ந்திழிகாவிரிக்கோலக்கரைமேல்
1848 குரையார்பொழில்சூழ்குரங்காடுதுறையே. ௮

நெடியானொடுநான்முகனுந்நினைவொண்ணாப்
படியாகியபண்டங்கனின்றெரியாடி
செடியார்தலையேந்தியசெங்கண்வெள்ளேற்றின்
1849 கொடியான்நகர்போல்குரங்காடுதுறையே. ௯

துவராடையர்வேடமலாச்சமண்கையர்
கவர்வாய்மொழிகாதல்செய்யாதவனூராம்
நவையார்மணிபொன்னகில்சந்தனமுந்திக்
1850 குவையார்கரைசேர்குரங்காடுதுறையே. ௧௦

நல்லார்பயில்காழியுள்ஞானசம்பந்தன்
கொல்லேறுடையான்குரங்காடுதுறைமேல்
சொல்லார்தமிழ்மாலைபத்துந்தொழுதேத்த
1851 வல்லாரவர்வானவரோடுறைவாரே. ௧௧

**36** சீரார்கழலேதொழுவீரிதுசெப்பீர்
வாரார்முலைமங்கையொடும்முடனாகி
ஏராரிரும்பூளையிடங்கொண்டஈசன்
1852 காரார்கடல்நஞ்சமுதுண்டகருத்தே. ௧

தொழலார்கழலேதொழுதொண்டர்கள்சொல்லீர்
குழலார்மொழிக்கோல்வளையோடுடனாகி
எழிலாரிரும்பூளையிடங்கொண்டஈசன்
1853 கழல்தான்கரிகானிடையாடுகருத்தே. உ

அன்பாலடிகைதொழுவீரறியீரே
மின்போல்மருங்குல்மடவாளொடுமேவி
இன்பாயிரும்பூளையிடங்கொண்டஈசன்
1854 பொன்போற்சடையிற்புனல்வைத்தபொருளே. ௩

நச்சித்தொழுவீர்கள்நமக்கிதுசொல்லீர்
கச்சிப்பொலிகாமக்கொடியுடன்கூடி
இச்சித்திரும்பூளையிடங்கொண்டஈசன்
1855 உச்சித்தலையிற்பலிகொண்டுழலூணே. ௪

சுற்றார்ந்தடியேதொழுவீரிதுசொல்லீர்
நற்றாழ்குழல்நங்கையொடுமுடனாகி
எற்றேயிரும்பூளையிடங்கொண்டஈசன்
1856 புற்றாடரவோடென்புபூண்டபொருளே. ரு

தோடார்மலர்தூய்த்தொழுதொண்டர்கள்சொல்லீர்
சேடார்குழற்சேயிழையோடுடனாகி
ஈடாஇரும்பூளையிடங்கொண்டஈசன்
1857 காடார்கடுவேடுவனானகருத்தே. ௬, ௭

ஒருக்கும்மனத்தன்பருள்ளீரிதுசொல்லீர்
பருக்கைம்மதவேழமுரித்துமையோடும்
இருக்கையிரும்பூளையிடங்கொண்டஈசன்
1858 அரக்கன்னுரந்தீர்த்தருளாக்கியவாறே. ௮

துயராயினநீங்கித்தொழுந்தொண்டர்சொல்லீர்
கயலார்கருங்கண்ணியொடும்முடனாகி
இயல்பாயிரும்பூளையிடங்கொண்டஈசன்
1859 முயல்வாரிருவர்க்கெரியாகியமொய்ம்பே. ௯

துணைநன்மலர்தூய்த்தொழுந்தொண்டர்கள்சொல்லீர்
பணைமென்முலைப்பார்ப்பதியோடுடனாகி
இணையில்லிரும்பூளையிடங்கொண்டஈசன்
1860 அணைவில்சமண்சாக்கியமாக்கியவாறே. ௧௦

எந்தையிரும்பூளையிடங்கொண்டஈசன்
சந்தம்பயில்சண்பையுண்ஞானசம்பந்தன்
செந்தண்தமிழ்செப்பியபத்திவைவல்லார்
1861 பந்தம்மறுத்தோங்குவர்பான்மையினாலே. ௧௧

**37** சதுரம்மறைதான்துதிசெய்துவணங்கும்
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
இதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
1862 கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே. ௧

சங்கந்தரளமவைதான்கரைக்கெற்றும்
வங்கக்கடல்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
மங்கையுமைபாகமுமாகவிதென்கொல்
1863 கங்கைசடைமேலடைவித்தகருத்தே. ௨

குரவங்குருக்கத்திகள்புன்னைகள்ஞாழல்
மருவும்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
சிரமும்மலருந்திகழ்செஞ்சடைதன்மேல்
1864 அரவம்மதியோடடைவித்தவழகே. ௩

படர்செம்பவளத்தொடுபன்மலர்முத்தம்
மடலம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
உடலம்முமைபங்கமதாகியுமென்கொல்
1865 கடல்நஞ்சமுதாவதுவுண்டகருத்தே. ௪

வானோர்மறைமாதவத்தோர்வழிபட்ட
தேனார்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
ஏனோர்தொழுதேத்தஇருந்தநீயென்கோல்
1866 கானார்கடுவேடுவனானகருத்தே. ௫

பலகாலங்கள்வேதங்கள்பாதங்கள்போற்றி
மலரால்வழிபாடுசெய்மாமறைக்காடா
உலகேழுடையாய்கடைதோறும்முன்னேன்கோல்
1867 தலைசேர்பலிகொண்டதிலுண்டதுதானே. ௬

வேலாவலயத்தயலேமிளிர்வெய்தும்
சேலார்திருமாமறைக்காட்டுறைசெல்வா
மாலோடயனிந்திரனஞ்சமுனென்கொல்
1868 காலார்சிலைக்காமனைக்காய்ந்தகருத்தே. ௭

கலங்கொள்கடலோதமுலாவுங்கரைமேல்
வலங்கொள்பவர்வாழ்த்திசைக்கும்மறைக்காடா
இலங்கையுடையானடர்ப்பட்டிடசெய்த
1869 அலங்கல்விரலூன்றியருள்செய்தவாறே. அ

கோனென்றுபல்கோடியுருத்திரர்போற்றும்
தேனம்பொழில்சூழ்மறைக்காட்டுறைசெல்வா
ஏனங்கழுகானவருன்னைமுனென்கொல்
1870 வானந்தலமண்டியுங்கண்டிலாவாறே. கூ

வேதம்பலவோமம்வியந்தடிபோற்ற
ஓதம்முலவும்மறைக்காட்டிலுறைவாய்
ஏதில்சமண்சாக்கியர்வாக்கிவையென்கொல்
1871 ஆதரொடுதாமலர்தூற்றியவாறே. க0

காழிந்நகரான்கலைஞானசம்பந்தன்
வாழிம்மறைக்காடனைவாய்ந்தறிவித்த
ஏழின்னிசைமாலையீரைந்திவைவல்லார்
1872 வாழியுலகோர்தொழவானடைவாரே. கக

38 நித்தலுந்நியமஞ்செய்துநீர்மலர்தூவிச்
சித்தமோன்றவல்லார்க்கருளுஞ்சிவன்கோயில்
மத்தயானையின்கோடும்வண்பீலியும்வாரித்
1873 தத்துநீர்ப்பொன்னிசாகரமேவுசாய்க்காடே. க

பண்டலைக்கொண்டுபூதங்கள்பாடநின்றாடும்
வெண்டலைக்கருங்காடுறைவேதியன்கோயில்
கொண்டலைத்திகழ்பேரிமுழங்கக்குலாவித்
1874 தண்டலைத்தடமாமயிலாடுசாய்க்காடே. உ

நாறுகூவிளநாகிளவெண்மதியத்தோ
டாறுசூடும்மமரர்பிரானுறைகோயில்
ஊறுதேங்கனிமாங்கனியோங்கியசோலைத்
1875 தாறுதண்கதலிப்புதல்மேவுசாய்க்காடே. ந

வரங்கள்வண்புகழ்மன்னியஎந்தைமருவார்
புரங்கள்மூன்றும்பொடிபடஎய்தவன்கோயில்
இரங்கலோசையுமீட்டியசரத்தொடுமீண்டித்
1876 தாங்கநீள்கழித்தண்கரைவைகுசாய்க்காடே. ச

ஏழைமார்கடை தோறுமிடுபலிக்கென்று
கூழைவாளரவாட்டும்பிரானுறைகோயில்
மாழையொண்கண்வளைக்கைநுளைச்சியர்வண்பூந்
1877 தாழைவெண்மடற்கொய்துகொண்டாடுசாய்க்காடே. ரு

துங்கவானவர்சூழ்கடல்தாம்கடைபோதில்
அங்கொர்நீழலளித்தஎம்மானுறைகோயில்
வங்கமங்கொளிரிப்பியுமுத்துமணியுஞ்
1878 சங்கும்வாரித்தடங்கடலுந்துசாய்க்காடே. சு

வேதநாவினர்வெண்பளிங்கின்குழைக்காதர்
ஓதநஞ்சணிகண்டருகந்துறைகோயில்
மாதர்வண்டுதன்காதல்வண்டாடியபுன்னைத்
1879 தாதுகண்டுபொழில்மறைந்தூடுசாய்க்காடே. எ

இருக்குநீள்வரைபற்றியடர்த்தன்றெடுத்த
அரக்கனைநெரித்தருள்செய்தவன்கோயில்
மருக்குலாவியமல்லிகைசண்பகம்வண்பூந்
1880 தருக்குலாவியதண்பொழில்நீடுசாய்க்காடே. அ

மாலினோடயன்காண்டற்கரியவர்வாய்ந்த
வேலையார்விடமுண்டவர்மேவியகோயில்
சேலின்நேர்விழியார்மயிலாலச்செருந்தி
1881 காலையேகனகம்மலர்கின்றசாய்க்காடே. கூ

ஊத்தைவாய்ச்சமண்கையர்கள்சாக்கியர்க்கென்றும்
ஆத்தமாகஅறிவரிதாயவன்கோயில்
வாய்த்தமாளிகைசூழ்தருவண்புகார்மாடே
1882 பூத்தவாவிகள்சூழ்ந்துபொலிந்தசாய்க்காடே. ௧௦

ஏனையோர்புகழ்ந்தேத்தியஎந்தைசாய்க்காட்டை
ஞானசம்பந்தன்காழியர்கோன்நவில்பத்தும்
ஊனமின்றியுரைசெயவல்லவர்தாம்போய்
1883 வானநாடினிதாள்வரிம்மாநிலத்தோரே. ௧௧

39 ஆரூர்தில்லையம்பலம்வல்லம்நல்லம்வடகச்சியுமச்சிறு
பாக்கம்நல்ல, கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணிகடல்
சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார், நீரூர்வயல்நின்றியூர்
குன்றியூருங்குருகாவையூர்நாரையூர்நீடுகானப், பேரூர்

நன்னீள்வயல்நெய்த்தானமும் பிதற்றாய்ப்பிறைசூடிதன்பே
1884 ரிடமே. க

அண்ணாமலையீங்கோயும் அத்திமுத்தாறகலாமுதுகுன் றங்கொடுங்குன்றமுங், கண்ணார்கழுக்குன்றங்கயிலைகோ ணம்பயில்கற்குடிகாளத்திவாட்போக்கியும், பண்ணார் மொழிமங்கையோர் பங்குடையான்பரங்குன்றம்பருப் பதம்பேணிநின்றே, எண்ணாய் இரவும்பகலும்இடும்பைக்
1885 கடல்நீந்தலாங்காரணமே. உ

அட்டானமென்றோதியநாலிரண்டும் மழகன்னுறை காவனைத்துந்துறைகள், எட்டாந்திருமூர்த்தியின்கா டொன்பதுங்குளமூன்றுங்களமஞ்சும்பாடிநான்கும், மட் டார்குழலாள்மலைமங்கைபங்கன்மதிக்கும்இடமாகியபாழி மூன்றும், சிட்டானவன்பாசூரென்றேவிரும்பாய்அரும்
1886 பாவங்களாயினதேய்ந்தறவே. ங

அறப்பள்ளிஅகத்தியான்பள்ளிவெள்ளைப்பொடிப்பூசி யாறணிவானமர்காட்டுப்பள்ளி, சிறப்பள்ளிசிராப்பள்ளி செம்பொன்பள்ளிதிருநனிபள்ளிசீர்மகேந்திரத்துப்,பிறப் பில்லவன்பள்ளிவெள்ளச்சடையான் விரும்பும்மிடைப் பள்ளிவண்சக்கரமால், உறைப்பாலடிபோற்றக்கொடுத்த
1887 பள்ளிஉணராய்மடநெஞ்சமேஉன்னிநின்றே. ச

ஆறைவடமாகறல்அம்பர்ஐயாறணியார்பெருவேளூர் விளமர்தெங்கூர், சேறைதுலைபுகலூரகலாதிவைகாதலித்
1888 தானவன்சேர்பதியே * * * ரு

மனவஞ்சர்மற்றோடமுன்மாதாருமதிகூர்திருக்கூட வில்ஆலவாயும், இனவஞ்சொலிலா இடைமாமருதும்இரும் பைப்பதிமாகாளம்வெற்றியூரும், கனமஞ்சினமால்விடை யான்விரும்புங்கருகாவூர்நல்லூர்பெரும்புலியூர், தன மென்சொலிற்றஞ்சமென்றே நினைமின்தவமாமலமாயின
1889 தானறுமே. சா

மாட்டூர்மடப்பாச்சிலாச்சிராமம்முண்டீச்சரம்வாத வூர்வாரணாசி, காட்டூர்கடம்பூர்படம்பக்கங்கொட்டுங்கட லொற்றியூர்மற்றுறையூரவையும், கோட்டூர்திருவாமாத்

தூர்கோழம்பழுங்கொடுங்கோவலூர்திருக்குணவாயில்.
1890 * * * * எ

* * குலாவுதிங்கட்சடையான்குளிரும்பரிதிநியமம், போற்றூராடியார்வழிபா டொழியாத்தென்புறம்பயம்பூவ ணம்பூழியூரும், காற்றூர்வரையன்றெடுத்தான்முடி
1891 தோள்நெரித்தானுறைகோயிலென்றென்றுநீகருதே. அ

நெற்குன்றம்ஓத்தூர்நிறைநீர்மருகல்நெடுவாயில்குறும் பலாநீடுதிரு, நற்குன்றம்வலம்புரம்நாகேச்சுரம்நளிர் சோலையுஞ்சேனைமாகாளம்வாய்மூர், கற்குன்றமொன் றேந்திமழைதடுத்தகடல்வண்ணனும் மாமலரோனுங் காணுச், சொற்கென்றுந்தொலைவிலாதானுறையுங்குட
1892 மூக்கென்றுசொல்லிக்குலாவுமினே. கூ

குத்தங்குடிவேதிகுடிபுனல்சூழ்குருந்தங்குடிதேவன் குடிமருவும், அத்தங்குடிதண்டிருவண்குடியும்அலம்புஞ் சலந்தன்சடைவைத்துகந்த, நித்தன்நிமலன்உமையோ டுங்கூடநெடுங்காலம்உறைவிடமென்றுசொல்லாப், புத்தர் புறங்கூறியபுன்சமணர்நெடும்பொய்களைவிட்டுநினைந்துய்ம்
1893 மினே. க0

அம்மானையருந்தவமாகிநின்றஅமரர்பெருமான்பதி யானவுன்னிக், கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக் கிறைவன்சிவஞானசம்பந்தன்சொன்ன, இம்மாலையீரைந் தும்இருநிலத்தில்இரவும்பகலுந்நினைந்தேத்திநின்று, விம் மாவெருவாவிரும்பும் அடியார்விதியார்பிரியார்சிவன்சேவ
1894 டிக்கே. கக

40 எம்பிரானெனக்கமுதமாவானுந்தன்னடைந்தார்
தம்பிரான்ஆவானுந்தழலேந்துகையானுங்
கம்பமாகரியுரித்தகாபாலிகறைக்கண்டன்
1895 வம்புலாம்பொழிற்பிரமபுரத்துறையும்வானவனே. க

தாமென்றுமனந்தளராத்தகுதியராயுலகத்துக்
காமென்றுசரண்புகுந்தார்தமைக்காக்குங்கருணையினன்
ஓமென்றுமறைபயில்வார்பிரமபுரத்துறைகின்ற
1896 காமன்றனுடலெரியக்கனல்சேர்ந்தகண்ணனே. உ

நன்னெஞ்சேயுனையிரந்தேன்நம்பெருமான்திருவடியே
உன்னஞ்செய்திருகண்டாயுய்வதனைவேண்டுதியேல்
அன்னஞ்சேர்பிரமபுரத்தாரமுதையெப்போதும்
1897 பன்னுஞ்சீர்வாயதுவேபார்கண்ணேபரிந்திடவே. ௩

சாநாளின்றிம்மனமேசங்கைதனைத்தவிர்ப்பிக்குங்
கோனாளுந்திருவடிக்கேகொழுமலர்தூவெத்தனையுந்
தேனாளும்பொழிற்பிரமபுரத்துறையுந்தீவணனை
1898 நாநாளும்நல்நியமஞ்செய்தவன்சீர்நவின்றேத்தே. ௪

கண்ணுதலான்வெண்ணீற்றான்கமழ்சடையான்விடையேறி
பெண்ணிதமாமுருவத்தான்பிஞ்ஞகன்பேர்பலவுடையான்
விண்ணுதலாத்தோன்றியசீர்ப்பிரமபுரந்தொழவிரும்பி
1899 எண்ணுதலாஞ்செல்வத்தையியல்பாகஅறிந்தோமே. ௫

எங்கேனும்யாதாகிப்பிறந்திடினுந்தன்னடியார்க்
கிங்கேயென்றருள்புரியுமெம்பெருமானெருதேறிக்
கொங்கேயுமலர்ச்சோலைக்குளிர்பிரமபுரத்துறையுஞ்
1900 சங்கேயொத்தொளிர்மேனிச்சங்கரன்றன்றன்மைகளே. ௬

சிலையதுவெஞ்சிலையாகத்திரிபுரமூன்றெரிசெய்த
இலைநுனைவேல்தடக்கையனேந்திழையாளொருகூறன்
அலைபுனல்சூழ்பிரமபுரத்தருமணியையடிபணிந்தால்
1901 நிலையுடையபெருஞ்செல்வம்நீடுலகிற்பெறலாமே. ௭

எரித்தமயிர்வாளரக்கன்வெற்பெடுக்கத்தோளொடுதாள்
நெரித்தருளுஞ்சிவமூர்த்திநீறணிந்தமேனியினான்
உரித்தவரித்தோலுடையானுறைபிரமபுரந்தன்னைத்
1902 தரித்தமனமெப்போதும்பெறுவார்தாந்தக்காரே. ௮

கரியானும்நான்முகனுங்காணாமைக்கனலுருவாய்
அரியானும்பரமேட்டிஅரவஞ்சேரகலத்தான்
தெரியாதானிருந்துறையுந்திகழ்பிரமபுரஞ்சேர
1903 உரியார்தாமேழுலகுமுடனாளவுரியாரே. ௯

உடையிலார்சீவரத்தார்தன்பெருமையுணர்வரியான்
முடையிலார்வெண்டலைக்கைமூர்த்தியாந்திருவுருவன்
பெடையிலார்வண்டாடும்பொழிற்பிரமபுரத்துறையுஞ்
1904 சடையிலார்வெண்பிறையான்தாள்பணிவார்தக்காரே. ௧௦

தன்னடைந்தார்க்கின்பங்கள்தருவானைத்தத்துவனைக்
கன்னடைந்தமதிற்பிரமபுரத்துறையுங்காவலனை
முன்னடைந்தான்சம்பந்தன்மொழிபத்துமிவைவல்லார்
1905 பொன்னடைந்தார்போகங்கள்பலவடைந்தார்புண்ணியரே.

41 மண்புகார்வான்புகுவர்மனமிளையார்பசியாலுங்
கண்புகார்பிணியறியார்கற்றாருங்கேட்டாரும்
விண்புகாரெனவேண்டாவெண்மாடநெடுவீதித்
1906 தண்புகார்ச்சாய்க்காட்டெந்தலைவன்தாள்சார்ந்தாரே. க

போய்க்காடேமறைந்துறைதல்புரிந்தானும்பூம்புகார்ச்
சாய்க்காடேபதியாகவுடையானும்விடையானும்
வாய்க்காடுமுதுமரமேயிடமாகவந்தடைந்த
1907 பேய்க்காடல்புரிந்தானும்பெரியோர்கள்பெருமானே. உ

நீநாளும்நன்னெஞ்சேநினைகண்டாய்யாரறிவார்
சாநாளும்வாழ்நாளுஞ்சாய்க்காட்டெம்பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப்புகழ்நாமஞ்செவிகேட்ப
1908 நாநாளும்நவின்றேத்தப்பெறலாமேநல்வினையே. ங

கட்டலர்த்தமலர்தூவிக்கைதொழுமின்பொன்னியன்ற
தட்டலர்த்தபூஞ்செருந்திகோங்கமருந்தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்ததடந்தாழைமுருகுயிர்க்குங்காவிரிப்பூம்
1909 பட்டினத்துச்சாய்க்காட்டெம்பரமேட்டிபாதமே. ச

கோங்கன்னகுவிமுலையாள்கொழும்பணைத்தோட்கொடியிடையைப்
பாங்கென்னவைத்துகந்தான்படர்சடைமேற்பால்மதியந்
தாங்கினான்பூம்புகார்ச்சாய்க்காட்டான்தாள்நிழற்கீழ்
1910 ஓங்கினாரோங்கினாரெனவுரைக்குமுலகமே. ரு

சாந்தாகநீறணிந்தான்சாய்க்காட்டான்காமனைமுன்
தீந்தாகமெரிகொளுவச்செற்றுகந்தான்திருமுடிமேல்
ஓய்ந்தாரமதிசூடியொளிதிகழுமலைமகள்தோள்
1911 தோய்ந்தாகம்பாகமாவுடையானும்விடையானே. சா

மங்குல்தோய்மணிமாடம்மதிதவழும்நெடுவீதிச்
சங்கெலாங்கரைபொருதுதிரைபுலம்புஞ்சாய்க்காட்டான்
கொங்குலாவரிவண்டின்இசைபாடுமலர்க்கொன்றைத்
1912 தொங்கலானடியார்க்குச்சுவர்க்கங்கள்பொருளலவே. எ

தொடலரியதொருகணையாற்புரமூன் றுமெரியுண்ணப்
படஅரவத்தெழிலாரம்பூண்டான்பண்டரக்கனையுந்
தடவரையாற்றடவரைத்தோளூன்றினன்சாய்க்காட்டை
1913 இடவகையாலடைவோமென்றெண்ணுவார்க்கிடரிலையே. அ

வையநீரேற்றானும்மலருறையுநான்முகனும்
ஐயன்மாரிருவர்க்குமளப்பரிதாலவன்பெருமை
தையலார்பாட்டோவாச்சாய்க்காட்டெம்பெருமானைத்
1914 தெய்வமாப்பேணுதார்தெளிவுடைமைதேறேமே. கூ

குறங்காட்டுநால்விரலிற்கோவணத்துக்கோலோவிப்போய்
அறங்காட்டுஞ்சமணருஞ்சாக்கியருமலர்தூற்றுந்
திறங்காட்டல்கேளாதேதெளிவுடையீர்சென்றடைமின்
1915 புறங்காட்டிலாடலான்பூம்புகார்ச்சாய்க்காடே. கo

கொம்பைந்துபுடைத்தொல்குநூபுரஞ்சேர்மெல்லடியார்
அம்பந்தும்வரிக்கழலுமரவஞ்செய்பூங்காழிச்
சம்பந்தன்தமிழ்பகர்ந்தசாய்க்காட்டுப்பத்தினையும்
1916 எம்பந்தமெனக்கருதியேத்துவார்க்கிடர்கெடுமே. கக

42 அக்கிருந்தஆரமுமாடரவுமாமையும்
தொக்கிருந்தமார்பினன்தோலுடையான்வெண்ணீற்றன்
புக்கிருந்ததொல்கோயில்பொய்யிலாமெய்ந்நெறிக்கே
1917 தக்கிருந்தாராக்கூரில்தான்தோன்றிமாடமே. க

நீராரவார்சடையான்நீறுடையானேறுடையான்
காரார்பூங்கொன்றையினன்காதலித்ததொல்கோயில்
கூரார்வாய்நிறையக்கொண்டயலேகோட்டகத்தில்
1918 தாராமல்காக்கூரில்தான்தோன்றிமாடமே. உ

வாளார்கண்செந்துவர்வாய்மாமலையான்றன்மடந்தை
தோளாகம்பாகமாப்புல்கினன்தொல்கோயில்
வேளாளரென்றவர்கள்வள்ளன்மையான்மிக்கிருக்கும்
1919 தாளாளராக்கூரில்தான்தோன்றிமாடமே. ந

கொங்குசேர்தண்கொன்றைமாலையினன்கூற்றடரப்
பொங்கினன்பொங்கொளிசேர்வெண்ணீற்றன்பூங்கோயில்
அங்கம்ஆறோடுமருமறைகளைவேள்வி
1920 தங்கினராக்கூரில்தான்தோன்றிமாடமே. ச

வீக்கினானாடரவம்வீழ்ந்தழிந்தார்வெண்டலையென்
பாக்கினன்பலகலன்களாதரித்துப்பாகம்பெண்
ஆக்கினன்தொல்கோயிலாம்பலம்பூம்பொய்கைபுடை
1921 தாக்கினாராக்கூரில்தான்தோன்றிமாடமே. ரு

பண்ணொளிசேர்நான்மறையான்பாடலினேடாடலினன்
கண்ணொளிசேர்நெற்றியினன்காதலித்ததொல்கோயில்
விண்ணொளிசேர்மாமதியந்தீண்டியக்கால்வெண்மாடம்
1922 தண்ணொளிசேராக்கூரில்தான்தோன்றிமாடமே. சு

வீங்கினார்மும்மதிலும்வில்வரையால்வெந்தவிய
வாங்கினார்வானவர்கள்வந்திறைஞ்சுந்தொல்கோயில்
பாங்கினார்நான்மறையோடாறங்கம்பலகலைகள்
1923 தாங்கினாராக்கூரில்தான்தோன்றிமாடமே. எ

கன்னெடியகுன்றெடுத்தான்தோளடரக்காலூன்றி
இன்னருளாலாட்கொண்டஎம்பெருமான்தொல்கோயில்
பொன்னடிக்கேநாள்தோறும்பூவோடுநீர்சுமக்கும்
1924 தன்னடியாராக்கூரில்தான்தோன்றிமாடமே. அ

நன்மையாம்நாரணனும்நான்முகனுங்காண்பரிய
தொன்மையான்தோற்றங்கேடில்லாதான்தொல்கோயில்
இன்மையார்சென்றிரந்தார்க்கில்லையென்னாதீந்துவக்குந்
1925 தன்மையாராக்கூரில்தான்தோன்றிமாடமே. கூ

நாமருவுபுன்மைநவிற்றச்சமண்தேரர்
பூமருவுகொன்றையினன்புக்கமருந்தொல்கோயில்
சேல்மருவுபைங்கயத்துச்செங்கழுநீர்பைங்குவளை
1926 தாமருவுமாக்கூரில்தான்தோன்றிமாடமே. க0

ஆடலமர்ந்தானை ஆக்கூரில்தான்தோன்றி
மாடமமர்ந்தானைமாடஞ்சேர்தண்காழி
நாடற்கரியசீர்ஞானசம்பந்தன்சொல்
1927 பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. கக

43 கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதியம்
உள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயசம்பாதிசடாயென்பார்தாமிருவர்
1928 புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே. க

தையலாளொருபாகஞ்சடைமேலாளவளோடும்
ஐயந்தேர்ந்துழல்வாரோரந்தணனுருறையுமிடம்
மெய்சொல்லாஇராவணனைமேலோடியீடழித்துப்
1929 பொய்சொல்லாதுயிர்போனான்புள்ளிருக்குவேளூரே. உ

வாசநலஞ்செய்திமையோர்நாள்தோறும்மலர்தூவ
ஈசனெம்பெருமானாரினிதாகவுறையுமிடம்
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங்கொருநாளுமொழியாமே
1930 பூசனைசெய்தினிதிருந்தான்புள்ளிருக்குவேளூரே. ௩

மாகாயம்பெரியதொருமானுரிதோலுடையாடை
ஏகாயமிட்டுகந்தஎரியாடியுறையுமிடம்
ஆகாயந்தேரோடும்இராவணனையமரின்கண்
1931 போகாமேபொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. ௪

கீதத்தைமிகப்பாடுமடியார்கள்குடியாகப்
பாதத்தைத்தொழநின்றபரஞ்சோதிபயிலுமிடம்
வேதத்தின்மந்திரத்தால்வெண்மணலேசிவமாகப்
1932 போதத்தால்வழிபட்டான்புள்ளிருக்குவேளூரே. ரு

திறங்கொண்டஅடியார்மேல்தீவினைநோய்வாராமே
அறங்கொண்டசிவதன்மமுரைத்தபிரானமருமிடம்
மறங்கொண்டங்கிராவணன்றன்வலிகருதிவந்தானைப்
1933 புறங்கண்டசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. ௬

அத்தியினீருரிமூடியழகாகஅனலேந்திப்
பித்தரைப்போற்பலிதிரியும்பெருமானார்பேணுமிடம்
பத்தியினால்வழிபட்டுப்பலகாலந்தவஞ்செய்து
1934 புத்தியொன்றவைத்துகந்தான்புள்ளிருக்குவேளூரே. எ

பண்ணொன்றஇசைபாடுமடியார்கள்குடியாக
மண்ணின்றிவிண்கொடுக்கும்மணிகண்டன்மருவுமிடம்
எண்ணின்றிமுக்கோடிவாழ்நாளதுடையானைப்
1935 புண்ணொன்றப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே. அ

வேதித்தார்புரமூன்றும்வெங்கணையால்வெந்தவியச்
சாதித்தவில்லாளிகண்ணுளன்சாருமிடம்
ஆதித்தன்மகனென்னஅகன்ஞாலத்தவரோடும்
1936 போதித்தசடாயென்பான்புள்ளிருக்குவேளூரே. கூ

கடுத்துவருங்கங்கைதனைக்கமழ்சடையொன்றூடாமே
தடுத்தவரெம்பெருமானூர்தாமினிதாயுறையுமிடம்
விடைத்துவருமிலங்கைக்கோன்மலங்கச்சென்றிராமற்காய்ப்
1937 புடைத்தவனைப்பொருதழித்தான்புள்ளிருக்குவேளூரே.

செடியாயவுடல்தீர்ப்பான்தீவினைக்கோர்மருந்தாவான்
பொடியாடிக்கடிமைசெய்தபுள்ளிருக்குவேளூரைக்
கடியார்ந்தபொழிற்காழிக்கவுணியன்சம்பந்தன்சொல்
1938 மடியாதுசொல்லவல்லார்க்கில்லையாம்மறுபிறப்பே. கக

44 துன்னம்பெய்கோவணமுந்தோலுமுடையாடை
பின்னஞ்சடைமேலோர்பிள்ளைமதிசூடி
அன்னஞ்சேர்தண்கானலாமாத்தூரம்மான்றன்
1939 பொன்னங்கழல்பரவாப்போக்கமும்போக்கமே. க

கைம்மாவின்தோல்போர்த்தகாபாலிவானுலகில்
மும்மாமதிலெய்தான்முக்கணன்பேர்பாடி
அம்மாமலர்ச்சோலையாமாத்தூரம்மானெம்
1940 பெம்மானென்றேத்தாதார்பேயரிற்பேயரே. உ

பாம்பரைச்சாத்தியோர்பண்டரங்கன்விண்டதோர்
தேம்பலிளமதியஞ்சூடியசென்னியான்
ஆம்பலம்பூம்பொய்கையாமாத்தூரம்மான்றன்
1941 சாம்பலகலத்தார்சார்பல்லாற்சார்பிலமே. ௩

கோணாகப்பேரல்குல்கோல்வளைக்கைமாதராள்
பூணாகம்பாகமாப்புல்கியவளோடும்
ஆணாகங்காதல்செய்ஆமாத்தூரம்மானைக்
1942 காணாதகண்ணெல்லாங்காணாதகண்களே. ௪

பாடல்நெறிநின்றான்பைங்கொன்றைத்தண்தாரே
சூடல்நெறிநின்றான்சூலஞ்சேர்கையினான்
ஆடல்நெறிநின்றானாமாத்தூரம்மான்றன்
1943 வேடநெறிநில்லாவேடமும்வேடமே. ௫

சாமவரைவில்லாகச்சந்தித்தவெங்கணையால்
காவல்மதிலெய்தான்கண்ணுடைநெற்றியான்
யாவருஞ்சென்றேத்தும்ஆமாத்தூரம்மானத்
1944 தேவர்தலைவணங்குந்தேவர்க்குந்தேவனே. ௬

மாறுதவெங்கூற்றைமாற்றிமலைமகளை
வேறுகவில்லாதவேடமேகாட்டினன்
ஆறுதரியாடியாமாத்தூரம்மானைக்
1945 கூறுதநாவெல்லாங்கூறுதநாக்களே. எ

தாளாலரக்கன்றோள்சாய்த்ததலைமகன்றன்
நாளாதிரையென்றேநம்பன்றன்நாமத்தால்
ஆளானார்சென்றேத்துமாமாத்தூரம்மானைக்
1946 கேளாச்செவியெல்லாங்கேளாச்செவிகளே. அ

புள்ளுங்கமலமுங்கைக்கொண்டார்தாமிருவர்
உள்ளுமவன்பெருமைஒப்பளக்குந்தன்மையதே
அள்ளல்விளைகழனியாமாத்தூரம்மானெம்
1947 வள்ளல்கழல்பரவாவாழ்க்கையும்வாழ்க்கையே. கூ

பிச்சைபிறர்பெய்யப்பின்சாரக்கோசாரக்
கொச்சைபுலால்நாறஈருரிவைபோர்த்துகந்தான்
அச்சந்தன்மாதேவிக்கீந்தான்றனுமாத்தூர்
1948 நிச்சல்நினையாதார்நெஞ்சமும்நெஞ்சமே. க0

ஆடலரவசைத்தஆமாத்தூரம்மானைக்
கோடலிரும்புறவிற்கொச்சைவயத்தலைவன்
நாடலரியசீர்ஞானசம்பந்தன்றன்
1949 பாடலிவைவல்லார்க்கில்லையாம்பாவமே. கக

45 தையலோர்கூறுடையான் தண்மதிசேர்செஞ்சடையான்
மையுலாமணிமிடற்றன் மறைவிளங்குபாடலான்
நெய்யுலாமூவிலைவேலேந்திசிவந்தொளிசேர்
1950 கையுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. க

விடமல்குகண்டத்தான்வெள்வளையோர்கூறுடையான்
படமல்குபாம்பரையான்பற்றுதார்புரமெரித்தான்
நடமல்குமாடலினன்நான்மறையோர்பாடலினன்
1951 கடமல்குமாவுரியானுறைகோயில்கைச்சினமே. உ

பாடலார்நான்மறையான்பைங்கொன்றைபாம்பினொடும்
சூடலான்வெண்மதியந்துன்றுகரந்தையொடும்
ஆடலானங்கையனலேந்தியாடரவக்
1952 காடலான்மேவியுறைகோயில்கைச்சினமே. ந

பண்டமரர்கூடிக்கடைந்தபடுகடல்நஞ்
சுண்டபிரானென்றிறைஞ்சியும்பர்தொழுதேத்த
விண்டவர்கள்தொல்நகரம்மூன்றுடனேவெந்தவியக்
1953 கண்டபிரான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௪

தேய்ந்துமலிவெண்பிறையான்செய்யதிருமேனியினான்
வாய்ந்திலங்குவெண்ணீற்றான்மாதினையோர்கூறுடையான்
சாய்ந்தமரர்வேண்டத்தடங்கடல்நஞ்சுண்டனங்கைக்
1954 காய்ந்தபிரான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௫

மங்கையோர்கூறுடையான்மன்னுமறைபயின்றான்
அங்கையோர்வெண்டலையானாடரவம்பூண்டுகந்தான்
திங்களொடுபாம்பணிந்தசீரார்திருமுடிமேல்
1955 கங்கையினான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௬

வரியரவேநாணாகமால்வரையேவில்லாக
எரிகணையால்முப்புரங்களெய்துகந்தஎம்பெருமான்
பொருசுடலையீமப்புறங்காட்டான்போர்த்ததோர்
1956 கரியுரியான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௭

போதுலவுகொன்றைபுனைந்தான்திருமுடிமேல்
மாதுமையாளஞ்சமலையெடுத்தவாளரக்கன்
நீதியினாலேத்தநிகழ்வித்துநின்றாடும்
1957 காதலினான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௮

மண்ணினைமுன்சென்றிரந்தமாலும்மறையவனும்
எண்ணறியாவண்ணமெரியுருவமாயபிரான்
பண்ணிசையாலேத்தப்படுவான்றன்நெற்றியின்மேல்
1958 கண்ணுடையான்மேவியுறைகோயில்கைச்சினமே. ௯, ௧௦

தண்வயல்சூழ்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
கண்ணுதலான்மேவியுறைகோயில்கைச்சினத்தைப்
பண்ணிசையாலேத்திப்பயின்றஇவைவல்லார்
1959 விண்ணவராயோங்கிவியனுலகமாள்வாரே. ௧௧

**46** **பா**லூருமலைப்பாம்பும்பனிமதியும்மத்தமும்
மேலூருஞ்செஞ்சடையான்வெண்ணூல்சேர்மார்பினான்
காலூர்மயானத்துகம்பான்றனடிநினைந்து
1960 மாலூருஞ்சிந்தையர்பால்வந்தூராமறுபிறப்பே. ௧

சூடும்பிறைச்சென்னிச்சூழ்காடிடமாக
ஆடும்பறைசங்கொலியோடழகாக
நாடுஞ்சிறப்போவாநாலூர்மயானத்தைப்
1961 பாடுஞ்சிறப்போர்பாற்பற்றுவாம்பாவமே. உ

கல்லால்நிழல்மேவிக்காமுறுசீர்நால்வர்க்கன்
றெல்லாஅறனுரையுமின்னருளாற்சொல்லினன்
நல்லார்தொழுதேத்துநாலூர்மயானத்தைச்
1962 சொல்லாதவரெல்லாஞ்செல்லாதார்தொன்னெறிக்கே. ங

கோலத்தார்கொன்றையான்கொல்புலித்தோலாடையான்
நீலத்தார்கண்டத்தான்நெற்றியோர்கண்ணினன்
ஞாலத்தார்சென்றேத்துநாலூர்மயானத்தில்
1963 சூலத்தானென்பார்பாற்சூழாவாந்தொல்வினையே. ச

கறையார்மணிமிடற்றான்காபாலிகட்டங்கன்
பிறையார்வளர்சடையான்பெண்பாகன்நண்பாய
நறையார்பொழில்புடைசூழ்நாலூர்மயானத்தெம்
1964 இறையானென்றேத்துவார்க்கெய்துமாமின்பமே. ரு

கண்ணார்நுதலான்கனலாடிடமாகப்
பண்ணார்மறைபாடியாடும்பரஞ்சோதி
நண்ணார்புரமெய்தான்நாலூர்மயானத்தை
1965 நண்ணாதவரெல்லாம்நண்ணாதார்நன்னெறியே. சு

கண்பாவுவேகத்தாற்காமனைமுன்காய்ந்துகந்தான்
பெண்பாவுபாகத்தான்நாகத்தோலாகத்தான்
நண்பாவுகுணத்தோர்கள்நாலூர்மயானத்தை
1966 எண்பாவுசிந்தையார்க்கேலாஇடர்தானே. எ

பத்துத்தலையோனைப்பாதத்தொருவிரலால்
வைத்துமலையடர்த்துவாளோடுநாள்கொடுத்தான்
நத்தினொலியோவாநாலூர்மயானத்தென்
1967 அத்தனடிநினைவார்க்கல்லலடையாவே. அ

மாலோடுநான்முகனும்நேடவளரெரியாய்
மேலோடுகீழ்காணாமேன்மையான்வேதங்கள்
நாலோடுமாறங்கநாலூர்மயானத்தெம்
1968 பாலோடுநெய்யாடிபாதம்பணிவோமே. கூ

துன்பாயமாசார் துவராயபோர்வையார்
புன்பேச்சுக்கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்
நண்பாற்சிவாயவெனநாலூர்மயானத்தே
1969 இன்பாயிருந்தானையேத்துவார்க்கின்பமே. ௧௦

ஞாலம்புகழ்காழிஞானசம்பந்தன்றன்
நாலுமறையோதுநாலூர்மயானத்தைச்
சீலம்புகழாற்சிறந்தேத்தவல்லாருக்
1970 கேலும்புகழ்வானத்தின்பாயிருப்பாரே. ௧௧

47 மட்டிட்டபுன்னையங்கானல்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
ஒட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
1971 கட்டிட்டல்காணாதேபோதியோபூம்பாவாய். ௧

மைப்பயந்தவொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பயந்தநீற்றான்கபாலீச்சரமமர்ந்தான்
ஐப்பசிஓணவிழாவுமருந்தவர்கள்
1972 துய்ப்பனவுங்காணாதேபோதியோபூம்பாவாய். ௨

வளைக்கைமடநல்லார்மாமயிலைவண்மறுகில்
துளக்கில்கபாலீச்சரத்தான்றொல்கார்த்திகைநாள்
தளத்தேந்திளமுலையார்தையலார்கொண்டாடும்
1973 விளக்கீடுகாணாதேபோதியோபூம்பாவாய். ௩

ஊர்திரைவேலையுலாவுமுயர்மயிலைக்
கூர்தருவேல்வல்லார்கொற்றங்கொள்சேரிதனில்
கார்தருசோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
1974 ஆதிரைநாள்காணாதேபோதியோபூம்பாவாய். ௪

மைப்பூசுமொண்கண்மடநல்லார்மாமயிலைக்
கைப்பூசுநீற்றான்கபாலீச்சரமமர்ந்தான்
நெய்ப்பூசுமொண்புழுக்கல்நேரிழையார்கொண்டாடும்
1975 தைப்பூசங்காணாதேபோதியோபூம்பாவாய். ௫

மடலார்ந்ததெங்கின்மயிலையார்மாசிக்
கடலாட்டுக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
அடலானேறூரும்மடிகளடிபரவி
1976 நடமாடல்காணாதேபோதியோபூம்பாவாய். ௬

மலிவிழாவீதிமடநல்லார்மாமயிலைக்
கலிவிழாக்கண்டான்கபாலீச்சரமமர்ந்தான்
பலிவிழாப்பாடல்செய்பங்குனியுத்திரநாள்
1977 ஒலிவிழாக்காணுதேபோதியோபூம்பாவாய். எ

தண்ணுவரக்கன்றோள்சாய்த்துகந்ததாளினுன்
கண்ணுர்மயிலைக்கபாலீச்சரமமர்ந்தான்
பண்ணுர்பதினெண்கணங்கள்தம்அட்டமிநாள்
1978 கண்ணுரக்காணுதேபோதியோபூம்பாவாய். அ

நற்றுமரைமலர்மேல்நான்முகனும்நாரணனு
முற்றுங்குணர்கிலாமூர்த்திதிருவடியைக்
கற்றுர்களேத்துங்கபாலீச்சரமமர்ந்தான்
1979 பொற்றுப்புக்காணுதேபோதியோபூம்பாவாய். கூ

உரிஞ்சாயவாழ்க்கைஅமணுடையைப்போர்க்கும்
இருஞ்சாக்கியர்களெடுத்துரைப்பநாட்டில்
கருஞ்சோலைசூழ்ந்தகபாலீச்சரமமர்ந்தான்
1980 பெருஞ்சாந்திகாணுதேபோதியோபூம்பாவாய். க0

கானமர்சோலைக்கபாலீச்சரமமர்ந்தான்
தேனமர்பூம்பாவைப்பாட்டாகச்செந்தமிழான்
ஞானசம்பந்தன்நலம்புகழ்ந்தபத்தும்வலார்
1981 வானசம்பந்தத்தவரோடும்வாழ்வாரே. கக

48 கண்காட்டுநுதலானுங்கனல்காட்டுங்கையானும்
பெண்காட்டுமுருவானும்பிறைகாட்டுஞ்சடையானும்
பண்காட்டுமிசையானும்பயிர்காட்டும்புயலானும்
1982 வெண்காட்டிலுறைவானும்விடைகாட்டுங்கொடியானே. க

பேயடையாபிரிவெய்தும்பிள்ளையினேடுள்ளநினை
வாயினவேவரம்பெறுவர்ஐயுறவேண்டாவொன்றும்
வேயனதோளுமைபங்கன்வெண்காட்டுமுக்குளநீர்
1983 தோய்வினையாரவர்தம்மைத்தோயாவாந்தீவினையே. உ

மண்ணொடுநீரனல்காலோடாகாயம்மதியிரவி
எண்ணில்வருமியமானனிகபாமுமெண்டிசையும்
பெண்ணினொடாண்பெருமையொடுசிறுமையுமாம்பேராளன்
1984 விண்ணவர்கோன்வழிபடவெண்காடிடமாவிரும்பினனே.

விடமுண்டமிடற்றண்ணல்வெண்காட்டின்தண்புறவின்
மடல்விண்டமுடத்தாழைமலர்நிழலைக்குருகென்று
தடமண்டுதுறைக்கெண்டைதாமரையின்பூமறையக்
1985 கடல்விண்டகதிர்முத்தநகைகாட்டுங்காட்சியதே. ௪

வேலைமலிதண்கானல்வெண்காட்டான்திருவடிக்கீழ்
மாலைமலிவண்சாந்தால்வழிபடுநன்மறையவன்றன்
மேலடர்வெங்காலனுயிர்விண்டபினைநமன்தூதர்
1986 ஆலமிடற்றானடியாரென்றடரஅஞ்சுவரே. ௫

தண்மதியும்வெய்யரவுந்தாங்கினான்சடையினுடன்
ஒண்மதியநுதலுமையோர்கூறுகந்தானுறைகோயில்
பண்மொழியாலவன்நாமம்பலவோதப்பசுங்கிள்ளை
1987 வெண்முகில்சேர்கரும்பெணைமேல்வீற்றிருக்கும்வெண்காடே. ௬

சக்கரமாற்கீந்தானுஞ்சலந்தரனைப்பிளந்தானும்
அக்கரைமேலசைத்தானுமடைந்தயிராவதம்பணிய
மிக்கதனுக்கருள்சுரக்கும்வெண்காடும்வினைதுரக்கு
1988 முக்குளநன்குடையானுமுக்கணுடையிறையவனே. ௭

பண்மொய்த்தஇன்மொழியாள்பயமெய்தமலையெடுத்த
உன்மத்தனுரம்நெரித்தன்றருள்செய்தானுறைகோயில்
கண்மொய்த்தகருமஞ்ஞைநடமாடக்கடல்முழங்க [காடே.
1989 விண்மொய்த்தபொழில்வரிவண்டிசைமுரலும்வெண்

கள்ளார்செங்கமலத்தான்கடல்கிடந்தானெனவிவர்கள்
ஒள்ளாண்மைகொளற்கோடியுயர்ந்தாழ்ந்துமுணர்வரியான்
வெள்ளானைதவஞ்செய்யும்மேதகுவெண்காட்டானென்
1990 றுள்ளாடியுருகாதாருணர்வுடைமையுணரோமே. ௯

போதியர்கள்பிண்டியர்கள்மிண்டுமொழிபொருளென்னும்
பேதையர்களவர்பிரிமினறிவுடையீரிதுகேண்மின்
வேதியர்கள்விரும்பியசீர்வியன்திருவெண்காட்டானேன்
1991 றோதியவர்யாதுமோருதீதிலரென்றுணருமினே. ௧0

தண்பொழில்சூழ்சண்பையர்கோன்தமிழ்ஞானசம்பந்தன்
விண்பொலிவெண்பிறைச்சென்னிவிகிர்தனுறைவெண்காட்டைப்
பண்பொலிசெந்தமிழ்மாலைபாடியபத்திவைவல்லார்
1992 மண்பொலியவாழ்ந்தவர்போய்வான்பொலியப்புகுவாரே. ௧௧

49 பண்ணினேர்மொழிமங்கைமார்பலர்
பாடியாடியவோசைநாள்தொறுங்
கண்ணினேரயலேபொலியுங்கடற்காழிப்
பெண்ணினேரொருபங்குடைப்பெரு
மானையெம்பெருமானென்றென்றுன்னும்
1993 அண்ணலாரடியாரருளாலுங்குறைவிலரே. க

மொண்டலம்பியவார்திரைக்கடல்
மோதிமீதேறிசங்கம்வங்கமுங்
கண்டலம்புடைசூழ்வயல்சேர்கலிக்காழி
வண்டலம்பியகொன்றையானடி
வாழ்த்தியேத்தியமாந்தர்தம்வினை
1994 விண்டலங்கெளிதாமதுநல்விதியாமே. உ

நாடெலாமொளியெய்தநல்லவர்
நன்றுமேத்திவணங்குவார்பொழிற்
காடெலாமலர்தேன்துளிக்குங்கடற்காழித்
தோடுலாவியகாதுளாய்சுரி
சங்கவெண்குழையாயென்றென்றுன்னும்
1995 வேடங்கொண்டவர்கள்வினைநீங்கலுற்றரே. ௩

மையினார்பொழில்சூழநீழலில்
வாசமார்மதுமல்கநாள்தொறுங்
கையினார்மலர்கொண்டெழுவார்கலிக்காழி
ஐயனேயரனேயென்றாதரித்
தோதிநீதியுளேநினைப்பவர்
1996 உய்யுமாறுலகில்லுயர்ந்தாரினுள்ளாரே. ச

மலிகடுந்திரைமேலகிமிர்ந்தெதிர்
வந்துவந்தொளிர்நித்திலம்விழக்
கலிகடிந்தகையார்மருவுங்கலிக்காழி
வலியகாலனைவீட்டிமாணிதன்
இன்னுயிரளித்தானைவாழ்த்திட
1997 மேலியுந்தீவினைநோயவைமேவுவர்வீடே. ரு

மற்றுமிவ்வுலகத்துளோர்களும்
வானுளோர்களும்வந்துவைகலுங்
கற்றசிந்தையராய்க்கருதுங்கலிக்காழி
நெற்றிமேலமர்கண்ணினானை
நினைந்திருந்திசைபாடுவார்வினை
1998 செற்றமாந்தரெனத்தெளிமின்கள்சிந்தையுளே. சு

தானலம்புரைவேதியரொடு
தக்கமாதவர்தாந்தொழப்பயில்
கானலின்விரைசேரவிம்முங்கலிக்காழி
ஊனுளாருயிர்வாழ்க்கையாயுற
வாகிநின்றவொருவனேயென்றன்
1999 றானலங்கோடய்ப்பாரருள்வேந்தராவாரே. எ

மைத்தவண்டெழுசோலையாலைகள்
சாலிசேர்வயலாரவைகலுங்
கத்துவார்கடல்சென்றுலவுங்கலிக்காழி
அத்தனேயரனேயரக்கனை
யன்றடர்த்துகந்தாயுனகழல்
2000 பத்தராய்ப்பரவும்பயனீங்குநல்காயே. அ

பருமராமொடுதெங்குபைங்கத
லிப்பருங்கனியுண்ணமந்திகள்
கருவராலுகளும்வயல்சூழ்கலிக்காழித்
திருவின்நாயகனாயமாலொடு
செய்யமாமலர்ச்செல்வனாகிய
2001 இருவர்காண்பரியானெனவுத்துதலின்பமே. கூ

பிண்டமுண்டுழல்வார்களும்பிரி
யாதுவண்துகிலாடைபோர்த்தவர்
கண்டுசேரகிலாரழகார்கலிக்காழித்
தொண்டைவாயுமையோடுகூடிய
வேடனேசுடலைப்பொடியணி
2002 அண்டவாணனேன்பார்க்கடையாஅல்லல்தானே. கO

பெயரெனும்மிவைபன்னிரண்டினும்
உண்டெனப்பெயர்பெற்றவூர்திகழ்
கயலுலாம்வயல்சூழ்ந்தழகார்கலிக்காழி
நயனடன்கழலேத்திவாழ்த்திய
ஞானசம்பந்தன்செந்தமிழுரை
2003 உயருமாமொழிவாருலகத்துயர்ந்தாரே. கக

50 குன்றவார்சிலைநாணராவரி
வாளிகூரெரிகாற்றின்மும்மதில்
வென்றவாறெங்ஙனேவிடையேறும்வேதியனே
தென்றலார்மணிமாடமாளிகை
சூளிகைக்கெதிர்நீண்டபெண்ணைமேல்
2004 அன்றில்வந்தணையுமாமாத்தூரம்மானே. க

பரவிவானவர்தானவர்பல
ருங்கலங்கிடவந்தகார்விடம்
வெருவவுண்டுகந்தஅருளென்கொல்விண்ணவனே
காவின்மாமணிபொன்கொழித்திழி
சந்துகாரகில்தந்துபம்பைநீர்
2005 அருவிவந்தலைக்குமாமாத்தூரம்மானே. உ

நீண்டவார்சடைதாழநேரிழை
பாடநீறுமெய்பூசிமாலயன்
மாண்டவார்சுடலைநடமாடுமாண்பதுஎன்
பூண்டகேழல்மருப்பராவிரி
கொன்றைவாள்வரியாமைபூணென
2006 ஆண்டநாயகனேயாமாத்தூரம்மானே. ங

சேலின்நேரனகண்ணிவெண்ணகை
மான்விழித்திருமாதைப்பாகம்வைத்
தேலமாதவநீமுயல்கின்றவேடமிதென்
பாலின்நேர்மொழிமங்கைமார்நட
மாடியின்னிசைபாடநீள்பதி
2007 ஆலைசூழ்கழனியாமாத்தூரம்மானே. ச

தொண்டர்வந்துவணங்கிமாமலர்
தூவிநின்கழலேத்துவாரவர்
உண்டியால்வருந்தஇரங்காததென்னைகொலாம்
வண்டலார்கழனிக்கலந்தும
லர்ந்ததாமரைமாதர்வாண்முகம்
2008 அண்டவாணர்தொழுமாமாத்தூரம்மானே. ரு

ஓதியாரணமாயநுண்பொருள்
அன்றுநால்வர்முன்கேட்கநன்னெறி
நீதியாலநீழலுரைக்கின்றநீர்மையதென்
சோதியேசுடரேசுரும்பமர்
கொன்றையாய்திருநின்றியூருறை
2009 ஆதியேஅரனேயாமாத்தூரம்மானே. சு

மங்கைவாணுதன்மான்மனத்திடை
வாடியூடமணங்கமழ்சடைக்
கங்கையாளிருந்தகருத்தாவதென்னைகொலாம்
பங்கயமதுவுண்டுவண்டிசை
பாடமாமயிலாடவிண்முழ
2010 வங்கையாலதிர்க்குமாமாத்தூரம்மானே. எ

நின்றடர்த்திடுமைம்புலன்நிலை
யாதவண்ணம்நினைந்துளத்திடை
வென்றடர்த்தொருபால்மடமாதைவிரும்புதலென்
குன்றெடுத்தநிசாசரன்திரள்
தோளிருபதுதான்நெரிதர
2011 அன்றடர்த்துகந்தாயாமாத்தூரம்மானே. அ

செய்யதாமரைமேலிருந்தவ
னோடுமாலடிதேடநீள்முடி
வெய்யவாரழலாய்நிமிர்கின்றவெற்றிமையென்
னையலாளொடுபிச்சைக்கிச்சை
தயங்குதோலரையார்த்தவேடங்கொண்
2012 டையமேற்றுகந்தாயாமாத்தூரம்மானே. கூ

புத்தர்புன்சமணுதர்பொய்ம்மொழி
நூல்பிடித்தலர்தூற்றநின்னடி
பத்தர்பேணநின்றபரமாயபான்மையதென்
முத்தைவென்றமுறுவலாளுமை
பங்கனென்றிமையோர்பரவிடும்
2013 அத்தனேயரியாயாமாத்தூரம்மானே. ௧0

வாடல்வெண்டலைமாலையார்த்தும
யங்கிருள்ளெரியேந்திமாநடம்
ஆடல்மேயதென்னென்றுமாத்தூரம்மானைக்
கோடல்நாகமரும்புபைம்பொழிற்
கொச்சையாரிறைஞானசம்பந்தன்
2014 பாடல்பத்தும்வல்லார்பரலோகஞ்சேர்வாரே. ௧௧

51 நீருளார்கயல்வாவிசூழ்பொழில்
நீண்டமாவயலீண்டுமாமதில்
தேரினார்மறுகில்விழாமல்குதிருக்களருள்
ஊருளாரிடுபிச்சைபேணும்
ஒருவனேயொளிர்செஞ்சடைம்மதி
2015 ஆரநின்றவனேயடைந்தார்க்கருளாயே.

தோளின்மேலொளிநீறுதாங்கிய
தொண்டர்வந்தடிபோற்றமிண்டிய
தாளினார்வளருந்தவமல்குதிருக்களருள்
வேளினேர்விசயற்கருள்புரி
வித்தகாவிரும்புமடியாரை
2016 ஆளுகந்தவனேயடைந்தார்க்கருளாயே. உ

பாடவல்லநன்மைந்தரோடு
பனிமலர்பலகொண்டுபோற்றிசெய்
சேடர்வாழ்பொழில்சூழ்செழுமாடத்திருக்களருள்
நீடவல்லநிமலனேயடி
நிரைகழல்சிலம்பார்க்கமாநடம்
2017 ஆடவல்லவனேயடைந்தார்க்கருளாயே. ௩

அம்பின்நேர் தடங்கண்ணினருடன்
ஆடவர்பயில்மாடமாளிகை
செம்பொனர்பொழில்சூழ்ந்தழகாயதிருக்களருள்
என்புபூண்டதோர்மேனியெம்மிறை
வாஇணையடிபோற்றிநின்றவர்க்
2018 கன்புசெய்தவனேயடைந்தார்க்கருளாயே. ௪

கொங்குலாமலர்ச்சோலைவண்டினங்
கிண்டமாமதுவுண்டிசைசெயத்
தெங்குபைங்கமுகம்புடைசூழ்ந்ததிருக்களருள்
மங்கைதன்னெடுங்கூடியமண
வாளனேபிணைகொண்டொர்கைத்தலத்
2019 தங்கையிற்படையாயடைந்தார்க்கருளாயே. ௫

கோலமாமயிலாலக்கொண்டல்கள்
சேர்பொழிற்குலவும்வயலிடைச்
சேலிளங்கயலார்புனல்சூழ்ந்ததிருக்களருள்
நீலமேவியகண்டனேநிமிர்
புன்சடைப்பெருமானெனப்பொலி
2020 ஆலநீழலுளாயடைந்தார்க்கருளாயே. ௬

தம்பலம்மறியாதவர்மதில்
தாங்குமால்வரையாலழலெழத்
திண்பலங்கெடுத்தாய்திகழ்கின்றதிருக்களருள்
வம்பலர்மலர்தூவிநின்னடி
வானவர்தொழக்கூத்துகந்துபேர்
2021 அம்பலத்துறைவாயடைந்தார்க்கருளாயே. ௭

குன்றடுத்தநன்மாளிகைக்கொடி
மாடநீடுயர்கோபுரங்கள்மேல்
சென்றடுத்துயர்வான்மதிதோயுந்திருக்களருள்
நின்றடுத்துயர்மால்வரைத்திரள்
தோளிணலெடுத்தான்றன்நீள்முடி
2022 அன்றடர்த்துகந்தாயடைந்தார்க்கருளாயே. ௮

பண்ணியாழ்பயில்கின்றமங்கையர்
பாடலாடலொடாரவாழ்பதி
தெண்ணிலாமதியம்பொழில்சேருந்திருக்களருள்
உண்ணிலாவியவொருவனேயிரு
வர்க்குநின்கழல்காட்சியாரழல்
2023 அண்ணலாயஎம்மானடைந்தார்க்கருளாயே. கூ

பாக்கியம்பலசெய்தபத்தர்கள்
பாட்டொடும்பலபணிகள்பேணிய
தீக்கியல்குணத்தார்சிறந்தாருந்திருக்களருள்
வாக்கின்நான்மறையோதினுயமண்
தேரர்சொல்லியசொற்களானபொய்
2024 ஆக்கிநின்றவனேயடைந்தார்க்கருளாயே. கO

இந்துவந்தெழுமாடவீதியெ
ழில்கொள்காழிநகர்க்கவுணியன்
செந்துநேர்மொழியாரவர்சேருந்திருக்களருள்
அந்தியன்னதோர்மேனியானை
அமரர்தம்பெருமானைஞானசம்
2025 பந்தன்சொல்லிவைபத்தும்பாடத்தவமாமே. கக

52 கருந்தடங்கணின்மாதரரிசை
செய்யக்காரதிர்கின்றபூம்பொழிற்
குருந்தமாதவியின்விரைமல்குகோட்டாற்றில்
இருந்தஎம்பெருமானையுள்கி
இணையடிதொழுதேத்துமாந்தர்கள்
2026 வருந்துமாறறியார்நெறிசேர்வர்வானூடே. க

நின்றுமேய்ந்துநினைந்துமாகரி
நீரொடும்மலர்வேண்டிவான்மழை
குன்றின்நேர்ந்துகுத்திப்பணிசெய்யுங்கோட்டாற்றுள்
என்றுமன்னியஎம்பிரான்கழல்
ஏத்திவானரசாளவல்லவர்
2027 பொன்றுமாறறியார்புகழார்ந்தபுண்ணியரே. உ

விரவிநாளும்விழாவிடைப்பொலி
தொண்டர்வந்துவியந்துபண்செயக்
குரவமாருநீழற்பொழில்மல்குகோட்டாற்றில்
அரவநீள்சடையானையுள்கிநின்
றாதரித்துமுனன்புசெய்தடி
2028 பரவுமாறுவல்லார்பழிபற்றறுப்பாரே. ௩

அம்பினேர்விழிமங்கைமார்பலர்
ஆடகம்பெறுமாடமாளிகைக்
கொம்பினேர்துகிலின்கொடியாடுகோட்டாற்றில்
நம்பனேநடனேநலந்திகழ்
நாதனேயென்றுகாதல்செய்தவர்
2029 தம்பினேர்ந்தறியார்தடுமாற்றவல்வினையே. ௪

பழையதம்மடியார்துதிசெயப்
பாருளோர்களும்விண்ணுளோர்தொழக்
குழலுமொந்தைவிழாவொலிசெய்யுங்கோட்டாற்றில்
கழலும்வண்சிலம்பும்மொலிசெயக்
கானிடைக்கணமேத்தஆடிய
2030 அழகனென்றெழுவாரணியாவர்வானவர்க்கே. ௫

பஞ்சின்மெல்லடிமாதராடவர்
பத்தர்சித்தர்கள்பண்புவைகலும்
கொஞ்சியின்மொழியால்தொழில்மல்குகோட்டாற்றில்
மஞ்சனேமணியேமணிமிடற்
றண்ணலேயெனவுள்நெகிழ்ந்தவர்
2031 துஞ்சுமாறறியார்பிறவாரித்தோல்நிலத்தே. ௬

கலவமாமயிலாளொர்பங்கனைக்
கண்டுகண்மிசைநீர்நெகிழ்த்திசை
குலவுமாறுவல்லார்குடிகொண்டகோட்டாற்றில்
நிலவமாமதிசேர்சடையுடை
நின்மலாவெனவுன்னுவாரவர்
2032 உலவுவானவரினுயர்வாகுவதுண்மையதே. ௭

வண்டலார்வயற்சாலியாலைவ
எம்பொலிந்திடவார்புனற்றிரை
கொண்டலார்கொணர்ந்தங்குலவுந்திகழ்கோட்டாற்றில்
தொண்டெலாந்துதிசெய்யநின்ற
தொழிலனேகழலாலரக்கனை
2033 மிண்டெலாந்தவிர்த்தென்னுகந்திட்டவெற்றிமையே. அ

கருதிவந்தடியார்தொழுதெழக்
கண்ணனோடயன்தேடஆனையின்
குருதிமெய்கலப்பவுரிகொண்டுகோட்டாற்றில்
விருதினன்மடமாதும்நீயும்வி
யப்பொடும்முயர்கோயில்மேவிவெள்
2034 எருதுகந்தவனேயிரங்காயுனதின்னருளே. கூ

உடையிலாதுழல்கின்றகுண்டரும்
ஊணருந்தவத்தாயசாக்கியர்
கொடையிலாமனத்தார்குறையாருங்கோட்டாற்றில்
படையிலார்மழுவேந்தியாடிய
பண்பனேயிவரென்கொலோநுனை
2035 அடைகிலாதவண்ணமருளாயுனடியவர்க்கே. க0

காலனைக்கழலாலுதைத்தொரு
காமனைக்கனலாகச்சீறிமெய்
கோலவார்குழலாள்குடிகொண்டகோட்டாற்றில்
மூலனைம்முடிவொன்றிலாதஎம்
முத்தனைப்பயில்பந்தன்சொல்லிய
2036 மாலைபத்தும்வல்லார்க்கெளிதாகும்வானகமே. கக

53 விண்ணமர்ந்தனமும்மதில்களை
வீழவெங்கணையாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர்புறவார்பனங்காட்டூர்ப்
பெண்ணமர்ந்தொருபாகமாகிய
பிஞ்ஞகாபிறைசேர்நுதலிடைக்
2037 கண்ணமர்ந்தவனேகலந்தார்க்கருளாயே. க

நீடல்கோடலலரவெண்முல்லை
நீர்மலர்நிரைத்தாதளஞ்செயப்
பாடல்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்த்
தோடிலங்கியகாதயல்மின்
துளங்கவெண்குழைதுள்ளநள்ளிருள்
2038 ஆடுஞ்சங்கரனேயடைந்தார்க்கருளாயே. ௨

வாளையுங்கயலும்மிளிர்பொய்கை
வார்புனற்கரையருகெலாம்வயற்
பாளையொண்கமுகம்புறவார்பனங்காட்டூர்ப்
பூளையுந்நறுங்கொன்றையும்மத
மத்தமும்புனைவாய்கழலிணைத்
2039 தாளையேபரவுந்தவத்தார்க்கருளாயே. ௩

மேய்ந்திளஞ்செந்நெல்மென்கதிர்கவ்வி
மேற்படுதலின்மேதிவைகறை
பாய்ந்ததண்பழனப்புறவார்பனங்காட்டூர்
ஆய்ந்தநான்மறைபாடியாடும்
அடிகளென்றென்றரற்றிநன்மலர்
2040 சாய்ந்தடிபரவுந்தவத்தார்க்கருளாயே. ௪

செங்கயல்லொடுசேல்செருச்செயச்
சீறியாழ்முரல்தேனினத்தொடு
பங்கயம்மலரும்புறவார்பனங்காட்டூர்க்
கங்கையும்மதியுங்கமழ்சடைக்
கேண்மையாளொடுங்கூடிமான்மறி
2041 அங்கையாடலனே அடியார்க்கருளாயே. ௫

நீரினார்வரைகோலிமால்கடல்
நீடியபொழில்சூழ்ந்துவைகலும்
பாரினார்பிரியாப்புறவார்பனங்காட்டூர்க்
காரினார்மலர்க்கொன்றைதாங்கு
கடவுளென்றுகைகூப்பிநாள்தொறும்
2042 சீரினால்வணங்குந்திறத்தார்க்கருளாயே. ௬

கையரிவையர்மெல்விரல்லவை
காட்டியம்மலர்க்காந்தளங்குறி
பையராவிரியும்புறவார்பனங்காட்டூர்
மெய்யரிவையொர்பாகமாகவும்
மேவினுய்கழலேத்திநாள்தொறும்
2043 பொய்யிலாஅடிமைபுரிந்தார்க்கருளாயே. எ

தூவியஞ்சிறைமெல்நடையன
மல்கியொல்கியதூமலர்ப்பொய்கைப்
பாவில்வண்டறையும்புறவார்பனங்காட்டூர்
மேவியந்நிலையாயரக்கன
தோளடர்த்தவன்பாடல்கேட்டருள்
2044 ஏவியெம்பெருமானென்பவர்க்கருளாயே. அ

அந்தண்மாதவிபுன்னைநல்ல
அசோகமும்மாவிந்தமல்லிகை
பைந்தண்ஞாழல்கள்சூழ்புறவார்பனங்காட்டூர்
எந்திளம்முகில்வண்ணன்நான்முகன்
என்றிவர்க்கரிதாய்நிமிர்ந்ததொர்
2045 சந்தமாயவனேதவத்தார்க்கருளாயே. கூ

நீணமார்முருகுண்டுவண்டினம்
நீலமாமலர்கவ்விநேரிசை
பாணில்யாழ்முரலும்புறவார்பனங்காட்டூர்
நாணழிந்துழல்வார்சமணரும்
நண்பில்சாக்கியரும்நகத்தலை
2046 ஊணுரியவனேயுகப்பார்க்கருளாயே. ௧௦

மையினுர்மணிபோல்மிடற்றனை
மாசில்வெண்பொடிப்பூசுமார்பனைப்
பையதேன்பொழில்சூழ்புறவார்பனங்காட்டூர்
ஐயனைப்புகழானகாழியுள்
ஆய்ந்தநான்மறைஞானசம்பந்தன்
2047 செய்யுள்பாடவல்லார்சிவலோகஞ்சேர்வாரே. ௧௧

54 உருவார்ந்தமெல்லியலோர்பாகமுடையீரடைவோர்க்குக்
கருவார்ந்தவானுலகங்காட்டிக்கொடுத்தல்கருத்தானீர்
பொருவார்ந்ததெண்கடலொண்சங்கந்திளைக்கும்பூம்புகலித்
2048 திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. க

நீரார்ந்தசெஞ்சடையீர்நிறையார்கழல்சேர்பாதத்தீர்
ஊரார்ந்தசில்பலியீருழைமானுரிதோலாடையீர்
போரார்ந்ததெண்டிரைசென்றணையுங்கானற்பூம்புகலிச்
2049 சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. உ

அழிமல்குபூம்புனலுமரவுஞ்சடைமேலடைவெய்த
மொழிமல்குமாமறையீர்கறையார்கண்டத்தெண்டோளீர்
பொழில்மல்குவண்டினங்களறையுங்கானற்பூம்புகலி
2050 எழில்மல்குகோயிலேகோயிலாகஇருந்தீரே. ஙு

கையிலார்ந்தவெண்மழுவொன்றுடையீர்கடியகரியின்தோல்
மயிலார்ந்தசாயல்மடமங்கைவெருவமெய்போர்த்தீர்
பயிலார்ந்தவேதியர்கள்பதியாய்விளங்கும்பைம்புகலி
2051 எயிலார்ந்தகோயிலேகோயிலாகஇசைந்தீரே. ச

நாவார்ந்தபாடலீராடலரவமரைக்கார்த்தீர்
பாவார்ந்தபல்பொருளின்பயன்களானீரயன்பேணும்
பூவார்ந்தபொய்கைகளும்வயலுஞ்சூழ்ந்தபொழிற்புகலித்
2052 தேவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. ரு

மண்ணார்ந்தமண்முழவந்ததும்பமலையான்மகளென்னும்
பெண்ணார்ந்தமெய்மகிழப்பேணியெரிகொண்டாடினீர்
விண்ணார்ந்தமதியமிடைமாடத்தாரும்வியன்புகலிக்
2053 கண்ணார்ந்தகோயிலேகோயிலாகக்கலந்தீரே. சு

களிபுல்குவல்லவுணரூர்மூன்றெரியக்கணைதொட்டீர்
அளிபுல்குபூமுடியீரமரரேத்தஅருள்செய்தீர்
தெளிபுல்குதேனினமுமலருள்விரைசேர்திண்புகலி
2054 ஒளிபுல்குகோயிலேகோயிலாகவுகந்தீரே. எ

பரந்தோங்குபல்புகழ்சேரரக்கர்கோனைவரைக்கீழிட்
டுரந்தோன்றும்பாடல்கேட்டுகவையளித்தீருகவாதார்
புரந்தோன்றுமும்மதிலுமெரியச்செற்றீர்பூம்புகலி
2055 வரந்தோன்றுகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. அ

சலந்தாங்குதாமரைமேலயனுந்தரணியளந்தானுங்
கலந்தோங்கிவந்திழிந்துங்காணாவண்ணங்கனலானீர்
புலந்தாங்கிஐம்புலனுஞ்செற்றார்வாழும்பூம்புகலி
2056 நலந்தாங்குகோயிலேகோயிலாகநயந்தீரே. ௯

நெடிதாயவன்சமணும்நிறைவொன்றில்லாச்சாக்கியருங்
கடிதாயகட்டுரையாற்கழறமேலோர்பொருளானீர்
பொடியாருமேனியினீர்புகலிமறையோர்புரிந்தேத்த
2057 வடிவாருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ௧௦

ஒப்பரியபூம்புகலிஓங்குகோயில்மேயானை
அப்பரிசிற்பதியான அணிகொள்ஞானசம்பந்தன்
செப்பரியதண்டமிழால்தெரிந்தபாடலிவைவல்லார்
2058 எப்பரிசிலிடர்நீங்கியிமையோருலகத்திருப்பாரே. ௧௧

55 நலச்சங்கவெண்குழையுந்தோடும்பெய்தோர்கால்வேதம்
சொலச்சங்கையில்லாதீர்சுடுகாடல்லாற்கருதாதீர் [லும்
குலைச்செங்காய்ப்பைங்கமுகின்குளிர்கொள்சோலைக்குயிலா
2059 தலைச்சங்கைக்கோயிலேகோயிலாகத்தாழ்ந்தீரே. ௧

துணிமல்குகோவணமுந்தோலுங்காட்டித்தொண்டாண்டீர்
மணிமல்குகண்டத்தீரண்டர்க்கெல்லாமாண்பானீர்
பிணிமல்குநூல்மார்பர்பெரியோர்வாழுந்தலைச்சங்கை
2060 அணிமல்குகோயிலேகோயிலாகஅமர்ந்தீரே. ௨

சீர்கொண்டபாடலீர்செங்கண்வெள்ளேறூர்தியீர்
நீர்கொண்டும்பூக்கொண்டுநீங்காத்தொண்டர்நின்றேத்தத்
தார்கொண்டநூல்மார்பர்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
2061 ஏர்கொண்டகோயிலேகோயிலாகஇருந்தீரே. ௩

வேடஞ்சூழ்கொள்கையீர்வேண்டிநீண்டவெண்டிங்கள்
ஓடஞ்சூழ்கங்கையுமுச்சிவைத்தீர்தலைச்சங்கைக்
கூடஞ்சூழ்மண்டபமுங்குலாயவாசற்கொடித்தோன்றும்
2062 மாடஞ்சூழ்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ௪

சூலஞ்சேர்கையினீர்சுண்ணவெண்ணீறாடலீர்
நீலஞ்சேர்கண்டத்தீர்நீண்டசடைமேல்நீரேற்றீர்
ஆலஞ்சேர்தண்கானலன்னமன்னுந்தலைச்சங்கைக்
2063 கோலஞ்சேர்கோயிலேகோயிலாகக்கொண்டீரே. ௫

நிலநீரொடாகாசமனல்காலாகிநின்றைந்து
புலநீர்மைபுறங்கண்டார்பொக்கஞ்செய்யார்போற்றுவார்
சலநீதரல்லாதார்தக்கோர்வாழுந்தலைச்சங்கை
2064 நலநீரகோயிலேகோயிலாகநயந்தீரே. ௬

அடிபுல்குபைங்கழல்களார்ப்பப்போந்தோரனலேந்திக்
கொடிபுல்குமென்சாயலுமையோர்பாகங்கூடினீர்
பொடிபுல்குநூல்மார்பர்புரிநூலாளர்தலைச்சங்கைக்
2065 கடிபுல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. ௭

திரையார்ந்தமாகடல்சூழ்தென்னிலங்கைக்கோமானை
வரையார்ந்ததோளடரவிரலாலூன்றுமாண்பினீர்
அரையார்ந்தமேகலையீரந்தணாளர்தலைச்சங்கை
2066 நிரையார்ந்தகோயிலேகோயிலாகநினைந்தீரே. ௮

பாயோங்குபாம்பணைமேலானும்பைந்தாமரையானும்
போயோங்கிக்காண்கிலார்புறம்நின்றோரார்போற்றுவார்
தீயோங்குமறையாளர்திகழுஞ்செல்வத்தலைச்சங்கைச்
2067 சேயோங்குகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. ௯

அலையாரும்புனல்துறந்தஅமணர்குண்டர்சாக்கியர்
தொலையாதங்கலர்தூற்றத்தோற்றங்காட்டியாட்கொண்டீர்
தலையானநால்வேதந்தரித்தார்வாழுந்தலைச்சங்கை
2068 நிலையார்ந்தகோயிலேகோயிலாகநின்றீரே. ௧0

நளிரும்புனற்காழிநல்லஞானசம்பந்தன்
குளிருந்தலைச்சங்கையோங்குகோயில்மேயானை
ஒளிரும்பிறையானையுரைத்தபாடலிவைவல்லார்
2069 மிளிருந்திரைசூழ்ந்தவையத்தார்க்குமேலாரே. ௧௧

56 பொங்குநூல்மார்பினீர்பூதப்படையீர்பூங்கங்கை
தங்குசெஞ்சடையினீர்சாமவேதம்ஓதினீர்
எங்குமெழிலார்மறையோர்கள்முறையாலேத்தஇடைமருதில்
2070 மங்குல்தோய்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ௧

நீரார்ந்தசெஞ்சடையீர்நெற்றித்திருக்கண்ணிகழ்வித்தீர்
போரார்ந்தவெண்மழுவொன்றுடையீர்பூதம்பாடலீர்
ஏரார்ந்தமேகலையாள்பாகங்கொண்டீரிடைமருதில்
2071 சீரார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. ௨

அழல்மல்குமங்கையிலேந்திப்பூதமவைபாடச்
சுழல்மல்குமாடலீர்சுடுகாடல்லாற்கருதாதீர்
எழில்மல்குநான்மறையோர்முறையாலேத்தஇடைமருதில்
2072 பொழில்மல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. ௩

பொல்லாப்படுதலையொன்றேந்திப்புறங்காட்டாடலீர்
வில்லாற்புரமூன்றுமெரித்தீர்விடையார்கொடியினீர்
எல்லாக்கணங்களும்முறையாலேத்தஇடைமருதில்
2073 செல்வாயகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. ௪

வருந்தியமாதவத்தோர்வானோரேனோர்வந்தீண்டிப்
பொருந்தியதைப்பூசமாடியுலகம்பொலிவெய்தத்
திருந்தியநான்மறையோர்சீராலேத்தஇடைமருதில்
2074 பொருந்தியகோயிலேகோயிலாகப்புக்கீரே. ௫

சலமல்குசெஞ்சடையீர்சாந்தநீறுபூசினீர்
வலமல்குவெண்மழுவொன்றேந்திமயானத்தாடலீர்
இலமல்குநான்மறையோரினிதாயேத்தஇடைமருதில்
2075 புலமல்குகோயிலேகோயிலாகப்பொலிந்தீரே. ௬

புனமல்குகொன்றையீர்புலியினதளீர்பொலிவார்ந்த
சினமல்குமால்விடையீர்செய்யீர்கரியகண்டத்தீர்
இனமல்குநான்மறையோரேத்துஞ்சீர்கொளிடைமருதில்
2076 கனமல்குகோயிலேகோயிலாகக்கலந்தீரே. ௭

சிலையுய்த்தவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திறலரக்கன்
தலைபத்துந்திண்டோளுநெரித்தீர்தையல்பாகத்தீர்
இலைமொய்த்ததண்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தஇடைமருதில்
2077 நலமொய்த்தகோயிலேகோயிலாகநயந்தீரே. ௮

மறைமல்குநான்முகனும்மாலுமறியாவண்ணத்தீர்
கறைமல்குகண்டத்தீர்கபாலமேந்துகையினீர்
அறைமல்குவண்டினங்களாலுஞ்சோலையிடைமருதில்
2078 நிறைமல்குகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. ௯

சின்போர்வைச்சாக்கியருமாசுசேருஞ்சமணரும்
துன்பாயகட்டுரைகள்சொல்லியல்லல்தூற்றவே
இன்பாயஅந்தணர்களேத்துமேர்கொளிடைமருதில்
2079 அன்பாயகோயிலேகோயிலாகஅமர்ந்தீரே. ௧௦

கல்லின்மணிமாடக்கழுமலத்தார்காவலவன்
நல்லஅருமறையான்நற்றமிழ்ஞானசம்பந்தன்
எல்லியிடைமருதிலேத்துபாடலிவைபத்தும்
2080 சொல்லுவார்க்குங்கேட்பார்க்குந்துயரமில்லையே. கக

57 பெண்ணமருந்திருமேனியுடையீர்பிறங்குசடைதாழப்
பண்ணமரும்நான்மறையேபாடியாடல்பயில்கின்றீர்
திண்ணமரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
2081 மண்ணமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. க

அலைமல்குதண்புனலும்பிறையுஞ்சூடிஅங்கையில்
கொலைமல்குவெண்மழுவுமனலுமேந்துங்கொள்கையீர்
சிலைமல்குவெங்கணையாற்புரமூன்றெரித்தீர்திருநல்லூர்
2082 மலைமல்குகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. உ

குறைநிரம்பாவெண்மதியஞ்சூடிக்குளிர்புன்சடைதாழப்
பறைநவின்றபாடலோடாடல்பேணிப்பயில்கின்றீர்
சிறைநவின்றதண்புனலும்வயலுஞ்சூழ்ந்ததிருநல்லூர்
2083 மறைநவின்றகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ௩

கூனமரும்வெண்பிறையும்புனலுஞ்சூடுங்கொள்கையீர்
மானமரும்மென்விழியாள்பாகமாகுமாண்பினீர்
தேனமரும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
2084 வானமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ச

நிணங்கவரும்மூவிலையுமனலுமேந்திநெறிகுழலாள்
அணங்கமரும்பாடலோடாடல்மேவுமழகினீர்
திணங்கவருமாடரவும்பிறையுஞ்சூடித்திருநல்லூர்
2085 மணங்கமழுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. ரு

கார்மருவுபூங்கொன்றைசூடிக்கமழ்புன்சடைதாழ
வார்மருவுமென்முலையாள்பாகமாகுமாண்பினீர்
தேர்மருவுநெடுவீதிக்கொடிகளாடுந்திருநல்லூர்
2086 ஏர்மருவுகோயிலேகோயிலாகஇருந்தீரே. சு

ஊன்தோயும்வெண்மழுவுமனலுமேந்தியுமைகாண
மீன்தோயுந்திசைநிறையவோங்கியாடும்வேடத்தீர்
தேன்தோயும்பைம்பொழிலின்வண்டுபாடுந்திருநல்லூர்
2087 வான்தோயுங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. எ

காதமரும்வெண்குழையீர்கறுத்தஅரக்கன்மலையெடுப்ப
மாதமரும்மென்மொழியாள்மறுகும்வண்ணங்கண்டுகந்தீர்
தீதமரா அந்தணர்கள்பரவியேத்துந்திருநல்லூர்
2088 மாதமருங்கோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. அ

போதின்மேலயன்திருமால்போற்றியும்மைக்காணாது
நாதனேயிவனென்றுநயந்தேத்தமகிழ்ந்தளித்தீர்
தீதிலா அந்தணர்கள்தீமூன்றோம்புந்திருநல்லூர்
2089 மாதராளவளோடுமன்னுகோயில்மகிழ்ந்தீரே. கூ

பொல்லாதசமணரொடுபுறங்கூறுஞ்சாக்கியரொன்
றல்லாதாரறவுரைவிட்டடியார்கள்போற்றோவா
நல்லார்களந்தணர்கள்நாளுமேத்துந்திருநல்லூர்
2090 மல்லார்ந்தகோயிலேகோயிலாகமகிழ்ந்தீரே. க0

கொந்தணவும்பொழில்புடைசூழ்கொச்சைமேவுகுலவேந்த
செந்தமிழின்சம்பந்தன்சிறைவண்புனல்சூழ்திருநல்லூர்[ன்
பந்தணவுமெல்விரலாள்பங்கன்றன்னைப்பயில்பாடல்
2091 சிந்தனையாலுரைசெய்வார்சிவலோகஞ்சேர்ந்திருப்பாரே.

58 கலைவாழும்அங்கையீர்கொங்கையாருங்கருங்கூந்தல்
அலைவாழுஞ்செஞ்சடையிலரவும்பிறையுமமர்வித்தீர்
குலைவாழைகமுகம்பொன்பவளம்பழுக்குங்குடவாயில்
2092 நிலைவாழுங்கோயிலேகோயிலாகநின்றீரே. க

அடியார்ந்தபைங்கழலுஞ்சிலம்புமார்ப்பஅங்கையில்
செடியார்ந்தவெண்டலையொன்றேந்தியுலகம்பலிதேர்வீர்
குடியார்ந்தமாமறையோர்குலாவியேத்துங்குடவாயில்
2093 படியார்ந்தகோயிலேகோயிலாகப்பயின்றீரே. உ

கழலார்பூம்பாதத்தீரோதக்கடலில்விடமுண்டன்
றழலாருங்கண்டத்தீரண்டர்போற்றுமளவினீர்
குழலாரவண்டினங்கள்கீதத்தொலிசெய்குடவாயில்
2094 நிழலார்ந்தகோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. ங

மறியாருங்கைத்தலத்தீர்மங்கைபாகமாகச்சேர்ந்
தெறியாருமாமழுவுமெரியுமேந்துங்கொள்கையீர்
குறியாரவண்டினங்கள்தேன்மிழற்றுங்குடவாயில்
2095 நெறியாருங்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. ச

இழையார்ந்தகோவணமுங்கீளுமெழிலாருடையாகப்
பிழையாதசூலம்பெய்தாடல்பாடல்பேணினீர்
குழையாரும்பைம்பொழிலும்வயலுஞ்சூழ்ந்தகுடவாயில்
2096 விழவார்ந்தகோயிலேகோயிலாகமிக்கீரே. ரு

அரவார்ந்ததிருமேனியானவெண்ணீறாடினீர்
இரவார்ந்தபெய்பலிகொண்டிமையோரேத்தநஞ்சுண்டீர்
குரவார்ந்தபூஞ்சோலைவாசம்வீசுங்குடவாயில்
2097 திருவார்ந்தகோயிலேகோயிலாகத்திகழ்ந்தீரே. சு

பாடலார்வாய்மொழியீர்பைங்கண்வெள்ளேறூர்தியீர்
ஆடலார்மாநடத்தீரரிவைபோற்றுமாற்றலீர்
கோடலார்தும்பிமுரன்றிசைமிழற்றுங்குடவாயில்
2098 நீடலார்கோயிலேகோயிலாகநிகழ்ந்தீரே. எ

கொங்கார்ந்தபைங்கமலத்தயனுங்குறளாய்நிமிர்ந்தானும்
அங்காந்துதள்ளாடஅழலாய்நிமிர்ந்தீரிலங்கைக்கோன்
தங்காதல்மாமுடியுந்தாளுமடர்த்தீர்குடவாயில்
2099 பங்கார்ந்தகோயிலேகோயிலாகப்பரிந்தீரே. அ, கூ

தூசார்ந்தசாக்கியருந்தூய்மையில்லாச்சமணரும்
ஏசார்ந்தபுன்மொழிநீத்தெழில்கொள்மாடக்குடவாயில்
ஆசாரஞ்செய்மறையோர்அளவிற்குன்றாதடிபோற்றத்
2100 தேசார்ந்தகோயிலேகோயிலாகச்சேர்ந்தீரே. க0

நளிர்பூந்திரைமல்குகாழிஞானசம்பந்தன்
குளிர்பூங்குடவாயிற்கோயில்மேயகோமானை
ஒளிர்பூந்தமிழ்மாலையுரைத்தபாடலிவைவல்லார்
2101 தளர்வானதானொழியத்தகுசீர்வானத்திருப்பாரே. கக

**59** நலங்கொள்முத்துமணியுமணியுந்திரளோதங்
கலங்கள்தன்னிற்கொண்டுகரைசேர்கலிக்காழி
வலங்கொள்மழுவொன்றுடையாய்விடையாயெனவேத்தி
2102 அலங்கல்சூட்டவல்லார்க்கடையாவருநோயே. க

ஊராருவரிச்சங்கம்வங்கங்கொடுவந்து
காராரோதங்கரைமேலுயர்த்துங்கலிக்காழி
நீரார்சடையாய்நெற்றிக்கண்ணாவென்றென்று
2103 பேராயிரமும்பிதற்றத்தீரும்பிணிதானே. உ

வடிகொள்பொழிலின்மழலைவரிவண்டிசைசெய்யக்
கடிகொள்போதில்தென்றலணையுங்கலிக்காழி
முடிகொள்சடையாய்முதல்வாஎன்றுமுயன்றேத்தி
2104 அடிகைதொழுவார்க்கில்லையல்லலவலமே. ௩

மனைக்கேயேறவளஞ்செய்பவளம்வளர்முத்தங்
கனைக்குங்கடலுளோதமேறுங்கலிக்காழிப்
பனைக்கைப்பகட்டீருரியாய்பெரியாயெனப்பேணி
2105 நினைக்கவல்லஅடியார்நெஞ்சினல்லாரே. ௪

பரிதியியங்கும்பாரிற்சீரார்பணியாலே
கருதிவிண்ணோர்மண்ணோர்விரும்புங்கலிக்காழிச்
சுருதிமறைநான்கானசெம்மைதருவானைக்
2106 கருதியேழுமின்வழுவாவண்ணந்துயர்போமே. ௫

மந்தமருவும்பொழிலிலெழிலார்மதுவுண்டு
கந்தமருவவரிவண்டிசைசெய்கலிக்காழிப்
பந்தநீங்கஅருளும்பரனேயெனஎத்திச்
2107 சிந்தைசெய்வார்செம்மைநீங்காதிருப்பாரே. ௬

புயலார்பூமிநாமமோதிப்புகழ்மல்கக்
கயலார்கண்ணார்பண்ணாரொலிசெய்கலிக்காழிப்
பயில்வான்றன்னைப்பத்தியாரத்தொழுதேத்த
2108 முயல்வார்தம்மேல்வெம்மைக்கூற்றம்முடுகாதே. ௭

அரக்கன்முடிதோள்நெரியஅடர்த்தானடியார்க்குக்
கரக்ககில்லாதருள்செய்பெருமான்கலிக்காழிப்
பரக்கும்புகழான்றன்னையேத்திப்பணிவார்மேற்
2109 பெருக்குமின்பந்துன்பமானபிணிபோமே. ௮

மாணாயுலகங்கொண்டமாலும்மலரோனுங்
காணாவண்ணமெரியாய்நிமிர்ந்தான்கலிக்காழிப்
பூணார்முலையாள்பங்கத்தானைப்புகழ்ந்தேத்திக்
2110 கோணாநெஞ்சமுடையார்க்கில்லைக்குற்றமே. ௯

அஞ்சியல்லல்மொழிந்துதிரிவாரமண்ஆதர்
கஞ்சிகாலையுண்பார்க்கரியான்கலிக்காழித்
தஞ்சமாயதலைவன்றன்னைநினைவார்கள்
2111 துஞ்சலில்லாநல்லவுலகம்பெறுவாரே. ௧௦

ஊழியாயபாரிலோங்குமுயர்செல்வக்
காழியீசன்கழலேபேணுஞ்சம்பந்தன்
தாழுமனத்தாலுரைத்ததமிழ்களிவைவல்லார்
2112 வாழிநீங்காவானேருலகில்மகிழ்வாரே. கக

60 சிந்தையிடையார்தலையின்மிசையார்செஞ்சொல்லார்
வந்துமாலைவைகும்போழ்தென்மனத்துள்ளார்
மைந்தர்மணாளரென்னமகிழ்வாரூர்போலும்
2113 பைந்தண்மாதவிசோலைசூழ்ந்தபாசூரே. க

பேரும்பொழுதும்பெயரும்பொழுதும்பெம்மானென்
றாருந்தனையுமடியாரேத்த அருள்செய்வார்
ஊருமரவமுடையார்வாழுமூர்போலும்
2114 பாரின்மிசையார்பாடலோவாப்பாசூரே. உ

கையால்தொழுதுதலைசாய்த்துள்ளங்கசிவார்கள்
மெய்யார்குறையுந்துயருந்தீர்க்கும்விமலனர்
நெய்யாடுதலஞ்சுடையார்நிலாவுமூர்போலும்
2115 பைவாய்நாகங்கோடலீனும்பாசூரே. ந

பொங்காடரவும்புனலுஞ்சடைமேற்பொலிவெய்தக்
கொங்கார்கொன்றைசூடியென்னுள்ளங்குளிர்வித்தார்
தங்காதலியுந்தாமும்வாழுமூர்போலும்
2116 பைங்கான்முல்லைபல்லரும்பீனும்பாசூரே. ச

ஆடற்புரியும்ஐவாயரவொன்றரைச்சாத்தும்
சேடச்செல்வர்சிந்தையுளென்றும்பிரியாதார்
வாடற்றலையிற்பலிதேர்கையாரூர்போலும்
2117 பாடற்குயில்கள்பயில்பூஞ்சோலைப்பாசூரே. ரு

கானின்றதிரக்கனல்வாய்நாகங்கச்சாகத்
தோலொன்றுடையார்விடையார்தம்மைத்தொழுவார்கள்
மால்கொண்டோடமையல்தீர்ப்பாரூர்போலும்
2118 பால்வெண்மதிதோய்மாடஞ்சூழ்ந்தபாசூரே. சு

கண்ணினயலேகண்ணென்றுடையார்கழலுன்னி
எண்ணுந்தனையுமடியாரேத்த அருள்செய்வார்
உண்ணின்றுருகஉவகைதருவாரூர்போலும்
2119 பண்ணின்மொழியார்பாடலோவாப்பாசூரே. எ

தேசுகுன்றாத்தெண்ணீரிலங்கைக்கோமானைக்
கூசஅடர்த்துக்கூர்வாள்கொடுப்பார்தம்மையே
பேசிப்பிதற்றப்பெருமைதருவாரூர்போலும்
2120 பாசித்தடமும்வயலுஞ்சூழ்ந்தபாசூரே. அ

நகுவாய்மலர்மேலயனும்நாகத்தணையானும்
புகுவாயறியார்புறநின்றோரார்போற்றேவார்
செகுவாயுகுபல்தலைசேர்கையாரூர்போலும்
2121 பகுவாய்நாரையாரல்வாரும்பாசூரே. கூ

தூயவெயில்நின் றுழல்வார்துவர்தோயாடையார்
நாவில்வெய்யசொல்லித்திரிவார்நயமில்லார்
காவல்வேவக்கணையொன்றெய்தாரூர்போலும்
2122 பாவைக்குரவம்பயில்பூஞ்சோலைப்பாசூரே. கO

ஞானமுணர்வான்காழிஞானசம்பந்தன்
தேனும்வண்டுமின்னிசைபாடுந்திருப்பாசூர்க்
கானம்முறைவார்கழல்சேர்பாடலிவைவல்லார்
2123 ஊனமிலராயும்பர்வானத்துறைவாரே. கக

61 உண்டாய்நஞ்சையுமையோர்பங்காவென் றுள்கித்
தொண்டாய்த்திரியுமடியார்தங்கள் துயரங்கள்
அண்டாவண்ணமறுப்பானெங்கையூர்போலும்
2124 வெண்டாமரைமேற்கருவண்டியாழ்செய்வெண்காடே. க

நாதன்நம்மையாள்வானென் றுநவின்றேத்திப்
பாதம்பன்னாள் பணியுமடியார்தங்கள்மேல்
ஏதந்தீரஇருந்தான்வாழூர்போலும்
2125 வேதத்தொலியாற்கிளிசொற்பயிலும்வெண்காடே. உ

தண்முத்தரும்பத்தடமூன் றுடையான்றனையுன்னிக்
கண்முத்தரும்பக்கழற்சேவடிகைதொழுவார்கள்
உண்முத்தரும்பவுவகைதருவானூர்போலும்
2126 வெண்முத்தருவிப்புனல்வந்தலைக்கும்வெண்காடே. ங

நரையார்வந்துநாளுங்குறுகிநணுகாமுன்
உரையால்வேறாவுள்குவார்களுள்ளத்தே
கரையாவண்ணங்கண்டான்மேவுமூர்போலும்
2127 விரையார்கமலத்தன்னமருவும்வெண்காடே. ச

பிள்ளைப்பிறையும்புனலுஞ்சூடும்பெம்மானென்
றுள்ளத்துள்ளித்தொழுவார்தங்களுறுநோய்கள்
தள்ளிப்போகஅருளுந்தலைவனூர்போலும்
2128 வெள்ளைச்சுரிசங்குலவித்திரியும்வெண்காடே. ரு

ஒளிகொள்மேனியுடையாயும்பராளீயென்
றளியராகியழுதுற்றூறுமடியார்கட்
கெளியானமரர்க்கரியான்வாழுமூர்போலும்
2129 வெளியவுருவத்தானைவணங்கும்வெண்காடே. சு

கோள்வித்தனையகூற்றந்தன்னைக்குறிப்பினால்
மாள்வித்தவனைமகிழ்ந்தங்கேத்தமாணிக்காய்
ஆள்வித்தமராருலகமளிப்பானூர்போலும்
2130 வேள்விப்புகையால்வானமிருள்கூர்வெண்காடே. எ

வளையார்முன்கைமலையாள்வெருவவரையூன்றி
முளையார்மதியஞ்சூடியென்றுமுப்போதும்
இளையாதேத்தஇருந்தானெந்தையூர்போலும்
2131 விளையார்கழனிப்பழனஞ்சூழ்ந்தவெண்காடே. அ

கரியானோடுகமலமலரான்காணாமை
எரியாய்நிமிர்ந்தஎங்கள்பெருமானென்பார்கட்
குரியானமரர்க்கரியான்வாழுமூர்போலும்
2132 விரியார்பொழிலின்வண்டுபாடும்வெண்காடே. கூ

பாடுமடியார்பலருங்கூடிப்பரிந்தேத்த
ஆடுமரவமசைத்தபெருமானறிவின்றி
மூடமுடையசமண்சாக்கியர்களுணராத
2133 வேடமுடையபெருமான்பதியாம்வெண்காடே. க0

விடையார்கொடியான்மேவியுறையும்வெண்காட்டைக்
கடையார்மாடங்கலந்துதோன்றுங்காழியான்
நடையாரின்சொல்ஞானசம்பந்தன்தமிழ்வல்லார்க்
2134 கடையாவினைகளமரலோகமாள்வாரே. கக

62 காயச்செவ்விக்காமற்காய்ந்துகங்கையைப்
பாயப்படர்புன்சடையிற்பதித்தபரமேட்டி
மாயச்சூரன்றறுத்தமைந்தன்தாதைதன்
2135 மீயச்சூரேதொழுதுவினையைவீட்டுமே. க

பூவார்சடையின்முடிமேற்புனலரனல்கொள்வர்
நாவார்மறையர்பிறையர்நறவெண்டலையேந்தி
ஏவார்மலையேசிலையாக்கழியம்பெரிவாங்கி
2136 மேவார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. ௨

பொன்னேர்கொன்றைமாலைபுரளுமகலத்தான்
மின்னேர்சடைகளுடையான்மீயச்சூரானைத்
தன்னேர்பிறரில்லானைத்தலையால்வணங்குவார்
2137 அந்நேரிமையோருலகமெய்தலரிதன்றே. ௩

வேகமதநல்லியானைவெருவவுரிபோர்த்துப்
பாகமுமையோடாகப்படிதம்பலபாட
நாகமரைமேலசைத்துநடமாடியநம்பன்
2138 மேகமுரிஞ்சும்பொழில்சூழ்மீயச்சூரானே. ௪

விடையார்கொடியார்சடைமேல்விளங்கும்பிறைவேடம்
படையார்பூதஞ்சூழப்பாடலாடலார்
பெடையார்வரிவண்டணையும்பிணைசேர்கொன்றையார்
2139 விடையார்நடையொன்றுடையார்மீயச்சூராரே. ரு

குளிருஞ்சடைகொள்முடிமேற்கோலமார்கொன்றை
ஒளிரும்பிறையொன்றுடையானொருவன்கைகோடி
நளிரும்மணிசூழ்மாலைநட்டநவில்நம்பன்
2140 மிளிருமரவமுடையான்மீயச்சூரானே. சா

நீலவடிவர்மிடறுநெடியர்நிகரில்லார்
கோலவடிவுதமதாங்கொள்கையறிவொண்ணார்
காலர்கழலர்கரியினுரியர்மழுவாளர்
2141 மேலர்மதியர்விதியர்மீயச்சூராரே. எ

புலியினுரிதோலாடைபூசும்பொடிநீற்றர்
ஒலிகொள்புனலோர்சடைமேற்கரந்தாருமையஞ்ச
வலியதிரள்தோள்வன்கணரக்கர்கோன்றன்னை
2142 மெலியவரைக்கீழடர்த்தார்மீயச்சூராரே. அ

காதின்மிளிருங்குழையர்கரியகண்டத்தார்
போதிலவனும்மாலுந்தொழப்பொங்கெரியானார்
கோதிவரிவண்டறைபூம்பொய்கைப்புனல்மூழ்கி
2143 மேதிபடியும்வயல்சூழ்மீயச்சூராரே. கூ

கண்டார்காணும்படியார்கலிங்கமுடைபட்டைக்
கொண்டார்சொல்லைக்குறுகாருயர்ந்தகொள்கையார்
பெண்டான்பாகமுடையார்பெரியவரைவில்லால்
2144 விண்டார்புரமூன்றெரித்தார்மீயச்சூராரே. கo

வேடமுடையபெருமானுறையுமீயச்சூர்
நாடும்புகழார்புகலிஞானசம்பந்தன்
பாடலாயதமிழீரைந்துமொழிந்துள்கி
2145 ஆடுமடியாரகல்வானுலகமடைவாரே. கக

63 மின்னுஞ்சடைமேலிளவெண்டிங்கள்விளங்கவே
துன்னுங்கடல்நஞ்சிருள்தோய்கண்டர்தொன்மூதூர்
அன்னம்படியும்புனலாரரிசிலலைகொண்டு
2146 பொன்னும்மணியும்பொருதென்கரைமேற்புத்தூரே. க

மேவாஅசுரர்மேவெயில்வேவமலைவில்லால்
ஏவாரெரிவெங்கணையாலெய்தானெய்துமூர்
நாவால்நாதன்நாமமோதிநாள்தோறும்
2147 பூவால்நீராற்பூசுரர்போற்றும்புத்தூரே. உ

பல்லார்தலைசேர்மாலைசூடிப்பாம்பும்பூண்
டெல்லாவிடமும்வெண்ணீறணிந்தோரேறேறிக்
கல்லார்மங்கைபங்கரேனுங்காணுங்கால்
2148 பொல்லாரல்லரழகியர்புத்தூர்ப்புனிதரே. ௩

வரியேர்வளையாளரிவையஞ்சவருகின்ற
கரியேருரிவைபோர்த்தகடவுள்கருதுமூர்
அரியேர்கழனிப்பழனஞ்சூழ்ந்தங்கழகாய
2149 பொரியேர்புன்குசொரிபூஞ்சோலைப்புத்தூரே. ச

என்போடரவமேனத்தெயிறோடெழிலாமை
மின்போற்புரிநூல்விரவிப்பூண்டமணிமார்பர்
அன்போடுருகுமடியார்க்கன்பரமருமூர்
2150 பொன்போதலர்கோங்கோங்குசோலைப்புத்தூரே. ரு

வள்ளிமுலைதோய்குமரன்தாதைவான்தோயும்
வெள்ளிமலைபோல்விடையொன்றுடையான்மேவுமூர்
தெள்ளிவருநீரரிசில்தென்பாற்சிறைவண்டும்
2151 புள்ளும்மலிபூம்பொய்கைசூழ்ந்தபுத்தூரே. சு

நிலந்தண்ணீரோடனல்கால்விசும்பின்நீர்மையான்
சிலந்திசெங்கட்சோழனாகச்செய்தானூர்
அலந்தஅடியானற்றைக்கன்றோர்காசெய்திப்
2152 புலர்ந்தகாலைமாலைபோற்றும்புத்தூரே. ஏ

இத்தேரேகஇம்மலைபேர்ப்பனென்றேந்தும்
பத்தோர்வாயான்வரைக்கீழலறப்பாதந்தான்
வைத்தாரருள்செய்வரதன்மருவுமூரான
2153 புத்தூர்காணப்புகுவார்வினைகள்போகுமே. அ

முள்ளார்கமலத்தயன்மால்முடியோடடிதேட
ஒள்ளாரெரியாயுணர்தற்கரியானூர்போலும்
கள்ளார்நெய்தல்கழுநீராம்பல்கமலங்கள்
2154 புள்ளார்பொய்கைப்பூப்பலதோன்றும்புத்தூரே. கூ

கையார்சோறுகவர்குண்டர்களுந்துவருண்ட
மெய்யார்போர்வைமண்டையர்சொல்லுமெய்யல்ல
பொய்யாமொழியாலந்தணர்போற்றும்புத்தூரில்
2155 ஐயாஎன்பார்க்கையுறவின்றியழகாமே. க0

நறவங்கமழ்பூங்காழிஞானசம்பந்தன்
பொறிகொளரவம்பூண்டானாண்டபுத்தூர்மேல்
செறிவண்டமிழ்செய்மாலைசெப்பவல்லார்கள்
2156 அறவன்கழல்சேர்ந்தன்போடின்பமடைவாரே. கக

64 தேவாசிறியோம்பிழையைப்பொறுப்பாய்பெரியோனே
ஆவாவென்றங்கடியார்தங்கட்கருள்செய்வாய்
ஓவாவுவரிகொள்ளவுயர்ந்தாயென்றேத்தி
2157 மூவாமுனிவர்வணங்குங்கோயில்முதுகுன்றே. க

எந்தையிவனென்றிரவிமுதலாஇறைஞ்சுவார்
சிந்தையுள்ளேகோயிலாகத்திகழ்வானை
மந்தியேறியினமாமலர்கள்பலகொண்டு
2158 முந்தித்தொழுதுவணங்குங்கோயில்முதுகுன்றே. உ

நீடுமலரும்புனலுங்கொண்டுநிரந்தரம்
தேடுமடியார்சிந்தையுள்ளேதிகழ்வானைப்
பாடுங்குயிலினயலேகிள்ளைபயின்றேத்த
2159 மூடுஞ்சோலைமுகில்தோய்கோயில்முதுகுன்றே. ௩

தெரிந்தஅடியார்சிவனேயென்றுதிசைதோறுங்
குருந்தமலருங்குரவினலருங்கொண்டேந்தி
இருந்துநின்றுமிரவும்பகலுமேத்துஞ்சீர்
2160 முரிந்துமேகந்தவழுஞ்சோலைமுதுகுன்றே. ௪

வைத்தநிதியேமணியேயென்றுவருந்தித்தம்
சித்தநைந்துசிவனேயென்பார்சிந்தையார்
கொத்தார்சந்துங்குரவும்வாரிக்கொணர்ந்துந்தும்
2161 முத்தாறுடையமுதல்வர்கோயில்முதுகுன்றே. ௫

வம்பார்கொன்றைவன்னிமத்தம்மலர்தூவி
நம்பாவென்னநல்கும்பெருமானுறைகோயில்
கொம்பார்குரவுகொகுடிமுல்லைகுவிந்தெங்கும்
2162 மொய்ம்பார்சோலைவண்டுபாடுமுதுகுன்றே. ௬, ௭

வாசங்கமழும்பொழில்சூழிலங்கைவாழ்வேந்தை
நாசஞ்செய்தநங்கள்பெருமானமர்கோயில்
பூசைசெய்தஅடியார்நின்றுபுகழ்ந்தேத்த
2163 மூசிவண்டுபாடுஞ்சோலைமுதுகுன்றே. ௮

அல்லிமலர்மேலயனுமாவினணையானும்
சொல்லிப்பாவித்தொடரவொண்ணாச்சோதியூர்
கொல்லைவேடர்கூடிநின்றுகும்பிட
2164 முல்லையயலேமுறுவல்செய்யுமுதுகுன்றே. ௯

கருகுமுடலார்கஞ்சியுண்டுகடுவேதின்
றுருகுசிந்தையில்லார்க்கயலானுறைகோயில்
திருகல்வேய்கள்சிறிதேவளையச்சிறுமந்தி
2165 முருகின்பணைமேலிருந்துநடஞ்செய்முதுகுன்றே. ௧௦

அறையார்கடல்சூழந்தண்காழிச்சம்பந்தன்
முறையால்முனிவர்வணங்குங்கோயில்முதுகுன்றைக்
குறையாப்பனுவல்கூடிப்பாடவல்லார்கள்
2166 பிறையார்சடையெம்பெருமான்கழல்கள்பிரியாரே. ௧௧

65 கறையணிவேலிலர்போலுங்கபாலந்தரித்திலர்போலும்
மறையுநவின்றிலர்போலும்மாசுணமார்த்திலர்போலும்
பறையுங்கரத்திலர்போலும்பாசம்பிடித்திலர்போலும்
2167 பிறையுஞ்சடைக்கிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. ௧

கூரம்பதுவிலர்போலுங்கொக்கினிறகிலர்போலும்
ஆரமும்பூண்டிலர்போலுமாமையணிந்திலர்போலுந்
தாருஞ்சடைக்கிலர்போலுஞ்சண்டிக்கருளிலர்போலும்
2168 பேரும்பலவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. ௨

சித்தவடிவிலர்போலுந்தேசந்திரிந்திலர்போலுங்
கத்திவருங்கடுங்காளிகதங்கள் தவிர்த்திலர்போலும்
மெய்த்தநயனமிடந்தார்க்காழியளித்திலர்போலும்
2169 பித்தவடிவிலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. ௩

நச்சரவாட்டிலர்போலும்நஞ்சமிடற்றிலர்போலுங்
கச்சுத்தரித்திலர்போலுங்கங்கைதரித்திலர்போலும்
மொய்ச்சவன்பேயிலர்போலும்முப்புரமெய்திலர்போலும்
2170 பிச்சையிரந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. ௪

தோடுசெவிக்கிலர்போலுஞ்சூலம்பிடித்திலர்போலும்
ஆடுதடக்கைவலியஆனையுரித்திலர்போலும்
ஓடுகரத்திலர்போலுமொள்ளழல்கையிலர்போலும்
2171 பீடுமிகுத்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. ௫

விண்ணவர்கண்டிலர்போலும்வேள்வியழித்திலர்போலும்
அண்ணலயன்தலைவீழஅன்றுமறுத்திலர்போலும்
வண்ணஎலும்பினொடக்குவடங்கள்தரித்திலர்போலும்
2172 பெண்ணின்மொய்த்தெழுசெல்வப்பிரமபுரமமர்ந்தாரே. ௬

பன்றியின்கொம்பிலர்போலும்பார்த்தற்கருளிலர்போலுங்
கன்றியகாலனைவீழக்கால்கொடுபாய்ந்திலர்போலுந்
துன்றுபிணஞ்சுடுகாட்டிலாடித்துதைந்திலர்போலும்
2173 பின்றியும்பீடும்பெருகும்பிரமபுரமமர்ந்தரே. ௭

பரசுதரித்திலர்போலும்படுதலைபூண்டிலர்போலும்
அரசனிலங்கையர்கோனையன்றுமடர்த்திலர்போலும்
புரைசெய்புனத்திளமானும்புலியினதளிலர்போலும்
2174 பிரசமலர்ப்பொழில்சூழ்ந்தபிரமபுரமமர்ந்தாரே. ௮

அடிமுடிமாலயன்றேடஅன்றுமளப்பிலர்போலுங்
கடிமலரைங்கணைவேளைக்கனலவிழித்திலர்போலும்
படிமலர்ப்பாலனுக்காகப்பாற்கடலீந்திலர்போலும்
2175 பிடிநடைமாதர்பெருகும்பிரமபுரமமர்ந்தாரே. ௯

வெற்றரைச்சீவரத்தார்க்குவெளிப்படநின்றிலர்போலும்
அற்றவரால்நிழல்நால்வர்க்கறங்களுரைத்திலர்போலும்
உற்றவரென்றிலர்போலுமோடுமுடிக்கிலர்போலும்
2176 பெற்றமுமூர்ந்திலர்போலும்பிரமபுரமமர்ந்தாரே. கo

பெண்ணுருஆணுருவல்லாப்பிரமபுரநகர்மேய
அண்ணல்செய்யாதனவெல்லாமறிந்துவகைவகையாலே
நண்ணியஞானசம்பந்தன்நவின்றனபத்தும்வல்லார்கள்
2177 விண்ணவரோடினிதாகவீற்றிருப்பாரவர்தாமே. கக

66 மந்திரமாவதுநீறுவானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறுதுதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறுசமயத்திலுள்ளதுநீறு
2178 செந்துவர்வாயுமைபங்கன்திருஆலவாயான்திருநீறே. க

வேதத்திலுள்ளதுநீறுவெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறுபுன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறுஉண்மையிலுள்ளதுநீறு
2179 சீதப்புனல்வயல்சூழ்ந்ததிருஆலவாயான்திருநீறே. உ

முத்திதருவதுநீறுமுனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபாவஇனியதுநீறு
2180 சித்திதருவதுநீறுதிருஆலவாயான்திருநீறே. ந

காணஇனியதுநீறுகவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம்பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறுமதியைத்தருவதுநீறு
2181 சேணந்தருவதுநீறுதிருஆலவாயான்திருநீறே. ச

பூசஇனியதுநீறுபுண்ணியமாவதுநீறு
பேசஇனியதுநீறுபெருந்தவத்தோர்களுக்கெல்லாம்
ஆசைகெடுப்பதுநீறுஅந்தமதாவதுநீறு
2182 தேசம்புகழ்வதுநீறுதிருஆலவாயான்திருநீறே. ரு

அருத்தமதாவதுநீறுஅவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறுவானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறுபுண்ணியர்பூசும்வெண்ணீறு
2183 திருத்தகுமாளிகைசூழ்ந்ததிருஆலவாயான்திருநீறே. சு

எயிலது அட்டது நீறு இருமைக்குமுள்ளது நீறு
பயிலப்படுவது நீறு பாக்கியமாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தமதாவது நீறு
2184 அயிலைப்பொலிதருசூலத் தாலவாயான் திருநீறே. எ

இராவணன்மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவணமாவது நீறு பாவமறுப்பது நீறு
தராவணமாவது நீறு தத்துவமாவது நீறு
2185 அராவணங்குந்திருமேனி ஆலவாயான் திருநீறே. அ

மாலொடயனறியாதவண்ணமுமுள்ளது நீறு
மேலுறைதேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடிநீறு
ஏலவுடம்பிடர்தீர்க்குமின்பந்தருவது நீறு
2186 ஆலமதுண்டமிடற்றெம் ஆலவாயான் திருநீறே. கூ

குண்டிகைக்கையர்களோடு சாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பது நீறு கருதஇனியது நீறு
எண்டிசைப்பட்டபொருளாரேத்துந்தகையது நீறு
2187 அண்டத்தவர்பணிந்தேத்துமாலவாயான் திருநீறே. க0

ஆற்றலடல்விடையேறுமாலவாயான் திருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும்பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயின தீரச்
2188 சாற்றியபாடல்கள்பத்தும்வல்லவர் நல்லவர்தாமே. கக

67 மண்ணுமோர்பாகமுடையார்மாலுமோர்பாகமுடையார்
விண்ணுமோர்பாகமுடையார்வேதமுடையவிமலர்
கண்ணுமோர்பாகமுடையார்கங்கைசடையிற்கரந்தார்
2189 பெண்ணுமோர்பாகமுடையார்பெரும்புலியூர்பிரியாரே. க

துன்னுகடற்பவளஞ்சேர் தூயனநீண்டதிண்டோள்கள்
மின்னுசுடர்க்கொடிபோலும்மேனியினாளொருகங்கைக்
கன்னிகளின்புனையோடுகலைமதிமாலைகலந்த
2190 பின்னுசடைப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. உ

கள்ளமதித்தகபாலங்கைதனிலேமிகவுந்தித்
துள்ளமிதித்துநின்றாடுந்தொழிலரெழில்மிகுசெல்வர்
வெள்ளநகுதலைமாலைவிரிசடைமேல்மிளிர்கின்ற
2191 பிள்ளைமதிப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. ஙு

ஆடலிலையமுடையாரருமறைதாங்கியாறங்கம்
பாடலிலையமுடையார்பன்மையொருமைசெய்தஞ்சும்
ஊடலிலையமுடையார்யோகெனும்பேரொளிதாங்கிப்
2192 பீடலிலையமுடையார்பெரும்புலியூர்பிரியாரே. ௪

தோடுடையார்குழைக்காதிற்சுடுபொடியாரனலாடக்
காடுடையாரெரிவீசுங்கையுடையார்கடல்சூழ்ந்த
நாடுடையார்பொருளின்பநல்லவைநாளுநயந்த
2193 பீடுடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. ரு

கற்றதுறப்பணிசெய்துகாண்டுமென்பாரவர்தங்கள்
முற்றிதறிதுமென்பார்கள்முதலியர்வேதபுராணர்
மற்றிதறிதுமென்பார்கள்மனத்திடையார்பணிசெய்யப்
2194 பெற்றிபெரிதுமுகப்பார்பெரும்புலியூர்பிரியாரே. சு

மறையுடையாரொலிபாடல்மாமலர்ச்சேவடிசேர்வார்
குறையுடையார்குறைதீர்ப்பார்குழகரழகர்நம்செல்வர்
கறையுடையார்திகழ்கண்டங்கங்கைசடையிற்கரந்தார்
2195 பிறையுடையார்சென்னிதன்மேற்பெரும்புலியூர்பிரியாரே.

உறவியுமின்புறுசீருமோங்குதல்வீடெளிதாகித்
துறவியுங்கூட்டமுங்காட்டித்துன்பமுமின்பமுந்தோற்றி
மறவியென்சிந்தனைமாற்றிவாழவல்லார்தமக்கென்றும்
2196 பிறவியறுக்கும்பிரானார்பெரும்புலியூர்பிரியாரே. அ

சீருடையாரடியார்கள்சேடரொப்பார்சடைசேரும்
நீருடையார்பொடிப்பூசும்நினைப்புடையார்விரிகொன்றைத்
தாருடையார்விடையூர்வார்தலைவரைந்நூற்றுப்பத்தாய
2197 பேருடையார்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. கூ

உரிமையுடையடியார்களுள்ளுறவுள்கவல்லார்கட்
கருமையுடையனகாட்டியருள்செயுமாதிமுதல்வர்
கருமையுடைநெடுமாலுங்கடிமலரண்ணலுங்காணாப்
2198 பெருமையுடைப்பெருமானார்பெரும்புலியூர்பிரியாரே. கo

பிறைவளரும்முடிச்சென்னிப்பெரும்புலியூர்ப்பெருமானை
நறைவளரும்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
மறைவளருந்தமிழ்மாலைவல்லவர்தந்துயர்நீங்கி
2199 நிறைவளர்நெஞ்சினராகிநீடுலகத்திருப்பாரே. கக

68 **வா**னமர்திங்களும்நீரும்மருவியவார்சடையானைத்
தேனமர்கொன்றையினானைத்தேவர்தொழப்படுவானைக்
கானமரும்பிணைபுல்கிக்கலைபயிலுங்கடம்பூரில்
2200 தானமர்கொள்கையினானைத்தாள்தொழவீடெளிதாமே. க

அரவினொடாமையும்பூண்டுஅந்துகில்வேங்கையதளும்
விரவுந்திருமுடிதன்மேல்வெண்டிங்கள்சூடிவிரும்பிப்
பரவுந்தனிக்கடம்பூரிற்பைங்கண்வெள்ளேற்றண்ணல்பாதம்
2201 இரவும்பகலும்பணியஇன்பநமக்கதுவாமே. உ

இளிபடுமின்சொலினார்கள்இருங்குழல்மேலிசைந்தேறத்
தெளிபடுகொள்கைகலந்ததீத்தொழிலார்கடம்பூரில்
ஒளிதருவெண்பிறைசூடியொண்ணுதலோடுடனாகிப்
2202 புலியதளாடைபுனைந்தான்பொற்கழல்போற்றுதுநாமே. ங

பறையொடுசங்கமியம்பப்பல்கொடிசேர்நெடுமாடம்
கறையுடைவேல்வரிக்கண்ணார்கலையொலிசேர்கடம்பூரில்
மறையொலிகூடியபாடல்மருவிநின்றாடல்மகிழும்
2203 பிறையுடைவார்சடையானைப்பேணவல்லார்பெரியோரே.

தீவிரியக்கழலார்ப்பச்சேயெரிகொண்டிடுகாட்டில்
நாவிரிகூந்தனற்பேய்கள்நகைசெயநட்டம்நவின்றோன்
காவிரிகொன்றைகலந்தகண்ணுதலான்கடம்பூரில்
2204 பாவிரிபாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. ரு

தண்புனல்நீள்வயல்தோறுந்தாமரைமேலனம்வைகக்
கண்புணர்காவில்வண்டேறக்கள்ளவிழுங்கடம்பூரில்
பெண்புனைகூறுடையானைப்பின்னுசடைப்பெருமானைப்
2205 பண்புனைபாடல்பயில்வார்பாவமிலாதவர்தாமே. சு

பலிகெழுசெம்மலர்சாரப்பாடலொடாடலறாத
கலிகெழுவீதிகலந்தகார்வயல்சூழ்கடம்பூரில்
ஒலிதிகழ்கங்கைகரந்தானொண்ணுதலாளுமைகேள்வன்
2206 புலியதளாடையினான்றன்புனைகழல்போற்றல்பொருளே. எ

பூம்படுகிற்கயல்பாயப்புள்ளிரியப்புறங்காட்டில்
காம்படுதோளியர்நாளுங்கண்கவருங்கடம்பூரில்
மேம்படுதேவியொர்பாகமேவியெம்மானெனவாழ்த்தித்
2207 தேம்படுமாமலர்தூவித்திசைதொழத்தீயகெடுமே. அ

திருமருமார்பிலவனுந்திகழ்தருமாமலரோனும்
இருவருமாயறிவொண்ணாஎரியுருவாகியஈசன்
கருவரைகாலிலடர்த்தகண்ணுதலான்கடம்பூரில்
2208 மருவியபாடல்பயில்வார்வானுலகம்பெறுவாரே. ௯

ஆடைதவிர்த்தறங்காட்டுமவர்களுமந்துவராடைச்
சோடைகள்நன்னெறிசொல்லார்சொல்லினுஞ்சொல்லலகண்டீர்
வேடம்பலபலகாட்டும்விகிர்தன்நம்வேதமுதல்வன்
2209 காடதனில்நடமாடுங்கண்ணுதலான்கடம்பூரே. ௧௦

விடைநவிலுங்கொடியானைவெண்கொடிசேர்நெடுமாடம்
கடைநவிலுங்கடம்பூரிற்காதலனைக்கடற்காழி
நடைநவில்ஞானசம்பந்தன்நன்மையாலேத்தியபத்தும்
2210 படைநவில்பாடல்பயில்வார்பழியொடுபாவமிலாரே. ௧௧

69 பெண்ணமர்மேனியினாரும்பிறைபுல்குசெஞ்சடையாருங்
கண்ணமர்நெற்றியினாருங்காதமருங்குழையாரும்
எண்ணமருங்குணத்தாருமிமையவரேத்தநின்றாரும்
2211 பண்ணமர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௧

தனைக்கணிமாமலர்கொண்டுதாள்தொழுவாரவர்தங்கள்
வினைப்பகையாயினதீர்க்கும்விண்ணவர்விஞ்சையர்நெஞ்சில்
நினைத்தெழுவார்துயர்தீர்ப்பார்திரைவளர்மங்கைநடுங்கப்
2212 பனைக்கைப்பகட்டுரிபோர்த்தார்பாண்டிக்கொடுமுடியாரே.

சடையமர்கொன்றையினாருஞ்சாந்தவெண்ணீறணிந்தாரும்
புடையமர்பூதத்தினாரும்பொறிகிளர்பாம்பசைத்தாரும்
விடையமருங்கொடியாரும்வெண்மழுமூவிலைச்சூலப்
2213 படையமர்கொள்கையினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௩

நறைவளர்கொன்றையினாருஞ்ஞாலமெல்லாந்தொழுதேத்தக்
கறைவளர்மாமிடற்றாருங்காடரங்காக்கனலேந்தி
மறைவளர்பாடலினோடுமண்முழவங்குழல்மொந்தை
2214 பறைவளர்பாடலினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௪

போகமுமின்பமுமாகிப்போற்றியென்பாரவர்தங்கள்
ஆகமுறைவிடமாகஅமர்ந்தவர்கொன்றையினோடும்
நாகமுந்திங்களுஞ்சூடிநன்னுதல்மங்கைதன்மேனிப்
2215 பாகமுகந்தவர்தாமும்பாண்டிக்கொடுமுடியாரே. ௫

கடிபடுகூவிளமத்தங்கமழ்சடைமேலுடையாரும்
பொடிபடமுப்புரஞ்செற்றபொருசிலையொன்றுடையாரும்
வடிவுடைமங்கைதன்னோடுமணம்படுகொள்கையினாரும்
2216 படிபடுகோலத்தினாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௬

ஊனமர்வெண்டலையேந்தியுண்பலிக்கென்றுழல்வாரும்
தேனமரும்மொழிமாதுசேர்திருமேனியினாரும்
கானமர்மஞ்ஞைகளாலுங்காவிரிக்கோலக்கரைமேல்
2217 பானலநீறணிவாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௭

புரந்தரன்றன்னொடுவானோர்போற்றியென்றேத்தநின்றாரும்
பெருந்திறல்வாளரக்கனைப்பேரிடர்செய்துகந்தாரும்
கருந்திரைமாமிடற்றாருங்காரகில்பன்மணியுந்திப்
2218 பரந்திழிகாவிரிப்பாங்கர்ப்பாண்டிக்கொடுமுடியாரே. ௮

திருமகள்காதலினானுந்திகழ்தருமாமலர்மேலைப்
பெருமகனும்மவர்காணாப்பேரழலாகியபெம்மான்
மருமலிமென்மலர்ச்சந்துவந்திழிகாவிரிமாடே
2219 பருமணிநீர்த்துறையாரும்பாண்டிக்கொடுமுடியாரே. ௯

புத்தரும்புந்தியிலாதசமணரும்பொய்ம்மொழியல்லால்
மெய்த்தவம்பேசிடமாட்டார்வேடம்பலபலவற்றால்
சித்தருந்தேவருங்கூடிச்செழுமலர்நல்லனகொண்டு
2220 பத்தர்கள்தாம்பணிந்தேத்தும்பாண்டிக்கொடுமுடியாரே.

கலமல்குதண்கடல்சூழ்ந்தகாழியுள்ஞானசம்பந்தன்
பலமல்குவெண்டலையேந்திப்பாண்டிக்கொடுமுடிதன்னைச்
சொலமல்குபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லார்துயர்தீர்ந்து
2221 நலமல்குசிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே. ௧௧

70 பிரமனூர்வேணுபுரம்புகலிவெங்குருப்பெருநீர்த்தோணி
புரமன்னுபூந்தராய்பொன்னஞ்சிரபுரம்புறவஞ்சண்பை
அரன்மன்னுதண்காழிகொச்சைவயமுள்ளிட்டங்காதியாய
2222 பரமனூர்பன்னிரண்டாய்நின்றதிருக்கழுமலநாம்பரவுமூரே. ௧

வேணுபுரம்பிரமனூர் புகலிபெருவெங்குருவெள்ளத்தோங்
தோணிபுரம்பூந்தராய் தூநீர்ச்சிரபுரம்புறவங்காழி [குந்
கோணியகோட்டாற்றுக்கொச்சைவயஞ்சண்பைகூருஞ்செல்வங்
2223 காணியவையகத்தாரேத்துங்கழுமலநாங்கருதுமூரே. ௨

புகலிசிரபுரம்வேணுபுரஞ்சண்பைபுறவங்காழி
நிகரில்பிரமபுரங்கொச்சைவயநீர்மேல்நின்றமூதூர்
அகலியவெங்குருவோடந்தண்டராயமமர்பெருமாற்கின்பம்
2224 பகருநகர்நல்லகழுமலநாங்கைதொழுதுபாடுமூரே. ரு

வெங்குருத்தண்புகலிவேணுபுரஞ்சண்பைவெள்ளங்கொள்ளத்
தொங்கியதோணிபுரம்பூந்தராய்தொகுபிரமபுரந்தொல்காழி
தங்குபொழிற்புறவங்கொச்சைவயந்தலைபண்டாண்டமூதூர்
2225 கங்கைசடைமுடிமேலேற்றான்கழுமலநாங்கருதுமூரே. ச

தொன்னீரிற்றோணிபுரம்புகலிவெங்குருத்துயர்தீர்காழி
இன்னீரவேணுபுரம்பூந்தராய்பிரமனூரெழிலார்சண்பை
நன்னீரபூம்புறவங்கொச்சைவயஞ்சிலம்பனகராநல்ல
2226 பொன்னீரபுன்சடையான்பூந்தண்கழுமலநாம்புகழுமூரே.

தண்ணந்தராய்புகலிதாமரையானூர்சண்பைதலைமுனாண்ட
அண்ணல்நகர்கொச்சைவயந்தண்புறவஞ்சீரணியார்காழி
விண்ணியல்சீர்வெங்குருநல்வேணுபுரந்தோணிபுரமேலாரேத்து
2227 கண்ணுதலான்மேவியநற்கழுமலநாங்கைதொழுதகருதுமூரே.

சீரார்சிரபுரமுங்கொச்சைவயஞ்சண்பையொடுபுறவநல்ல
ஆராத்தராய்பிரமனூர்புகலிவெங்குருவோடந்தண்காழி
ஏரார்கழுமலமும்வேணுபுரந்தோணிபுரமென்றென்றுள்கிப்
2228 போரால்நெடியவனுநான்முகனுங்காண்பரியபெருமானூரே.

புறவஞ்சிரபுரமுந்தோணிபுரஞ்சண்பைமிகுபுகலிகாழி
நறவமிகுசோலைக்கொச்சைவயந்தராய்நான்முகன்றனூர்
விறலாயவெங்குருவும்வேணுபுரம்விசயன்மேலம்பெய்து
2229 திறலாலரக்கனைச்செற்றான்றன்கழுமலநாஞ்சேருமூரே. அ

சண்பைபிரமபுரந்தண்புகலிவெங்குருநற்காழிசாயாப்
பண்பார்சிரபுரமுங்கொச்சைவயந்தராய்புறவம்பார்மேல்
நண்பார்கழுமலஞ்சீர்வேணுபுரந்தோணிபுரநாணிலாத
2230 வெண்பற்சமணரொடுசாக்கியரைவியப்பழித்தவிமலனூரே.

செழுமலியபூங்காழிபுறவஞ்சிரபுரஞ்சீர்ப்புகலிசெய்ய
கொழுமலரான்நன்னகரந்தோணிபுரங்கொச்சைவயஞ்சண்பையாய
விழுமியசீர்வெங்குருவோடோங்குதராய்வேணுபுரமிகுநன்மாடக்
2231 கழுமலமென்றின்னபெயர்பன்னிரண்டுகண்ணுதலான்கருதுமூரே.

கொச்சைவயம்பிரமனூர்புகலிவெங்குருப்புறவங்காழி
நிச்சல்விழவோவாநீடார்சிரபுரநீள்சண்பைமூதூர்
நச்சினியபூந்தராய்வேணுபுரந்தோணிபுரமாகிநம்மேல்
2232 அச்சங்கள்தீர்த்தருளுமம்மான்கழுமலநாமமருமூரே. கக

காவிமலர்புரையுங்கண்ணார்கழுமலத்தின்பெயரைநாளும்
பாவியசீர்ப்பன்னிரண்டுநன்னூலாப்பத்திமையாற்பனுவல்மாலை
நாவின்நலம்புகழ்சீர்நான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
2233 மேவியிசைமொழிவார்விண்ணவரிலெண்ணுதலைவிருப்புளாரே.

71 திருந்தமதிசூடித்தெண்ணீர்சடைக்கரந்து தேவிபாகம், பொருந்திப்பொருந்தாதவேடத்தாற் காடுறைதல்புரிந்த செல்வர், இருந்தஇடம்வினவில்ஏலங்கமழ்சோலையினவண் டியாழ்செய், குருந்தமணநாறுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்
2234 குறும்பலாவே. க

நாட்பலவுஞ்சேர்மதியஞ்சூடிப்பொடியணிந்தநம்பான்நம்மை
ஆட்பலவுந்தானுடையஅம்மானிடம்போலுமந்தண்சாரல்
கீட்பலவுங்கீண்டுகிளைகிளையன்மந்திபாய்ந்துண்டுவிண்ட
2235 கோட்பலவின்தீங்கனியைமாக்கடுவனுண்டுகளுங்குறும்பலாவே

வாடற்றலைமாலைசூடிப்புலித்தோல்வலித்துவீக்கி
ஆடலரவசைத்தஅம்மானிடம்போலுமந்தண்சாரல் [னுந்திக்
பாடற்பெடைவண்டுபோதலர்த்தத்தாதவிழ்ந்துபசும்பொன்
2236 கோடன்மணங்கமழுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே.

பால்வெண்மதிசூடிப்பாகத்தோர்பெண்கலந்துபாடியாடிக்
காலனுடல்கிழியக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பில்
நீலமலர்க்குவளைகண்திறக்கவண்டரற்றுநெடுந்தண்சாரல்
2237 கோலமடமஞ்ஞைபேடையொடாட்டயருங்குறும்பலாவே.

தலைவாண்மதியங்கதிர்விரியத்தண்புனலைத்தாங்கித்தேவி
முலைபாகங்காதலித்தமூர்த்தியிடம்போலும்முதுவேய்சூழ்ந்த
மலைவாபசும்புபசும்பொன்கொழித்திழியும்மல்குசாரல்
2238 குலைவாழைத்தீங்கனியும்மாங்கனியுந்தேன்பிலிற்றுங்குறும்பலாவே.

நீற்றேதுதைந்திலங்குவெண்ணூலர்தண்மதியர்நெற்றிக்கண்ணர்
கூற்றேர்சிதையக்கடிந்தாரிடம்போலுங்குளிர்சூழ்வெற்பில்
ஏற்றேனமேனமிவையோடவைவிரவியிழிபூஞ்சாரல் [வே.
2239 கோற்றேனிசைமுரலக்கேளாக்குயில்பயிலுங்குறும்பலா

பொன்றொத்தகொன்றையும்பிள்ளைமதியும்புனலுஞ்சூடிப்
பின்றொத்தவார்சடையெம்பொம்மானிடம்போலும்பிலயந்தாங்கி
மன்றத்துமண்முழவமோங்கிமணிகொழித்துவயிரமுந்திக்
2240 குன்றத்தருவியயலேபுனல்ததும்புங்குறும்பலாவே. ௭

ஏந்துதிணிதிண்டோளிராவணனைமால்வரைக்கீழடரவூன்றிச்
சாந்தமெனநீறணிந்தசைவரிடம்போலுஞ்சாரற்சாரல்
பூந்தண்நறுவேங்கைக்கொத்திறுத்துமத்தகத்திற்பொலியவேந்திக்
2241 கூந்தற்பிடியுங்களிறுமுடன்வணங்குங்குறும்பலாவே. ௮

அரவினணையானும்நான்முகனுங்காண்பரிய அண்ணல்சென்
விரவிமதியணிந்தவிகிர்தர்க்கிடம்போலும்விரிபூஞ்சாரல் [னி
மரவமிருகரையுமல்லிகையுஞ்சண்பகமுமலர்ந்துமாந்தக்
2242 குரவமுறுவல்செய்யுங்குன்றிடஞ்சூழ்தண்சாரற்குறும்பலாவே.

மூடியசீவரத்தர்முன்கூறுண்டேறுதலும்பின்கூறுண்டு
காடிதொடுசமணைக்காய்ந்தாரிடம்போலுங்கல்சூழ்வெற்பில்
நீடுயர்வேய்குனியப்பாய்கடுவன்நீள்கழைமேல்நிருத்தஞ்செய்யக்
2243 கூடியவேடுவர்கள்கூய்விளியாக்கைமறிக்குங்குறும்பலாவே.

கொம்பார்பூஞ்சோலைக்குறும்பலாமேவியகொல்லேற்றண்ணல்
நம்பானடிபரவுமநான்மறையான்ஞானசம்பந்தன்சொன்ன
இன்பாயபாடலிவைபத்தும்வல்லார்விரும்பிக்கேட்பார்
2244 தம்பாலதீவினைகள்போயகலும்நல்வினைகள்தளராவன்றே.

72 பந்தார்விரன்மடவாள்பாகமாநாகம்பூண்டேறதேறி
அந்தாரரவணிந்த அம்மானிடம்போலுமந்தண்சாரல்
வந்தார்மடமந்திகூத்தாடவார்பொழிலில்வண்டுபாடச்
2245 செந்தேன்தெளியொளிரத்தேமாக்கனியுதிர்க்குந்திருநணாவே.

நாட்டம்பொலிந்திலங்குநெற்றியினான்மற்றொருகைவீணையேந்தி
ஈட்டுந்துயரறுக்குமெம்மானிடம்போலுமிலைசூழ்கானில்
ஓட்டந்தருமருவிவீழும்விசைகாட்டமுந்தூழோசைச்
2246 சேட்டார்மணிகளணியுந்திரைசேர்க்குந்திருநணாவே. ௨

நன்றாங்கிசைமொழிந்துநன்னுதலாள்பாகமாய்ஞாலமேத்த,
மின்தாங்குசெஞ்சடையெம் விகிர்தர்க்கிடம்போலும்விரை
சூழ்வெற்பில், குன்றோங்கிவன்றிரைகள்மோதமயிலாலுஞ்
சாரற்செவ்வி, சென்றோங்கிவானவர்களேத்தியடிபணியுந்
2247 திருநணாவே. ௩

கையில்மழுவேந்திக்காலிற்சிலம்பணிந்துகரித்தோல்கொண்டு
மெய்யில்முழுதணிந்தவிகிர்தர்க்கிடம்போலுமிடைந்துவா
ஐயஅரனேபெருமானருளென்றென்றுதரிக்கச் [னோர்
2248 செய்யகமலம்பொழில்தேனளித்தியலுந்திருநணாவே. ச

முத்தேர்நகையாளிடமாகத்தம்மார்பில்வெண்ணூல்பூண்டு
தொத்தேர்மலர்சடையில்வைத்தாரிடம்போலுஞ்சோலைசூ
அத்தேனளியுண்களியாலிசைமுரலவாலத்தும்பி [ழ்ந்த
2249 தெத்தேயெனமுரலக்கேட்டார்வினைகெடுக்குந்திருநணாவே.

வில்லார்வரையாகமாநாகநாணாகவேடங்கொண்டு
புல்லார்புரமூன்றெரித்தார்க்கிடம்போலும்புலியுமானும்
அல்லாதசாதிகளுமங்கழல்மேற்கைகூப்பஅடியார்கூடிச்
2250 செல்லாவருநெறிக்கேசெல்லஅருள்புரியுந்திருநணாவே. சு

கானார்களிற்றுரிவைமேல்மூடியாடரவொன்றரைமேற்சாத்தி
ஊனார்தலையோட்டிலூணுகந்தான்தானுகந்தகோயிலெங்கு
நானாவிதத்தால்விரதிகள்நன்னாமமேயேத்திவாழ்த்தத் [ம்
2251 தேனார்மலர்கொண்டடியாரடிவணங்குந்திருநணாவே. எ

மன்னீரிலங்கையர்தங்கோமான்வலிதொலையவிரலாலூன்றி
முந்நீர்க்கடல்நஞ்சையுண்டார்க்கிடம்போலும்முனைசேர்சீ
அன்னீர்மைகுன்றியழலால்விழிகுறையவழியுமுன்றிற் [யம்
2252 செந்நீர்பரப்பச்சிறந்துகரியொளிக்குந்திருநணாவே. அ

மையார்மணிமிடறன் மங்கையோர்பங்குடையான்மனை
கள்தோறும், கையார்பலியேற்றகள்வனிடம்போலுங்கழல்
கள்நேடிப், பொய்யாமறையானும்பூமியளந்தானும்போற்ற
2253 மன்னிச்,செய்யாரெரியாமுருவமுறவணங்குந்திருநணாவே.

ஆடையொழித்தங்கமணேதிரிந்துண்பாலல்லல்பேசி
மூடுருவமுகந்தாருரையகற்றும்மூர்த்திகோயில்
ஓடுநதிசேருநித்திலமும்மொய்த்தகிலுங்கரையிற்சாரச்
2254 சேடர்சிறந்தேத்தத்தோன்றியொளிபெருகுந்திருநணாவே.

கல்வித்தகத்தால்திரைசூழ்கடற்காழிக்கவுணிசீரார்
நல்வித்தகத்தாலினிதுணரும்ஞானசம்பந்தனெண்ணும்
சொல்வித்தகத்தாலிறைவன்திருநணாவத்துபாடல்
2255 வல்வித்தகத்தான்மொழிவார்பழியிலரிம்மண்ணின்மேலே.

73 விளங்கியசீர்ப்பிரமனூர் வேணுபுரம்புகலிவெங்குரு
மேற்சோலே, வளங்கவருந்தோணிபுரம்பூந்தராய்சிரபுரம்
வண்புறவமண்மேல், களங்கமிலூர்சண்பைகமழ்காழிவயங்
கொச்சைகழுமலமென்றின்ன, இளங்குமரன்றன்னைப்பெற்
2256 றிமையவர்தம்பகையெறிவித்திறைவனூரே. க

திருவளருங்கழுமலமே கொச்சைதேவேந்திரனூரய
னூர்தெய்வத், தருவளரும்பொழிற்புறவஞ்சிலம்பனூர்கா
ழிதகுசண்பையொண்பா, உருவளர்வெங்குருப்புகலியோங்
குதராய்தோணிபுரமுயர்ந்ததேவர், வெருவவளர்கடல்
2257 விடமதுண்டணிகொள்கண்டத்தோன்விரும்புமூரே. உ

வாய்ந்தபுகழ்மறைவளருந் தோணிபுரம்பூந்தராய்சிலம்
பன்வாழூர், எய்ந்தபுறவந்திகழுஞ்சண்பையெழிற்காழி
யிறைகொச்சையம்பொன், வேய்ந்தமதிற்கழுமலம்விண்
ணோர்பணியமிக்கயனூரமரர்கோனூர், ஆய்ந்தகலேயார்புகலி
2258 வெங்குருவதான்நாளுமமருமூரே. ங

மாமலேயாள்கணவன்மகிழ்வெங்குருமாப்புகலிதராய்
தோணிபுரம்வான், சேமமதில்புடைதிகழுங்கழுமலமே
கொச்சைதேவேந்திரனூர்சீர்ப், பூமகனூர்பொலிவுடைய
புறவம்விறற்சிலம்பனூர்காழிசண்பை, பாமருவுகலேயெட்
2259 டெட்டுணர்ந்தவற்றின்பயன்நுகர்வோர்பாவுமூரே. ச

தரைத்தேவர்பணிசண்பைதமிழ்க்காழிவயங்கொச்சை
தயங்குபூமேல், விரைச்சேருங்கழுமலமெய்யுணர்ந்தயனூர்
விண்ணவர்தங்கோனூர்வென்றித், திரைச்சேரும்புனற்புகலி
வெங்குருச்செல்வம்பெருகுதோணிபுரஞ்சீர், உரைச்சேர்
2260 பூந்தராய்சிலம்பனூர்புறவமுலகத்திலுயர்ந்தவூரே. ரு

புண்டரிகத்தார்வயல்சூழ்புறவமிகுசிரபுரம்பூங்காழி
சண்பை, எண்டிசையோரிறைஞ்சியவெங்குருப்புகலிபூந்த
ராய்தோணிபுரஞ்சீர், வண்டமரும்பொழில்மல்குகழுமல
நற்கொச்சைவானவர்தங்கோனூர், அண்டயனூரிவையென்
2261 பாருங்கூற்றையுதைத்துகந்தஅப்பனூரே. சு

வண்மைவளர்வரத்தயனூர் வானவர்தங்கோனூர்வண்
புகலியிஞ்சி, வெண்மதிசேர்வெங்குருமிக்கோரிறைஞ்சுசண்

பைவியன்காழிகொச்சை, கண்மகிழுங்கழுமலங்கற்றோர்புக
ழுந்தோணிபுரம்பூந்தராய்சீர்ப், பண்மலியுஞ்சிரபுரம்பார்
2262 புகழ்புறவம்பால்வண்ணன்பயிலுமூரே. எ

மோடிபுறங்காக்குமூர் புறவஞ்சீர்ச்சிலம்பனூர்காழிமூ
தூர், நீடியலுஞ்சண்பைகழுமலங்கொச்சைவேணுபுரங்கம
லநீடு, கூடியயனூர்வளர்வெங்குருப்புகலிதராய்தோணிபு
ரங்கூடப்போர், தேடியுழலவுணர்பயில்திரிபுரங்கள்செற்றம
2263 லைச்சிலையனூரே. அ

இரக்கமுடையிறையவனூர்தோணிபுரம்பூந்தராய்சிலம்
பன்றன்னூர்,சிரக்கவருபுனற்புறவநின்றதவத்தயனூர்சீர்த்
தேவர்கோனூர், வரக்கரவாப்புகலிவெங்குருமாசிலாச்சண்
பைகாழிகொச்சை, அரக்கன்விறலழித்தருளிகழுமலமந்த
2264 ணர்வேதமருதவூரே. கூ

மேலோதுங்கழுமலமெய்த் தவம்வளருங்கொச்சையிந்
திரனூர்மெய்ம்மை, நூலோதுமயன்றனூர்நுண்ணறிவார்
குருப்புகலிதராய்தூநீர்மேல், சேலோடுதோணிபுரந்திகழ்
புறவஞ்சிலம்பனூர்செருச்செய்தன்று, மாலோடுமயனறி
2265 யான்வண்காழிசண்பைமண்ணோர்வாழ்த்துமூரே. க0

ஆக்கமர்சீரூர்சண்பைகாழியமர்கொச்சைகழுமலமன்பா
னூர், ஒக்கமுடைத்தோணிபுரம்பூந்தராய்சிரபுரமொண்
புறவநண்பார், பூக்கமலத்தோன்மகிழூர்புரந்தரனூர்புகலி
வெங்குருவுமென்பர், சாக்கியரோடமண்கையர்தாமறியா
2266 வகைநின்றான்தங்குமூரே. கக

அக்கரஞ்சேர்தருமனூர்புகலிதராய்தோணிபுரமணிநீர்ப்
பொய்கை, புக்கரஞ்சேர்புறவஞ்சீர்ச்சிலம்பனூர்புகழ்க்காழி
சண்பைதொல்லூர், மிக்கரஞ்சீர்க்கழுமலமேகொச்சைவயம்
வேணுபுரமயனூர்மேவிச், சக்கரஞ்சீர்த்தமிழ்விரகன்றான்
2267 சொன்னதமிழ்தரிப்போர்தவஞ்செய்தாரே. கஉ

74 பூமகனூர்புத்தேளுக்கிறைவனூர் குறைவிலாப்புகலிபூ
மேல், மாமகளூர்வெங்குருநற்றோணிபுரம்பூந்தராய்வாய்ந்த
இஞ்சிச், சேமமிகுசிரபுரஞ்சீர்ப்புறவநிறைபுகழ்ச்சண்பை

காழிகொச்சை, காமனைமுன்காய்ந்தநுதற்கண்ணவனூர்
2268 கழுமலநாங்கருதுமூரே. க

கருத்துடையமறையவர்சேர்கழுமலமெய்த்தோணிபு
ரங்கனகமாட, உருத்திகழ்வெங்குருப்புகலியோங்குதரா
யுலகாருங்கொச்சைகாழி, திருத்திகழுஞ்சிரபுரங்தேவேந்
திரனூர்செங்கமலத்தயனூர்தெய்வத், தருத்திகழும்பொ
2269 ழிற்புறவஞ்சண்பைசடைமுடியண்ணல்தங்குமூரே. உ

ஊர்மதியைக்கதுவவுயர்மதிற்சண்பையொளிமருவுகாழி
கொச்சை,கார்மலியும்பொழில்புடைசூழ்கழுமலமெய்த்தோ
ணிபுரங்கற்றோரேத்துஞ், சீர்மருவுபூந்தராய்சிரபுரமெய்ப்
புறவமயனூர்பூங்கற்பத், தார்மருவுமிந்திரனூர்புகலிவெங்
2270 குருக்கங்கைதரித்தோனூரே. ங

தரித்தமறையாளர்மிகுவெங்குருசீர்த்தோணிபுரந்தரி
யாரிஞ்சி, எரித்தவன்சேர்கழுமலமேகொச்சைபூந்தராய்
புகலியிமையோர்கோனூர், தெரித்தபுகழ்ச்சிரபுரஞ்சீர்திகழ்
காழிசண்பைசெழுமறைகளெல்லாம், விரித்தபுகழ்ப்புறவம்
2271 விரைக்கமலத்தோனூருலகில்விளங்குமூரே. ச

விளங்கயனூர்பூந்தராய்மிகுசண்பைவேணுபுரமேக
மேய்க்கும், இளங்கமுகம்பொழிற்றோணிபுரங்காழியெழிற்
புகலிபுறவமோரார், வளங்கவரும்வயற்கொச்சைவெங்குரு
மாச்சிரபுரம்வன்னஞ்சமுண்டு, களங்கமலிகளத்தவன்சீர்க்
2272 கழுமலங்காமனுடலங்காய்ந்தோனூரே. ரு

காய்ந்துவருகாலனையன்றுதைத்தவனூர்கழுமலமாத்
தோணிபுரஞ்சீர், ஏய்ந்தவெங்குருப்புகலியிந்திரனூரிருங்
கமலத்தயனூரின்பம், வாய்ந்தபுறவந்திகழுஞ்சிரபுரம்பூந்த
ராய்கொச்சைகாழிசண்பை, சேந்தனைமுன்பயந்துலகில்
2273 தேவர்கள்தம்பகைகெடுத்தோன்திகழுமூரே. சு

திகழ்மாடமலிசண்பைபூந்தராய்பிரமனூர்காழிதேசார்,
மிகுதோணிபுரந்திகழும் வேணுபுரம்வயங்கொச்சைபுறவம்
விண்ணோர், புகழ்புகலிகழுமலஞ்சீர்ச்சிரபுரம்வெங்குரு
வெம்போர்மகிடற்செற்று, நிகழ்நீலிநின்மலன்றன்னடி
2274 யிணைகள்பணிந்துலகில்நின்றவூரே. எ

நின்றமதில்சூழ்தருவெங்குருத்தோணிபுரநிகழும்வே
ணுமன்றில், ஒன்றுகழுமலங்கொச்சையுயர்காழிசண்பை
வளர்புறவமோடி, சென்றுபுறங்காக்குமூர்சிரபுரம்பூந்தராய்
புகலிதேவர்கோனூர், வென்றிமலிபிரமபுரம்பூதங்கள்தாங்
2275 காக்கமிக்கவூரே. அ

மிக்ககமலத்தயனூர்விளங்குபுறவஞ்சண்பைகாழிகொச்
சை, தொக்கபொழிற்கழுமலந்தூத்தோணிபுரம்பூந்தராய்
சிலம்பன்சேரூர், மைக்கொள்பொழில்வேணுபுரமதிற்புகலி
வெங்குருவல்லரக்கன்திண்டோள், ஒக்கஇருபதுமுடிக
2276 ளொருபதுமீடழித்துகந்தஎம்மானூரே. கூ

எம்மான்சேர்வெங்குருச்சீர்ச்சிலம்பனூர்கழுமலநற்புக
லியென்றும், பொய்ம்மாண்பிலோர்புறவங்கொச்சைபுரந்
தரனூர்நற்றோணிபுரம்போர்க், கைம்மாவையுரிசெய்தோன்
காழியயனூர்தராய்சண்பைகாரின், மெய்ம்மால்பூமகனுண
2277 ராவகைதழலாய்விளங்கியஎம்மிறைவனூரே. க0

இறைவனமர்சண்பையெழிற்புறவமயனூரிமையோர்க்
கதிபன்சேரூர், குறைவில்புகழ்ப்புகலிவெங்குருத்தோணி
புரங்குணமார்பூந்தராய்நீர்ச், சிறைமலிநற்சிரபுரஞ்சீர்க்காழி
வளர்கொச்சைகழுமலந்தேசின்றிப், பறிதலையோடமண்
2278 கையர்சாக்கியர்கள்பரிசறியாஅம்மானூரே. கக

அம்மான்சேர்கழுமலமாச்சிரபுரம்வெங்குருக்கொச்சை
புறவமஞ்சீர், மெய்ம்மானத்தொண்புகலிமிகுகாழிதோணி
புரந்தேவர்கோனூர், அம்மான்மன்னுயர்சண்பைதராயய
னூர்வழிமுடக்குமாவின்பாச்சல், தம்மானென்றியஞான
2279 சம்பந்தன்தமிழ்கற்போர்தக்கோர்தாமே. கஉ

75 **விண்**ணியங்குமதிக்கண்ணியான்விரியுஞ்சடைப்
பெண்ணயங்கொள்திருமேனியான்பெருமானனற்
கண்ணயங்கொள்திருநெற்றியான்கலிக்காழியுள்
2280 மண்ணயங்கொள்மறையாளரேத்துமலர்ப்பாதனே. க

வலியகாலனுயிர்வீட்டினன்மடவாளொடும்
பலிவிரும்பியதொர்கையினன்பரமேட்டியான்
கலியைவென்றமறையாளர்தங்கலிக்காழியுள்
2281 நலியவந்தவினைதீர்த்துகந்தஎந்நம்பனே. ௨

சுற்றலாநற்புலித்தோலசைத்தயன்வெண்டலைத்
துற்றலாயதொருகொள்கையான்சுடுநீற்றினன்
கற்றல்கேட்டலுடையார்கள்வாழ்கலிக்காழியுள்
2282 மற்றயங்குதிரள்தோளெம்மைந்தனவனல்லனே. ௩

பல்லயங்குதலையேந்தினன்படுகானிடை
மல்லயங்குதிரள்தோள்களாரநடமாடியுங்
கல்லயங்குதிரைசூழநீள்கலிக்காழியுள்
2283 தொல்லயங்குபுகழ்பேணநின்றசுடர்வண்ணனே. ௪

தூநயங்கொள்திருமேனியிற்பொடிப்பூசிப்போய்
நாநயங்கொள்மறையோதிமாதொருபாகமாக்
கானயங்கொள்புனல்வாசமார்கலிக்காழியுள்
2284 தேனயங்கொள்முடிஆனைந்தாடியசெல்வனே. ௫

சுழியிலங்கும்புனற்கங்கையாள்சடையாகவே
மொழியிலங்கும்மடமங்கைபாகமுகந்தவன்
கழியிலங்குங்கடல்சூழுந்தண்கலிக்காழியுள்
2285 பழியிலங்குந்துயரொன்றிலாப்பரமேட்டியே. ௬

முடியிலங்குமுயர்சிந்தையான்முனிவர்தொழ
அடியிலங்குங்கழலார்க்கவேயனலேந்தியுங்
கடியிலங்கும்பொழில்சூழுந்தண்கலிக்காழியுள்
2286 கொடியிலங்கும்மிடையாளொடுங்குடிகொண்டதே. ௭

வல்லரக்கன்வரைபேர்க்கவந்தவன்தோள்முடி
கல்லரக்கிவ்விறல்வாட்டினன்கலிக்காழியுள்
நல்லொருக்கியதொர்சிந்தையார்மலர்தூவவே
2287 தொல்லிருக்கும்மறையேத்துகந்துடன்வாழுமே. ௮

மருவுநான்மறையோனுமாமணிவண்ணனும்
இருவர்கூடியிசைந்தேத்தவேயெரியான்றனூர்
வெருவநின்றதிரையோதம்வார்வியன்முத்தவை
2288 கருவையார்வயற்சங்குசேர்கலிக்காழியே. ௯

நன்றியொன்றுமுணராதவன்சமண்சாக்கியர்
அன்றியங்கவர்சொன்னசொல்லவைகொள்கிலான்
கன்றுமேதியிளங்கானல்வாழ்கலிக்காழியுள்
2289 வென்றிசேர்வியன்கோயில்கொண்டவிடையாளனே. க0

கண்ணுமூன்றுமுடையாதிவாழ்கலிக்காழியுள்
அண்ணலந்தண்ணருள்பேணிஞானசம்பந்தன்சொல்
வண்ணமூன்றுந்தமிழில்தேரிந்திசைபாடுவார்
2290 விண்ணுமண்ணும்விரிகின்றதொல்புகழாளரே. கக

76 வாடியவெண்டலைமாலைசூடி மயங்கிருள்
நீடுயர்கொள்ளிவிளக்குமாகவிவந்தெரி
ஆடியஎம்பெருமானகத்தியான்பள்ளியைப்
2291 பாடியசிந்தையினார்கட்கில்லையாம்பாவமே. க

துன்னங்கொண்டவுடையான்துதைந்தவெண்ணீற்றினன்
மன்னுங்கொன்றைமதமத்தஞ்சூடினன்மாநகர்
அன்னந்தங்கும்பொழில்சூழகத்தியான்பள்ளியை
2292 உன்னஞ்செய்தமனத்தார்கள்தம்வினையோடுமே. உ

உடுத்ததுவும்புலித்தோல்பலிதிரிந்துண்பதுங்
கடுத்துவந்தகழற்காலன்றன்னையுங்காலினால்
அடர்த்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
2293 தொடுத்ததுவுஞ்சரமுப்புரந்துகளாகவே. ங

காய்ந்ததுவுமன்றுகாமனைநெற்றிக்கண்ணினால்
பாய்ந்ததுவுங்கழற்காலனைப்பண்ணினன்மறை
ஆய்ந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
2294 ஏய்ந்ததுவும்இமவான்மகளொருபாகமே. ச

போர்த்ததுவுங்கரியின்னுரிபுலித்தோலுடை
கூர்த்ததோர்வெண்மழுவேந்திக்கோளரவம்மரைக்
கார்த்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
2295 பார்த்ததுவும்அரணம்படஎரிமூழ்கவே. ரு

தெரிந்ததுவுங்கணையொன்றுமுப்புரஞ்சென்றுடன்
எரிந்ததுவுமுன்னெழிலார்மலருறைவான்றலை
அரிந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
2296 புரிந்ததுவுமுமையாளோர்பாகம்புனைதலே. சா

ஓதியெல்லாமுலகுக்கோரொண்பொருளாகிமெய்ச்
சோதியென்றுதொழுவாரவர்துயர்தீர்த்திடும்
ஆதியெங்கள்பெருமானகத்தியான்பள்ளியை
2297 நீதியால்தொழுவாரவர்வினைநீங்குமே. எ

செறுத்ததுவுந்தக்கன்வேள்வியைத்திருந்தார்புரம்
ஒறுத்தவும்ஒளிமாமலருறைவான்சிரம்
அறுத்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
2298 இறுத்ததுவுமரக்கன்றன்தோள்களிருபதே. அ

சிரமுநல்லமதிமத்தமுந்திகழ்கொன்றையும்
அரவமல்குஞ்சடையானகத்தியான்பள்ளியைப்
பிரமனோடுதிருமாலுந்தேடியபெற்றிமை
2299 பரவவல்லாரவர்தங்கள்மேல்வினைபாறுமே. கூ

செந்துவராடையினுரும்வெற்றரையேதிரி
புந்தியிலார்களும்பேசும்பேச்சவைபொய்ம்மொழி
அந்தணனெங்கள்பிரானகத்தியான்பள்ளியைச்
2300 சிந்திமின்நும்வினையானவைசிதைந்தோடுமே. க0

ஞாலமல்குந்தமிழ்ஞானசம்பந்தன்மாமயில்
ஆலுஞ்சோலைபுடைசூழகத்தியான்பள்ளியுள்
சூலநல்லபடையானடிதொழுதேத்திய
2301 மாலைவல்லாரவர்தங்கள்மேல்வினைமாயுமே. கக

77 பீடினாற்பெரியோர்களும்பேதைமைகெடத்தீதிலா
வீடினாலுயர்ந்தார்களும்வீடிலாரிளவெண்மதி
சூடினார்மறைபாடினார்சுடலைநீறணிந்தாரழல்
2302 ஆடினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. க

இலையினார்சூலமேறுகந்தேறியேயிமையோர்தொழ
நிலையினாலொருகாலுறச்சிலையினால்மதிலெய்தவன்
அலையினார்புனல்சூடிய அண்ணலாரறையணிநல்லூர்
2303 தலையினாற்றொழுதோங்குவார்நீங்குவார்தடுமாற்றமே. உ

என்பினார்கனல்சூலத்தாரிலங்குமாமதியுச்சியான்
பின்பினாற்பிறங்குஞ்சடைப்பிஞ்ஞகன்பிறப்பிலியென்று
முன்பினார்மூவர்தாந்தொழுமுக்கண்மூர்த்திதன்தாள்களுக்
2304 கன்பினாரறையணிநல்லூரங்கையாற்றொழுவார்களே. ௩

விரவுநீறுபொன்மார்பினில்விளங்கப்பூசியவேதியன்
உரவுநஞ்சமுதாகவுண்டுறுதிபேணுவதன்றியும்
அரவுநீள்சடைக்கண்ணியாரண்ணலாரறையணிநல்லூர்
2305 பரவுவார்பழிநீங்கிடப்பறையுந்தாஞ்செய்தபாவமே. ச

தீயினார்திகழ்மேனியாய்தேவர்தாந்தொழுதேவன்நீ
ஆயினாய்கொன்றையாயனலங்கையாயறையணிநல்லூர்
மேயினார்தமதொல்வினைவீட்டினாய்வெய்யகாலனைப்
2306 பாயினாயதிர்கழலினாய்பரமனேயடிபணிவனே. ரு

விரையினார்கொன்றைசூடியும்வேகநாகமும்வீக்கிய
அரையினாரறையணிநல்லூரண்ணலாரழகாயதோர்
நரையினார்விடையூர்தியார்நக்கனார்நறும்போதுசேர்
2307 உரையினாலுயர்ந்தார்களுமுரையினாலுயர்ந்தார்களே. சு

வீரமாகியவேதியர்வேகமாகளியானையின்
ஈரமாகியவுரிவைபோர்த்தரிவைமேற்சென்றஎம்மிறை
ஆரமாகியபாம்பினாரண்ணலாரறையணிநல்லூர்
2308 வாரமாய்நினைப்பார்கள்தம்வல்வினையவைமாயுமே. எ

தக்கனார்பெருவேள்வியைத்தகர்த்துகந்தவன்தாழ்சடை
முக்கணான்மறைபாடியமுறைமையான்முனிவர்தொழ
அக்கினோடெழிலாமைபூணண்ணலாரறையணிநல்லூர்
2309 நக்கனாரவர்சார்வலானல்குசார்விலோம்நாங்களே. அ

வெய்யநோயிலர்தீதிலர்வெறியராய்ப்பிறர்பின்செலார்
செய்வதேயலங்காரமாமிவையிவைதேறியின்புறில்
ஐயமேற்றுணுந்தொழிலாமண்ணலாரறையணிநல்லூர்ச்
2310 சைவனாரவர்சார்வலால்யாதுஞ்சார்விலோம்நாங்களே. கூ

வாக்கியஞ்சொல்லியாரொடும்வகையலாவகைசெய்யன்மின்
சாக்கியஞ்சமணென்றிவைசாரேலும்மரணம்பொடி
ஆக்கியம்மழுவாட்படையண்ணலாரறையணிநல்லூர்ப்
2311 பாக்கியங்குறையுடையீரேற்பறையுமாஞ்செய்தபாவமே.

கழியுலாங்கடற்கானல்சூழ்கழுமலமமர்தொல்பதிப்
பழியிலாமறைஞானசம்பந்தன்நல்லதோர்பண்பினார் [முக்
மொழியினாலறையணிநல்லூர்முக்கண்மூர்த்திதன்தாள்தொ
2312 கெழுவினாரவர்தம்மொடுங்கேடில்வாழ்பதிபெறுவரே. கக

78 ஒளிரிளம்பிறைசென்னிமேலுடையர்கோவணஆடையர்
குளிரிளம்மழைதவழ்பொழிற்கோலநீர்மல்குகாவிரி
நளிரிளம்புனல்வார்துறைநங்கைகங்கையைநண்ணினர்
2313 மிளிரிளம்பொறியரவினர்மேயதுவிளநகரதே. க

அக்கரவ்வணிகலனென அதனொடார்த்ததோராமைபூண்
டுக்கவர்சுடுநீறணிந்தொளிமல்குபுனற்காவிரிப்
புக்கவர்துயர்கெடுகெனப்பூசுவெண்பொடிமேவிய
2314 மிக்கவர்வழிபாடுசெய்விளநகரவர்மேயதே. உ

வாளிசேரடங்கார்மதில்தொலையநூறியவம்பின்வேய்த்
தோளிபாகமமர்ந்தவருயர்ந்ததொல்கடல்நஞ்சுடன்
காளமல்கியகண்டத்தர்கதிர்விரிசுடர்முடியினர்
2315 மீளியேறுகந்தேறினர்மேயதுவிளநகரதே. ங

கால்விளங்கெரிகழலினர்கையிலங்கியவேலினர்
நூல்விளங்கியமார்பினர்நோயிலார்பிறப்பும்மிலார்
மால்விளங்கொளிமல்கியமாசிலாமணிமிடறினர்
2316 மேல்விளங்குவெண்பிறையினர்மேயதுவிளநகரதே. ச

பன்னினர்மறைபாடினர்பாயசீர்ப்பழங்காவிரித்
துன்னுதண்டுறைமுன்னினர்தூநெறிபெறுவாரெனச்
சென்னிதிங்களைப்பொங்கராக்கங்கையோடுடன்சேர்த்தினர்
2317 மின்னுபொன்புரிநூலினர்மேயதுவிளநகரதே. ரு

தேவரும்மமரர்களுந்திசைகள்மேலுளதெய்வமும்
யாவரும்மறியாததோரமைதியாற்றழலுருவினர்
மூவரும்மிவரேன்னவும்முதல்வரும்மிவரேன்னவும்
2318 மேவரும்பொருளாயினர்மேயதுவிளநகரதே. சு

சொற்றரும்மறைபாடினர்சுடர்விடுஞ்சடைமுடியினர்
கற்றருவ்வடங்கையினர்காவிரித்துறைகாட்டினர்
மற்றருந்திரள்தோளினர்மாசில்வெண்பொடிப்பூசினர்
2319 விற்றரும்மணிமிடறினர்மேயதுவிளநகரதே. எ

படர்தருஞ்சடைமுடியினர்பைங்கழலடிபரவுவார்
அடர்தரும்பிணிகெடுகென அருளுவாரரவரையினர்
விடர்தரும்மணிமிடறினர்மின்னுபொன்புரிநூலினர்
2320 மிடறரும்படைமழுவினர்மேயதுவிளநகரதே. அ

கையிலங்கியவேலினர்தோலினர்கரிகாலினர்
பையிலங்கரவல்குலாள்பாகமாகியபரமனர்
மையிலங்கொளிமல்கியமாசிலாமணிமிடறினர்
2321 மெய்யிலங்குவெண்ணீற்றினர்மேயதுவிளநகரதே. ௯

உள்ளதன்றனைக்காண்பன்கீழென்றமாமணிவண்ணனும்
உள்ளதன்றனைக்காண்பன்மேலென்றமாமலரண்ணலும்
உள்ளதன்றனைக்கண்டிலாரொளியார்தருஞ்சடைமுடியின்மேல்
2322 உள்ளதன்றனைக்கண்டிலாவொளியார்விளநகர்மேயதே. ௧0

மென்சிறைவண்டியாழ்முரல்விளநகர்த்துறைமேவிய
நன்பிறைநுதலண்ணலைச்சண்பைஞானசம்பந்தன்சீர்
இன்புறுந்தமிழாற்சொன்னவத்துவார்வினைநீங்கிப்போய்த்
2323 துன்புறுந்துயரம்மிலாத்தூநெறிபெறுவார்களே. ௧௧

79 பவனமாய்ச்சோடையாய்நாவெழாப்பஞ்சுதோய்ச்சட்டவுண்டு
சிவனதாள்சிந்தியாப்பேதைமார்போலநீவெள்கினுயே
கவனமாய்ப்பாய்வதோரேறுகந்தேறியகாளகண்டன்
2324 அவனதாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்சே.

தந்தையார்போயினர்தாயரும்போயினர்தாமும்போவார், கொந்தவேல்கொண்டொருகூற்றத்தார்பார்க்கின்றார்கொண்டு போவார், எந்தநாள்வாழ்வதற்கேமனம்வைத்தியாலேழை நெஞ்சே, அந்தணரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்
2325 நெஞ்சே. ௨

பிணங்குடர்தோல்நரம்பென்புசேராக்கைதான்நிலாயதன்றால்
குணங்களார்க்கல்லதுகுற்றநீங்காதெனக்குலுங்கினயே [ம்
வணங்குவார்வானவர்தானவர்வைகலும்மனங்கொடேத்து
2326 அணங்கனூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்சே.

நீதியால்வாழ்கிலைநாள்சேலாநின்றனநித்தநோய்கள்
வாதியாஆதலால்நாளுநாளின்பமேமருவினயே
சாதியார்கின்னரர்தருமனும்வருணனுமேத்துமுக்கண்
2327 ஆதியாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்சே.

பிறவியால்வருவனகேடுளஆதலாற்பெரியஇன்பத்
துறவியார்க்கல்லதுதுன்பநீங்காதெனத்தூங்கினயே
மறவல்நீமார்க்கமேநண்ணினய்தீர்த்தநீர்மல்குசென்னி
2328 அறவனூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்சே.

சேடிகோள்நோயாக்கையம்பாம்பின்வாய்த்தேரையாய்ச்
சிறுபறவை, கடிகோள்பூந்தேன்சுவைத்தின்புறலாமென்று
கருதினாயே,முடிகளால்வானவர்முன்பணிந்தன்பராயேத்து
முக்கண், அடிகளாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்
2329 சல்நெஞ்சே. சு

ஏறுமால்யானையேசிவிகையந்தளகமீச்சோப்பிவட்டில்
மாறிவாழுடம்பினார்படுவதோர்நடலைக்குமயங்கினாயே
மாறிலாவனமுலைமங்கையோர்பங்கினர்மதியம்வைத்த
2330 ஆறனாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்சே.

என்பினாற்கழிநிரைத்திறைச்சிமண்சுவரெறிந்திதுநம்மில்
லம், புன்புலால்நாறுதோல்போர்த்துப்பொல்லாமையான்
முகடுகோண்டு, முன்பெலாமோன்பதுவாய்தலார்குரம்பை
யின்மூழ்கிடாதே, அன்பனாரூர்தொழுதுய்யலாம்மையல்
2331 கொண்டஞ்சல்நெஞ்சே. அ

தந்தைதாய்தன்னுடன்தோன்றினார்புத்திரர்தாரமென்னும்
பந்தநீங்காதவர்க்குய்ந்துபோக்கில்லெனப்பற்றினாயே
வெந்தநீறாடியாராதியார்சோதியார்வேதகீதர் சே.
2332 எந்தையாரூர்தொழுதுய்யலாமையல்கொண்டஞ்சல்நெஞ்

நெடியாமல்பிரமனும் நீண்டுமண்ணிடந்தின்னம்நேடிக்
காணாப், படியனார்பவளம்போலுருவனார்பனிவளர்மலையாள்
பாக, வடிவனார்மதிபொதிசடையனார்மணியணிகண்டத்
தெண்டோள், அடிகளாரூர்தொழுதுய்யலாம்மையல்கொண்
2333 டஞ்சல்நெஞ்சே. க0

பல்விதழ்மாதவியல்லிவண்டியாழ்செயுங்காழியூரன்
நல்லவேநல்லவேசொல்லியஞானசம்பந்தனாரூர்
எல்லியம்போதெரியாடுமெம்மீசனையேத்துபாடல்
2334 சொல்லவேவல்லவர்தீதிலாரோதநீர்வையகத்தே. கக

80 வரியமறையார்பிறையார்மலையோர்சிலையாவணக்கி
எரியமதில்களெய்தாரெறியுமுசலமுடையார்
கரியமிடறுமுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
2335 பெரியவிடைமேல்வருவாரவரெம்பெருமானடிகளே. க

மங்கைமணந்தமார்பர்மழுவாள்வலனொன்றேந்திக்
கங்கைசடையிற்கரந்தார்கடவூர்மயானமமர்ந்தார்
செங்கண்வெள்ளேறேறிச்செல்வஞ்செய்யாவருவார்
2336 அங்கையேறியமறியாரவரெம்பெருமானடிகளே. உ

ஈடலிடபமிசையவேறிமழுவொன்றேந்திக்
காடதிடமாவுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
பாடலிசைகொள்கருவிபடுதம்பலவும்பயில்வார்
2337 ஆடலரவமுடையாரவரெம்பெருமானடிகளே. ங

இறைநின்றிலங்குவளையாளிளையாளொருபாலுடையார்
மறைநின்றிலங்குமொழியார்மலையார்மனத்தின்மிசையார்
கறைநின்றிலங்குபொழில்சூழ்கடவூர்மயானமமர்ந்தார்
2338 பிறைநின்றிலங்குசடையாரவரெம்பெருமானடிகளே. ச

வெள்ளையெருத்தின்மிசையார்விரிதோடொருகாதிலங்கத்
துள்ளுமிளமான்மறியார்சுடர்பொற்சடைகள்துலங்கக்
கள்ளநகுவெண்டலையார்கடவூர்மயானமமர்ந்தார்
2339 பிள்ளைமதியமுடையாரவரெம்பெருமானடிகளே. ரு

பொன்றாதுதிருமணங்கொள்புனைபூங்கொன்றைபுனைந்தார்
ஒன்றாவெள்ளேறுயர்த்ததுடையாரதுவேயூர்வார்
கன்றாவினஞ்சூழ்புறவிற்கடவூர்மயானமமர்ந்தார்
2340 பின்றாழ்சடையாரொருவரவரெம்பெருமானடிகளே. சு

பாசமானகளைவார்பரிவார்க்கமுதமனையார்
ஆசைதீரக்கொடுப்பாரலங்கல்விடைமேல்வருவார்
காசைமலர்போல்மிடற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
2341 பேசவருவாரொருவரவரெம்பெருமானடிகளே. எ

செற்றஅரக்கனலறத்திகழ்சேவடிமெல்விரலாற்
கற்குன்றடர்த்தபெருமான்கடவூர்மயானமமர்ந்தார்
மற்றொன்றிணையில்வலியமாசில்வெள்ளிமலைபோல்
2342 பெற்றொன்றேறிவருவாரவரெம்பெருமானடிகளே. அ

வருமாகரியினுரியார்வளர்புன்சடையார்விடையார்
கருமானுரிதோலுடையார்கடவூர்மயானமமர்ந்தார்
திருமாலொடுநான்முகனுந்தேர்ந்துங்காணமுன்னொண்ணாப்
2343 பெருமானெனவும்வருவாரவரெம்பெருமானடிகளே. கூ

தூயவிடைமேல்வருவார் துன்னாருடையமதில்கள்
காயவேவச்செற்றார்கடவூர்மயானமமர்ந்தார்
தீயகருமஞ்சொல்லுஞ்சிறுபுன்தேரமணர்
2344 பேய்பேயென்னவருவாரவரெம்பெருமானடிகளே. ௧௦

மரவம்பொழில்சூழ்கடவூர்மன்னுமயானமமர்ந்த
அரவமசைத்தபெருமானகலமறியலாகப்
பரவுமுறையேபயிலும்பந்தன்செஞ்சொல்மாலை
2345 இரவும்பகலும்பரவிநினைவார்வினைகளிலரே. ௧௧

81 **பூ**தத்தின்படையினீர்பூங்கொன்றைத்தாரினீர்
ஓதத்தினொலியோடும்பர்வானவர்புகுந்து
வேதத்தினிசைபாடிவிரைமலர்கள்சொரிந்தேத்தும்
2346 பாதத்தீர்வேணுபுரம்பதியாகக்கொண்டீரே. ௧

சுடுகாடுமேவினீர்துன்னம்பெய்கோவணந்தோல்
உடையாடையதுகொண்டீருமையாளையொருபாகம்
அடையாளமதுகொண்டீரங்கையினிற்பரசுஎனும்
2347 படையாள்வீர்வேணுபுரம்பதியாகக்கொண்டீரே. ௨

கங்கைசேர்சடைமுடியீர்காலனைமுன்செற்றுகந்தீர்
திங்களோடிளஅரவந்திகழ்சென்னிவைத்துகந்தீர்
மங்கையோர்கூறுடையீர்மறையோர்கள்நிறைந்தேத்தப்
2348 பங்கயஞ்சேர்வேணுபுரம்பதியாகக்கொண்டீரே. ௩

நீர்கொண்டசடைமுடிமேல்நீள்மதியம்பாம்பினொடும்
ஏர்கொண்டகொன்றையினோடெழில்மத்தமிலங்கவே
சீர்கொண்டமாளிகைமேற்சேயிழையார்வாழ்த்துரைப்பக்
2349 கார்கொண்டவேணுபுரம்பதியாகக்கலந்தீரே. ௪

ஆலைசேர்தண்கழனியழகாகநறவுண்டு
சோலைசேர்வண்டினங்களிசைபாடத்தூமொழியார்
காலையேபுகுந்திறைஞ்சிக்கைதொழமெய்மாதினொடும்
2350 பாலையாழ்வேணுபுரம்பதியாகக்கொண்டீரே. ௫

மணிமல்குமால்வரைமேல்மாதினொடுமகிழ்ந்திருந்தீர்
துணிமல்குகோவணத்தீர்சுடுகாட்டிலாட்டுகந்தீர்
பணிமல்குமறையோர்கள்பரிந்திறைஞ்சவேணுபுரத்
2351 தணிமல்குகோயிலேகோயிலாகஅமர்ந்தீரே. ௬

நீலஞ்சேர்மிடற்றினீர்நீண்டசெஞ்சடையினீர்
கோலஞ்சேர்விடையினீர்கொடுங்காலன்றனைச்செற்றீர்
ஆலஞ்சேர்கழனியழகார்வேணுபுரமமருங்
2352 கோலஞ்சேர்கோயிலேகோயிலாக்கொண்டீரே. ௭

இரைமண்டிச்சங்கேறுங்கடல்சூழ்தென்னிலங்கையர்கோன்
விரைமண்டுமுடிநெரியவிரல்வைத்தீர்வரைதன்னிற்
கரைமண்டிப்பேரோதங்கலங்கெற்றுங்கடற்கவினார்
2353 விரைமண்டுவேணுபுரமேயமர்ந்துமிக்கீரே. ௮

தீயோம்புமறைவாணர்க்காதியாந்திசைமுகன்மால்
போயோங்கியிழிந்தாரும்போற்றரியதிருவடியீர்
பாயோங்குமரக்கலங்கள்படுதிரையால்மொத்துண்டு
2354 சேயோங்குவேணுபுரஞ்செழும்பதியாத்திகழ்ந்தீரே. ௯

நிலையார்ந்தவுண்டியினர்நெடுங்குண்டர்சாக்கியர்கள்
புலையானாரறவுரையைப்போற்றாதுன்பொன்னடியே
நிலையாகப்பேணிநீசரணென்றார்தமையென்றும்
2355 விலையாகஆட்கொண்டுவேணுபுரம்விரும்பினையே. ௧௦, ௧௧

82 பண்ணிலாவியமொழியுமைபங்கனெம்பெருமான்
விண்ணில்வானவர்கோன்விமலன்விடையூர்தி
தெண்ணிலாமதிதவழ்தருமாளிகைத்தேவூர்
2356 அண்ணல்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. ௧

ஓதிமண்டலத்தோர்முழுதுய்யவெற்பேறு
சோதிவானவன்துதிசெயமகிழ்ந்தவன்தூநீர்த்
தீதில்பங்கயந்தெரிவையர்முகமலர்தேவூர்
2357 ஆதிசேவடியடைந்தனமல்லலொன்றிலமே. ௨

மறைகளான்மிகவழிபடுமாணியைக்கொல்வான்
கறுவுகொண்டவக்காலனைக்காய்ந்தவெங்கடவுள்
செறுவில்வாளைகள்சேலவைபொருவயல்தேவூர்
2358 அறவன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. ௩

முத்தன்சில்பலிக்கூர்தொறும்முறைமுறைதிரியும்
பித்தன்செஞ்சடைப்பிஞ்ஞகன்றன்னடியார்கள்
சித்தன்மாளிகைசெழுமதிதவழ்பொழில்தேவூர்
2359 அத்தன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. ௪

பாடுவாரிசைபல்பொருட்பயனுகந்தன்பால்
கூடுவார்துணைக்கொண்டதம்பற்றறப்பற்றித்
தேடுவார்பொருளானவன்செறிபொழில்தேவூர்
2360 ஆடுவானடியடைந்தனமல்லலொன்றிலமே. ௫

பொங்குபூண்முலைப்புரிகுழல்வரிவளைப்பொருப்பின்
மங்கைபங்கினன்கங்கையைவளர்சடைவைத்தான்
திங்கள்சூடியதீநிறக்கடவுள்தென்தேவூர்
2361 அங்கணன்றனையடைந்தனமல்லலொன்றிலமே. ௬

வன்புயத்தவத்தானவர்புரங்களையெரியத்
தன்புயத்துறத்தடவரைவளைத்தவன்தக்க
தேன்தமிழ்க்கலைதெரிந்தவர்பொருந்தியதேவூர்
2362 அன்பன்சேவடியடைந்தனமல்லலொன்றிலமே. ௭

தருவுயர்ந்தவெற்பெடுத்தஅத்தசமுகன்நெரிந்து
வெருவவூன்றியதிருவிரல்நெகிழ்த்துவாள்பணித்தான்
தெருவுதோறுநற்றென்றல்வந்துலவியதேவூர்
2363 அரவுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே. ௮

முந்திக்கண்ணனுநான்முகனும்மவர்காணு
எந்தைதிண்டிறலிருங்களிறுரித்தஎம்பெருமான்
செந்தினத்திசையறுபதமுரல்திருத்தேவூர்
2364 அந்திவண்ணனையடைந்தனமல்லலொன்றிலமே. ௯

பாறுபுத்தருந்தவமணிசமணரும்பலநாள்
கூறிவைத்ததோர்குறியினைப்பிழையெனக்கொண்டு
தேறிமிக்கநஞ்செஞ்சடைக்கடவுள்தென்தேவூர்
2365 ஆறுசூடியையடைந்தனமல்லலொன்றிலமே. ௰

அல்லலின்றிவிண்ணுள்வர்கள்காழியர்க்கதிபன்
நல்லசெந்தமிழ்வல்லவன்ஞானசம்பந்தன்
எல்லையில்புகழ்மல்கியஎழில்வளர்தேவூர்த்
2366 தொல்லைநம்பனைச்சொல்லியபத்தும்வல்லாரே. ௧௧

83 நீலநன்மாமிடற்றனிறைவன்சினத்தநெடுமாவுரித்தநிக ரில், சேலனகண்ணிவண்ணமொருகூறுருக்கொள்திகழ்தே வன்மேவுபதிதான், வேலனகண்ணிமார்கள்விளையாடுமோ சைவிழவோசைவேதவொலியின், சாலநல்வேலையோசைத
2367 ருமாடவீதிகொடியாடுகொச்சைவயமே. ௧

விடையுடையப்பனொப்பில்நடமாடவல்லவிகிர்தத்திருக்
கொள்விமலன், சடையிடைவெள்ளெருக்கமலர்கங்கைதிங்
கள்தகவைத்தசோதிபதிதான், மடையிடையன்னமெங்கு
நிறையப்பரந்துகமலத்துவைகும்வயல்சூழ், கொடையுடை
வண்கையாளர்மறையோர்களென்றும்வளர்கின்றகொச்சை
2368 வயமே. உ

படஅரவாடுமுன்கையுடையானிடும்பைகளைவிக்குமெங்
கள்பரமன், இடமுடைவெண்டலைக்கைபலிகொள்ளுமின்ப
னிடமாயவேர்கொள்பதிதான், நடமிடமஞ்ஞைவண்டுமது
வுண்டுபாடுநளிர்சோலைகோலுகனகக், குடமிடுகூடமேறி
2369 வளர்பூவைநல்லமறையோதுகொச்சைவயமே. ௩

எண்டிசைபாலரெங்குமிகவிப்புகுந்துமுயல்வித்தசிந்தை
முடுகிப், பண்டொளிதீபமாலையிடுதூபமோடுபணிவுற்றபா
தர்பதிதான், மண்டியவண்டன்மிண்டிவருநீரபொன்னி
வயல்பாயவாளைகுழுமிக், குண்டகழ்பாயுமோசைபடைநீட
2370 தென்னவளர்கின்றகொச்சைவயமே. ௪

பனிவளர்மாமலைக்குமருகன்குபேரனொடுதோழமைக்
கொள்பகவன், இனியனஅல்லவற்றையினிதாகநல்குமிறை
வன்னிடங்கொள்பதிதான், முனிவர்கடொக்குமிக்கமறை
யோர்களோமம்வளர்தூமமோடியணவிக், குனிமதிமூடிநீடு
2371 முயர்வான்மறைத்துநிறைகின்றகொச்சைவயமே. ரு

புலியதள்கோவணங்க ளுடையாடையாகவுடையான்
நினைக்குமளவில், நலிதருமுப்புரங்களெரிசெய்தநாதன்நலமா
விருந்தநகர்தான், கலிகெடஅந்தணாளர்கலைமேவுசிந்தையு
டையார்நிறைந்துவளரப், பொலிதருமண்டபங்களுயர்மாட
2372 நீடுவரைமேவுகொச்சைவயமே. சு, எ

மழைமுகில்போலுமேனியடல்வாளரக்கன்முடியோடு
தோள்கள்நெரியப், பிழைகெடமாமலர்ப்பொன்னடிவைத்த
பேயொடுடனாடிமேயபதிதான், இழைவளரல்குல்மாதரிசை
பாடியாடவிடுமூசலன்னகமுகின், குழைதருகண்ணிவிண்
2373 ணில்வருவார்கள்தங்களடிதேடுகொச்சைவயமே. அ

வண்டமர்பங்கயத்துவளர்வானும்வையம்முழுதுண்ட
மாலுமிகலிக், கண்டிடவொண்ணுமொன்றுகிளறிப்பறந்து

மறியாதசோதிபதிதான், நண்டுணநாரைசெந்நெல்நடுவே
யிருந்துவிரைதேரமோதுமதுவிற், புண்டரிகங்களோடுகுமு
2374 தம்மலர்ந்துவயல்மேவுகொச்சைவயமே. கூ

கையினிலுண்டுமேனியுதிர்மாசாகுண்டரிடுசீவரத்தி
னுடையார், மெய்யுரையாதவண்ணம்விளையாடவல்லவிகிர்
தத்துருக்கொள்விமலன், பையுடைநாகவாயிலெயிறாமிக்க
குரவம்பயின்றுமலரச், செய்யினில்நீலமொட்டுவிரியக்க
2375 மழ்ந்துமணநாறுகொச்சைவயமே. க0

இறைவனையொப்பிலாதவொளிமேனியானையுலகங்களேழு
முடனே, மறைதருவெள்ளமேறிவளர்கோயில்மன்னியினி
தாஇருந்தமணியைக், குறைவிலஞானமேவுகுளிர்பந்தன்
வைத்ததமிழ்மாலைபாடுமவர்போய், அறைகழலீசனாளும்
2376 நகர்மேவியென்றுமழகாஇருப்பதறிவே. கக

84 காரைகள்கூகைமுல்லைகளவாகையீகைபடர்தொடரி
கள்ளிகவினிச், சூரைகள்பம்மிவிம்முசுடுகாடமர்ந்தசிவன்
மேயசோலைநகர்தான், தேரைகளாரைசாயமிதிகொள்ள
வாளைகுதிகொள்ளவள்ளைதுவள, நாரைகளாரல்வாரிவயன்
2377 மேதிவைகுநனிபள்ளிபோலுநமர்காள். க

சடையிடைபுக்கொடுங்கியுளதங்குவெள்ளம்வளர்திங்கள்
கண்ணியயலே, இடையிடைவைத்ததொக்குமலர்தொத்து
மாலையிறைவன்னிடங்கொள்பதிதான், மடையிடைவாளை
பாயமுகிழ்வாய்நெரிந்துமணநாறுநீலமலரும், நடையுடை
யன்னம்வைகுபுனலம்படப்பைநனிபள்ளிபோலுநமர்
2378 காள். உ

பெறுமலர்கொண்டுதொண்டர்வழிபாடுசெய்யலொழிபா
டிலாதபெருமான், கறுமலர்கண்டமாகவிடமுண்டகாளை
யிடமாயகாதல்நகர்தான், வெறுமலர் தொட்டுவிட்டவிசை
போனகொம்பின்விடுபோதலர்ந்தவிரைசூழ், நறுமலரல்லி
2379 புல்லியொலிவண்டுறங்குநனிபள்ளிபோலுநமர்காள். ந

குளிர்தருகங்கைதங்குசடைமாடிலங்குதலைமாலையோடு
குலவி, ஒளிர்தருதிங்கள்சூடியுமைபாகமாகவுடையானுகந்த
நகர்தான், குளிர்தருகொம்மலோடுகுயில்பாடல்கேட்ட

பெடைவண்டுதானுமுரல, நளிர்தருசோலைமாலைநரைகுரு
2380 குவைகுநனிபள்ளிபோலுநமர்காள். ௪

தோடொருகாதனாகியொருகாதிலங்குசுரிசங்குநின்று
புரளக், காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதல்
நகர்தான், வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறி
நீர்தெளிப்பவிரலால், நாடுடனாடுசெம்மையொலிவெள்ள
2381 மாருநனிபள்ளிபோலுநமர்காள். ௫

மேகமொடோடுதிங்கள்மலராவணிந்துமலையான்மடந்
தைமணிபொன், ஆகமோர்பாகமாகஅனலாடுமெந்தை
பெருமானமர்ந்தநகர்தான், ஊகமொடாடுமந்தியுகளுஞ்
சிலம்பவகிலுந்தியொண்பொனிடறி, நாகமொடாரம்வாரு
2382 புனல்வந்தலைக்குநனிபள்ளிபோலுநமர்காள். ௬

தகைமலிதண்டுசூலமனலுமிழுநாகங்கொடுகொட்டி
வீணைமுரல, வகைமலிவன்னிகொன்றைமதமத்தம்வைத்த
பெருமானுகந்தநகர்தான், புகைமலிகந்தமாலைபுனைவார்கள்
பூசல்பணிவார்கள்பாடல்பெருகி, நகைமலிமுத்திலங்கு
2383 மணல்சூழ்கிடக்கைநனிபள்ளிபோலுநமர்காள். ௭

வலமிகுவாளன்வேலன்வளைவாளெயிற்றுமதியாஅரக்
கன்வலியோ, டுலமிகுதோள்களொல்கவிரலாலடர்த்தபெரு
மானுகந்தநகர்தான், நிலமிகுகீழுமேலுநிகராதுமில்லை
யெனநின்றநீதியதனை, நலமிகுதொண்டர்நாளுமடிபரவல்
2384 செய்யுநனிபள்ளிபோலுநமர்காள். ௮

நிறவுருவொன்றுதோன்றி யெரியொன்றிநின்றதொரு
நீர்மைசீர்மைநினையார், அறவுருவேதநாவனயனோடுமாலு
மறியாதஅண்ணல்நகர்தான், புறவிரிமுல்லைமௌவல்குளிர்
பிண்டிபுன்னைபுனைகொன்றைதுன்றுபொதுளி, நறவிரி
2385 போதுதாதுபுதுவாசநாறுநனிபள்ளிபோலுநமர்காள். ௯

அனமிகுசெல்குசோறு கொணர்கென்றுகையிலிட
வுண்டுபட்டஅமணும், மனமிகுகஞ்சிமண்டையதிலுண்டு
தொண்டர்குணமின்றிநின்றவடிவும், வினைமிகுவேதநான்
கும்விரிவித்தநாவின்விடையானுகந்தநகர்தான், நனமிகு
தொண்டர்நாளுமடிபரவல் செய்யுநனிபள்ளிபோலுநமர்
2386 காள். ௧௦

கடல்வரையோதமல்கு கழிகானல்பானல்கமழ்காழி
யென்றுகருதப், படுபொருளாறுநாலுமுளதாகவைத்தபதி
யானஞானமுனிவன், இடுபறையொன்றஅத்தர்பியன்மே
விருந்தினிசையாலுரைத்தபனுவல், கடுவிருளாடுமெந்தை
2387 நனிபள்ளியுள்கவினைகெடுதலாணைநமதே. கக

85 வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்மிகநல்லவீணை
தடவி, மாசறுதிங்கள்கங்கைமுடிமேலணிந்தெனுளமே
புகுந்தஅதனால், ஞாயிறுதிங்கள்செவ்வாய்புதன்வியாழன்
வெள்ளிசனிபாம்பிரண்டுமுடனே, ஆசறுநல்லநல்லஅவை
2388 நல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. க

என்பொடுகொம்பொடாமையிவைமார்பிலங்கஎருதேறி
யேழையுடனே, பொன்பொதிமத்தமாலைபுனல்சூடிவந்தே
னுளமேபுகுந்தஅதனால், ஒன்பதொடொன்றொடேழுபதி
னெட்டொடாறுமுடனாயநாள்களவைதாம், அன்பொடுநல்ல
2389 நல்லஅவைநல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. உ

உருவளர்பவளமேனி ஒளிநீறணிந்துவுமையோடும்
வெள்ளைவிடைமேல், முருகலர்கொன்றைதிங்கள்முடிமே
லணிந்தெனுளமேபுகுந்தஅதனால், திருமகள்கலையதூர்திசெ
யமாதுபூமிதிசைதெய்வமானபலவும், அருநெதிநல்லநல்ல
2390 அவைநல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. ௩

மதிநுதல்மங்கையோடுவடபாலிருந்துமறையோது
மெங்கள்பரமன், நதியொடுகொன்றைமாலைமுடிமேலணிந்
தெனுளமேபுகுந்தஅதனால், கோதியுறுகாலனங்கிநமனோடு
தூதர்கொடுநோய்களானபலவும், அதிகுணநல்லநல்லஅவை
2391 நல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. ச

நஞ்சணிகண்டனெந்தைமடவாள்தனோடும்விடையேறு
நங்கள்பரமன், துஞ்சிருள்வன்னிகொன்றைமுடிமேலணிந்
தெனுளமேபுகுந்தஅதனால், வெஞ்சினஅவுணரோடுமுரு
மிடியுமின்னுமிகையானபூதமவையும், அஞ்சிடும்நல்லநல்ல
2392 அவைநல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. ரு

வாள்வரியதளதாடைவரிகோவணத்தர்மடவாள்த
னோடுமுடனாய், நாண்மலர்வன்னிகொன்றைநதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தஅதனால், கோளரியுழுவையோடுகொலை

யானைகேழல்கோடுநாகமோடுகேரடி, ஆளரிநல்லநல்ல அவை
2393 நல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. சு

சேப்பிளமுலைநன்மங்கையொருபாகமாகவிடையேறு
செல்வனடைவார், ஒப்பிளமதியுமப்புமுடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தஅதனால், வெப்பொடுகுளிரும்வாதமிகை
யானபித்தும்வினையானவந்துநலியா, அப்படிநல்லநல்ல
2394 அவைநல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. எ

வேள்படவிழிசெய்தன்றுவிடைமேலிருந்துமடவாள்த
னேடுமுடனாய், வாண்மதிவன்னிகொன்றைமலர்சூடிவந்
தெனுளமேபுகுந்தஅதனால், ஏழ்கடல்சூழிலங்கைஅரை
யன்றனோடுமிடரானவந்துநலியா, ஆழ்கடல்நல்லநல்ல
2395 அவைநல்லநல்லஅடியாரவர்க்குமிகவே. அ

பலபலவேடமாகும்பரனாரிபாகன் பசுவேறுமெங்கள்
பரமன், சலமகளோடெருக்குமுடிமேலணிந்தெனுளமே
புகுந்தஅதனால், மலர்மிசையோனுமாலும்மறையோடுதே
வர்வருகாலமானபலவும், அலைகடல்மேருநல்ல அவைநல்ல
2396 நல்லஅடியாரவர்க்குமிகவே. சு

கோத்தலர்குழலியோடுவிசையற்கு நல்குகுணமாயவேட
விகிர்தன், மத்தமுமதியுநாகமுடிமே லணிந்தெனுளமே
புகுந்தஅதனால், புத்தரொடமணைவாதிலழிவிக்குமண்ணல்
திருநீறுசெம்மைதிடமே, அத்தகுநல்லநல்லஅவைநல்ல
2397 நல்லஅடியாரவர்க்குமிகவே. ௧௦

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெல்துன்னி
வளர்செம்பொனெங்கும்நிகழ, நான்முகனாதியாயபிரமா
புரத்துமறைஞானஞானமுனிவன், தானுறுகோளுநாளு
மடியாரைவந்துநலியாதவண்ணமுரைசெய், ஆனசொல்
2398 மாலையோதுமடியார்கள்வானில்அரசாள்வராணைநமதே. ௧௧

86 உரையினில்வந்தபாவமுணர்நோய்க ளும்மசெயல்
தீங்குகுற்றமுலகில், வரையினிலாமைசெய்தஅவைதீரும்
வண்ணமிகவேத்திரித்தநினைமின், வரைசிலையாகஅன்று
மதில்மூன்றெரித்துவளர்கங்குல்நங்கைவெருவத், திரை
யொலிநஞ்சமுண்டசிவன்மேயசெல்வத் திருநாரையூர்கை
2399 தொழவே. க

ஊனடைகின்றகுற்றமுதலாகியுற்றபிணிநோயொருங்கு முயரும், வானடைகின்றவெள்ளைமதிசூடுசென்னிவிதி யானவேதவிகிர்தன், கானிடையாடிபூதப்படையானியங்கு விடையானிலங்குமுடிமேல், தேனடைவண்டுபாடுசடை
2400 யண்ணல்நண்ணு திருநாரையூர்கைதொழவே. உ

ஊரிடைநின்றுவாழுமுயிர்செற்றகாலன் துயருற்றதீங்கு விரவிப், பாரிடைமெள்ளவந்துபழியுற்றவார்த்தையொழி வுற்றவண்ணமகலும், போரிடையன்றுமூன்றுமதிலெய்த ஞான்றுபுகழ்வானுளோர்கள்புணரும், தேரிடைநின்றஎந்
2401 தைபெருமானிருந்ததிருநாரையூர்கைதொழவே. ௩

தீயுறவாயஆக்கையதுபற்றிவாழும்வினைசெற்றவுற்ற வுலகின், தாயுறுதன்மையாயதலைவன்றன்நாமம்நிலையாக நின்றுமருவும், பேயுறவாயகானில்நடமாடிகோலவிடமுண் டகண்டன்முடிமேல், தேய்பிறைவைத்துகந்தசிவன்மேய
2402 செல்வத்திருநாரையூர்கைதொழவே. ௪

வசையபராதமாயவுவரோததீங்குந் தவமாயதன்மை வரும்வான், மிசையவராதியாயதிருமார்பிலங்குவிரிநூலர் விண்ணுநிலனும், இசையவராசிசொல்லஇமையோர்களேத் தியமையாதகாதலொடுசேர், திசையவர்போற்றநின்ற
2403 சிவன்மேயசெல்வத்திருநாரையூர்கைதொழவே. ௫

உறைவளருநிலாயவுயிர்நிற்கும்வண்ணமுணர்வாக்கு முண்மையுலகில், குறைவுளவாகிநின்றகுறைதீர்க்குநெஞ்சி னிறைவாற்றுநேசம்வளரும், மறைவளர்நாவன்மாவினுரி போர்த்தமெய்யனரவார்த்தஅண்ணல்கழலே, திறைவளர்தே
2404 வர்தொண்டினருள்பேணநின்றதிருநாரையூர்கைதொழவே.

தனம்வருநன்மையாகுந்தகுதிக்குழந்துவருதிக்குழன் றவுடலின், இனம்வளரைவர்செய்யும்வினயங்கள்செற்று நினைவொன்றுசிந்தைபெருகும், முனமொருகாலமூன்று புரம்வெந்துமங்கச்சரமூன்றெரிந்தஅவுணர், சினமொருகா
2405 லழித்தசிவன்மேயசெல்வத்திருநாரையூர்கைதொழவே. எ

உருவரைகின்றநாளிலுயிர்கொள்ளுங் கூற்றநனியஞ்சு மாதலுறநீர், மருமலர்தூவியென்றும்வழிபாடுசெய்ம்மி னழிபாடிலாதகடலின், அருவரைசூழிலங்கையரையன்றன்

வீரமழியத்தடக்கைமுடிகள், திருவிரல்வைத்துகந்தசிவன்
2406 மேயசெல்வத்திருநாரையூர்கைதொழவே. அ

வேறுயர்வாழ்வுதன்மைவினைதுக்க மிக்கபகைதீர்க்கு மேயவுடலில், தேறியசிந்தைவாய்மைதெளிவிக்கநின்றகா வைக்காந்துதிகழும், சேறுயர்பூவின்மேயபெருமானுமற் றைத்திருமாலுநேடஎரியாய்ச், சீறியசெம்மையாகுஞ்சிவன்
2407 மேயசெல்வத்திருநாரையூர்கைதொழவே. கூ

மிடைபடுதுன்பமின்பமுளதாக்குமுள்ளம்வெளியாக்கு முன்னியுணரும், படையொருகையிலேந்திப்பலிகொள் ளும்வண்ணமொலிபாடியாடிபெருமை, உடையினைவிட்டு ளோருமுடல்போர்த்துளோருமுரைமாயும்வண்ணமழியச், செடிபடவைத்துகந்தசிவன்மேயசெல்வத்திருநாரையூர்கை
2408 தொழவே. க0

எரியொருவண்ணமாயவுருவானை யெந்தைபெருமானை யுள்கிநினையார், திரிபுரமன்றுசெற்றசிவன்மேயசெல்வத் திருநாரையூர்கைதொழுவான், பொருபுனல்சூழ்ந்தகாழி மறைஞானபந்தனுரைமாலைபத்துமொழிவார், திருவளர் செம்மையாகியருள்பேறுமிக்க துளதென்பர்செம்மை
2409 யினரே. கக

87 நேரியனாகுமல்லனொருபாலுமேனியரியான்மு னைய வொளியான், நீரியல்காலுமாகிநிறைவானுமாகியுறுதீயுமாய நிமலன், ஊரியல்பிச்சைபேணியுலகங்களேத்தநல்குண்டு பண்டுசுடலை, நாரியொர்பாகமாகநடமாடவல்லநறையூரின்
2410 நம்பனவனே. க

இடமயிலன்னசாயல்மடமங்கைதன்கை யெதிர்நாணி பூணவரையில், கடுமயிலம்புகோத்துஎயில்செற்றுகந்துஅம ரர்க்களித்ததலைவன், மடமயிலூர்திதாதையெனநின்று தொண்டர்மனநின்றமைந்தன்மருவும், நடமயிலாலநீடு
2411 குயில்கூவுசோலைநறையூரின்நம்பனவனே. உ

சூடகமுன்கைமங்கையொருபாகமாக அருள்காரணங் கள்வருவான், ஈடகமானநோக்கியிடுபிச்சைகொண்டுபடு பிச்சனென்றுபரவத், தோடகமாயொர்காதுமொருகாதி

லங்குகுழைதாயவேழவுரியன், நாடகமாகவாடிமடவார்கள்
2412 பாடும்நறையூரின்நம்பனவனே. ௩

சாயனன்மாதொர்பாகன்விதியாயசோதிகதியாகநின்ற
கடவுள், ஆயகமென்னுள்வந்தஅருளாயசெல்வனிருளாய
கண்டனவனித், தாயெனநின்றுகந்ததலைவன்விரும்புமலை
யின்கண்வந்துதொழுவார், நாயகனென்றிறைஞ்சிமறை
2413 யோர்கள்பேணும்நறையூரின்நம்பனவனே. ௪

நெதிபடுமெய்யெமையனிறைசோலைசுற்றிநிகழம்பலத்
தின்நடுவே, அதிர்படஆடவல்லஅமரர்க்கொருத்தனெமர்
சுற்றமாயஇறைவன், மதிபடுசென்னிமன்னுசடைதாழ
வந்துவிடையேறியில்பலிகொள்வான், நதிபடவுந்திவந்து
2414 வயல்வாளைபாயும்நறையூரின்நம்பனவனே. ௫

கணிகையொர்சென்னிமன்னுமதுவன்னிகொன்றை
மலர்துன்றுசெஞ்சடையினான், பணிகையின்முன்னிலங்க
வருவேடமன்னுபலவாகிநின்றபரமன், அணுகியவேத
வோசையகலங்கமாறின்பொருளானஆதியருளான், நணுகி
2415 யதொண்டர்கூடிமலர்தூவியேத்துநறையூரின்நம்பனவனே.

ஒளிர்தருகின்றமேனியுருவெங்குமங்கமவையாரஆடல
ரவம், மிளிர்தருகையிலங்கஅனலேந்தியாடும்விகிர்தன்
விடங்கொள்மிடறன், துளிதருசோலையாலைதொழில்மேவ
வேதமெழிலாரவென்றியருளும், நளிர்மதிசேருமாடமட
2416 வார்களாருநறையூரின்நம்பனவனே. ௭

அடலெருதேறுகந்தஅதிருங்கழற்களெதிருஞ்சிலம்
பொடிசையக், கடலிடைநஞ்சமுண்டுகனிவுற்றகண்டன்
முனிவுற்றிலங்கையரையன், உடலொடுதோளனைத்துமுடி
பத்திறுத்துமிசைகேட் டிரங்கியொருவாள், நடலைகள்
2417 தீர்த்துநல்கிநமையாளவல்லநறையூரின்நம்பனவனே. ௮

குலமலர்மேவினானுமிகுமாயனானு மெதிர்கூடிநேடிநினை
வுற், றிலபலஎய்தொணாமையெரியாயுயர்ந்தபெரியானிலங்கு
சடையன், சிலபலதொண்டர்நின்றுபெருமைக்கள்பேச
வருமைத்திகழ்ந்தபொழிலின், நலமலர்சிந்தவாசமணநாறு
2418 வீதிநறையூரின்நம்பனவனே. ௯

துவருறுகின்றஆடையுடல்போர்த் துழன்றவவர்தாமு மல்லசமணும், கவருறுசிந்தையாளருரைநீத்துகந்தபெரு மான்பிறங்குசடையன், தவமலிபத்தர்சித்தர்மறையாளர் பேணமுறைமாதர்பாடிமருவும், நவமணிதுன்றுகோயி
2419 லொளிபொன்செய்மாடநறையூரின்நம்பனவனே. ௧0

கானலுலாவியோதமெதிர்மல்குகாழிமிகுபந்தன்முந்தி யுணர, ஞானமுலாவுசிந்தையடிவைத்துகந்தநறையூரின் நம்பனவனை, ஈனமிலாதவண்ணமிசையாலுரைத்ததமிழ் மாலைபத்துநினைவார், வானநிலாவவல்லர்நிலமெங்குநின்று
2420 வழிபாடுசெய்யுமிகவே. ௧௧

88 துளிமண்டியுண்டுநிறம்வந்தகண்டன்நடமன்னுதுன்னுசுடரோன் ஒளிமண்டியும்பருலகங்கடந்தவுமைபங்கனெங்களரனூர் களிமண்டுசோலைகழனிக்கலந்தகமலங்கள்தங்குமதுவில்
2421 தெளிமண்டியுண்டுசிறைவண்டுபாடுதிருமுல்லைவாயிலிதுவே.

பருவத்தில்வந்துபயனுற்றபண்பனயனைப்படைத்தபா மன், அரவத்தொடங்கமவைகட்டியெங்குமரவிக்கநின்றஅர னூர், உருவத்தின்மிக்கவொளிர்சங்கொடிப்பியவையோத மோதவெருவித், தெருவத்தில்வந்துசெழுமுத்தலைக்
2422 கொள்திருமுல்லைவாயிலிதுவே. ௨

வாராதநாடன்வருவார்தம்வில்லினுருமெல்கிநாளுமுருகில் ஆராதஇன்பனகலாதஅன்பனருள்மேவிநின்றஅரனூர் போராதசோதிபிரியாதமார்பினலர்மேவுபேதைபிரியாள்
2423 தீராதகாதனெதிநேரநீடுதிருமுல்லைவாயிலிதுவே. ௩

ஒன்றோன்றேடொன்றுமோருநான்கோடைந்துமிருமூன் றேடேழுமுடனாய், அன்றின்றேடென்றும்அறிவான வர்க்குமறியாமைநின்றஅரனூர், குன்றென்றேடொன்று குலையொன்றேடொன்று கொடியொன்றேடொன்றுகுழு மிச், சென்றென்றேடொன்றுசெறிவால்நிறைந்ததிரு
2424 முல்லைவாயிலிதுவே. ௪

கொம்பன்னமின்னினிடையாளொர் கூறன்விடைநாளு மேறுகுழகன், நம்பன்னெமன்பன்மறைநாவன்வானின் மதியேறுசென்னியரனூர், அம்பன்னவொண்கணவரா

டரங்கினணிகோபுரங்களழகார், செம்பொன்னசெவ்விதரு
2425 மாடநீடுதிருமுல்லைவாயிலிதுவே. ரு

ஊனேறவேலினுருவேறுகண்ணியொளியேறுகொண்டவொருவ
ஆனேறதேறியழகேறுநீறனரவேறுபூணுமரனூர் [ன்
மானேறுகொல்லைமயிலேறிவந்துகுயிலேறுசோலைமருவித்
2426 தேனேறுமாவின்வளமேறியாடுதிருமுல்லைவாயிலிதுவே. சு

நெஞ்சாரநீடுநினைவாரைமூடுவினைதேயநின்றநிமலன், அஞ்
சாடுசென்னியரவாடுகையனனலாடுமேனியரனூர்,மஞ்சாரு
மாடமனைதோறுமையமுளதென்றுவைகிவரினுஞ், செஞ்சா
2427 லிநெல்லின்வளர்சோறளிக்கொள் திருமுல்லைவாயிலிதுவே.

வரைவந்தெடுத்தவலிவாளரக்கன் முடிபத்துமிற்று
நெரிய, உரைவந்தபொன்னினுருவந்தமேனியுமைபங்க
னெங்களரனூர், வரைவந்தசந்தொடகிலுந்திவந்துமிளிர்
கின்றபொன்னிவடபால், திரைவந்துவந்துசெறிதேறலாடு
2428 திருமுல்லைவாயிலிதுவே. அ

மேலோடிநீடுவிளையாடல்மேவு விரிநூலன்வேதமுதல்வன்
பாலாடுமேனிகரியானுமுன்னியவர்தேடநின்றபரனூர்
காலோடுநீலமலர்துன்றிநின்றகதிரேறுசெந்நெல்வயலிற்
2429 சேலோடுவாளைகுதிகொள்ளமல்குதிருமுல்லைவாயிலிதுவே.

பனைமல்குதிண்கைமதமாவுரித்தபரமன்னநம்பனடியே
நினைவன்னசிந்தையடையாததேரமண்மாயநின்றஅரனூர்
வனைமல்குகைதைவகுளங்களெங்குமுகுளங்களெங்குநெரியச்
2430 சினைமல்குபுன்னைதிகழ்வாசநாறுதிருமுல்லைவாயிலிதுவே.

அணிகொண்டகோதையவணன்றுமேத்தஅருள்செய்
தயெந்தைமருவார், திணிகொண்டமூன்றுபுரமெய்தவில்லி
திருமுல்லைவாயிலிதன்மேல், தணிகொண்டசிந்தையவர்
காழிஞானமிகுபந்தனெண்டமிழ்களின், அணிகொண்ட
2431 பத்துமிசைபாடபத்தாகல்வானமாள்வர்மிகவே. கக

89 அறையும்பூம்புனலோடுமாடரவச்சடைதன்மேற்
பிறையுஞ்சூடுவர்மார்பிற்பெண்ணொருபாகமமர்ந்தார்
மறையினொல்லொலியோவாமந்திரவேள்வியறாத
2432 குறைவிலந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே. க

சுண்ணத்தர்தோலொடுநூல்சேர்மார்பினர்துன்னியபூதக்
கண்ணத்தர்வெங்கனலேந்திக்கங்குல்நின்றுடுவர்கேடில்
எண்ணத்தர்கேள்விநல்வேள்வியறாதவர்மாலெரியோம்பும்
2433 வண்ணத்த அந்தணர்வாழுங்கொச்சைவயமமர்ந்தாரே. உ

பாலையன்னவெண்ணீறுபூசுவர்பல்சடைதாழ
மாலையாடுவர்கீதமாமறைபாடுதல்மகிழ்வர்
வேலைமால்கடலோதம்வெண்டிரைகரைமிசைவிளங்குங்
2434 கோலமாமணிசிந்துங்கொச்சைவயமமர்ந்தாரே. ௩

கடிகொள்கூவிளமத்தம்மகழ்சடைநெடுமுடிக்கணிவர்
பொடிகள்பூசியமார்பிற்புனைவர்நன்மங்கையோர்பங்கர்
கடிகொள்நீடொலிசங்கினொலியொடுகலையொலிதுதைந்து
2435 கொடிகளோங்கியமாடக்கொச்சைவயமமர்ந்தாரே. ௪

ஆடன்மாமதியுடையாராயினபாரிடஞ்சூழ
வாடல்வெண்டலையேந்திவையகமிடுபலிக்குழல்வார்
ஆடல்மாமடமஞ்ஞையணிதிகழ்பேடையோடாடிக்
2436 கூடுதண்பொழில்சூழ்ந்தகொச்சைவயமமர்ந்தாரே. ௫

மண்டுகங்கையுமரவுமல்கியவளர்சடைதன்மேல்
துண்டவெண்பிறையணிவர்தொல்வரைவில்லதுவாக
விண்டதானவராணம்வெவ்வழலெரிகொளவிடைமேல்
2437 கொண்டகோலமதுடையார்கொச்சைவயமமர்ந்தாரே. ௬,௭

அன்றவ்வால்நிழலமர்ந்து அறவுரைநால்வர்க்கருளிப்
பொன்றினார்தலையோட்டிலுண்பதுபொருகடலிலங்கை
வென்றிவேந்தனையொல்கவூன்றியவிரலினர்வான்தோய்
2438 குன்றமன்னபொன்மாடக்கொச்சைவயமமர்ந்தாரே. ௮

சீர்கொள்மாமலரானுஞ்செங்கண்மாலென்றிவரேத்த
ஏர்கொள்வெவ்வழலாகியெங்குமுறநிமிர்ந்தாரும்
பார்கொள்விண்ணழல்கால்நீர்ப்பண்பினர்பால்மொழியோடுங்
2439 கூர்கொள்வேல்வலனேந்திக்கொச்சைவயமமர்ந்தாரே. ௯

குண்டர்வண்துவராடைபோர்த்ததொர்கொள்கையினார்கள்
மிண்டர்பேசியபேச்சுமெய்யலமையணிகண்டன்
பண்டைநம்வினைதீர்க்கும்பண்பினரொண்கொடியோடுங்
2440 கொண்டல்சேர்மணிமாடக்கொச்சைவயமமர்ந்தாரே. ௧௦

கொந்தணிபொழில்சூழ்ந்தகொச்சைவயநகர்மேய
அந்தணனடியேத்துமருமறைஞானசம்பந்தன்
சந்தமார்ந்தழகாயதண்டமிழ்மாலைவல்லோர்போய்
2441 முந்திவானவரோடும்புகவலர்முனைகெடவினையே. கக

90 எந்தையீசனெம்பெருமானேறமர்கடவுளென்றேத்திச்
சிந்தைசெய்பவர்க்கல்லாற்சென்றுகைகூடுவதன்றால்
கந்தமாமலருந்திக்கடும்புனல்நிவாமல்குகரைமேல்
2442 அந்தண்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. க

ஈரவார்சடைதன்மேலிளம்பிறையணிந்தவெம்பெருமான்
சீருஞ்செல்வமுமேத்தாச்சிதடர்கள்தொழச்செல்வதன்
வாரிமாமலருந்திவருபுனல்நிவாமல்குகரைமேல் [றால்
2443 ஆருஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. உ

பிணிகலந்தபுன்சடைமேற்பிறையணிசிவனெனப்பேணிப்
பணிகலந்துசெய்யாதபாவிகள்தொழச்செல்வதன்றால்
மணிகலந்துபொன்னுந்திவருபுனல்நிவாமல்குகரைமேல்
2444 அணிகலந்தநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. ௩

துன்னஆடையொன்றுடுத்துத்தூயவெண்ணீற்றினராகி
உன்னிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றால்
பொன்னுமாமணியுந்திப்பொருபுனல்நிவாமல்குகரைமேல்
2445 அன்னமாருநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. ச

வெருகுரிஞ்சுவெங்காட்டிலாடியவிமலனென்றுள்கி
உருகிநைபவர்க்கல்லாலொன்றுங்கைகூடுவதன்றால்
முருகுரிஞ்சுபூஞ்சோலைமொய்ம்மலர்சுமந்திழிநிவாவந்
2446 தருகுரிஞ்சுநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. ரு

உரவுநீர்ச்சடைக்கரந்தவொருவனென்றுள்குளிர்ந்தேத்திப்
பரவிநைபவர்க்கல்லாற்பரிந்துகைகூடுவதன்றால்
குரவநீடுயர்சோலைக்குளிர்புனல்நிவாமல்குகரைமேல்
2447 அரவமாருநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. சு

நீலமாமணிமிடற்றுநீறணிசிவனெனப்பேணும்
சீலமாந்தர்கட்கல்லாற்சென்றுகைகூடுவதன்றால்
கோலமாமலருந்திக்குளிர்புனல்நிவாமல்குகரைமேல்
2448 ஆலுஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே. எ

செழுந்தண்மால்வரையெடுத்தசெருவலியிராவணனலற
அழுந்தவூன்றியவிரலான்போற்றியென்பார்க்கல்லதருளான்
கொழுங்கனிசுமந்துந்திக்குளிர்புனல்நிவாமல்குகரைமேல்
2449 அழுந்துஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே.

நுணங்குநூலயன்மாலுமிருவருநோக்கரியானை
வணங்கிநைபவர்க்கல்லால்வந்துகைகூடுவதன்றால்
மணங்கமழ்ந்துபொன்னுந்திவருபுனல்நிவாமல்குகரைமேல்
2450 அணங்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே.

சாக்கியப்படுவாருஞ்சமண்படுவார்களுமற்றும்
பாக்கியப்படகில்லாப்பாவிகள்தொழச்செல்வதன்றால்
பூக்கமழ்ந்துபொன்னுந்திப்பொருபுனல்நிவாமல்குகரைமேல்
2451 ஆர்க்குஞ்சோலைநெல்வாயிலரத்துறையடிகள்தம்மருளே.

கறையினார்பொழில்சூழ்ந்தகாழியுள்ஞானசம்பந்தன்
அறையும்பூம்புனல்பரந்தஅரத்துறையடிகள்தம்மருளை
முறைமையாற்சொன்னபாடல்மொழியும்மாந்தர்தம்வினைபோய்ப்
2452 பறையுமையுறவில்லைப்பாட்டிவைபத்தும்வல்லார்க்கே. கக

91 பொங்குவெண்மணற்கானற்பொருகடற்றிரைதவழ்முத்
கங்குலாரிருள்போழுங்கலிமறைக்காடமர்ந்தார்தாம் [தம்
திங்கள்சூடினரேனுந்திரிபுரமெரித்தனரேனும்
2453 எங்குமெங்கள்பிரானார்புகழலதிகழ்பழியிலரே. க

கூனிளம்பிறைசூடிக்கொடுவரித்தோலுடையாடை
ஆனிலங்கிளரைந்துமாடுவர்பூண்பதுமரவம்
கானலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்பத்
2454 தேனலங்கமழ்சோலைத்திருமறைக்காடமர்ந்தாரே. உ

நுண்ணிதாய்வெளிதாகிநூல்கிடந்திலங்குபொன்மார்பில்
பண்ணியாழெனமுரலும்பணிமொழியுமையொருபாகன்
தண்ணிதாயவெள்ளருவிசலசலநுரைமணிததும்பக்
2455 கண்ணிதானுமோர்பிறையார்கலிமறைக்காடமர்ந்தாரே. ங

ஏழைவெண்குருகயலேயிளம்பெடைதனதெனக்கருதித்
தாழைவெண்மடற்புல்குந்தண்மறைக்காடமர்ந்தார்தாம்
மாழையங்கயலொண்கண்மலைமகள்கணவனதடியின்
2456 நீழலேசரணாகநினைபவர்வினைநலிவிலரே. ச

அரவம்வீக்கிய அரையுமதிர்கழல்தழுவிய அடியும்
பரவநாஞ்செய்தபாவம்பறைதர அருள்பவர்பதிதான்
மரவநீடுயர்சோலைமழலைவண்டியாழ்செயுமறைக்காட்
2457 டிரவுமெல்லியும்பகலுமேத்துதல்குணமெனலாமே. ரு

பல்லிலோடுகையேந்திப்பாடியுமாடியும்பலிதேர்
அல்லல்வாழ்க்கையரேனுமழகியதறிவரெம்மடிகள்
புல்லமேறுவர்பூதம்புடைசெலவுழிதர்வர்க்கிடமாம்
2458 மல்குவெண்டிரையோதமாமறைக்காடதுதானே. சு

நாகந்தான்கயிறாகநளிர்வரையதற்குமத்தாகப்
பாகந்தேவரொடசுரர்படுகடலளறெழக்கடைய
வேகநஞ்செழஆங்கேவெருவொடுமிரிந்தெங்குமோட
2459 ஆகந்தன்னில்வைத்தமிர்தமாக்குவித்தான்மறைக்காடே.

தக்கன்வேள்வியைத்தகர்த்தோன்றனதொருபெருமையைஓரான்
மிக்குமேற்சென்றுமலையையெடுத்தலுமலைமகள்நடுங்க
நக்குத்தன் திருவிரலாலூன்றலுநடுநடுத்தரக்கன்
2460 பக்கவாயும்விட்டலறப்பரிந்தவன்பதிமறைக்காடே. அ

விண்டமாமலரோனும்விளங்கொளியாவணையானும்
பண்டுங்காண்பரிதாயபரிசினனவனுறைபதிதான்
கண்டலங்கழியோதங்கரையொடுகதிர்மணிததும்ப
2461 வண்டலங்கமழ்சோலைமாமறைக்காடதுதானே. சூ

பெரியவாகியகுடையும்பீலியுமவைவெயிற்கரவாக்
கரியமண்டைகையேந்திக்கல்லெனவுழிதருங்கழுக்கள்
அரியவாகவுண்டோதுமவர்திறமொழிந்துநம்மடிகள்
2462 பெரியசீர்மறைக்காடேபேணுமின்மனமுடையீரே. ௧0

மையுலாம்பொழில்சூழ்ந்தமாமறைக்காடமர்ந்தாரைக்
கையினற்றொழுதெழுவான்காழியுள்ஞானசம்பந்தன்
செய்தசெந்தமிழ்பத்துஞ்சிந்தையுட்சேர்க்கவல்லார்போய்ப்
2463 பொய்யில்வானவரோடும்புகவலர்கொளவலர்புகழே. ௧௧

92 பட்டம்பால்நிறமதியம்படர்சடைச்சுடர்விடுபாணி
நட்டநள்ளிருளாடுநாதனூர்நவின்றுறைகோயில்
புட்டன்பேடையொடாடும்பூம்புகலூர்த்தொண்டர்போற்றி
2464 வட்டஞ்சூழ்ந்தடிபரவும்வர்த்தமானீச்சரத்தாரே. ௧

முயல்வளாவியதிங்கள்வாண்முகத்தரிவையிற்றெரிவை
இயல்வளாவியதுடையஇன்னமுதெந்தையெம்பெருமான்
கயல்வளாவியகழனிக்கருநிறக்குவளைகண்மலரும்
2465 வயல்வளாவியபுகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. ௨

தொண்டர்தண்கயமூழ்கித்துணையலுஞ்சாந்தமும்புகையும்
கொண்டுகொண்டடிபரவிக்குறிப்பறிமுருகன்செய்கோலம்
கண்டுகண்டுகண்குளிரக்களிபரந்தொளிமல்குகள்ளார்
2466 வண்டுபண்செயும்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. ௩

பண்ணவண்ணத்தராகிப்பாடலொடாடலறாத
விண்ணவண்ணத்தராயவிரிபுகலூரரொர்பாகம்
பெண்ணவண்ணத்தாகும்பெற்றியொடாணிணைபிணைந்த
2467 வண்ணவண்ணத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே. ௪

ஈசனேறமர்கடவுளின்னமுதெந்தையெம்பெருமான்
பூசுமாசில்வெண்ணீற்றர்பொலிவுடைப்பூம்புகலூரில் [ல்
மூசுவண்டறைகொன்றைமுருகன்முப்போதுஞ்செய்முடிமே
2468 வாசமாமலருடையார்வர்த்தமானீச்சரத்தாரே. ரு

தளிரிளங்கொடிவளரத்தண்கயமிரியவண்டேறிக்
கிளரிளம்முழைநுழையக்கிழிதருபொழிற்புகலூரில்
உளரிளஞ்சுனைமலருமொளிதருசடைமுடியதன்மேல்
2469 வளரிளம்பிறையுடையார்வர்த்தமானீச்சரத்தாரே. சு

தென்சொல்விஞ்சமர்வடசொல்திசைமொழியெழில்நரம்பெடு
துஞ்சுநெஞ்சிருள்நீங்கத்தொழுதெழுதொல்புகலூரில் [த்துத்
அஞ்சனம்பிதிர்ந்தனைய அலைகடல்கடையவன்றெழுந்த
2470 வஞ்சநஞ்சணிகண்டர்வர்த்தமானீச்சரத்தாரே. எ

சாமவேதமோர்கீதமோதியத்தசமுகன்பரவும்
நாமதேயமதுடையார்நன்குணர்ந்தடிகளென்றேத்தக்
காமதேவனைவேவக்கனலெரிகொளுவியகண்ணார்
2471 வாமதேவர்தண்புகலூர்வர்த்தமானீச்சரத்தாரே. அ

சீரணங்குறநின்றசெருவுறுதிசைமுகனோடு
நாரணன்கருத்தழியநகைசெய்தசடைமுடிநம்பர்
ஆரணங்குறுமுமையையஞ்சுவித்தருளுதல்பொருட்டால்
2472 வாரணத்துரிபோர்த்தார்வர்த்தமானீச்சரத்தாரே. கூ

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையினால்தம் [பேல்
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யெனவிரும்
செய்யில்வாளைகளோடுசெங்கயல்குதிகொளும்புகலூர்
2473 பைகொள்கண்டத்தெம்பெருமான்வர்த்தமானீச்சரத்தாரே.

பொங்குதண்புனல்சூழ்ந்துபோதணிபொழில்புகலூரில்
மங்குல்மாமதிதவழும்வர்த்தமானீச்சரத்தாரைத்
தங்குசீர்திகழ்ஞானசம்பந்தன்தண்டமிழ்பத்தும்
2474 எங்குமேத்தவல்லார்களெய்துவரிமையவருலகே. கக

93 புரைசெய்வல்வினைதீர்க்கும்புண்ணியர்விண்ணவர்போற்
கரைசெய்மால்கடல்நஞ்சையுண்டவர்கருதலர்புரங்கள் [றக்
இரைசெய்தாரழலூட்டியுழல்பவரிடுபலிக்கெழில்சேர்
2475 விரைசெய்பூம்பொழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

சித்தந்தன்னடிநினைவார்செடிபடுகொடுவினைதீர்க்கும்
கொத்தின்தாழ்சடைமுடிமேற்கோளெயிற்றரவொடுபிறையன்
பத்தர்தாம்பணிந்தேத்தும்பரம்பரன்பைம்புனல்பதித்த
2476 வித்தன்தாழ்பொழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே

அடையும்வல்வினையகலஅருள்பவரனலுடைமழுவாட்
படையர்பாய்புலித்தோலர்பைம்புனற்கொன்றையர்படர்பு
சடையில்வெண்பிறைசூடித்தார்மணியணிதருதறுகண் [ன்
2477 விடையர்வீங்கெழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

பண்டுநான்செய்தவினைகள்பறையவோர்நெறியருள்பயப்பார்
கொண்டல்வான்மதிசூடிக்குரைகடல்விடமணிகண்டர்
வண்டுமாமலரூதிமதுவுணஇதழ்மறிவெய்தி
2478 விண்டவார்பொழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

கழித்தவார்புனற்கங்கைசூடியோர்காலனைக்காலால்
தெழித்துவானவர்நடுங்கச்செற்றவர்சிறையணிபறவை
கழித்தவெண்டலையேந்திக்காமனதுடல்பொடியாக
2479 விழித்தவர்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. ரு

தொல்லைவல்வினைதீர்ப்பார்சுடலைவெண்பொடியணிசுவண்டா
எல்விசூடிநின்றாடுமிறையவரிமையவரேத்தச்
சில்லைமால்விடையேறித்திரிபுரந்தீயெழச்செற்ற
2480 வில்லினார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. சு

நெறிகொள்சிந்தையராகிநினைபவர்வினைகெடநின்றார்
முறிகொள்மேனிமுக்கண்ணர்முளைமதிநடுநடுத்திலங்கப்
பொறிகொள்வாளரவணிந்தபுண்ணியர்வெண்பொடிப்பூசி
2481 வெறிகொள்பூம்பொழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே

எண்ணிலாவிறலரக்கனெழில்திகழ்மால்வரையெடுக்கக்
கண்ணெலாம்பொடிந்தலறக்கால்விரலூன்றியகருத்தர்
தண்ணுலாம்புனற்கண்ணிதயங்கியசடைமுடிச்சதுரர்
2482 விண்ணுலாம்பொழில்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

தேடித்தானயன்மாலுந்திருமுடியடியிணைகாணார்
பாடத்தான்பலபூதப்படையினர்சுடலையிற்பலகால்
ஆடத்தான்மிகவல்லரருச்சுனற்கருள்செயக்கருதும்
2483 வேடத்தார்திருத்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே. ௯

சடங்கொள்சீவரப்போர்வைச்சாக்கியர்சமணர்சொல்தவிர
இடங்கொள்வல்வினைதீர்க்குமேத்துமினிருமருப்பொருகைக்
கடங்கொள்மால்களிற்றுரியர்கடல்கடைந்திடக்கனன்றெழுந்த
2484 விடங்கொள்கண்டத்தர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரே.

வெந்தநீற்றினர்தெங்கூர்வெள்ளியங்குன்றமர்ந்தாரைக்
கந்தமார்பொழில்சூழ்ந்தகாழியுள்ஞானசம்பந்தன்
சந்தமாயினபாடல்தண்டமிழ்பத்தும்வல்லார்மேல்
2485 பந்தமாயினபாவம்பாறுதல்தேறுதல்பயனே. ௧௧

94 சாகையாயிரமுடையார்சாமமுமோதுவதுடையார்
ஈகையார்கடைநோக்கியிரப்பதும்பலபலவுடையார்
தோகைமாமயிலனையதுடியிடைபாகமுமுடையார்
2486 வாகைநுண்டுளிவீசும்வாழ்கொளிபுத்தூருளாரே. ௧

எண்ணிலீரமுமுடையாரெத்தனையோரிவரறங்கள்
கண்ணுமாயிரமுடையார்கையுமோராயிரமுடையார்
பெண்ணுமாயிரமுடையார்பெருமையோராயிரமுடையார்
2487 வண்ணமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௨

கொடியோராயிரமுடையார்நுண்ணியராமவர்நோக்கும்
வடிவுமாயிரமுடையார்வண்ணமுமாயிரமுடையார்
முடியுமாயிரமுடையார்மொய்குழலாளையுமுடையார்
2488 வடிவுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௩

பஞ்சிநுண் துகிலன்னபைங்கழற்சேவடியுடையார்
குஞ்சிமேகலையுடையார்கொந்தணிவேல்வலனுடையார்
அஞ்சும்வென்றவர்க்கணியாராணையினீருரியுடையார்
2489 வஞ்சிநுண்ணிடையுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௪

பரவுவாரையுமுடையார்பழித்திகழ்வாரையுமுடையார்
விரவுவாரையுமுடையார்வெண்டலைப்பலிகொள்வதுடை
அரவம்பூண்டதுமுடையாராயிரம்பேர்மிகவுடையார்[யார்
2490 வரமுமாயிரமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௫

தண்டுந்தாளமுங்குழலுந்தண்ணுமைக்கருவியும்புறவில்
கொண்டபூதமுமுடையார்கோலமும்பலபலவுடையார்
கண்டுகோடலுமரியார்காட்சியுமரியதோர்கரந்தை
2491 வண்டுவாழ்பதியுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௬

மானவாழ்க்கையதுடையார்மலைந்தவர்மதிற்பரிசறுத்தார்
தானவாழ்க்கையதுடையார்தவத்தொடுநாம்புகழ்ந்தேத்த
ஞானவாழ்க்கையதுடையார்நள்ளிருள்மகளிர்நின்றேத்த
2492 வானவாழ்க்கையதுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௭

எழுமூன்றுமோர்தலைகளுடையவனிடர்படஅடர்த்து
வேழ்விசெற்றதும்விரும்பிவிருப்பவர்பலபலவுடையார்
கேழல்வெண்பிறையன்னகெழுமணிமிடறுநின்றிலங்க
2493 வாழிசாந்தமுமுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௮

வென்றிமாமலரோனும்விரிகடல்துயின்றவன்தானும்
என்றுமேத்துகையுடையாரிமையவர்துதிசெயவிரும்பி
முன்றின்மாமலர்வாசமுதுமதிதவழ்பொழிற்றில்லை
2494 மன்றிலாடலதுடையார்வாழ்கொளிபுத்தூருளாரே. ௯

மண்டைகொண்டுழல்தேரர்மாசுடைமேனிவன்சமணர்
குண்டர்பேசியபேச்சுக்கொள்ளன்மின்திகழொளிநல்ல
துண்டவெண்பிறைசூடிச்சுண்ணவெண்பொடியணிந்தெங்கும்
2495 வண்டுவாழ்பொழில்சூழ்ந்தவாழ்கொளிபுத்தூருளாரே.

நலங்கொள்பூம்பொழிற்காழிநற்றமிழ்ஞானசம்பந்தன்
வலங்கொள்வெண்மழுவாளன்வாழ்கொளிபுத்தூருளானை
இலங்குவெண்பிறையானையேத்தியதமிழிவைவல்லார்
2496 நலங்கொள்சிந்தையராகிநன்னெறியெய்துவர்தாமே. ௧௧

95 பாடல்வண்டறைகொன்றைபால்மதிபாய்புனற்கங்கை
கோடல்கூவிளமாலைமத்தமுஞ்செஞ்சடைக்குலாவி
வாடல்வெண்டலைமாலைமருவிடவல்லியந்தோள்மேல்
2497 ஆடல்மாசுணமசைத்த அடிகளுக்கிடமரசிலியே. க

ஏறுபேணியதேறியிளமதக்களிற்றினையெற்றி
வேறுசெய்ததனுரிவைவெண்புலால்கலக்கமெய்போர்த்த
ஊறுதேனவனும்பர்க்கொருவனல்லொளிகொளொண்சுடராம்
2498 ஆறுசேர்தருசென்னியடிகளுக்கிடமரசிலியே. உ

கங்கைநீர்சடைமேலேகதமிகக்கதிரிளவனமென்
கொங்கையாளொருபாகமருவியகொல்லைவெள்ளேற்றன்
சங்கையாய்த்திரியாமேதன்னடியார்க்கருள்செய்து
2499 அங்கையாலனலேந்துமடிகளுக்கிடமரசிலியே. ங

மிக்ககாலனைவீட்டிமெய்கெடக்காமனைவிழித்துப்
புக்கவூரிடுபிச்சையுண்பதுபொன்திகழ்கொன்றை
தக்கநூல்திகழ்மார்பிற்றவளவெண்ணீறணிந்தாமை
2500 அக்கினோடுமும்பூண்டஅடிகளுக்கிடமரசிலியே. ச

மானஞ்சும்மடநோக்கிமலைமகள்பாகமுமருவித்
தானஞ்சாவரண்மூன்றுந்தழலெழச்சரமதுதுரந்து
வானஞ்சும்பெருவிடத்தையுண்டவன்மாமறையோதி
2501 ஆனஞ்சாடியசென்னியடிகளுக்கிடமரசிலியே. ரு

பரியமாசுணங்கயிறாப்பருப்பதமதற்குமத்தாகப்
பெரியவேலையைக்கலங்கப்பேணியவானவர்கடையக்
கரியநஞ்சதுதோன்றக்கலங்கியஅவர்தமைக்கண்டு
2502 அரியஆரமுதாக்குமடிகளுக்கிடமரசிலியே. சு, எ

வண்ணமால்வரைதன்னைமறித்திடலுற்றவல்லரக்கன்
கண்ணுந்தோளுநல்வாயுநெரிதரக்கால்விரலூன்றிப்
பண்ணின்பாடல்கைந்நரம்பாற்பாடியபாடலைக்கேட்டு
2503 அண்ணலாயருள்செய்தஅடிகளுக்கிடமரசிலியே. அ

குறியமாணுருவாகிக்குவலயமளந்தவன்றானும்
வெறிகொள்தாமரைமேலேவிரும்பியமெய்த்தவத்தோனும்
சொறிவொணுவகையெங்குந்தேடியுந்திருவடிகாண
2504 அறிவொணுவுருவத்தெம்மடிகளுக்கிடமரசிலியே. கூ

குருளையெய்தியமடவார்நிற்பவேகுஞ்சியைப்பறித்துத்
திரளைகையிலுண்பவருந்தேரருஞ்சொல்லியதேறேல்
பொருளைப்பொய்யிலிமெய்யெம்நாதனைப்பொன்னடிவணங்கும்
2505 அருளையார்தரநல்குமடிகளுக்கிடமரசிலியே. ௧0

அல்லிநீள்வயல்சூழ்ந்தஅரசிலியடிகளைக்காழி
நல்லஞானசம்பந்தன்நற்றமிழ்பத்திவைநாளும்
சொல்லவல்லவர்தம்மைச்சூழ்ந்தமரர்தொழுதேத்த
2506 வல்லவானுலகெய்திவைகலுமகிழ்ந்திருப்பாரே. ௧௧

96 பொங்குவெண்புரிவளரும்பொற்புடைமார்பனெம்பெருமான்
செங்கணாடரவாட்டுஞ்செல்வனெஞ்சிவனுறைகோயில்
பங்கமில்பலமறைகள்வல்லவர்பத்தர்கள்பரவுந்
2507 தங்குவெண்டிரைக்கானற்றண்வயற்காழிநன்னகரே. ௧

தேவர்தானவர்பரந்துதிண்வரைமால்கடல்நிறுவி
நாவதாலமிர்துண்ணநயந்தவரிரிந்திடக்கண்டு
ஆவவென்றருநஞ்சமுண்டவனமர்தருமூதூர்
2508 காவலார்மதில்சூழ்ந்தகடிபொழிற்காழிநன்னகரே. ௨

கரியின்மாமுகமுடையகணபதிதாதைபல்பூதந்
திரியஇல்பலிக்கேகுஞ்செழுஞ்சுடர்சேர்தருமூதூர்
சரியின்முன்கைநன்மாதர்சதிபடமாநடமாடி
2509 உரியநாமங்களேத்துமொலிபுனற்காழிநன்னகரே. ௩

சங்கவெண்குழைச்செவியன்தண்மதிசூடியசென்னி
அங்கம்பூணெனவுடையஅப்பனுக்கழகியவூராந்
துங்கமாளிகையுயர்ந்ததொகுகொடிவானிடைமிடைந்து
2510 வங்கவாண்மதிதடவுமணிபொழிற்காழிநன்னகரே. ௪

மங்கைகூறமர்மெய்யான்மான்மறியேந்தியகையான்
எங்களீசனென்றெழுவாரிடர்வினைகெடுப்பவற்கூராஞ்
சங்கையின்றிநன்னியமந்தாஞ்செய்துதகுதியின்மிக்க
2511 கங்கைநாடுயர்கீர்த்திமறையவர்காழிநன்னகரே.

நாறுகூவிளமத்தநாகமுஞ்சூடியநம்பன்
ஏறுமேறியஈசனிருந்தினிதமர்தருமூதூர்
நீறுபூசியவுருவர்நெஞ்சினுள்வஞ்சமொன்றின்றித்
2512 தேறுவார்கள்சென்றேத்துஞ்சீர்திகழ்காழிநன்னகரே. ௬

நடமதாடியநாதன்நந்திதன்முழவிடைக்காட்டில்
விடமமர்ந்தொருகாலம்விரித்தறமுரைத்தவற்கூராம்
இடமதாமறைபயில்வாரிருந்தவர்திருந்தியம்போதிற்
2513 குடமதார்மணிமாடங்குலாவியகாழிநன்னகரே. எ

கார்கொள்மேனியவ்வரக்கன்றன்கடுந்திறலினைக்கருதி
ஏர்கொள்மங்கையுமஞ்சஎழில்மலையெடுத்தவன்நெரியச்
சீர்கொள்பாதத்தோர்விரலாற்செறுத்தவெஞ்சிவனுறைகோயில்
2514 தார்கொள்வண்டினஞ்சூழ்ந்ததண்வயற்காழிநன்னகரே. அ

மாலுமாமலரானுமருவிநின்றிகலியமனத்தாற்
பாலுங்காண்பரிதாயபரஞ்சுடர்தன்பதியாகுஞ்
சேலும்வாளையுங்கயலுஞ்செறிந்துதன்கிளையொடுமேய
2515 ஆலுஞ்சாலிநற்கதிர்களணிவயற்காழிநன்னகரே. கூ

புத்தர்பொய்மிகுசமணர்பொலிகழலடியிணைகாணுஞ்
சித்தமற்றவர்க்கிலாமைத்திகழ்ந்தநற்செழுஞ்சுடர்க்கூராஞ்
சித்தரோடுநல்லமரர்செறிந்தநன்மாமலர்கொண்டு
2516 முத்தனேயருளென்றுமுறைமைசெய்காழிநன்னகரே. க0

ஊழியானவைபலவுமொழித்திடுங்காலத்திலோங்கு
2517 * * * கக

97 நம்பொருள்நம்மக்களென்றுநச்சியிச்சைசெய்துநீர்
அம்பரமடைந்துசாலஅல்லலுய்ப்பதன்முனம்
உம்பர்நாதனுத்தமனொளிமிகுத்தசெஞ்சடை
2518 நம்பன்மேவுநன்னகர்நலங்கொள்காழிசேர்மினே. க

பாவமேவுமுள்ளமோடுபத்தியின்றிநித்தலும்
ஏவமானசெய்துசாவதன்முனம்மிசைந்துநீர்
தீபமாலைதூபமுஞ்செறிந்தகையராகிநந்
2519 தேவதேவன்மன்னுமூர்திருந்துகாழிசேர்மினே. உ

சோறுகூறையின்றியேதுவண்டுதூரமாய்நுமக்
கேறுசுற்றமேள்கவேயிடுக்கணுய்ப்பதன்முனம்
ஆறுமோர்சடையினனாதியானைசெற்றவன்
2520 நாறுதேன்மலர்ப்பொழில்நலங்கொள்காழிசேர்மினே. ங

நச்சிநீர்பிறன்கடைநடந்துசெல்லநாளையும்
உச்சிவம்மெனும்முரையுணர்ந்துகேட்பதன்முனம்
பிச்சர்நச்சரவரைப்பெரியசோதிபேணுவார்
2521 இச்சைசெய்யுமெம்பிரானெழில்கொள்காழிசேர்மினே. ௪

கண்கள்காண்பொழிந்துமேனிகன்றியொன்றலாதநோய்
உண்கிலாமைசெய்துநம்மையுய்த்தழிப்பதன்முனம்
விண்குலாவுதேவருய்யவேலைநஞ்சமுதுசெய்
2522 கண்கள்மூன்றுடையவெங்கருத்தர்காழிசேர்மினே. ௫

அல்லல்வாழ்க்கையுய்ப்பதற்கவத்தமேபிறந்துநீர்
எல்லையில்பிணக்கினிற்கிடந்திடாதெழும்மினோ
பல்லில்வெண்டலையினிற்பலிக்கியங்குபான்மையான்
2523 கொல்லையேறதேறுவான்கோலக்காழிசேர்மினே. ௬, ௭

பொய்மிகுத்தவாயராய்ப்பொருமையோடுசெல்லுநீர்
ஐமிகுத்தகண்டராயடுத்திரைப்பதன்முனம்
மைமிகுத்தமேனிவாளரக்கனைநெரித்தவன்
2524 பைமிகுத்தபாம்பரைப்பரமர்காழிசேர்மினே. ௮

காலினோடுகைகளுந்தளர்ந்துகாமநோய்தனால்
ஏலவார்குழலினாரிகழ்ந்துரைப்பதன்முனம்
மாலினோடுநான்முகன்மதித்தவர்கள்காண்கிலா
2525 நீலமேவுகண்டனார்நிகழ்ந்தகாழிசேர்மினே. ௯

நிலைவெறுத்தநெஞ்சமோடுநேசமில்புதல்வர்கள்
முலைவெறுத்தபேர்தொடங்கியேமுனிவதன்முனந்
தலைபறித்தகையர்தேரர்தாந்தரிப்பரியவன்
2526 சிலைபிடித்தெயிலெய்தான்றிருந்துகாழிசேர்மினே. ௧௦

தக்கனார்தலையரிந்தசங்கரன்றனதரை
அக்கினோடரவசைத்தஅந்திவண்ணர்காழியை
ஒக்கஞானசம்பந்தனுரைத்தபாடல்வல்லவர்
2527 மிக்கஇன்பமெய்திவீற்றிருந்துவாழ்தல்மெய்ம்மையே. ௧௧

98 வரைத்தலைப்பசும்பொனோடருங்கலன்களுந்திவந்
திரைத்தலைச்சுமந்துகொண்டெறிந்திலங்குகாவிரிக்
கரைத்தலைத்துருத்திபுக்கிருப்பதேகருத்தினாய்
2528 உரைத்தலைப்பொலிந்துனக்குணர்த்துமாறுவல்லமே. ௧

அடுத்தடுத்தகத்தியோடுவன்னிகொன்றைகூவிளம்
தொடுத்துடன்சடைப்பெய்தாய்துருத்தியாயோர்காலனைக்
கடுத்தடிப்புறத்தினானிறத்துதைத்தகாரணம்
2529 எடுத்தெடுத்துரைக்குமாறுவல்லமாகினல்லமே. உ

கங்குல்கொண்டதிங்களோடுகங்கைதங்குசெஞ்சடைச்
சங்கிலங்குவெண்குழைசரிந்திலங்குகாதினாய்
பொங்கிலங்குபூணநூலுருத்திராதுருத்திபுக்
2530 கெங்குநின்னிடங்களாவடங்கிவாழ்வதென்கொலோ. ௩

கருத்தினாலோர்காணியில்விருத்தியில்லைதொண்டர்தம்
அருத்தியாற்றம்மல்லல்சொல்லியையமேற்பதன்றியும்
ஒருத்திபால்பொருத்திவைத்துடம்புவிட்டுயோகியாய்
2531 இருத்திநீதுருத்திபுக்கிதென்னமாயமென்பதே. ௪

துறக்குமாசொலப்படாய்துருத்தியாய்திருந்தடி
மறக்குமாறிலாதவென்னைமையல்செய்திம்மண்ணின்மேல்
பிறக்குமாறுகாட்டினாய்ப்பிணிப்படுமுடம்புவிட்
2532 டிறக்குமாறுகாட்டினாய்க்கிழுக்குகின்றதென்னையே. ௫

வெயிற்கெதிர்ந்திடங்கொடாதகங்குளிர்ந்தபைம்பொழில்
துயிற்கெதிர்ந்தபுள்ளினங்கள்மல்குதண்துருத்தியாய்
மயிற்கெதிர்ந்தணங்குசாயல்மாதொர்பாகமாகவூ
2533 எயிற்கெதிர்ந்தொரம்பினாலெரித்தவில்லியல்லையே. ௬

கணிச்சியம்படைச்செல்வாகழிந்தவர்க்கொழிந்தசீர்
துணிச்சிரக்கிரந்தையாய்கரந்தையாய்துருத்தியாய்
அணிப்படுந்தனிப்பிறைப்பனிக்கதிர்க்கவாவுநல்
2534 மணிப்படும்பைநாகநீமகிழ்ந்தஅண்ணலல்லையே. ௭

சுடப்பொடிந்துடம்பிழந்தநங்கனாயமன்மதன்
இடர்ப்படக்கடந்திடந்துருத்தியாகவெண்ணினாய்
கடற்படையுடையவக்கடலிலங்கைமன்னனை
2535 அடற்படஅடுக்கலில்லடர்த்தஅண்ணலல்லையே. ௮

களங்குளிர்ந்திலங்குபோதுகாதலானுமாலுமாய்
வளங்கிளம்பொனங்கழல்வணங்கிவந்துகாண்கிலார்
துளங்கிளம்பிறைச்செனித்துருத்தியாய்திருந்தடி
2536 உளங்குளிர்ந்தபோதெலாமுகந்துகந்துரைப்பனே. ௯

புத்தர்தத்துவமிலாச்சமணுரைத்தபொய்தனை
உத்தமமெனக்கொளாதுகந்தெழுந்துவண்டினம்
துத்தநின்றுபண்செயுஞ்சூழ்பொழில்துருத்தியெம்
2537 பித்தர்பித்தனைத்தொழப்பிறப்பறுத்தல்பெற்றியே. ௧௦

கற்றுமுற்றினார்தொழுங்கழுமலத்தருந்தமிழ்
சுற்றுமுற்றுமாயினானவன்பகர்ந்தசொற்களால்
பெற்றமொன்றுயர்த்தவன்பெருந்துருத்திபேணவே
2538 குற்றமுற்றுமின்மையிற்குணங்கள்வந்துகூடுமே. ௧௧

99 இன்றுநன்றுநாளைநன்றென்றுநின்றஇச்சையால்
பொன்றுகின்றவாழ்க்கையைப்போகவிட்டுப்போதுமின்
மின்தயங்குசோதியான்வெண்மதிவிரிபுனல்
2539 கொன்றைதுன்றுசென்னியான்கோடிகாவுசேர்மினே. ௧

அல்லல்மிக்கவாழ்க்கையைஆதரித்திராதுநீர்
நல்லதோர்நெறியினைநாடுதுந்நடம்மினோ
வில்லையன்னவாணுதல்வெள்வளையொர்பாகமாம்
2540 கொல்லைவெள்ளையேற்றினான்கோடிகாவுசேர்மினே. ௨

துக்கமிக்கவாழ்க்கையின்சோர்வினைத்துறந்துநீர்
தக்கதோர்நெறியினைச்சார்தல்செய்யப்போதுமின்
அக்கணிந்தரைமிசையாறணிந்தசென்னிமேல்
2541 கொக்கிறகணிந்தவன்கோடிகாவுசேர்மினே. ௩

பண்டுசெய்தவல்வினைபற்றறக்கெடும்வகை
உண்டுமக்குரைப்பன்நானொல்லைநீரெழுமினோ
மண்டுகங்கைசெஞ்சடைவைத்துமாதொர்பாகமாக்
2542 கொண்டுகந்தமார்பினான்கோடிகாவுசேர்மினே. ௪

முன்னைநீர்செய்பாவத்தால்மூர்த்திபாதஞ்சிந்தியா
தின்னநீரிடும்பையில்மூழ்கிறீரெழும்மினோ
பொன்னைவென்றகொன்றையான்பூதம்பாடஆடலான்
2543 கொன்னவிலும்வேலினான்கோடிகாவுசேர்மினே. ௫

ஏவமிக்கசிந்தையோடின்பமெய்தலாமெனப்
பாவமேத்தனையுநீர்செய்தொருபயனிலைக்
காவல்மிக்கமாநகர்காய்ந்துவெங்கனல்படக்
2544 கோவமிக்கநெற்றியான்கோடிகாவுசேர்மினே. ௬

ஏணழிந்தவாழ்க்கையையின்பமேன்றிருந்துநீர்
மாணழிந்தமூப்பினால்வருந்தன்முன்னம்வம்மினே
பூணல்வெள்ளெலும்பினான்பொன்றிகழ்சடைமுடிக்
2545 கோணல்வெண்பிறையினான்கோடிகாவுசேர்மினே. எ

மற்றிவாழ்க்கைமெய்யெனும்மனத்தினைத்தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மின்சேவடிபணிந்துவந்தெழுமினோ
வெற்றிகொள்தசமுகன்விறல்கெடஇருந்ததோர்
2546 குற்றமில்வரையினான்கோடிகாவுசேர்மினே. அ

மங்குநோயுறும்பிணிமாயும்வண்ணஞ்சொல்லுவன்
செங்கண்மால்திசைமுகன்சென்றளந்துங்காண்கிலா
வெங்கண்மால்விடையுடைவேதியன்விரும்பும்ஊர்
2547 கொங்குலாம்வளம்பொழிற்கோடிகாவுசேர்மினே. கூ

தட்டொடுதழைமயிற்பீலிகொள்சமணரும்
பட்டுடைவிரிதுகிலினார்கள்சொற்பயனிலை
விட்டபுன்சடையினான்மேதகும்முழவொடும்
2548 கொட்டமைந்தஆடலான்கோடிகாவுசேர்மினே. க0

கொந்தணிகுளிர்பொழிற்கோடிகாவுமேவிய
செந்தழலுருவனைச்சீர்மிகுதிறலுடை
அந்தணர்புகலியுளாயகேள்விஞானசம்
2549 பந்தனதமிழ்வல்லார்பாவமானபாறுமே. கக

100 படைகொள்கூற்றம்வந்துமெய்ப்பாசம்விட்டபோதின்கண்
இடைகொள்வாரெமக்கிலையெழுகபோதுநெஞ்சமே
குடைகொள்வேந்தன்மூதாதைகுழகன்கோவலூர்தனுள்
2550 விடையதேறுங்கொடியினான்வீரட்டானஞ்சேர்துமே. க

கரவலாளர்தம்மனைக்கடைகள்தோறுங்கால்நிமிர்த்
திரவலாழிநெஞ்சமேயினியதெய்தவேண்டில்நீ
குரவமேறிவண்டினங்குழலொடியாழ்செய்கோவலூர்
2551 விரவிநாறுகொன்றையான்வீரட்டானஞ்சேர்துமே. உ

உள்ளத்தீரேபோதுமின்னுறுதியாவதறிதிரேல்
அள்ளற்சேற்றிற்காலிட்டிங்கவலத்துளழுந்தாதே
கொள்ளப்பாடுகீதத்தான்குழகன்கோவலூர்தனுள்
2552 வெள்ளந்தாங்குசடையினான்வீரட்டானஞ்சேர்துமே. ந

கனைகொளிருமல்சூலைநோய்கம்பதாளிகுன்மமும்
இனையபலவுமூப்பினோடெய்திவந்துநலியாமுன்
பனைகளுலவுபைம்பொழிற்பழனஞ்சூழ்ந்தகோவலூர்
2553 வினையைவென்றவேடத்தான்வீரட்டானஞ்சேர்துமே. ௪

உளங்கொள்போகமுய்த்திடாருடம்பிழந்தபோதின்கண்
துளங்கிநின்றுநாடோறுந்துயரலாழிநெஞ்சமே
வளங்கொள்பெண்ணைவந்துலாவயல்கள்சூழ்ந்தகோவலூர்
2554 விளங்குகோவணத்தினன்வீரட்டானஞ்சேர்துமே. ௫

கேடுமூப்புச்சாக்காடுகேழுமிவந்துநாள்தோறும்
ஆடுபோலநரைகளாயாக்கைபோக்கதன்றியும்
கூடிநின்றுபைம்பொழிற்குழகன்கோவலூர்தனுள்
2555 வீடுகாட்டுநெறியினன்வீரட்டானஞ்சேர்துமே. ௬

உரையும்பாட்டுந்தளர்வெய்தியுடம்புமூத்தபோதின்கண்
நரையுந்திரையுங்கண்டெள்கிநகுவர்நமர்களாதலால்
வரைகொள்பெண்ணைவந்துலாவயல்கள்சூழ்ந்தகோவலூர்
2556 விரைகொள்சீர்வெண்ணீற்றினன்வீரட்டானஞ்சேர்துமே.

ஏதமிக்கமூப்பினோடிருமலீளையென்றிவை
ஊதலாக்கையோம்புவீருறுதியாவதறிதிரேல்
போதில்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனுள்
2557 வேதமோதுநெறியினன்வீரட்டானஞ்சேர்துமே. ௮

ஆறுபட்டபுன்சடையழகனாயிழைக்கொரு
கூறுபட்டமேனியான்குழகன்கோவலூர்தனுள்
நீறுபட்டகோலத்தான்நீலகண்டனிருவர்க்கும்
2558 வேறுபட்டசிந்தையான்வீரட்டானஞ்சேர்துமே. ௯

குறிகொளாழிநெஞ்சமேகூறைதுவரிட்டார்களும்
அறிவிலாதஅமணர்சொல்லவத்தமாவதறிதியேல்
பொறிகொள்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனுள்
2559 வெறிகொள்கங்கைதாங்கினன்வீரட்டானஞ்சேர்துமே. ௧0

கழியொடுலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன்
விழிகள்தீரச்சொன்னசொற்பாவநாசமாதலால்
அழிவிலீர்கொண்டேத்துமினந்தண்கோவலூர்தனுள்
2560 விழிகொள்பூதப்படையினன்வீரட்டானஞ்சேர்துமே. ௧௧

101 பருக்கையானைமத்தகத்தரிக்குலத்துகிர்ப்புக
நெருக்கிவாயகித்திலங்கிராக்குநீள்பொருப்பனூர்
கருக்கொள்சோலைசூழநீடுமாடமாளிகைக்கொடி
2561 அருக்கன்மண்டலத்தணவுமந்தணாரூரென்பதே. க

விண்டவெள்ளெருக்கலர்ந்தவன்னிகொன்றைமத்தமும்
இண்டைகொண்டசெஞ்சடைமுடிச்சிவனிருந்தவூர்
கெண்டைகொண்டலர்ந்தகண்ணினார்கள்கீதவோசைபோய்
2562 அண்டரண்டமூடறுக்குமந்தணாரூரென்பதே. உ

கறுத்தநஞ்சமுண்டிருண்டகண்டர்காலனின்னுயிர்
மறுத்தமாணிதன்றனகம்வண்மைசெய்தமைந்தனூர்
வெறித்துமேதியோடிமூசுவள்ளைவெள்ளைநீள்கொடி
2563 அறுத்துமண்டியாவிபாயுமந்தணாரூரென்பதே. ங

அஞ்சுமொன்றியாறுவீசிநீறுபூசிமேனியில்
குஞ்சியாரவந்திசெய்ய அஞ்சலென்னிமன்னுமூர்
பஞ்சியாருமெல்லடிப்பணைத்தகொங்கைநுண்ணிடை
2564 அஞ்சொலாரரங்கெடுக்குமந்தணாரூரென்பதே. ச

சங்குலாவுதிங்கள்சூடிதன்னையுன்னுவார்மனத்
தங்குலாவிநின்றஎங்களாதிதேவன்மன்னுமூர்
தெங்குலாவுசோலைநீடுதேனுலாவுசெண்பகம்
2565 அங்குலாவியண்டநாறுமந்தணாரூரென்பதே. ரு

கள்ளநெஞ்சவஞ்சகக்கருத்தைவிட்டருத்தியோ
டுள்ளமொன்றியுள்குவாருளத்துளானுகந்தவூர்
துள்ளிவாளைபாய்வயற்சுரும்புலாவுநெய்தல்வாய்
2566 அள்ளல்நாரையாரல்வாருமந்தணாரூரென்பதே. சா

கங்கைபொங்குசெஞ்சடைக்கரந்தகண்டர்காமனை
மங்கவெங்கணலல்விழித்தமங்கைபங்கன்மன்னுமூர்
தெங்கினூடுபோகிவாழைகொத்திறுத்துமாவின்மேல்
2567 அக்கண்மந்திமுந்தியேறுமந்தணாரூரென்பதே. எ

வரைத்தலம்மெடுத்தவன்முடித்தலம்முரத்தொடும்
நெரித்தவன்புரத்தைமுன்னெரித்தவன்னிருந்தவூர்
நிரைத்தமாளிகைத்திருவின்நேரனார்கள்வெண்ணகை
2568 அரத்தவாய்மடந்தைமார்களாடுமாரூரென்பதே. அ

இருந்தவன்கிடந்தவன்னிடந்துவிண்பறந்துமெய்
வருந்தியுமளப்பொணுதவானவன்மகிழ்ந்தவூர்
செருந்திஞாழல்புன்னைவன்னிசெண்பகஞ்செழுங்குரா
2569 அரும்புசோலைவாசநாறுமந்தணூரென்பதே. ௯

பறித்தவெண்டலைக்கடுப்படுத்தமேனியார்தவம்
வெறித்தவேடன்வேலைநஞ்சமுண்டகண்டன்மேவுமூர்
மறித்துமண்டுவண்டல்வாரிமிண்டுநீர்வயற்செநெல்
2570 அறுத்தவாயசும்புபாயுமந்தணூரென்பதே. ௰

வல்லிசோலைசூதநீடுமன்னுவீதிபொன்னுலா
வல்லிமாதமர்ந்திருந்த அந்தணூராதியை
நல்லசொல்லுஞானசம்பந்தன்நாவினின்னுரை
2571 வல்லதொண்டர்வானமாளவல்லர்வாய்மையாகவே. ௧௧

102 அன்னமென்னடையரிவையொ டினிதுறையமரர்தம் பெருமானுர், மின்னுசெஞ்சடைவெள்ளெருக்கம்மலர் வைத்தவர்வேதந்தாம், பன்னுநன்பொருள்பயந்தவர்பரு மதிற்சிரபுரத்தார்சீரார், பொன்னின்மாமலரடிதொழுமடி
2572 யவர்வினையொடும்பொருந்தாரே. ௧

கோலமாகரியுரித்தவரரவொடுமேனக்கொம்பிள ஆமை
சாலப்பூண்டுதண்மதியதுசூடியசங்கரனுர்தம்மைப்
போலத்தம்மடியார்க்குமின்பளிப்பவர்பொருகடல்விடமுண்ட
2573 நீலத்தார்மிடற்றண்ணலார்சிரபுரந்தொழவினையில்லாவே.

மானத்திண்புயவரிசிலைப் பார்த்தனைத்தவங்கெடமதித் தன்று, கானத்தேதிரிவேடனுயமர்செயக்கண்டருள்புரிந் தார்பூந், தேனைத்தேர்ந்துசேர்வண்டுகள்திரிதருஞ்சிரபுரத் துறையெங்கள், கோனைக்கும்பிடுமடியரைக்கொடுவினைகுற்
2574 றங்கள்குறுகாவே. ௩

மாணிதன்னுயிர்மதித்துணவந்த அக்காலனையுதைசெய் தார், பேணியுள்குமெய்யடியவர்பெருந்துயர்ப்பிணக்கறுத் தருள்செய்வார், வேணிவெண்பிறையுடையவர்வியன் புகழ்ச்சிரபுரத்தமர்கின்ற, ஆணிப்பொன்னினையடிதொழு
2575 மடியவர்க்கருவினையடையாவே. ௪

பாருநீரொடுபல்கதிரிரவியும்பனிமதியாகாசம்
ஓரும்வாயுவுமொண்கனல்வேள்வியிற்றலைவனுமாய்நின்றார்
சேருஞ்சந்தனமகிலொடுவந்திழிசெழும்புனற்கோட்டாறு
2576 வாருந்தண்புனல்சூழ்சிரபுரந்தொழுமடியவர்வருந்தாரே. ரு

ஊழியந்தத்திலொலிகடலோட்டந்திவ்வுலகங்களவைமூட
ஆழியெந்தையென்றமரர்கள்சரண்புகஅந்தரத்துயர்ந்தார்தாம்
யாழின்நேர்மொழியேழையோடினிதுறையின்பனெம்பெருமானார்
2577 வாழிமாநகர்ச்சிரபுரந்தொழுதெழவல்வினை அடையாவே. சு

பேய்கள்பாடப்பல்பூதங்கள் துதிசெயப்பிணமிடுசுடு
காட்டில், வேய்கொள்தோளிதான்வெள்கிடமாநடமாடும்
வித்தகனாரொண், சாய்கள்தான்மிகவுடையதண்மறையவர்
தருசிரபுரத்தார்தாந், தாய்களாயினார்பல்லுயிர்க்குந்தமைத்
2578 தொழுமவர்தளராரே. எ

இலங்குபூண்வரைமார்புடை யிராவணனெழில்கொள்
வெற்பெடுத்தன்று, கலங்கச்செய்தலுங்கண்டுதங்கழலடி
நெரியவைத்தருள்செய்தார், புலங்கள்செங்கழுநீர்மலர்த்
தென்றல்மன்றதனிடைப்புகுந்தாரும், குலங்கொள்மாம
2579 றையவர்சிரபுரந்தொழுதெழவினைகுறுகாவே. அ

வண்டுசென்றணைமலர்மிசைநான்முகன் மாயனென்றிவ
ரன்று, கண்டுகொள்ளவோரேனமோ டன்னமாய்க்கிளறி
யும்பறந்துந்தாம், பண்டுகண்டதுகாணவேநீண்டவெம்
பசுபதிபரமேட்டி, கொண்டசெல்வத்துச்சிரபுரந்தொழு
2580 தெழவினையவைகூடாவே. கூ

பறித்தபுன்தலைக்குண்டிகைச் சமணரும்பார்மிசைத்து
வர்தோய்ந்த, செறித்தசீவரத்தேரருந்தேர்கிலாத்தேவர்
கள்பெருமானார், முறித்துமேதிகள்கரும்புதின்றாவியின்
மூழ்கிடஇளவாளை, வெறித்துப்பாய்வயற்சிரபுரந்தொழ
2581 வினைவிட்டிடுமிகத்தானே. க0

பரசுபாணியைப்பத்தர்க ளத்தனைப்பையரவோடக்கு,
நிரைசெய்பூண்திருமார்புடை நிமலனைநித்திலப்பெருந்
தொத்தை, விரைசெய்பூம்பொழிற்சிரபுரத்தண்ணலைவிண்
ணவர்பெருமானைப், பரவுசம்பந்தன்செந்தமிழ்வல்லவர்பா
2582 மனைப்பணிவாரே. கக

103 புல்குபொன்னிறம்புரிசடைநெடுமுடிப்போழிளமதிசூடிப்
பில்குதேனுடைநறுமலர்க்கொன்றையும்பிணையல்செய்தவர்மேய
மல்குதண்டுறையரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2583 அல்லுநன்பகலுந்தொழுமடியவர்க்கருவினையடையாவே. க

அரவமாட்டுவரந்துகில்புலியதளங்கையிலனலேந்தி
இரவுமாடுவரிவைவிவர்சரிதைகளிசைவனபலபூதம்
மரவந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2584 பரவியும்பணிந்தேத்தவல்லாரவர்பயன்றலைப்படுவாரே. உ

குணங்கள்கூறியுங்குற்றங்கள்பரவியுங்குரைகழலடிசேரக்
கணங்கள்பாடவுங்கண்டவர்பரவவுங்கருத்தறிந்தவர்மேய
மணங்கொள்பூம்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2585 வணங்குமுள்ளமோடணையவல்லார்களைவல்வினையடையாவே

எங்குமேதுமோர்பிணியிலர்கேடிலரிழைவளர்நறுங்கொன்றை
தங்குதொங்கலுந்தாமமுங்கண்ணியுந்தாமகிழ்ந்தவர்மேய
மங்குல்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2586 கங்குலும்பகலுந்தொழுமடியவர்காதன்மையுடையாரே. ச

நெதியமென்னுளபோகமற்றென்னுளநிலமிசைநலமாய
கதியமென்னுளவானவரென்னுளர்கருதியபொருள்கூடில்
மதியந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2587 புதியபூவொடுசாந்தமும்புகையுங்கொண்டேத்துதல்புரிந்தோர்க்கே

கண்ணுலாவியகதிரொளிமுடிமிசைக்கனல்விடுசுடர்நாகம்
தெண்ணிலாவொடுதிலகமுநகுதலைதிகழவைத்தவர்மேய
மண்ணுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2588 உண்ணிலாநினைப்புடையவர்யாவரிவ்வுலகினிலுயர்வாரே. சு

தூசுதானரைத்தோலுடைக்கண்ணியஞ்சுடர்விடுநறுங்கொன்றை
பூசுவெண்பொடிப்பூசுவதன்றியும்புகழ்புரிந்தவர்மேய
மாசுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2589 பேசுநீர்மையர்யாவரிவ்வுலகினிற்பெருமையைப்பெறுவாரே.

பவ்வமார்கடலிலங்கையர்கோன்றனைப்பருவரைக்கீழூன்றி
எவ்வந்தீரஅன்றிமையவர்க்கருள்செய்தஇறையவனுறைகோயில்
மவ்வந்தோய்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2590 கவ்வையாற்றொழுமடியவர்மேல்வினைகனவிடைச்செதிளன்றே.

உய்யுங்காரணமுண்டென்றுகருதுமினொளிகிளர்மலரோனும்
பைகொள்பாம்பணைப்பள்ளிகொளண்ணலும்பரவநின்றவர்மேய
மையுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2591 கையினாற்றொழுதவலமும்பிணியுந்தங்கவலையுங்களைவாரே.

பிண்டிபாலருமண்டைகொள்தேரரும்பீலிகொண்டுழல்வாரும்
கண்டநூலருங்கடுந்தொழிலாளருங்கழறநின்றவர்மேய
வண்டுலாம்பொழிலரிசிலின்வடகரைவருபுனல்மாகாளம்
2592 பண்டுநாஞ்செய்தபாவங்கள்பற்றறப்பரவுதல்செய்வோமே.

மாறுதன்னொடுமண்மிசையில்லதுவருபுனல்மாகாளத்
தீறுமாதியுமாகியசோதியையேறமர்பெருமானை
நாறுபூம்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனதமிழ்மாலை
2593 கூறுவாரையுங்கேட்கவல்லாரையுங்குற்றங்கள்குறுகாவே. கக

104 பொடிகொள்மேனிவெண்ணூலினர்தோலினர் புலியுரி
யதளாடை, கொடிகொளேற்றினர்மணிகிணினெனவரு
குரைகழல்சிலம்பார்க்கக், கடிகொள்பூம்பொழில்சூழ்தரு
கடிக்குளத்துறையுங்கற்பகத்தைத்தம், முடிகள்சாய்த்தடி
2594 வீழ்தருமடியரைமுன்வினைமூடாவே. க

விண்களார்தொழும்விளக்கினைத்துளக்கிலாவிகிர்தனைவிழவா
மண்களார்துதித்தன்பராயின்புறும்வள்ளலைமருவித்தம் [ரும்
கண்களார்தரக்கண்டுநங்கடிக்குளத்துறைதருகற்பகத்தைப்
2595 பண்களார்தரப்பாடுவார்கேடிலர்பழியிலர்புகழாமே. உ

பொங்குநற்சரியுரியதுபோர்ப்பதுபுலியதளழல்நாகம்
தங்கமங்கையைப்பாகமதுடையவர்தழல்புரைதிருமேனிக்
கங்கைசேர்தருசடையினர்கடிக்குளத்துறைதருகற்பகத்தை
2596 எங்குமேத்திநின்றின்புறுமடியரையிடும்பைவந்தடையாவே.

நீர்கொள்நீள்சடைமுடியனைநித்திலத் தொத்தினைநிக
ரில்லாப், பார்கொள்பாரிடத்தவர்தொழும்பவளத்தைப்
பசும்பொனைவிசும்பாரும், கார்கொள்பூம்பொழில்சூழ்தரு
கடிக்குளத்துறையுங்கற்பகந்தன்னைச், சீர்கொள்செல்வங்க
2597 ளேத்தவல்லார்வினைதேய்வதுதிண்ணமே. ச

சுரும்புசேர்சடைமுடியினன்மதியொடு துன்னியதழல்
நாகம், அரும்புதாதவிழ்ந்தலர்ந்தனமலர்பலகொண்டடிய

வர்போற்றக், கரும்புகார்மலிகொடிமிடைகடிக்குளத்துறை
தருகற்பகத்தை, விரும்புவேட்கையோடுளமகிழ்ந்துரைப்
2598 பவர்விதியுடையவர்தாமே. ரு

மாதிலங்கியபாகத்தன்மதியமொடலைபுனலழல்நாகம்
போதிலங்கியகொன்றையுமத்தமும்புரிசடைக்கழகாகக்
காதிலங்கியகுழையினன்கடிக்குளத்துறைதருகற்பகத்தின்
2599 பாதங்கைதொழுதேத்தவல்லார்வினைபற்றறக்கெடுமன்றே.

குலவுகோலத்தகொடிநெடுமாடங்கள்குழாம்பலகுளிர்பொய்கை
உலவுபுள்ளினமன்னங்களாலிடும்பூவைசேருங்கூந்தல்
கலவைசேர்தருகண்ணியன்கடிக்குளத்துறையுங்கற்பகத்தைச்சீர்
2600 நிலவிநின்றுநின்றேத்துவார்மேல்வினைநிற்ககில்லாதானே.

மடுத்தவாளரக்கன்னவன்மலைதன்மேல்மதியிலாமையிலோடி
எடுத்தலும்முடிதோள்கரநெரிந்திறஇறையவன்விரலூன்றக்
கடுத்துவாயொடுகையெடுத்தலறிடக்கடிக்குளந்தனில்மேவிக்
2601 கொடுத்தபேருட்கூத்தனையேத்துவார்குணமுடையவர்தாமே.

நீரினார்கடற்றுயின்றவனயனொடுநிகழடிமுடிகாணார்
பாரினார்விசும்புறப்பரந்தெழுந்ததோர்பவளத்தின்படியாகிக்
காரினார்பொழில்சூழ்தருகடிக்குளத்துறையுங்கற்பகத்தின்றன்
2602 சீரினார்கழலேத்தவல்லார்களைத்தீவினையடையாவே. கூ

குண்டர்தம்மொடுசாக்கியர்சமணருங்குறியினில் நெறி
நில்லா, மிண்டர்மிண்டுரைகேட்டவைமெய்யெனக்கொள்
ளன்மிலவிடமுண்ட,கண்டர்முண்டநன் மேனியர்கடிக்
குளத்துறைதருமெம்மீசர், தொண்டர்தொண்டரைத்
2603 தொழுதடிபணிமின்கள்தூநெறியெளிதாமே. கo

தனமலிபுகழ்தயங்குபூந்தராயவர்மன்னன்நற்சம்பந்தன்
மனமலிபுகழ்வண்டமிழ்மாலைகள்மாலதாய்மகிழ்வோடும்
கனமலிகடலோதம்வந்துலவியகடிக்குளத்தமர்வானை
2604 இனமலிந்திசைபாடவல்லார்கள்போயிறைவனோடுறைவாரே.

**105** மின்னுலாவியசடையினர்விடையினர்மிளிர்தருமரவோடும்
பன்னுலாவியமறையொலிநாவினர்கறையணிகண்டத்தர்
பொன்னுலாவியகொன்றையந்தாரினர்புகழ்மிகுகீழ்வேளூர்
2605 உன்னுலாவியசிந்தையர்மேல்வினையோடிடவீடாமே. க

நீருலாவியசடையிடையரவொடுமதிசிரநிரைமாலை
வாருலாவியவனமுலையவளொடுமணிசிலம்பவையார்க்க
ஏருலாவியஇறைவன துறைவிடமெழில்திகழ்கீழ்வேளூர்
2606 சீருலாவியசிந்தைசெய்தணைபவர்பிணியொடுவினைபோமே.

வெண்ணிலாமிகுவிரிசடையரவொடுவெள்ளெருக்கலர்மத்தம்
பண்ணிலாவியபாடலோடாடலர்பயில்வுறுகீழ்வேளூர்ப்
பெண்ணிலாவியபாகனைப்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
2607 உண்ணிலாவிநின்றுள்கியசிந்தையாருலகினிலுள்ளாரே. ந

சேடுலாவியகங்கையைச்சடையிடைத்தொங்கவைத்தழகாக
நாடுலாவியபலிகொளுநாதனார்நலமிகுகீழ்வேளூர்ப்
பீடுலாவியபெருமையர்பெருந்திருக்கோயிலுட்பிரியாது
2608 நீடுலாவியநிமலனைப்பணிபவர்நிலைமிகப்பெறுவாரே. ச

துன்றுவார்சடைச்சுடர்மதிநகுதலைவடமணிசிரமாலை
மன்றுலாவியமாதவரினிதியல்மணமிகுகீழ்வேளூர்
நின்றுநீடியபெருந்திருக்கோயிலின்நிமலனைநினைவோடும்
2609 சென்றுலாவிநின்றேத்தவல்லார்வினைதேய்வதுதிணமாமே.

கொத்துலாவியகுழல்திகழ்சடையனைக்கூத்தனைமகிழ்ந்துள்கித்
தொத்துலாவியநூலணிமார்பினர்தொழுதெழுகீழ்வேளூர்ப்
பித்துலாவியபத்தர்கள்பேணியபெருந்திருக்கோயில்மன்னும்
2610 முத்துலாவியவித்தினையேத்துமின்முடுகியஇடர்போமே. சு

பிறைநிலாவியசடையிடைப்பின்னலும்வன்னியுந்துன்னும்
கறைநிலாவியகண்டரெண்டோளினர்காதல்செய்கீழ்வேளூர்
மறைநிலாவியஅந்தணர்மலிதருபெருந்திருக்கோயில்மன்னும்
2611 நிறைநிலாவியஈசனைநேசத்தால்நினைபவர்வினைபோமே. எ

மலைநிலாவியமைந்தனம்மலையினையெடுத்தலுமரக்கன்றன்
தலையெலாநெரிந்தலறிடவூன்றினனுறைதருகீழ்வேளூர்க்
கலைநிலாவியநாவினர்காதல்செய்பெருந்திருக்கோயிலுள்
2612 நிலைநிலாவியஈசனைநேசத்தால்நினையவல்வினைபோமே. அ

மஞ்சுலாவியகடற்கிடந்தவனொடுமலரவன்காண்பொண்ணுப்
பஞ்சுலாவியமெல்லடிப்பார்ப்பதிபாகனைப்பரிவோடும்
செஞ்சொலார்பலர்பரவியதொல்புகழ்மல்கியகீழ்வேளூர்
2613 நஞ்சுலாவியகண்டனைநணுகுமின்நடலைகள்நணுகாவே. கூ

சீறுலாவியதலையினர்நிலையிலாஅமணர்கள்சீவரத்தார்
வீறிலாதவெஞ்சொற்பலவிரும்பன்மின்சுரும்பமர்கீழ்வேளூர்
ஏறுலாவியகொடியனையேதமில்பெருந்திருக்கோயில்மன்னு
2614 பேறுலாவியபெருமையன்திருவடிபேணுமின்தவமாமே. ௧௦

குருண்டவார்குழற்சடையுடைக்குழகனைஅழகமர்கீழ்வேளூர்த்
திரண்டமாமறையவர்தொழும்பெருந்திருக்கோயிலெம்பெருமானை
இருண்டமேதியினின்மிகுவயல்மல்குபுகலிமன்சம்பந்தன்
2615 தெருண்டபாடல்வல்லாரவர்சிவகதிபெறுவதுதிடமாமே.

106 என்னபுண்ணியஞ்செய்தனைநெஞ்சமேயிருங்கடல்வையத்து
முன்னநீபுரிநல்வினைப்பயனிடைமுழுமணித்தரளங்கள்
மன்னுகாவிரிசூழ்திருவலஞ்சுழிவாணனைவாயாரப்
2616 பன்னியாதரித்தேத்தியும்பாடியும்வழிபடுமதனாலே. ௧

விண்டொழிந்தனநம்முடைவல்வினைவிரிகடல்வருநஞ்சம்
உண்டிறைஞ்சுவானவர்தமைத்தாங்கியஇறைவனையுலகத்தில்
வண்டுவாழ்குழல்மங்கையொர்பங்கனைவலஞ்சுழியிடமாகக்
கொண்டநாதன்மெய்த்தொழில்புரிதொண்டரோடினிதிருந்
2617 தமையாலே. ௨

திருந்தலார்புரந்தீயெழச்செறுவனவிறலின்கணடியாரைப்
பரிந்துகாப்பனபத்தியில்வருவனமத்தமாம்பிணிநோய்க்கு
மருந்துமாவனமந்திரமாவனவலஞ்சுழியிடமாக
2618 இருந்தநாயகனிமையவரேத்தியஇணையடித்தலந்தானே. ௩

கறைகொள்கண்டத்தர்காய்கதிர்நிறத்தினரறத்திறமுனி
வர்க்கன், றிறைவராவிடைநீழலிலிருந்துகந்தினிதருள்
பெருமானார், மறைகளோதுவர்வருபுனல்வலஞ்சுழியிட
மகிழ்ந்தருங்கானத், தறைகழல்சிலம்பார்க்கநின்றாடியஅற்
2619 புதமறியோமே. ௪

மண்ணர்நீரர்வண்காற்றினராற்றலாமெரியுருவொருபாகம்
பெண்ணராணெனத்தெரிவருவடிவினர்பெருங்கடற்பவளம்போல்
வண்ணராகிலும்வலஞ்சுழிபிரிகிலார்பரிபவர்மனம்புக்க
2620 எண்ணராகிலுமெனைப்பலஇயம்புவரிணையடிதொழுவாரே.

ஒருவராலுவமிப்பதையரியதோர்மேனியர்மடமாதர்
இருவராதரிப்பார்பலபூதமும்பேய்களுமடையாளம்

அருவராததோர்வெண்டலைகைப்பிடித்தகந்தொறும்பலிக்கென்று
2621 வருவரேவலர்வலஞ்சுழியடிகளேவரிவளைகவர்ந்தாரே. ௬

குன்றியூர்குடமூக்கிடம்வலம்புரங்குலவியநெய்த்தானம்
என்றிவ்வூர்களிலோமென்றுமியம்புவரிமையவர்பணிகேட்பார்
அன்றியூர்தமக்குள்ளன அறிகிலோம்வலஞ்சுழியரனார்பால்
2622 சென்றவூர்தனில்தலைப்படலாமென்றுசேயிழைதளர்வாமே.

குயிலினேர்மொழிக்கொடியிடைவெருவுறக்குலவரைப்பரப்பாய
கயிலையைப்பிடித்தெடுத்தவன்கதிர்முடிதோளிருபதுமூன்றி
மயிலினேரனசாயலோடமர்ந்தவன்வலஞ்சுழியெம்மானைப்
2623 பயிலவல்லவர்பரகதிகாண்பவரல்லவர்காணாரே. ௮

அழலதோம்பிய அலர்மிசையண்ணலுமரவணைத்துயின்
றானும், கழலுஞ்சென்னியுங்காண்பரிதாயவர்மாண்பமர்
தடக்கையில், மழலைவீணையர்மகிழ்திருவலஞ்சுழிவலங்
கொடுபாதத்தால், சுழலுமாந்தர்கள்தொல்வினையதனொடு
2624 துன்பங்கள்களைவாரே. ௯

அறிவிலாதவன்சமணர்கள்சாக்கியர்தவம்புரிந்தவஞ்செய்வார்
நெறியலாதனகூறுவர்மற்றவைதேறன்மின்மாறுநீர்
மறியுலாந்திரைக்காவிரிவலஞ்சுழிமருவியபெருமானைப்
2625 பிறிவிலாதவர்பெறுகதிபேசிடிலளவறுப்பொண்ணாதே. ௧௦

மாதொர்கூறனைவலஞ்சுழிமருவியமருந்தினைவயற்காழி
நாதன்வேதியன்ஞானசம்பந்தன்வாய்நவிற்றியதமிழ்மாலை
ஆதரித்திசைகற்றுவல்லார்சொலக்கேட்டுகந்தவர்தம்மை
2626 வாதியாவினைமறுமைக்குமிம்மைக்கும்வருத்தம்வந்தடையாவே.

107 விருதுகுன்றமாமேருவில்நாணரவா அனலெரியம்பாப்
பொருதுமூவெயில்செற்றவன்பற்றிநின்றுறைபதியெந்நாளும்
கருதுகின்றவூர்கனைகடற்கடிகமழ்பொழிலணிமாதோட்டம்
2627 கருதநின்றகேதீச்சரங்கைதொழக்கடுவினையடையாவே. ௧

பாடல்வீணையர்பலபலசரிதையரெருதுகைத்தருநட்டம்
ஆடல்பேணுவரமரர்கள்வேண்டநஞ்சுண்டிருள்கண்டத்தர்
ஈடமாவதுஇருங்கடற்கரையினிலெழில்திகழ்மாதோட்டம்
2628 கேடிலாதகேதீச்சரந்தொழுதெழக்கெடுமிடர்வினைதானே.

பெண்ணோர்பாகத்தர்பிறைதவழ்சடையின ரறைகழல் சிலம்பார்க்கச், சுண்ணமாதரித்தாடுவர்பாடுவரகந்தொறு மிடுபிச்சைக், குண்ணலாவதோரிச்சையினுழல்பவருயர் தருமாதோட்டத், தண்ணல்கண்ணுகேதீச்சரமடைபவர்க்
2629 கருவினையடையாவே. ௫

பொடிகொள்மேனியர் புலியதளரையினர்விரிதருகாத் தேந்தும், வடிகொள்மூவிலைவேலினர்நூலினர்மறிகடல் மாதோட்டத், தடிகளாதரித்திருந்தகேதீச்சரம்பரிந்தசிந் தையராகி, முடிகள்சாய்த்தடிபேணவல்லார்தம்மேல்
2630 மொய்த்தெழும்வினைபோமே. ௬

நல்லாற்றவும்ஞானநன்குடையர்தம்மடைந்தவர்க்கருளீய வல்லர்பார்மிசைவான்பிறப்பிறப்பிலர்மலிகடன்மாதோட்டத் தெல்லையில்புகழெந்தைகேதீச்சரமிராப்பகல்நினைந்தேத்தி
2631 அல்லலாசறுத்தரனடியிணைதொழுமன்பராமடியாரே. ௫

பேழைவார்சடைப்பெருந்திரு மகள்தனைப்பொருந்த வைத்தொருபாகம், மாழையங்கயற்கண்ணிபாலருளியபொ ருளினர்குடிவாழ்க்கை, வாழையம்பொழில்மந்திகள்களிப் புறமருவியமாதோட்டக், கேழல்வெண்மருப்பணிந்தநீள்
2632 மார்பர்கேதீச்சரம்பிரியாரே. ௬

பண்டுநால்வருக்கறமுரைத் தருளிப்பல்லுலகினிலுயிர் வாழ்க்கை, கண்டநாதனார்கடலிடங்கைதொழக்காதலித் துறைகோயில், வண்டுபண்செயுமாமலர்ப்பொழில்மஞ்ஞை நடமிடுமாதோட்டம், தொண்டர்நாள்தொறுந்துதிசெய
2633 அருள்செய்கேதீச்சரமதுதானே. ௭

தென்னிலங்கையர்குலபதிமலைநலிந் தெடுத்தவன்முடி திண்டோள், தன்னலங்கெடஅடர்த்தவற்கருள்செய்த தலைவனார்கடல்வாயப், பொன்னிலங்கியமுத்துமாமணி களும்பொருந்தியமாதோட்டத், துன்னியன்பொடுமடியவ
2634 ரிறைஞ்சுகேதீச்சரத்துள்ளாரே. ௮

பூவுளானுமப்பொருகடல்வண்ணனும்புவியிடந்தெழுந்தோடி மேவிநாடிநின்னடியிணைகாண்கிலாவித்தகமென்னாகும் மாவும்பூகமுங்கதலியும்நெருங்குமாதோட்டநன்னகர்மன்னித்
2635 தேவிதன்னொடுந்திருந்துகேதீச்சரத்திருந்தஎம்பெருமானே.

புத்தராய்ச்சிலபுனை துகிலுடையவர்புறனுரைச்சமணாதர்
எத்தராகிநின் றுண்பவரியம்பியஏழைமைகேளேன்மின்
மத்தயானையைமறுகிடவுரிசெய்துபோர்த்தவர்மாதோட்டத்
2636 தத்தர்மன்னுபாலாவியின்கரையிற்கேதீச்சரமடைமின்னே.

மாடெலாமணமுரசெனக்கடலினதொலிகவர்மாதோட்டத்
தாடலேறுடையண்ணல்கேதீச்சரத்தடிகளையணிகாழி
நாடுளார்க்கிறைஞானசம்பந்தன் சொல்நவின்றெழுபாமாலைப்
2637 பாடலாயினபாடுமின்பத்தர்கள்பரகதிபெறலாமே. கக

108 வடிகொள்மேனியர்வானமாமதியினர்நதியினர்மதுவார்
ந்த, கடிகொள்கொன்றையஞ்சடையினர்கொடியினருடை
புலியதளார்ப்பர், விடையதேறுமெம்மானமர்ந்தினிதுறை
விற்குடிவீரட்டம், அடியராகிநின்றேத்தவல்லார்தமைஅரு
2638 வினையடையாவே. க

களங்கொள்கொன்றையுங்கதிர்விரிமதியமுங்கடிகமழ்
சடைக்கேற்றி, உளங்கொள்பத்தர்பாலருளியபெருமையர்
பொருகரியுரிபோர்த்து, விளங்குமேனியரெம்பெருமா
னுறைவிற்குடிவீரட்டம், வளங்கொள்மாமலரால்நினைந்
2639 தேத்துவார்வருத்தமதறியாரே. உ

கரியகண்டத்தர்வெளியவெண் பொடியணிமார்பினர்
வலங்கையில், எரியர்புன்சடையிடம்பெறக்காட்டகத்
தாடியவேடத்தர், விரியுமாமலர்ப்பொய்கைசூழ்மதுமலிவிற்
குடிவீரட்டம், பிரிவிலாதவர்பெருந்தவத்தோரெனப்
2640 பேணுவருலகத்தே. ௩

பூதஞ்சேர்ந்திசைபாடலராடலர்பொலிதரநலமார்ந்த
பாதஞ்சேரிணைச்சிலம்பினர்கலம்பெறுகடலெழுவிடமுண்டார்
வேதமோதியநாவுடையானிடம்விற்குடிவீரட்டம்
2641 சேருநெஞ்சினர்க்கல்லதுண்டோபிணிதீவினைகெடுமாறே. ச

கடியவேற்றினர்கனலனமேனியரனலெழவூர்மூன்றும்
இடியமால்வரைகால்வளைத்தான்றனதடியவர்மேலுள்ள
வெடியவல்வினைவீட்டுவிப்பானுறைவிற்குடிவீரட்டம்
2642 படியதாகவேபரவுமின்பரவினாற்பற்றறுமருநோயே. ரு

பெண்ணொர்கூறினர்பெருமையர் சிறுமறிக்கையினர்
மெய்யார்ந்த, அண்ணலன்புசெய்வாரவர்க்கெளியவரரியவ

ரல்லார்க்கு, விண்ணிலார்பொழில்மல்கியமலர்விரிவிற்குடி வீரட்டம், எண்ணிலாவியசிந்தையினூர்தமக்கிடர்கள்வந்
2643 தடையாவே. சு, எ

இடங்கொள்மாகடலிலங்கையர் கோன்றனையிகலழிதர வூன்று, திடங்கொள்மால்வரையானுரையார்தருபொருளினனிருளார்ந்த, விடங்கொள்மாமிடறுடையவனுறைபதிவிற்குடிவீரட்டம், தொடங்குமாறிசைபாடிநின்றார்
2644 தமைத்துன்பநோயடையாவே. அ

செங்கண்மாலொடுநான்முகன்தேடியுந்திருவடியறியாமை எங்குமாரெரியாகியஇறைவனையறைபுனல்முடியார்ந்த வெங்கண்மால்வரைக்கரியுரித்துகந்தவன்விற்குடிவீரட்டம்
2645 தங்கையால்தொழுதேத்தவல்லாரவர்தவமல்குகுணத்தாரே.

பிண்டமுண்டுழல்வார்களும்பிரிதுவராடையரவர்வார்த்தை, பண்டுமின்றுமோர்பொருளெனக்கருதன்மின்பரிவுறுவீர்கேண்மின், விண்டமாமலர்ச்சடையவனிடமெனில்விற்குடிவீரட்டம், கண்டுகொண்டடிகாதல்செய்வாரவர்கருத்
2646 துறுங்குணத்தாரே. க0

விலங்கலேசிலையிடமெனவுடையவன்விற்குடிவீரட்டத், திலங்குசோதியையெம்பெருமான்றனையெழில்திகழ்கழல் பேணி, நலங்கொள்வாழ்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனற்றமிழ்மாலை, வலங்கொடேயிசைமொழியுமின்மொழிந்
2647 தக்கால்மற்றதுவரமாமே. கக

109 நீலமார்தருகண்டனேநெற்றியோர் கண்ணனேயொற்றைவிடைச், சூலமார்தருகையனேதுன்றுபைம்பொழில் கள்சூழ்ந்தழகாய, கோலமாமலர்மணங்கமழ்கோட்டூர்நற் கொழுந்தேயென்றெழுவார்கள், சாலநீள்தலமதனிடைப்
2648 புகழ்மிகத்தாங்குவர்பாங்காலே. க

பங்கயம்மலர்ச்சீறடிப்பஞ்சுறுமெல்விரலரவல்குல், மங் கைமார்பலர்மயில்குயில்கிளியெனமிழற்றிய மொழியார் மென், கொங்கையார்குழாங்குணலைசெய்கோட்டூர்நற் கொழுந்தேயென்றெழுவார்கள், சங்கையொன்றிலராகிச்
2649 சங்கான்திருவருள்பெறலெளிதாமே. உ

நம்பனார்நலமலர்கொடுதொழுதெழு மடியவர்தமக்கெல்
லாம், செம்பொனார்தருமெழில்திகழ்முலையவர்செல்வமல்
கியநல்ல, கொம்பனார்தொழுதாடியகோட்டூர்நற்கொழுந்தே
யென்றெழுவார்கள், அம்பொனார்தருமுலகினிலமரரோ
2650 டமர்ந்தினிதிருப்பாரே. ௩

பலவுநீள்பொழில்தீங்கனிதேன்பலா மாங்கனிபயில்
வாய, கலவமஞ்ஞைகள்நிலவுசொற்கிள்ளைகளன்னஞ்சேர்ந்
தழகாய, குலவுநீள்வயற்கயலுகள்கோட்டூர்நற்கொழுந்தே
யென்றெழுவார்கள், நிலவுசெல்வத்தராகிநீள்நிலத்திடை
2651 நீடியபுகழாரே. ௪

உருகுவாருள்ளத்தொண்சுடர் தனக்கென்றுமன்பரா
மடியார்கள், பருகுமாரமுதெனநின்றுபரிவொடுபத்திசெய்
தெத்திசையும், குருகுவாழ்வயல்சூழ்தருகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவார்கள், அருகுசேர்தருவினைகளு
2652 மகலும்போயவனருள்பெறலாமே. ௫

துன்றுவார்சடைத்தூமதிமத்தமுந் துன்னெருக்கார்
வன்னி, பொன்றினார்தலைக்கலனொடுபரிகலம்புலியுரியுடை
யாடை, கொன்றைபொன்னெனமலர்தருகோட்டூர்நற்
கொழுந்தேயென்றெழுவாரை, என்றுமேத்துவார்க்கிடரிலை
2653 கேடிலைஏதம்வந்தடையாவே. ௬

மாடமாளிகைகோபுரங்கூடங்கள்மணியரங் கணிசாலை,
பாடுசூழ்மதிற்பைம்பொன்செய்மண்டபம்பரிசொடு பயில்
வாய, கூடுபூம்பொழில்சூழ்தருகோட்டூர்நற்கொழுந்தே
யென்றெழுவார்கள், கேடதொன்றிலராகிநல்லுலகினிற்
2654 கெழுவுவர்புகழாலே. ௭

ஒளிகொள்வாளெயிற்றரக்கனவ்வுயர்வரை யெடுத்தலு
முமையஞ்சிச், சுளியவூன்றலுஞ்சோர்ந்திடவாளொடுநாள
வற்கருள்செய்த, குளிர்கொள்பூம்பொழில்சூழ்தருகோட்
டூர்நற்கொழுந்தினைத்தொழுவார்கள், தளிர்கொள்தாம
2655 ரைப் பாதங்களருள்பெறுந்தவமுடையவர்தாமே. ௮

பாடியாடுமெய்ப்பத்தர்கட்கருள்செயு முத்தினைப்பவ
ளத்தைத், தேடிமாலயன்காணவொண்ணாதஅத்திருவினைத்

தெரிவைமார், கூடியாடவர்கைதொழுகோட்டூர்நற்கொழுந் தேயென்றெழுவார்கள், நீடுசெல்வத்தராகியிவ்வுலகினில்
2656 நிகழ்தரு புகழாரே. க௯

கோணல்வெண்பிறைச்சடையனைக்கோட்டூர்நற்கொழுந் தினைச்செழுந்திரளைப், பூணல்செய்தடிபோற்றுமின்பொய் யிலாமெய்யன்நல்லருளென்றும், காணலொன்றிலாக்கார மண்தேரர்குண்டாக்கர்சொற்கருதாதே, பேணல்செய்தா
2657 னைத்தொழுமடியவர்பெருமையைப்பெறுவாரே. க௦

பந்துலாவிரற்பவளவாய்த்தேன்மொழிப் பாவையோ டுருவர்ரும், கொந்துலாமலர்விரிபொழிற்கோட்டூர்நற்கொ ழுந்தினைச்செழும்பவளம், வந்துலாவியகாழியுள்ஞானசம பந்தன்வாய்ந்துரைசெய்த, சந்துலாந்தமிழ்மாலைகள்வல்ல
2658 வர்தாங்குவர்புகழாலே. கக

110 செம்பொனார்தருவேங்கையும்ஞாழலுஞ்செருந்திசெண் பகமானைக், கொம்புமாரமும்மாதவிசுரபுனைகுருந்தலர்பரந் துந்தி, அம்பொனேர்வருகாவிரிவடகரைமாந்துறையுறை கின்ற, எம்பிரானிமையோர்தொழுபைங்கழலேத்துதல்
2659 செய்வோமே. க

விளவுதேனொடுசாதியின்பலங்களும்வேய்மணிநிரந்துந்தி அளவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானத் துளவமான்மகனைங்கணைக்காமனைச்சுடவிழித்தவனெற்றி
2660 அளகவாணுதலரிவைதன்பங்கனையன்றிமற்றறியோமே. உ

கோடுதேன்சொரிகுன்றிடைப்பூகமுங்கூந்தலின்குலைவாரி ஓடுநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைநம்பன் வாடினார்தலையிற்பலிகொள்பவன்வானவர் மகிழ்ந்தேத்தும்
2661 கேடிலாமணியைத்தொழலல்லதுகெழுமுதலறியோமே. ௩

இலவஞாழலுமீஞ்சொடுசுரபுன்னையிளமருதிலவங்கம் கலவிநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைகண்டன் அலைகொள்வார்புனலம்புலிமத்தமுமாடரவுடன்வைத்த
2662 மலையைவானவர்கொழுந்தினையல்லதுவணங்குதலறியோமே.

சோங்குசண்பகங்குருந்தொடுபாதிரிகுரவிடைமலருந்தி ஓங்குநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானைப்

பாங்கினாலிடுந்தூபமுந்தீபமும்பாட்டவிமலர்சேர்த்தித்
2663 தாங்குவாரவர்நாமங்கள்நாவினில்தலைப்படுந்தவத்தோரே.

பெருகுசந்தனங்காரகில்பீலியும்பெருமரம்நிமிர்ந்துந்திப்
பொருதுகாவிரிவடகரைமாந்துறைப்புனிதனெம்பெருமானைப்
பரிவினாலிருந்திரவியும்மதியமும்பார்மன்னர்பணிந்தேத்த
2664 மருதவானவர்வழிபடுமலரடிவணங்குதல்செய்வோமே. ௬

நறவமல்லிகைமுல்லையும்மௌவலும்நாண்மலரவைவாரி
இறவில்வந்தெறிகாவிரிவடகரைமாந்துறையிறையன்றங்
கறவனாகியகூற்றினைச்சாடிய அந்தணன்வரைவில்லால்
2665 நிறையவாங்கிவலித்தெயிலெய்தவன்நிரைகழல்பணிவோமே.

மந்தமார்பொழில்மாங்கனிமாந்திடமந்திகள்மாணிக்கம்
உந்திநீர்வருகாவிரிவடகரைமாந்துறையுறைவானை
நிந்தியாவெடுத்தார்த்தவல்லரக்கனைநெரித்திடுவிரலானைச்
2666 சிந்தியாமனத்தாரவர்சேர்வதுதீநெறியதுதானே. ௮

நீலமாமணிநித்திலத்தொத்தொடுநிரைமலர்நிரந்துந்தி
ஆலியாவருகாவிரிவடகரைமாந்துறையமர்வானை
மாலுநான்முகன்தேடியுங்காண்கிலாமலரடியிணைநாளும்
2667 கோலமேத்திநின்றாடுமின்பாடுமின்கூற்றுவன்நலியானே.

நின்றுணுஞ்சமண்தேரருநிலையிலர்நெடுங்கழைநறவேலம்
நன்றுமாங்கனிகதலியின்பலங்களும்நாணலின்நுரைவாரி
ஒன்றிநேர்வருகாவிரிவடகரைமாந்துறையொருகாலம்
2668 அன்றியுள்ளழிந்தெழும்பரிசழகிது அதுவவர்க்கிடமாமே.

வரைவளங்கவர்காவிரிவடகரைமாந்துறையுறைவானைச்
சிரபுரம்பதியுடையவன்கவுணியன்செழுமறைநிறைநாவன்
அரவெனும்பணிவல்லவன்ஞானசம்பந்தனன்புறுமாலை
2669 பாவிடுந்தொழில்வல்லவரல்லலும்பாவமுமிலர்தாமே. ௧௧

111 **த**ளரிளவளரெனவுமைபாடத்தாளம்மிடவோர்கழல்வீசிக்
கிளரிளமணியரவரையார்த்தாடும்வேடக்கிறிமையார் [மேல்
விளரிளமுலையவர்க்கருள்நல்கிவெண்ணீறணிந்தோர்சென்னியின்
2670 வளரிளமதியமொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. ௧

வெந்தழல்வடிவினர்பொடிப்பூசிவிரிதருகோவணவுடை
மேலோர், பந்தஞ்செய்தரவசைத்தொலிபாடிப்பலபல

கடைதொறும்பலிதேர்வார், சிந்தனைபுகுந்தெனக்கருள் நல்கிச்செஞ்சுடர்வண்ணர்தம்மடிபரவ, வந்தனைபலசெய
2671 இவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. உ

பண்ணிற்பொலிந்தவீணையர்பதினெண்கணமுமுணராநஞ் சுண்ணப்பொலிந்தமிடற்றினுருள்ளமுருகினுடனுவார் சுண்ணப்பொடிநீறணிமார்பர்சுடர்பொற்சடைமேல்திகழ்கின்ற
2672 வண்ணப்பிறையோடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. ந

எரிகிளர்மதியமொடெழில்நுதன்மே லெறிபொறியரவி னொடாறுமூழ்க,விரிகிளர்சடையினர்விடையேறிவெருவவந் திடர்செய்தவிகிர்தனர், புரிகிளர்பொடியணிதிருவகலம் பொன்செய்தவாய்மையர்பொன்மிளிரும், வரியரவரைக்
2673 கசைத்திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. ச

அஞ்சனமணிவணமெழில்நிறமா வகமிடறணிகொள வுடல்திமில,நஞ்சினையமரர்களமுதமென நண்ணியநறுநுத லுமைநடுங்க, வெஞ்சினமால்களியானையின்தோல்வெரு வுறப்போர்த்ததன்நிறமுமஃதே, வஞ்சனைவடிவினொடிவ
2674 ராணீர்வாய்மூரடிகள்வருவாரே. ரு

அல்லியமலர்புல்குவிரிகுழலார் கழலிணையடிநிழலவை பரவ, எல்லியம்போதுகொண்டெரியேந்தியெழிலொடு தொழிலவையிசையவல்லார், சொல்லியஅருமறையிசை பாடிச்சூடிளமதியினர்தோடுபெய்து, வல்லியந்தோலுடுத்
2675 திவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. சு

கடிபடுகொன்றைநன்மலர்திகழுங் கண்ணியர்விண்ண வர்கனமணிசேர், முடிபில்குமிறையவர்மறுகினல்லார்முறை முறைபலிபெயமுறுவல்செய்வார், பொடியணிவடிவொடு திருவகலம்பொன்னெனமிளிர்வதொரரவினொடும், வடி
2676 நுனைமழுவினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. எ

கட்டிணைபுதுமலர்க்கமழ்கொன்றைக் கண்ணியர்வீணை யர்தாமுமஃதே, எட்டுணைசாந்தமொடுமைதுணையா இறை வனுறைவதோரிடம்வினவில்,பட்டிணையகலல்குல்விரிகுழ லார்பாவையர்பலியெதிர்கொணர்ந்துபெய்ய, வட்டணை
2677 யாடலொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. அ

ஏனமருப்பினொடெழிலாமையிசையப்பூண்டோரேறேறிக்
கானமதிடமாவுறைகின்றகள்வர்கனவில்துயர்செய்து
தேனுணமலர்களுந்திவிம்மித்திகழ்பொற்சடைமேல்திகழ்கின்ற
2678 வானகன்மதியினொடிவராணீர்வாய்மூரடிகள்வருவாரே. கூ

சூடல்வெண்பிறையினர்சுடர்முடியர் சுண்ணவெண்
ணீற்றினர்சுடர்மழுவர், பாடல்வண்டிசைமுரல்கொன்றை
யந்தார்பாம்பொடுநூலவைபசைந்திலங்கக், கோடனன்
முகிழ்விரல்கூப்பிநல்லார்குறையுறு பலியெதிர்கொணர்ந்து
பெய்ய, வாடல்வெண்டலைபிடித்திவராணீர்வாய்மூரடிகள்
2679 வருவாரே. க0

திங்களோடருவரைப்பொழிற்சோலைத் தேனலங்கான
லந்திருவாய்மூர், அங்கமொடருமறையொலிபாடலழல்
நிறவண்ணர்தம்மடிபரவி, நங்கள்தம்வினைகெடமொழிய
வல்லஞானசம்பந்தன்தமிழ்மாலை, தங்கியமனத்தினால்
2680 தொழுதெழுவார்தமர்நெறியுலகுக்கோர்தவநெறியே. கக

**112** மாதோர்கூறுகந்தேறதேறிய
ஆதியானுறையாடானை
போதினாற்புனைந்தேத்துவார்தமை
2681 வாதியாவினைமாயுமே. க

வாடல்வெண்டலை அங்கையேந்திநின்
றாடலானுறையாடானை
தோடுலாமலர்தூவிக்கைதொழ
2682 வீடுநுங்கள்வினைகளே. உ

மங்கைகூறினன்மான்மறியுடை
அங்கையானுறையாடானை
தங்கையால்தொழுதேத்தவல்லவர்
2683 மங்குநோய்பிணிமாயுமே. ங

சுண்ணநீறணிமார்பில்தோல்புனை
அண்ணலானுறையாடானை
வண்ணமாமலர்தூவிக்கைதொழ
2684 எண்ணுவாரிடரேகுமே. ச

கொய்யணிம்மலர்க்கொன்றைசூடிய
ஐயன்மேவியஆடானை
கையணிம்மலரால்வணங்கிட
2685 வெய்யவல்வினைவீடுமே. ௫

வானிளம்மதிமல்குவார்சடை
ஆனஞ்சாடலன்ஆடானை
தேனணிம்மலர்சேர்த்தமுன்செய்த
2686 ஊனமுள்ளவொழியுமே. ௬

துலங்குவெண்மழுவேந்திச்சூழ்சடை
அலங்கலானுறையாடானை
நலங்கொள்மாமலர்தூவிநாள்தொறும்
2687 வலங்கொள்வார்வினைமாயுமே. ௭

வெந்தநீறணிமார்பில்தோல்புனை
அந்தமில்லவன்ஆடானை
கந்தமாமலர்தூவிக்கைதொழும்
2688 சிந்தையார்வினைதேயுமே. ௮

மறைவலாரொடுவானவர்தொழு
தறையுந்தண்புனல்ஆடானை
உறையுமீசனையேத்தத்தீவினை
2689 பறையும்நல்வினைபற்றுமே. ௯

மாயனும்மலரானுங்கைதொழ
ஆயஅந்தணன்ஆடானை
தூயமாமலர்தூவிக்கைதொழத்
2690 தீயவல்வினைதீருமே. ௧௦

வீடினார்மலிவெங்கடத்துநின்
றாடலானுறையாடானை
நாடிஞானசம்பந்தன்செந்தமிழ்
2691 பாடநோய்பிணிபாறுமே. ௧௧

113 பொடியிலங்குந்திருமேனியாளர்புலியதளினர்
அடியிலங்குங்கழலார்க்கஆடும்மடிகள்ளிடம்
இடியிலங்குங்குரலோதம்மல்கவ்வெறிவார்திரைக்
2692 கடியிலங்கும்புனல்முத்தலைக்குங்கடற்காழியே. ௧

மயிலிலங்குந்துயர்மாசறுப்பானருந்தொண்டர்கள்
அயலிலங்கப்பணிசெய்யநின்றவ்வடிகள்ளிடம்
புயலிலங்குங்கொடையாளர்வேதத்தொலிபொலியவே
2693 கயலிலங்கும்வயற்கழனிசூழுங்கடற்காழியே. உ

கூர்விலங்குந்திரிசூலவேலர்குழைக்காதினர்
மார்விலங்கும்புரிநூலுகந்தம்மணவாளனூர்
நேர்விலங்கல்லனதிரைகள்மோதந்நெடுந்தாரைவாய்க்
2694 கார்விலங்கல்லெனக்கலந்தொழுகுங்கடற்காழியே. ங

குற்றமில்லார்குறைபாடுசெய்வார்பழிதீர்ப்பவர்
பெற்றநல்லகொடிமுன்னுயர்த்தபெருமானிடம்
மற்றுநல்லார்மனத்தாலினியார்மறைகலையெலாம்
2695 கற்றுநல்லார்பிழைதெரிந்தளிக்குங்கடற்காழியே. ச

விருதிலங்குஞ்சரிதைத்தொழிலார்விரிசடையினர்
எருதிலங்கப்பொலிந்தேறுமெந்தைக்கிடமாவது
பெரிதிலங்கும்மறைகிளைஞரோதப்பிழைகேட்டலாற்
2696 கருதுகிள்ளைக்குலந்தெரிந்துதீர்க்குங்கடற்காழியே. ரு

தோடிலங்குங்குழைக்காதர்வேதர்சுரும்பார்மலர்ப்
பீடிலங்குஞ்சடைப்பெருமையாளர்க்கிடமாவது
கோடிலங்கும்பெரும்பொழில்கள்மல்கப்பெருஞ்செந்நெலின்
2697 காடிலங்கும்வயல்பயிலுமந்தண்கடற்காழியே. சு

மலையிலங்குஞ்சிலையாகவேகம்மதில்மூன்றெரித்
தலையிலங்கும்புனற்கங்கைவைத்தவ்வடிகட்கிடம்
இலையிலங்கும்மலர்க்கைதைகண்டல்வெறிவிரவலால்
2698 கலையிலங்குங்கணத்தினம்பொலியுங்கடற்காழியே. எ

முழுதிலங்கும்பெரும்பொருள்வாழும்முரண் இலங்கைக்
அழுதிரங்கச்சிரமுரமொடுங்கவ்வடர்த்தாங்கவன் [கோன்
தொழுதிரங்கத்துயர்தீர்த்துகந்தார்க்கிடமாவது
2699 கழுதும்புள்ளும்மதிற்புறமதாருங்கடற்காழியே. அ

பூவினானும்விரிபோதின்மல்குந்திருமகள்தனை
மேவினானும்வியந்தேத்தநீண்டாரழலாய்நிறைந்
தோவியங்கேயவர்க்கருள்புரிந்தவ்வொருவர்க்கிடங்
2700 காவியங்கண்மடமங்கையர்சேர்கடற்காழியே. கூ

உடைநவின்றுருடைவிட்டுழல்வாரிருந்தவத்தார்
முடைநவின்றம்மொழியொழித்துகந்தம்முதல்வன்னிடம்
மடைநவின்றபுனற்கெண்டைபாயும்வயல்மலிதரக்
2701 கடைநவின்றந்நெடுமாடமோங்குங்கடற்காழியே. ௧௦

கருகமுந்நீர்திரையோதமாருங்கடற்காழியுள்
உரகமாருஞ்சடையடிகள்தம்பாலுணர்ந்துறுதலாற்
பெருகமல்கும்புகழ்பேணுந்தொண்டர்க்கிசையார்தமிழ்
2702 விரகன்சொன்னஇவைபாடியாடக்கெடும்வினைகளே. ௧௧

114 தொண்டரஞ்சுகளிறும்மடக்கிச்சுரும்பார்மலர்
இண்டைகட்டிவழிபாடுசெய்யுமிடமென்பரால்
வண்டுபாடமயிலாலமான்கன்றுதுள்ளவரிக்
2703 கெண்டைபாயச்சுனைநீலமொட்டலருங்கேதாரமே. ௧

பாதம்விண்ணோர்பலரும்பரவிப்பணிந்தேத்தவே
வேதநான்கும்பதினெட்டோடாறும்விரித்தார்க்கிடம்
தாதுவிண்டமதுவுண்டுமிண்டிவருவண்டினம்
2704 கீதம்பாடமடமந்திகேட்டுகளுங்கேதாரமே. ௨

முந்திவந்துபுரோதாயமூழ்கிமுனிகள்பலர்
எந்தைபெம்மானெனநின்றிறைஞ்சும்மிடமென்பரால்
மந்திபாயச்சரேலச்சொரிந்தும்முரிந்துக்கபூக்
2705 கெந்தநாறக்கிளருஞ்சடையெந்தைகேதாரமே. ௩

உள்ளமிக்கார்குதிரைம்முகத்தாரொருகாலர்கள்
எள்கலில்லாஇமையோர்கள்சேரும்மிடமென்பரால்
பிள்ளைதுள்ளிக்கிளைபயில்வகேட்டுப்பிரியாதுபோய்க்
2706 கிள்ளையேனற்கதிர்கொணர்ந்துவாய்ப்பெய்யுங்கேதாரமே.

ஊழியூழியுணர்வார்கள்வேதத்தினொண்பொருள்களால்
வாழியெந்தையெனவந்திறைஞ்சும்மிடமென்பரால்
மேழிதாங்கியுழுவார்கள்போலவ்விரைதேரிய
2707 கேழல்பூழ்திகிளைக்கமணிசிந்துங்கேதாரமே. ௫

நீறுபூசிநிலத்துண்டுநீர்மூழ்கிநீள்வரைதன்மேல்
தேறுசிந்தையுடையார்களசேரும்மிடமென்பரால்
ஏறிமாவின்கனியும்பலவின்னிருஞ்சுளைகளும்
2708 கீறிநாளும்முசுக்கிளையொடுண்டுகளுங்கேதாரமே. ௬

மடந்தைபாகத்தடக்கிம்மறையோதிவானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல்வினைதீர்க்கநின்றார்க்கிடமென்பரால் [ல்
உடைந்தகாற்றுக்குயர்வேங்கைபூத்துதிரக்கல்லறைகண்மே
2709 கிடந்தவேங்கைசினமாமுகஞ்செய்யுங்கேதாரமே. எ

அரவமுந்நீரணியிலங்கைக்கோனையருவரைதனால்
வெருவவூன்றிவிரலாலடர்த்தார்க்கிடமென்பரால்
குரவங்கோங்கங்குளிர்பிண்டிஞாழல்சுரபுன்னைமேல்
2710 கிரமமாகவரிவண்டுபண்செய்யுங்கேதாரமே. அ

ஆழ்ந்துகாணாருயர்ந்தெய்தகில்லாரலமந்தவர்
தாழ்ந்துதந்தம்முடிசாயநின்றார்க்கிடமென்பரால் [னைக்
வீழ்ந்துசெற்றுநிழற்கிறங்கும்வேழத்தின்வெண்மருப்பி
2711 கீழ்ந்துசிங்கங்குருகுண்ணமுத்துதிருங்கேதாரமே. கூ

கடுக்கள்தின்றுகழிமீன்கவர்வார்கள்மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பாரவரெய்தவொண்ணாஇடமென்பரால்
அடுக்கநின்றவ்வறவுரைகள்கேட்டாங்கவர்வினைகளைக்
2712 கெடுக்கநின்றபெருமானுறைகின்றகேதாரமே. க0

வாய்ந்தசெந்நெல்விளைகழனிமல்கும்வயற்காழியான்
ஏய்ந்தநீர்க்கோட்டிமையோருறைகின்றகேதாரத்தை
ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள்பத்தும்மிசைவல்லவர்
2713 வேந்தராகியுலகாண்டுவீடுகதிபெறுவரே. கக

115 வெங்கள்விம்முகுழலிளையராடவ்வெறிவிரவுநீர்ப்
பொங்குசெங்கட்கருங்கயல்கள்பாயும்புகலூர்தனுள்
திங்கள்சூடித்திரிபுரமோரம்பாலெரியூட்டிய
2714 எங்கள்பெம்மானடிபரவநாளும்மிடர்கழியுமே. க

வாழ்ந்தநாளும்மினிவாழுநாளும்மிவையறிதிரேல்
வீழ்ந்தநாளெம்பெருமானையேத்தாவிதியில்லிர்காள்
போழ்ந்ததிங்கட்புரிசடையினான்றன்புகலூரையே
2715 சூழ்ந்தவுள்ளமுடையீர்களுங்கள்துயர்தீருமே. உ

மடையினெய்தல்கருங்குவளைசெய்யம்மலர்த்தாமரை
புடைகொள்செந்நெல்விளைகழனிமல்கும்புகலூர்தனுள்
தொடைகொள்கொன்றைபுனைந்தானொர்பாகம்மதிசூடியை
2716 அடையவல்லாரமருலகமாளப்பெறுவார்களே. ங

பூவுந்நீரும்பலியுஞ்சமந்துபுகலூரையே
நாவினாலேநவின்றேத்தலோவார்செவித்துளைகளால்
யாவுங்கேளாரவன்பெருமையல்லாலடியார்கள்தாம்
2717 ஓவுநாளும்முணர்வொழிந்தநாளென்றுளங்கொள்ளவே. ௪

அன்னங்கன்னிப்பெடைபுல்கியொல்கியணிநடையவாய்ப்
பொன்னங்காஞ்சிமலர்ச்சின்னமாலும்புகலூர்தனுள்
முன்னம்மூன்றுமதிலெரித்தமூர்த்திதிறங்கருதுங்கால்
2718 இன்னரென்னப்பெரிதரியரேத்தச்சிறிதெளியரே. ௫

குலவராகக்குலமிலருமாகக்குணம்புகழுங்கால்
உலகினல்லகதிபெறுவரேனும்மலரூறுதேன்
புலவமெல்லாம்வெறிகமழுமந்தண்புகலூர்தனுள்
2719 நிலவமல்குசடையடிகள்பாதந்நினைவார்களே. ௬

ஆணும்பெண்ணுமெனநிற்பரேனும்மரவாரமாப்
பூணுமேனும்புகலூர்தனக்கோர்பொருளாயினான்
ஊணுமூராரிடுபிச்சையேற்றுண்டுடைகோவணம்
2720 பேணுமேனும்பிரானென்பராலெம்பெருமானையே. ௭

உய்யவேண்டிலெழுபோதநெஞ்சேயுயரிலங்கைக்கோன்
கைகளொல்கக்கருவரையெடுத்தானையோர்விரலினால்
செய்கைதோன்றச்சிதைத்தருளவல்லசிவன்மேயபூம்
2721 பொய்கைசூழ்ந்தபுகலூர்புகழப்பொருளாகுமே. ௮

நேமியானுமுகநான்குடையந்நெறியண்ணலும்
ஆமிதென்றுதகைந்தேத்தப்போயாரழலாயினான்
சாமிதாதைசரணாகுமென்றுதலைசாய்மினோ
2722 பூமியெல்லாம்புகழ்செல்வமல்கும்புகலூரையே. ௯

வேர்த்தமெய்யருருவத்துடைவிட்டுழல்வார்களும்
போர்த்தகூறைப்போதிநீழலாரும்புகலூர்தனுள்
தீர்த்தமெல்லாஞ்சடைக்கரந்ததேவன்திறங்கருதுங்கால்
2723 ஓர்த்துமெய்யென்றுணராதுபாதந்தொழுதுய்ம்மினே. ௧௦

புந்தியார்ந்தபெரியோர்களேத்தும்புகலூர்தனுள்
வெந்தசாம்பற்பொடிப்பூசவல்லவிடையூர்தியை
அந்தமில்லா அனலாடலானையணிஞானசம்
2724 பந்தன்சொன்னதமிழ்பாடியாடக்கெடும்பாவமே. ௧௧

116 கூனற்றிங்கட்குறுங்கண்ணிகான்றநெடுவெண்ணிலா
ஏனற்பூத்தம்மராங்கோதையோடும்விராவுஞ்சடை
வானநாடன் அமரர்பெருமாற்கிடமாவது
2725 கானல்வேலிகழிசூழ்கடல்நாகைக்காரோணமே. க

விலங்கலொன்றுசிலையாமதில்மூன்றுடன்வீட்டினன்
இலங்குகண்டத்தெழிலாமைபூண்டாற்கிடமாவது
மலங்கியோங்கிவ்வருவெண்டிரைமல்கியமால்கடல்
2726 கலங்கலோதங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. உ

வெறிகொளாருங்கடற்கைதநெய்தல்விரிபூம்பொழில்
முறிகொள்ஞாழல்முடப்புன்னைமுல்லைம்முகைவெண்மலர்
நறைகொள்கொன்றைநயந்தோங்குநாதற்கிடமாவது
2727 கறைகொளோதங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. ங

வண்டுபாடவ்வளர்கொன்றைமாலைம்மதியோடுடன்
கொண்டகோலங்குளிர்கங்கைதங்குங்குருள்குஞ்சியுள்
உண்டுபோலும்மெனவைத்துகந்தவ்வொருவற்கிடம்
2728 கண்டல்வேலிகழிசூழ்கடல்நாகைக்காரோணமே. ச

வார்கொள்கோலம்முலைமங்கைநல்லார்மகிழ்ந்தேத்தவே
நீர்கொள்கோலச்சடைநெடுவெண்டிங்கள்திகழ்வெய்தவே
போர்கொள்சூலப்படைபுல்குகையார்க்கிடமாவது
2729 கார்கொளோதங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. ரு

விடையதேறிவ்விடவரவசைத்தவ்விகிர்தரவர்
படைகொள்பூதம்பலபாடஆடும்பரமாயவர்
உடைகொள்வேங்கையுரிதோலுடையார்க்கிடமாவது
2730 கடைகொள்செல்வங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. சூ

பொய்துவாழ்வார்மனம்பாழ்படுக்கும்மலர்ப்பூசனை
செய்துவாழ்வார்சிவன்சேவடிக்கேசெலுஞ்சிந்தையார்
எய்தவாழ்வாரெழில்நக்கரெம்மாற்கிடமாவது
2731 கைதல்வேலிகழிசூழ்கடல்நாகைக்காரோணமே. எ

பத்திரட்டிதிரள்தோளுடையான்முடிபத்திற
அத்திரட்டிவிரலாலடர்த்தார்க்கிடமாவது
மைத்திரட்டிவ்வருவெண்டிரைமல்கியமாகடல்
2732 கைத்திரட்டுங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. அ

நல்லபோதிலுறைவானுமாலுங்நடுக்கத்தினல்
அல்லராவரெனநின்றபெம்மாற்கிடமாவது
மல்லலோங்கிவ்வருவெண்டிரைமல்கியமாகடல்
2733 கல்லலோதங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. ௯

உயர்ந்தபோதினுருவத்துடைவிட்டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டையிடுபிண்டமாவுண்டுழல்வார்களும்
நயந்துகாணுவகைநின்றநாதர்க்கிடமாவது
2734 கயங்கொளோதங்கழிசூழ்கடல்நாகைக்காரோணமே. ௧௦

மல்குதண்பூம்புனல்வாய்ந்தொழுகும்வயற்காழியான்
நல்லகேள்வித்தமிழ்ஞானசம்பந்தன்நல்லார்கள்முன்
வல்லவாறேபுனைந்தேத்துங்காரோணத்துவண்டமிழ்
2735 சொல்லுவார்க்குமிவைகேட்பவர்க்குந்துயரில்லையே. ௧௧

117 மண்டுகங்கைசடையிற்கரந்தும்மதிசூடிமான்
கொண்டகையாற்புரமூன்றெரித்தகுழகன்னிடம்
எண்டிசையும்புகழ்போய்விளங்கும்மிரும்பைதனுள்
2736 வண்டுகீதம்முரல்பொழில்சுலாய்நின்றமாகாளமே. ௧

வேதவித்தாய்வெள்ளைநீறுபூசிவினையாயின
கோதுவித்தாநீறெழக்கொடிமாமதிலாயின
ஏதவித்தாயினதீர்க்குமிடம்மிரும்பைதனுள்
2737 மாதவத்தோர்மறையோர்தொழநின்றமாகாளமே. ௨

வெந்தநீறும்மெலும்பும்மணிந்தவிடையூர்தியான்
எந்தைபெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுள்
கந்தமாயபலவின்கனிகள்கமழும்பொழில்
2738 மந்தியேறிக்கொணர்ந்துண்டுகள்கின்றமாகாளமே. ௩

நஞ்சுகண்டத்தடக்கிக்கடுங்கும்மலையான்மகள்
அஞ்சவேழமுரித்தபெருமானமருமிடம்
எஞ்சவில்லாப்புகழ்போய்விளங்கும்மிரும்பைதனுள்
2739 மஞ்சிலோங்கும்பொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. ௪

பூசுமாசில்பொடியான்விடையான்பொருப்பான்மகள்
கூசஆனையுரித்தபெருமான்குறைவெண்மதி
ஈசனெங்களிறைவனிடம்போலிரும்பைதனுள்
2740 மாசிலோர்கள்மலர்கொண்டணிகின்றமாகாளமே. ௫

குறைவதாயகுளிர்திங்கள்சூடிக்குனித்தான்வினை
பறைவதாக்கும்பரமன்பகவன்பரந்தசடை
இறைவனெங்கள்பெருமானிடம்போலிரும்பைதனுள்
2741 மறைகள்வல்லார்வணங்கித்தொழுகின்றமாகாளமே. சு

பொங்குசெங்கண்ணரவும்மதியும்புரிபுன்சடைத்
தங்கவைத்தபெருமானெனநின்றவர்தாழ்விடம்
எங்குமிச்சையமர்ந்தானிடம்போலிரும்பைதனுள்
2742 மங்குல்தோயும்பொழில்சூழ்ந்தழகாயமாகாளமே. எ

கட்டத்தோடுநரியாடுகானத்தெரியாடுவான்
அட்டமூர்த்தியழல்போலுருவன்னழகாகவே
இட்டமாகவிருக்குமிடம்போலிரும்பைதனுள்
2743 வட்டஞ்சூழ்ந்துபணிவார்பிணிதீர்க்குமாகாளமே. அ

அட்டகாலன்றனைவவ்வினனவ்வரக்கன்முடி
எட்டுமற்றும்மிருபத்திரண்டும்மிறவூன்றினான்
இட்டமாகவிருப்பானவன்போலிரும்பைதனுள்
2744 மட்டுவார்ந்தபொழில்சூழ்ந்தெழிலாருமாகாளமே. கூ

அரவமார்த்தன்றனலங்கையேந்தியடியும்முடி
பிரமன்மாலும்மறியாமைநின்றபெரியோனிடம்
குரவமாரும்பொழிற்குயில்கள்சேரும்மிரும்பைதனுள்
2745 மருவிவானோர்மறையோர்தொழுகின்றமாகாளமே. க0

எந்தைபெம்மானிடமெழில்கொள்சோலையிரும்பைதனுள்
மந்தமாயபொழில்சூழ்ந்தழகாருமாகாளத்தில்
அந்தமில்லாஅனலாடுவானையணிஞானசம்
2746 பந்தன்சொன்னதமிழ்பாடவல்லார்பழிபோகுமே. கக

118 பொடிகள்பூசிப்பலதொண்டர்கூடிப்புலர்காலையே
அடிகளாரத்தொழுதேத்தநின்றவ்வழகன்னிடம்
கொடிகளோங்கிக்குலவும்விழவார்திலதைப்பதி
2747 வடிகொள்சோலைம்மலர்மணங்கமழும்மதிமுத்தமே. க

தொண்டர்மிண்டிப்புகைவிம்முசாந்துங்கமழ்துணையலும்
கொண்டுகண்டார்குறிப்புணரநின்றகுழகன்னிடம்
தெண்டிரைப்பூம்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
2748 வண்டுகெண்டுற்றிசைபயிலுஞ்சோலைம்மதிமுத்தமே. உ

அடலுளேறுய்த்துகந்தானடியாரமரர்தொழக்
கடலுள்நஞ்சமமுதாகவுண்டகடவுள்ளிடம்
திடலடங்கச்செழுங்கழனிசூழ்ந்ததிலதைப்பதி
2749 மடலுள்வாழைக்கனிதேன்பிலிற்றும்மதிமுத்தமே. ௩

கங்கைதிங்கள்வன்னிதுன்னெருக்கின்னொடுகூவிளம்
வெங்கணாகம்விரிசடையில்வைத்தவிகிர்தன்னிடம்
செங்கயல்பாய்புனலரிசில்சூழ்ந்ததிலதைப்பதி
2750 மங்குல்தோயும்பொழில்சூழ்ந்தழகார்மதிமுத்தமே. ௪

புரவியேழும்மணிபூண்டியங்குங்கொடித்தேரினான்
பரவிநின்றுவழிபாடுசெய்யும்பரமேட்டியூர்
விரவிஞாழல்விரிகோங்குவேங்கைசுரபுன்னைகள்
2751 மரவமவ்வல்மலருந்திலதைம்மதிமுத்தமே. ௫

விண்ணர்வேதம்விரித்தோதவல்லாரொருபாகமும்
பெண்ணரெண்ணாரெயில்செற்றுகந்தபெருமானிடம்
தெண்ணிலாவின்னொளிதீண்டுசோலைத்திலதைப்பதி
2752 மண்ணுளார்வந்தருள்பேணநின்றம்மதிமுத்தமே. ௬

ஆறுசூடியடையார்புரஞ்செற்றவர்பொற்றொடி
கூறுசேரும்முருவர்க்கிடமாவதுகூறுங்கால்
தேறலாரும்பொழில்சூழ்ந்தழகார்திலதைப்பதி
2753 மாறிலாவண்புனலரிசில்சூழ்ந்தம்மதிமுத்தமே. ௭

கடுத்துவந்தகனல்மேனியினான்கருவரைதனை
எடுத்தவன்றன்முடிதோளடர்த்தார்க்கிடமாவது
புடைக்கொள்பூகத்திளம்பாளைபுல்கும்மதுப்பாயவாய்
2754 மடுத்துமந்தியுகளுந்திலதைம்மதிமுத்தமே. ௮

படங்கொள்நாகத்தணையானும்பைந்தாமரையின்மிசை
இடங்கொள்நால்வேதனுமேத்தநின்றஇறைவன்னிடம்
திடங்கொள்நாவினிசைதொண்டர்பாடுந்திலதைப்பதி
2755 மடங்கல்வந்துவழிபாடுசெய்யும்மதிமுத்தமே. ௯

புத்தர்தேரர்பொறியில்சமணர்கருவீறிலாப்
பித்தர்சொன்னம்மொழிகேட்கிலாதபெருமானிடம்
பத்தர்சித்தர்பணிவுற்றிறைஞ்சுந்திலதைப்பதி
2756 மத்தயானைவழிபாடுசெய்யும்மதிமுத்தமே. ௧௦

மந்தமாரும்பொழில்சூழ்திலதைம்மதிமுத்தர்மேல்
கந்தமாருங்கடற்காழியுள்ளான்தமிழ்ஞானசம்
பந்தன்மாலைபழிதீரநின்றேத்தவல்லார்கள்போய்ச்
2757 சிந்தைசெய்வார்சிவன்சேவடிசேர்வதுதிண்ணமே. கக

119 தழைகொள்சந்தும்மகிலும்மயிற்பீலியுஞ்சாதியின்
பழமுமுந்திப்புனல்பாய்பழங்காவிரித்தென்கரை
நழுவில்வானோர்தொழநல்குசீர்மல்குநாகேச்சரத்
2758 தழகர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கழகாகுமே. க

பெண்ணொர்பாகம்மடையச்சடையிற்புனல்பேணிய
வண்ணமானபெருமான்மருவும்மிடமண்ணுளார்
நண்ணிநாளுந்தொழுதேத்திநன்கெய்துநாகேச்சரம்
2759 கண்ணினாற்காணவல்லாரவர்கண்ணுடையார்களே. உ

குறவர்கொல்லைப்புனங்கொள்ளைகொண்டும்மணிகுலவுநீர்
பறவையாலப்பரக்கும்பழங்காவிரித்தென்கரை
நறவநாறும்பொழில்சூழ்ந்தழகாயநாகேச்சரத்
2760 திறைவர்பாதந்தொழுதேத்தவல்லார்க்கிடரில்லையே. ங

கூசநோக்காதுமுன்சொன்னபொய்கொடுவினைகுற்றமும்
நாசமாக்கும்மனத்தார்கள்வந்தாடுநாகேச்சரம்
தேசமாக்குந்திருக்கோயிலாக்கொண்டசெல்வன்கழல்
2761 நேசமாக்குந்திறத்தாரறத்தார்நெறிப்பாலரே. ச

வம்புநாறும்மலரும்மலைப்பண்டமுங்கொண்டுநீர்
பைம்பொன்வாரிக்கொழிக்கும்பழங்காவிரித்தென்கரை
நம்பன்நாளும்அமர்கின்றநாகேச்சரநண்ணுவார்
2762 உம்பர்வானோர்தொழச்சென்றுடனுவதுமுண்மையே. ரு

காளமேகந்நிறக்காலனோடந்தகன்கருடனும்
நீளமாய்நின்றெய்தகாமனும்பட்டனநினைவுறின்
நாளுநாதன்னமர்கின்றநாகேச்சரநண்ணுவார்
2763 கோளுநாளுந்தீயவேனுநன்காங்குறிக்கொண்மினே. சு

வேயுதிர்முத்தொடுமத்தயானைமருப்பும்விராய்ப்
பாய்புனல்வந்தலைக்கும்பழங்காவிரித்தென்கரை
நாயிறுந்திங்களுங்கூடிவந்தாடுநாகேச்சரம்
2764 மேயவன்றன்னடிபோற்றியென்பார்வினைவீடுமே. எ

இலங்கைவேந்தன்சிரம்பத்திரட்டியெழில்தோள்களும்
மலங்கிவீழும்மலையாலடர்த்தானிடமல்கிய
நலங்கொள்சிந்தையவர்நாள்தொறுங்கண்ணுநாகேச்சரம்
2765 வலங்கொள்சிந்தையுடையாரிடராயினமாயுமே. அ

கரியமாலும்மயனும்மடியும்முடிகாண்பொணு
எரியதாகிநிமிர்ந்தானமரும்மிடமீண்டுகா
விரியினீர்வந்தலைக்குங்கரைமேவுநாகேச்சரம்
2766 பிரிவிலாதவ்வடியார்கள்வானிற்பிரியார்களே. கூ

தட்டிடுக்கியுறிதூக்கியகையினர்சாக்கியர்
கட்டுரைக்கும்மொழிகொள்ளலும்வெள்ளிலங்காட்டிடை
நட்டிருட்கண்நடமாடியநாதன்நாகேச்சரம்
2767 மட்டிருக்கும்மலரிட்டடிவீழ்வதுவாய்மையே. க0

கந்தநாறும்புனற்காவிரித்தென்கரைக்கண்ணுதல்
நந்திசேருந்திருநாகேச்சரத்தின்மேல்ஞானசம்
பந்தன்காவிற்பனுவல்லிவைபத்தும்வல்லார்கள்போய்
2768 எந்தையீசனிருக்குமுலகெய்தவல்லார்களே. கக

120 சாந்தம்வெண்ணீறெனப்பூசிவெள்ளஞ்சடைவைத்தவர்
காந்தளாரும்விரலேழையோடாடியகாரணம்
ஆய்ந்துகொண்டாங்கறியந்நிறைந்தாரவரார்கொலோ
2769 வேந்தன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மெய்ம்மையே.

வெண்டலையோர்கலனாப்பலிதேர்ந்துவிரிசடைக்
கொண்டலாரும்புனல்சேர்த்துமையாளொடுங்கூட்டமா
விண்டவர்தம்மதிலெய்தபின்வேனில்வேள்வெந்தெழக்
2770 கண்டவர்மூக்கீச்சரத்தெம்மடிகள்செய்கன்மமே. உ

மருவலார்தம்மதிலெய்ததுவும்மான்மதலையை
உருவிலாவ்வெரியூட்டியதும்முலகுண்டதால்
செருவிலாரும்புலிசெங்கயலானையினான்செய்த
2771 பொருவின்மூக்கீச்சரத்தெம்மடிகள்செயும்பூசலே. ந

அன்னமன்னந்நடைச்சாயலாளோடழகெய்தவே
மின்னையன்னசடைக்கங்கையாள்மேவியகாரணம்
தென்னன்கோழியெழில்வஞ்சியுமோங்குசெங்கோலினான்
2772 மன்னன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்மாயமே. ச

விடமுனாவ்வழல்வாயதோர்பாம்பரைவீக்கியே
நடமுனாவ்வழலாடுவர்பேயொடுநள்ளிருள்
வடமனீடுபுகழ்ப்பூழியன்தென்னவன்கோழிமன்
2773 அடன்மன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே. ரு

வெந்தநீறுமெய்யிற்பூசுவராடுவர்வீங்கிருள்
வந்தெனாவ்வளைகொள்வதுமிங்கொருமாயமாம்
அந்தண்மாமானதன்னேரியன்செம்பியனுக்கிய
2774 எந்தைமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரேதமே. சு

அரையிலாருங்கலையில்லவனுெனாடுபெண்ணுமாய்
உரையிலாவ்வழலாடுவரொன்றலர்காண்மினோ
விரவலார்தம் மதில்மூன்றுடன்வெவ்வழலாக்கினான்
2775 அரையன்மூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோரச்சமே. எ

ஈர்க்குநீர்நெஞ்சடைக்கேற்றதுங்கூற்றையுதைத்ததும்
கூர்க்குநன்மூவிலைவேல்வலனேந்தியகொள்கையும்
ஆர்க்கும்வாயானரக்கன்னுரத்தைந்நெரித்தவ்வடல்
2776 மூர்க்கன்மூக்கீச்சரத்தடிகள்செய்யாநின்றமொய்ம்பதே. அ

நீருளாரும்மலர்மேலுறைவான்நெடுமாலுமாய்ச்
சீருளாருங்கழல்தேடமெய்த்தீத்திரளாயினான்
சீரினாலங்கொளிர்தென்னவன்செம்பியன்வில்லவன்
2777 சேருமூக்கீச்சரத்தடிகள்செய்கின்றதோர்செம்மையே. கூ

வெண்புலான்மார்பிடுதுகிலினர்வெற்றரையுழல்பவர்
உண்பினாலேயுரைப்பார்மொழியூனமதாக்கினான்
ஒண்புலால்வேல்மிகவல்லவனோங்கெழிற்கிள்ளிசேர்
2778 பண்பின்மூக்கிச்சரத்தடிகள்செய்கின்றதோர்பச்சையே. ௧௦

மல்லையார்மும்முடிமன்னர்மூக்கீச்சரத்தடிகளைச்
செல்வராகநினையும்படிசேர்த்தியசெந்தமிழ்
நல்லராய்வாழ்பவர்காழியுள்ஞானசம்பந்தன்
2779 சொல்லவல்லாரவர்வானுலகாளவும்வல்லரே. ௧௧

121 முன்னநின்றமுடக்கால்முயற்கருள்செய்துநீள்
புன்னைநின்றுகமழ்பாதிரிப்புலியூருளான்
தன்னைநின்றுவணங்குந்தனைத்தவமில்லிகள்
2780 பின்னைநின்றபிணியாக்கையைப்பெறுவார்களே. ௧

கொள்ளிநக்கபகுவாயபேய்கள்குழைந்தாடவே
முள்ளிலவம்முதுகாட்டுறையும்முதல்வன்னிடம்
புள்ளினங்கள்பயிலும்பாதிரிப்புலியூர்தனை
2781 உள்ளநம்மேல்வினையாயினஒழியுங்களே. ௨

மருளினல்லார்வழிபாடுசெய்யும்மழுவாளர்மேல்
பொருளினல்லார்பயில்பாதிரிப்புலியூருளான்
வெருளின்மானின்பிணைநோக்கல்செய்துவெறிசெய்தபின்
2782 அருளியாகத்திடைவைத்ததுவும்மழகாகவே. ௩

போதினாலும்புகையாலுமுய்த்தேயடியார்கள்தாம்
போதினாலேவழிபாடுசெய்யப்புலியூர்தனுள்
ஆதிநாலும்மவலம்மிலாதஅடிகள்மறை
2783 ஓதிநாளும்மிடும்பிச்சையேற்றுண்டுணப்பாலதே. ௪

ஆகநல்லாரமுதாக்கவுண்டானழலைந்தலை
நாகநல்லார்பரவந்நயந்தங்கரையார்த்தவன்
போகநல்லார்பயிலும்பாதிரிப்புலியூர்தனுள்
2784 பாகநல்லாளொடுந்நின்றஎம்பரமேட்டியே. ௫

மதியமொய்த்தகதிர்போலொளிம்மணற்கானல்வாய்ப்
புதியமுத்தந்திகழ்பாதிரிப்புலியூரெனும்
பதியில்வைக்கப்படுமெந்தைதன்பழந்தொண்டர்கள்
2785 குதியுங்கொள்வர்விதியுஞ்செய்வர்குழகாகவே. ௬

கொங்கரவப்படுவண்டறைகுளிர்கானல்வாய்ச்
சங்கரவப்பறையின்னொலியவைசார்ந்தெழப்
பொங்கரவம்முயர்பாதிரிப்புலியூர்தனுள்
2786 அங்கரவம்மரையில்லசைத்தானையடைமினே. ௭

வீக்கமெழும்மிலங்கைக்கிறைவிலங்கல்லிடை
ஊக்கமொழிந்தலறவ்விரலாலிறையூன்றினான்
பூக்கமழும்புனற்பாதிரிப்புலியூர்தனை
2787 நோக்கமெலிந்தணுகாவினைநுணுகுங்களே. ௮

அன்னந்தாவும்மணியார்பொழில்மணியார்புன்னை
பொன்னந்தாதுசொரிபாதிரிப்புலியூர்தனுள்
முன்னந்தாவியடிமூன்றளந்தவன்நான்முகன்
2788 தன்னந்தாளுற்றுணராததோர்தவநீதியே. ௯

உரிந்தகூறையுருவத்தொடுதெருவத்திடைத்
திரிந்துதின்னுஞ்சிறுநோன்பரும்பெருந்தேரரும்
எரிந்துசொன்னவ்வுரைகொள்ளாதேயெடுத்தேத்துமின்
2789 புரிந்தவெண்ணீற்றண்ணல்பாதிரிப்புலியூரையே. க0

அந்தணல்லாரகன்காழியுள் ஞானசம்
பந்தனல்லார்பயில்பாதிரிப்புலியூர்தனுள்
சந்தமாலைத்தமிழ்பத்திவை தரித்தார்கள்மேல்
2790 வந்துதீயவ்வடையாமையால்வினைமாயுமே. கக

122 விடையதேறிவெறியக்கரவார்த்தவிமலனார்
படையதாகப்பரசுதரித்தார்க்கிடமாவது
கொடையிலோவார்குலமும்முயர்ந்தம்மறையோர்கள் தாம்
2791 புடைகொள்வேள்விப்புகையும்பருலாவும்புகலியே. க

வேலைதன்னில்மிகுநஞ்சினையுண்டிருள்கண்டனார்
ஞாலமெங்கும்பலிகொண்டுழல்வார்நகராவது
சாலநல்லார்பயிலும்மறைகேட்டுப்பதங்களைச்
2792 சோலைமேவுங்கிளித்தான்சொற்பயிலும்புகலியே. உ

வண்டுவாழுங்குழல்மங்கையோர்கூறுகந்தார்மதித்
துண்டமேவுஞ்சுடர்த்தொல்சடையார்க்கிடமாவது
கெண்டைபாயமடுவில்லுயர்கேதகைமாதவி
2793 புண்டரீகம்மலர்ப்பொய்கைநிலாவும்புகலியே. ங

திரியுமூன்றுபுரமும்மெரித்துத்திகழ்வானவர்க்
கரியபெம்மானரவக்குழையார்க்கிடமாவது
பெரியமாடத்துயருங்கொடியின்மிடைவால்வெயிற்
2794 புரிவிலாததடம்பூம்பொழில்சூழ்தண்புகலியே. ச

ஏவிலாருஞ்சிலைப்பார்த்தனுக்கின்னருள்செய்தவர்
நாவினாள்மூக்கரிவித்தநம்பர்க்கிடமாவது
மாவிலாருங்கனிவார்கிடங்கில்விழவாளைபோய்ப்
2795 பூவிலாரும்புனற்பொய்கையில்வைகும்புகலியே. ரு

தக்கன்வேள்விதகர்த்ததலைவன்தையலாளொடும்
ஒக்கவேயெம்முரவோனுறையும்மிடமாவது
கொக்குவாழைபலவின்கொழுந்தண்கனிகொன்றைகள்
2796 புக்கவாசப்புன்னைபொன்திரள்காட்டும்புகலியே. சு, எ

தொலைவிலாத அரக்கன் னுரத்தைக்தொலைவித்தவன்
தலையுந்தோளுந்நெரித்தசதுரர்க்கிடமாவது
கலையின்மேவும்மனத்தோரிரப்போர்க்குக்கரப்பிலார்
2797 பொலியுமந்தண்பொழில்சூழ்ந்தழகாரும்புகலியே. அ

கீண்டுபுக்கார்பறந்தாரயர்ந்தார்கேழலன்னமாய்க்
காண்டுமென்றார்கழல்பணியகின்றார்க்கிடமாவது
நீண்டநாரையிரையாரல்வாரநிறைசெறுவினிற்
2798 பூண்டுமிக்கவ்வயல்காட்டுமந்தண்புகலியே. கூ

தடுக்குடுத்துத்தலையைப்பறிப்பாரொடுசாக்கியர்
இடுக்கணுய்ப்பாரிறைஞ்சாதஎம்மாற்கிடமாவது
மடுப்படுக்குஞ்சுருதிப்பொருள்வல்லவர்வானுளோர்
2799 அடுத்தடுத்துப்புகுந்தீண்டுமந்தண்புகலியே. க0

எய்தவொண்ணாஇறைவன்னுறைகின்றபுகலியைக்
கைதவமில்லாக்கவுணியன்ஞானசம்பந்தன்சீர்
செய்தபத்தும்மிவைசெப்பவல்லார்சிவலோகத்தில்
2800 எய்திநல்லஇமையோர்களேத்தஇருப்பார்களே. கக

இத் திருமுறையில்

பண்கள் ஆறு (இந்தளம் 1470 - 1894, சீகாமரம் 1895 - 2047, காந்தாரம் 2048 - 2366, பியந்தைக் காந்தாரம் 2367 - 2517, நட்டராகம் 2518 - 2691, செவ்வழி 2692 - 2800) அற்புதப் பதிகங்கள் ஆறு (1655-1665, 1862-1872, 1971 - 1981, 2178 - 2188, 2388 - 2398, 2442 - 2452)

இரண்டாம் திருமுறை முற்றிற்று

திருச்சிற்றம்பலம்

# மூன்றாந் திருமுறை 2801—4147

## பண் - காந்தாரபஞ்சமம் 2801—3051

திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறுநெய்யொடுபால்தயிர்
அந்தணர்பிரியாதசிற்றம்பலம்
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே
பாடினாய்மறையோடுபல்கீதமும்
பல்சடைப்பனிகால்கதிர்வெண்டிங்கள்
2801 சூடினாயருளாய்சுருங்கவெம்தொல்வினையே. க

கொட்டமேகமழுங்குழலாளொடு
கூடினாயெருதேறினாய்நுதற்
பட்டமேபுனைவாயிசைபாடுவபாரிடமா
நட்டமேநவில்வாய்மறையோர்தில்லை
நல்லவர்பிரியாதசிற்றம்பலம்
2802 இட்டமாவுறைவாயிவைமேவியதென்னைகொலோ. உ

நீலத்தார்கரியமிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்றகண்ணினார்பற்று
சூலத்தார்சுடலைப்பொடிநீறணிவார்சடையார்
சீலத்தார்தொழுதேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
2803 கோலத்தாயருளாயுனகாரணங்கூறுதுமே. ங

கொம்பலைத்தழகெய்தியநுண்ணிடைக்
கோலவாண்மதிபோலமுகத்திரண்
டம்பலைத்தகண்ணாள்முலைமேவியவார்சடையான்
கம்பலைத்தெழுகாமுறுகாளையர்
காதலாற்கழற்சேவடிகைதொழ
2804 அம்பலத்துறைவானடியார்க்கடையாவினையே. ச

தொல்லையாரமுதுண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிடறுபகுவாயதோர்
பல்லையார்தலையிற்பலியேற்றுழல்பண்டரங்கா
தில்லையார்தொழுதேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற்சேவடிகைதொழ
2805 இல்லையாம்வினைதானெரியம்மதிலெய்தவனே. ரு

ஆகந்தோயணிகொன்றையாயனல்
அங்கையாயமரார்க்கமராவுமை
பாகந்தோய்பகவாபலியேற்றுழல்பண்டரங்கா
மாகந்தோய்பொழில்மல்குசிற்றம்பலம்
மன்னினாய்மழுவாளினாயழல்
2806 நாகந்தோயரையாய்அடியாரைநண்ணாவினையே. சு

சாதியார்பளிங்கின்னெடுவெள்ளிய
சங்கவார்குழையாய்திகழப்படும்
வேதியாவிகிர்தாவிழவாரணிதில்லைதன்னுள்
ஆதியாய்க்கிடமாயசிற்றம்பலம்
அங்கையால்தொழவல்லடியார்களை
2807 வாதியாதகலுந்நலியாமலிதீவினையே. எ

வேயினார்பணைத்தோளியோடாடலை
வேண்டினாய்விகிர்தாவுயிர்கட்கமு
தாயினாயிடுகாட்டெரியாடலமர்ந்தவனே
தீயினார்கணையாற்புரமூன்றெய்த
செம்மையாய்திகழ்கின்றசிற்றம்பலம்
2808 மேயினாய்கழலேதொழுதெய்துதும்மேலுலகே. அ

தாரினார்விரிகொன்றையாய்மதி
தாங்குநீள்சடையாய்தலைவாநல்ல
தேரினார்மறுகிற்றிருவாரணிதில்லைதன்னுட்
சீரினால்வழிபாடொழியாததோர்
செம்மையாலழகாயசிற்றம்பலம்
2809 ஏரினாலமர்ந்தாயுனசீரடியேத்துதுமே. கூ

வெற்றரையுழல்வார்துவராடைய
வேடத்தாரவர்கள்ளுரைகொள்ளன்மின்
மற்றவருலகின்னவலம்மவைமாற்றகில்லார்
கற்றவர்தொழுதேத்துசிற்றம்பலங்
காதலாற்கழற்சேவடிகைதொழ
2810 உற்றவருலகின்னுறுதிகொளவல்லவரே. ௧௦

நாறுபூம்பொழில்நண்ணியகாழியுள்
நான்மறைவல்லஞானசம்பந்தன்
ஊறுமின்தமிழாலுயர்ந்தாருறைதில்லைதன்னுள்
ஏறுதொல்புகழேந்துசிற்றம்பலத்
தீசனையிசையாற்சொன்னபத்திவை
2811 கூறுமாறுவல்லாருயர்ந்தாரொடுங்கூடுவரே. ௧௧

2 பந்துசேர்விரலாள்பவளத்துவர்
வாயினாள்பனிமாமதிபோல்முகத்
தந்தமில்புகழாள்மலைமாதொடுமாதிப்பிரான்
வந்துசேர்விடம்வானவரெத்திசையுந்
நிறைந்துவலஞ்செய்துமாமலர்
2812 புந்திசெய்திறைஞ்சிப்பொழிபூந்தராய்போற்றுதுமே. ௧

காவியங்கருங்கண்ணினாள்கனித்
தொண்டைவாய்க்கதிர்முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடையன்னநடைச்சுரிமென்குழலாள்
தேவியுந்திருமேனியோர்பாகமாய்
ஒன்றிரண்டொருமூன்றொடுசேர்பதி
2813 பூவிலந்தணனொப்பவர்பூந்தராய்போற்றுதுமே. ௨

பையராவருமல்குல்மெல்லியல்
பஞ்சின்நேரடிவஞ்சிகொள்நுண்ணிடைத்
தையலாளொருபாலுடையெம்மிறைசாருமிடஞ்
செய்யலாங்கழுநீர்கமலம்மலர்த்
தேறலூறலிற்சேறுலராதநற்
2814 பொய்யிலாமறையோர்பயில்பூந்தராய்போற்றுதுமே. ௩

முள்ளிகாண்முகைமொட்டியல்கோங்கின்
அரும்புதேன்கொள்குரும்பைமூவாமருந்
துள்ளியன்றபைம்பொற்கலசத்தியலொத்தமுலை
வெள்ளிமால்வரையன்னம்தார்மேனியின்
மேவினார்பதிவீமருதண்பொழிற்
2815 புள்ளினந்துயில்மல்கியபூந்தராய்போற்றுதுமே. ச

பண்ணியன்றெழுமென்மொழியாள்பகர்
கோதையேர்திகழ்பைந்தளிர்மேனியோர்
பெண்ணியன்றமொய்ம்பிற்பெருமாற்கிடம்பெய்வளையார்
கண்ணியன்றெழுகாவிச்செழுங்கரு
நீலமல்கியகாமருவாவிநற்
2816 புண்ணியருறையும்பதிபூந்தராய்போற்றுதுமே. ரு

வாணிலாமதிபோல்நுதலாள்மட
மாழையொண்கணாள்வண்தரளந்நகை
பாணிலாவியஇன்னிசையார்மொழிப்பாவையொடுஞ்
சேணிலாத்திகழ்செஞ்சடையெம்மண்ணல்
சேர்வதுசிகரப்பெருங்கோயில்சூழ்
2817 போணிலாநுழையும்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. சு

காருலாவியவார்குழலாள்கயற்
கண்ணினாள்புயற்காலொளிமின்னிடை
வாருலாவியமென்முலையாள்மலைமாதுடனாய்
நீருலாவியசென்னியன்மன்னி
நிகருநாமம்முந்நான்குநிகழ்பதி
2818 போருலாவெயில்சூழ்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. எ

காசைசேர்குழலாள்கயலேர்தடங்
கண்ணிகாம்பனதோட்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலைமாதமருந்திருமார்பகலத்
தீசன்மேவுமிருங்கயிலையெடுத்தானை
அன்றடர்த்தானிணைச்சேவடி
2819 பூசைசெய்பவர்சேர்பொழிற்பூந்தராய்போற்றுதுமே. அ

கொங்குசேர்குழலாள்நிழல்வெண்ணகைக்
கொவ்வைவாய்க்கொடியேரிடையாளுமை
பங்குசேர்திருமார்புடையார்படர்தீயுருவாய்
மங்குல்வண்ணனும்மாமலரோனும்
மயங்கநீண்டவர்வான்மிசைவந்தெழு
2820 பொங்குநீரின்மிதந்தநற்பூந்தராய்போற்றுதுமே. ௯

கலவமாமயிலாரியலாள்கரும்
பன்னமென்மொழியாள்கதிர்வாள்நுதற்
குலவுபூங்குழலாளுமைகூறனைவேறுரையால்
அலவைசொல்லுவார்தேரமணாதர்கள்
ஆக்கினான்றனைநண்ணலுநல்குநற்
2821 புலவர்தாம்புகழ்பொற்பதிபூந்தராய்போற்றுதுமே. ௰

தேம்பல்நுண்ணிடையாள்செழுஞ்சேலன
கண்ணியோடண்ணல்சேர்விடந்தேனமர்
பூம்பொழில்திகழ்பொற்பதிபூந்தராய்போற்றுதுமென்
றோம்புதன்மையன்முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்தன்ஒண்தமிழ்மாலைகொண்
2822 டாம்படியிவையேத்தவல்லார்க்கடையாவினையே. ௧௧

3 இயலிசையெனும்பொருளின்திறமாம்
புயலனமிடறுடைப்புண்ணியனே
கயலன அரிநெடுங்கண்ணியொடும்
அயலுலகடிதொழஅமர்ந்தவனே
கலனாவதுவெண்டலைகடிபொழிற்புகலிதன்னுள்
2823 நிலனாள்தொறுமின்புறநிறைமதியருளினனே. ௧

நிலையுறுமிடர்நிலையாதவண்ணம்
இலையுறுமலர்கள்கொண்டேத்துதும்யாம்
மலையினிலரிவையைவெருவவன்தோல்
அலைவருமதகரியுரித்தவனே
இமையோர்கள்நின்தாள்தொழஎழில்திகழ்பொழிற்புகலி
2824 உமையாளொடுமன்னினையுயர்திருவடியிணையே. ௨

பாடினையருமறைவரன்முறையால்
ஆடினைகரணமுன்னருவனத்திற்
சாடினைகாலனைத்தயங்கொளிசேர்
நீடுவெண்பிறைமுடிநின்மலனே
நினையேயடியார்தொழநெடுமதிற்புகலிந்நகர்
2825 தனையேயிடமேவினைதவநெறிஅருளெமக்கே. ரு

நிழல்திகழ்மழுவினையானையின்தோல்
அழல்திகழ்மேனியிலணிந்தவனே
கழல்திகழ்சிலம்பொலியலம்பநல்ல
முழவொடுமருநடமுயற்றினனே
முடிமேல்மதிசூடினைமுருகமர்பொழிற்புகலி
2826 அடியாரவரேத்துறஅழகொடுமிருந்தவனே. சு

கருமையினொளிர்கடல்நஞ்சமுண்ட
உரிமையினுலகுயிரளித்தநின்றன்
பெருமையைநிலத்தவர்பேசினல்லால்
அருமையிலளப்பரிதாயவனே
அரவேரிடையாளொடுமலைகடல்மலிபுகலிப் [னே.
2827 பொருள்சேர்தரநாள்தொறும்புவிமிசைப்பொலிந்தவ

அடையரிமாவொடுவேங்கையின்தோல்
புடைபடஅரைமிசைப்புனைந்தவனே
படையுடைநெடுமதிற்பரிசழித்த
விடையுடைக்கொடிமல்குவேதியனே
விகிர்தாபரமாநின்னைவிண்ணவர்தொழப்புகலித்
2828 தகுவாய்மடமாதொடுந்தாள்பணிந்தவர்தமக்கே. சு

அடியவர்தொழுதெழஅமரரேத்தச்
செடியவல்வினைபலதீர்ப்பவனே
துடியிடையகலல்குல்தூமொழியைப்
பொடியணிமார்புறப்புல்கினனே
புண்ணியாபுனிதாபுகரேற்றினைபுகலிந்நகர்
2829 நண்ணினுய்கழலேத்திடநண்ணகிலாவினையே. எ

இரவொடுபகலதாமெம்மானுன்னைப்
பரவுதலொழிகிலேன்வழியடியேன்
குரவிரிநறுங்கொன்றைகொண்டணிந்த
அரவிரிசடைமுடியாண்டகையே
அனமென்னடையாளொடுமதிர்கடவிலங்கைமன்னை
2830 இனமார்தருதோளடர்த்திருந்தனைபுகலியுளே. அ

உருகிடவுவகைதந்துடலினுள்ளால்
பரிகிடுமமுதனபண்பினனே
பொருகடல்வண்ணனும்பூவுளானும்
பெருகிடமருளெனப்பிறங்கெரியாய்
உயர்ந்தாயினிநீயெனையொண்மலரடியிணைக்கீழ்
2831 வயந்தாங்குறநல்கிடுவளர்மதிற்புகலிமனே. கூ

கையினிலுண்பவர்கணிகைநோன்பர்
செய்வனதவமலாச்செதுமதியார்
பொய்யவருரைகளைப்பொருளெனாத
மெய்யவரடிதொழவிரும்பினனே
வியந்தாய்வெள்ளேற்றினைவிண்ணவர்தொழுபுகலி
2832 உயர்ந்தார்பெருங்கோயிலுளொருங்குடனிருந்தவனே.

புண்ணியர்தொழுதெழுபுகலிநகர்
விண்ணவரடிதொழவிளங்கினானை
நண்ணியஞானசம்பந்தன்வாய்மை
பண்ணியஅருந்தமிழ்ப்பத்தும்வல்லார்
நடலையவையின்றிப்போய்நண்ணுவர்சிவனுலகம்
2833 இடராயினஇன்றித்தாமெய்துவர்தவநெறியே. கக

4 இடரினுந்தளரினுமெனதுறுநோய்
தொடரினுமுனகழல்தொழுதெழுவேன்
கடல்தனிலமுதொடுகலந்தநஞ்சை
மிடறினிலடக்கியவேதியனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2834 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. க

வாழினுஞ்சாவினும்வருந்தினும்போய்
வீழினுமுனகழல்விடுவேனல்லேன்
தாழிளந்தடம்புனல்தயங்குசென்னிப்
போழிளமதிவைத்தபுண்ணியனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2835 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. உ

நனவினுங்கனவினும்நம்பாவுன்னை
மனவினும்வழிபடல்மறவேனம்மான்
புனல்விரிநறுங்கொன்றைப்போதணிந்த
கனலெரியனல்புல்குகையவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2836 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. ங

தும்மலோடருந்துயர்தோன்றிடினும்
அம்மலரடியலாலரற்றுதேன்நாக்
கைம்மல்குவரிசிலைக்கணையொன்றினால்
மும்மதிலெரியெழமுனிந்தவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2837 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. ச

கையதுவீழினுங்கழிவுறினும்
செய்கழலடியலால்சிந்தைசெய்யேன்
கொய்யணிநறுமலர்குலாயசென்னி
மையணிமிடறுடைமறையவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2838 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. ரு

வெந்துயர்தோன்றியோர்வெருவுறினும்
எந்தாயுன்னடியலாலேத்தாதென்நா
ஐந்தலையரவுகொண்டரைக்கசைத்த
சந்தவெண்பொடியணிசங்கரனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2839 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. சு

வெப்பொடுவிரவியோர்வினைவரினும்
அப்பாவுன்னடியலாலரற்றுதேன்நா
ஒப்புடையொருவனையுருவழிய
அப்படியழலெழவிழித்தவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2840 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. எ

பேரிடர்பெருகியோர்பிணிவரினுஞ்
சீருடைக்கழலலாற்சிந்தைசெய்யேன்
ஏருடைமணிமுடிஇராவணனை
ஆரிடர்படவரையடர்த்தவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2841 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. அ

உண்ணினும்பசிப்பினுமுறங்கினும்நின்
ஒண்மலரடியலாலுரையாதென்நாக்
கண்ணனுங்கடிகமழ்தாமரைமேல்
அண்ணலுமளப்பரிதாயவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2842 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. கூ

பித்தொடுமயங்கியோர்பிணிவரினும்
அத்தாவுன்னடியலாலரற்றுதேன்நாப்
புத்தருஞ்சமணரும்புறனுரைக்கப்
பத்தர்கட்கருள்செய்துபயின்றவனே
இதுவோஎமையாளுமாறீவதொன்றெமக்கில்லையேல்
2843 அதுவோவுனதின்னருளாவடுதுறையரனே. க0

அலைபுனலாவடுதுறையமர்ந்த
இலைநுனைவேற்படையெம்மிறையை
நலமிகுஞானசம்பந்தன்சொன்ன
விலையுடையருந்தமிழ்மாலைவல்லார்
வினையாயினநீங்கிப்போய்விண்ணவர்வியனுலகம்
2844 நிலையாகமுன்னேறுவர்நிலமிசைநிலையிலரே. கக

5 தக்கன்வேள்விதகர்த்தவன்பூந்தராய்
மிக்கசெம்மைவிமலன்வியன்கழல்
சென்றுசிந்தையில்வைக்கமெய்க்கதி
2845 நன்றதாகியநம்பன்றானே. க

புள்ளினம்புகழ்போற்றியபூந்தராய்
வெள்ளந்தாங்குவிகிர்தனடிதொழ
ஞாலத்தில்லுயர்வாருள்குநன்னெறி
2846 மூலமாயமுதலவன்றானே. உ

வேந்தராயுலகாளவிருப்புறிற்
பூந்தராய்நகர்மேயவன்பொற்கழல்
நீதியால்நினைந்தேத்தியுள்கிடச்
2847 சாதியாவினையானதானே. ங

பூசுரர்தொழுதேத்தியபூந்தராய்
ஈசன்சேவடியேத்தியிறைஞ்சிடச்
சிந்தைநோயவைதீரநல்கிடும்
2848 இந்துவார்சடையெம்மிறையே. ச

பொலிந்தஎன்பணிமேனியன்பூந்தராய்
மலிந்தபுந்தியராகிவணங்கிட
நுந்தமேல்வினையோடவீடுசெய்
2849 எந்தையாயஎம்மீசன்றானே. ரு

பூதஞ்சூழப்பொலிந்தவன்பூந்தராய்
நாதன்சேவடிநாளும்நவின்றிட
நல்குநாள்தொறுமின்பநளிர்புனல்
2850 பில்குவார்சடைப்பிஞ்ஞகனே. சு

புற்றில்நாகமணிந்தவன்பூந்தராய்
பற்றிவாழும்பரமனைப்பாடிடப்
பாவமாயினதீரப்பணித்திடுஞ்
2851 சேவதேறியசெல்வன்றானே. எ

போதகத்துரிபோர்த்தவன்பூந்தராய்
காதலித்தான்கழல்விரலொன்றினால்
அரக்கனாற்றலழித்தவனுக்கருள்
2852 பெருக்கிநின்றஎம்பிஞ்ஞகனே. அ

மத்தமான இருவர்மருவொணா
அத்தனானவன்மேவியபூந்தராய்
ஆளதாக அடைந்துய்ம்மின்நும்வினை
2853 மாளுமாறருள்செய்யுந்தானே. ௯

பொருத்தமில்சமண்சாக்கியப்பொய்கடிந்
திருத்தல்செய்தபிரானிமையோர்தொழப்
பூந்தராய்நகர்கோயில்கொண்டுகை
2854 ஏந்துமான்மறியெம்மிறையே. ௧0

புந்தியால்மிகநல்லவர்பூந்தராய்
அந்தமில்லெம்மடிகளை ஞானசம்
பந்தன்மாலைகொண்டேத்திவாழுநும்
2855 பந்தமார்வினைபாறிடுமே. ௧௧

6 கொட்டமேகமழுங்கொள்ளம்பூதூர்
நட்டமாடியநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2856 நல்குமாறருள்நம்பனே. ௧

கோட்டகக்கழனிக்கொள்ளம்பூதூர்
நாட்டகத்துறைநம்பனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2857 நல்குமாறருள்நம்பனே. ௨

குலையினார்தெங்குசூழ்கொள்ளம்பூதூர்
விலையிலாட்கொண்டவிகிர்தனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2858 நல்குமாறருள்நம்பனே. ௩

குவளைகண்மலருங்கொள்ளம்பூதூர்த்
தவளநீறணிதலைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2859 நல்குமாறருள்நம்பனே. ௪

கொன்றைபொன்சொரியுங்கொள்ளம்பூதூர்
நின்றபுன்சடைநிமலனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2860 நல்குமாறருள்நம்பனே. ௫

ஓடம்வந்தணையுங்கொள்ளம்பூதூர்
ஆடல்பேணிய அடிகளையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2861 நல்குமாறருள் நம்பனே. சு

ஆறுவந்தணையுங்கொள்ளம்பூதூர்
ஏறுதாங்கியஇறைவனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2862 நல்குமாறருள்நம்பனே. எ

குரக்கினம்பயிலுங்கொள்ளம்பூதூர்
அரக்கனைச்செற்றஆதியையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2863 நல்குமாறருள்நம்பனே. அ

பருவராலுகளுங்கொள்ளம்பூதூர்
இருவர்காண்பரியான்கழலுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2864 நல்குமாறருள்நம்பனே. சு

நீரகக்கழனிக்கொள்ளம்பூதூர்த்
தேரமண்செற்றசெல்வனையுள்கச்
செல்லவுந்துகசிந்தையார்தொழ
2865 நல்குமாறருள்நம்பனே. கO

கொன்றைசேர்சடையான்கொள்ளம்பூதூர்
நன்றுகாழியுள்ஞானசம்பந்தன்
இன்றுசொன்மாலைகொண்டேத்தவல்லார்போய்
2866 என்றும்வானவரோடிருப்பாரே. கக

7 கண்ணுதலானும்வெண்ணீற்றினானுங்கழலார்க்கவே
பண்ணிசைபாடநின்றாடினானும்பரஞ்சோதியும்
புண்ணியநான்மறையோர்களேத்தும்புகலிந்நகர்ப்
2867 பெண்ணின்நல்லாளோடும்வீற்றிருந்தபெருமானன்றே. க

சாம்பலோடுந்தழலாடினானுஞ்சடையின்மிசைப்
பாம்பினோடும்மதிசூடினானும்பசுவேறியும்
பூம்படுகல்லிளவாளைபாயும்புகலிந்நகர்க்
2868 காம்பனதோளியொடும்மிருந்தகடவுளன்றே. உ

கருப்புநல்வார்சிலைக்காமன்வேவக்கடைக்கண்டானும்
மருப்புநல்லானையின்ஈருரிபோர்த்தமணாளனும்
பொருப்பனமாமணிமாடமோங்கும்புகலிந்நகர்
2869 விருப்பினல்லாளொடும்வீற்றிருந்தவிமலனன்றே. ௩

அங்கையிலங்கழலேந்தினானும்மழகாகவே
கங்கையைச்செஞ்சடைசூடினானுங்கடலின்னிடைப்
பொங்கியநஞ்சமுதுண்டவனும்புகலிந்நகர்
2870 மங்கைநல்லாளொடும்வீற்றிருந்தமணவாளனே. ௪

சாமநல்வேதனுந்தக்கன்றன்வேள்விதகர்த்தானும்
நாமநூறாயிரஞ்சொல்லிவானோர்தொழுநாதனும்
பூமல்குதண்பொழில்மன்னுமந்தண்புகலிந்நகர்க்
2871 கோமளமாதொடும்வீற்றிருந்தகுழகனன்றே. ௫

இரவிடையொள்ளெரியாடினானும்மிமையோர்தொழச்
செருவிடைமுப்புரந்தீயெரித்தசிவலோகனும்
பொருவிடையொன்றுகந்தேறினானும்புகலிந்நகர்
2872 அரவிடைமாதொடும்வீற்றிருந்தஅழகனன்றே. ௬

சேர்ப்பதுதிண்சிலைமேவினானுந்திகழ்பாலன்மேல்
வேர்ப்பதுசெய்தவெங்கூற்றுதைத்தானும்வேள்விப்புகை
போர்ப்பதுசெய்தணிமாடமோங்கும்புகலிந்நகர்ப்
2873 பார்ப்பதியோடுடன்வீற்றிருந்தபரமனன்றே. ௭

கன்னெடுமால்வரைக்கீழரக்கன்னிடர்கண்டானும்
வின்னெடும்போர்விறல்வேடனாகிவிசயற்கொரு
பொன்னெடுங்கோல்கொடுத்தானுமந்தண்புகலிந்நகர்
2874 அன்னமன்னந்நடைமங்கையொடும்மமர்ந்தானன்றே. ௮

பொன்னிறநான்முகன்பச்சையானென்றிவர்புக்குழித்
தன்னையின்னானெனக்காண்பரியதழற்சோதியும்
புன்னைபொன்தாதுதிர்மல்குமந்தண்புகலிந்நகர்
2875 மின்னிடைமாதொடும்வீற்றிருந்தவிமலனன்றே. ௯

பிண்டியும்போதியும்பேணுவார்பேச்சினைப்பேணாததோர்
தொண்டருங்காதல்செய்சோதியாயசுடர்ச்சோதியான்
புண்டரீகம்மலர்ப்பொய்கைசூழ்ந்தபுகலிந்நகர்
2876 வண்டமர்கோதையொடும்மிருந்தமணவாளனே. ௰

பூங்கமழ்கோதையோடும்மிருந்தான்புகலிந்நகர்ப்
பாங்கனைஞானசம்பந்தன்சொன்னதமிழ்ப்பத்திவை
ஆங்கமர்வெய்தியஆதியாகவிசைவல்லவர்
2877 ஓங்கமராவதியோர்தொழச்செல்வதுமுண்மையே. கசு

8 சடையுடையானுநெய்யாடலானுஞ்சரிகோவண
உடையுடையானுமையார்ந்தவொண்கண்ணுமைகேள்வனும்
கடையுடைநன்னெடுமாடமோங்குங்கடவூர்தனுள்
2878 விடையுடையண்ணலும்வீரட்டானத்தரனல்லனே. க

எரிதருவார்சடையானும்வெள்ளையெருதேறியும்
புரிதருமாமலர்க்கொன்றைமாலைபுனைந்தேத்தவே
கரிதருகாலனைச்சாடினானுங்கடவூர்தனுள்
2879 விரிதருதொல்புகழ்வீரட்டானத்தரனல்லனே. உ

நாதனுநள்ளிருளாடினானுநளிர்போதின்கண்
பாதனும்பாய்புலித்தோலினானும்பசுவேறியும்
காதலர்தண்கடவூரினானுங்கலந்தேத்தவே
2880 வேதமதோதியும்வீரட்டானத்தரனல்லனே. ங

மழுவமர்செல்வனுமாசிலாதபலபூதமுன்
முழவொலியாழ்குழல்மொந்தைகொட்டமுதுகாட்டிடைக்
கழல்வளர்கால்குஞ்சித்தாடினானுங்கடவூர்தனுள்
2881 விழவொலிமல்கியவீரட்டானத்தரனல்லனே. ச

சுடர்மணிச்சுண்ணவெண்ணீற்றினானுஞ்சுழல்வாயதோர்
படமணிநாகமரைக்கசைத்தபரமேட்டியும்
கடமணிமாவுரித்தோலினானுங்கடவூர்தனுள்
2882 விடமணிகண்டனும்வீரட்டானத்தரனல்லனே. ரு

பண்பொலிநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போய்
உண்பலிகொண்டுழல்வானும்வானின்னொளிமல்கிய
கண்பொலிநெற்றிவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
2883 வெண்பொடிப்பூசியும்வீரட்டானத்தரனல்லனே. சு

செவ்வழலாய்நிலனாகிநின்றசிவமூர்த்தியும்
முவ்வழல்நான்மறையைந்துமாயமுனிகேள்வனும்
கவ்வழல்வாய்க்கதநாகமார்த்தான்கடவூர்தனுள்
2884 வெவ்வழலேந்துகைவீரட்டானத்தரனல்லனே. எ

அடியிரண்டோருடம்பைஞ்ஞான்கிருபதுதோள்தச
முடியுடைவேந்தனைமூர்க்கழித்தமுதல்மூர்த்தியும்
கடிக்கமழும்பொழில்சூழுமந்தண்கடவூர்தனுள்
2885 வெடிதலையேந்தியும்வீரட்டானத்தரனல்லனே. அ

வரைகுடையாமழைதாங்கினானும்வளர்போதின்கண்
புரைகடிந்தோங்கியநான்முகத்தான்புரிந்தேத்தவே
கரைகடல்சூழ்வையங்காக்கின்றானுங்கடவூர்தனுள்
2886 விரைகமழ்பூம்பொழில்வீரட்டானத்தரனல்லனே. கூ

தேரருமாசுகொள்மேனியாருந்தெளியாததோர்
ஆரருஞ்சொற்பொருளாகிநின்றஎமதாதியான்
காரிளங்கொன்றைவெண்டிங்களானுங்கடவூர்தனுள்
2887 வீரமுஞ்சேர்கழல்வீரட்டானத்தரனல்லனே. க0

வெந்தவெண்ணீறணிவீரட்டானத்துறைவேந்தனை
அந்தணர்தங்கடவூருளானையணிகாழியான்
சந்தமெல்லாமடிச்சாத்தவல்லமறைஞானசம்
2888 பந்தனசெந்தமிழ்பாடியாடக்கெடும்பாவமே. கக

9 கேள்வியர்நாடொறுமோதுநல்வேதத்தர்கேடிலா
வேள்விசெயந்தணர்வேதியர்வீழிமிழலையார்
வாழியர்தோற்றமுங்கேடும்வைப்பாருயிர்கட்கெலாம்
2889 ஆழியர்தம்மடிபோற்றியென்பார்கட்கணியரே. க

கல்வினற்பாவையோர்பாகத்தர்காதலித்தேத்திய
மெல்லினத்தார்பக்கல்மேவினர்வீழிமிழலையார்
நல்லினத்தார்செய்தவேள்விசெகுத்தெழுஞாயிற்றின்
2890 பல்லினைத்துந்தகர்த்தாரடியார்பாவநாசரே. உ

நஞ்சினையுண்டிருள்கண்டர்பண்டந்தகனைச்செற்ற
வெஞ்சினமூவிலைச்சூலத்தர்வீழிமிழலையார்
அஞ்சனக்கண் ணுமைபங்கினர்கங்கையங்காடிய
2891 மஞ்சனச்செஞ்சடையாரென வல்வினைமாயுமே. ௩

கலையிலங்கும்மழுகட்டங்கங்கண்டிகைகுண்டலம்
விலையிலங்கும்மணிமாடத்தர்வீழிமிழலையார்
தலையிலங்கும்பிறைதாழ்வடஞ்சூலந்தமருகம்
2892 அலையிலங்கும்புனலேற்றவர்க்கும்மடியார்க்குமே. ச

பிறையுறுசெஞ்சடையார்விடையார்பிச்சைநச்சியே
வெறியுறுநாட்பலிதேர்ந்துழல்வீழிமிழலையார்
முறைமுறையாலிசைபாடுவாராடிமுன்தொண்டர்கள்
2893 இறையுறைவாஞ்சியமல்லதெப்போதுமென்னுள்ளமே. ரு

வசையறுமாதவங்கண்டுவரிசிலைவேடனாய்
விசையனுக்கன்றருள்செய்தவர்வீழிமிழலையார்
இசைவரவிட்டியல்கேட்பித்துக்கல்லவடமிட்டுத்
2894 திசைதொழுதாடியும்பாடுவார்சிந்தையுட்சேர்வரே. சு

சேடர்விண்ணோர்கட்குத்தேவர்நன்மூவிருதொன்னூலர்
வீடர்முத்தீயர்நால்வேதத்தர்வீழிமிழலையார்
காடரங்காவுமைகாண அண்டத்திமையோர்தொழ
2895 நாடகமாடியையேத்தவல்லார்வினைநாசமே. எ

எடுத்தவன்மாமலைக்கீழஇராவணன்வீழ்தர
விடுத்தருள்செய்திசைகேட்டவர்வீழிமிழலையார்
படுத்துவெங்காலனைப்பால்வழிபாடுசெய்பாலற்குக்
2896 கொடுத்தனரின்பங்கொடுப்பர்தொழக்குறைவில்லையே. அ

திக்கமர்நான்முகன்மாலண்டமண்டலந்தேடிட
மிக்கமர்தீத்திரளாயவர்வீழிமிழலையார்
சொக்கமதாடியும்பாடியும்பாரிடஞ்சூழ்தரும்
2897 நக்கர்தந்நாமநமச்சிவாயவ்வென்பார்நல்லரே. கூ

துற்றரையார்துவராடையர்துப்புரவொன்றிலா
வெற்றரையாரறியாநெறிவீழிமிழலையார்
சொற்றெரியாப்பொருள்சோதிக்கப்பால்நின்றசோதிதான்
2898 மற்றறியாவடியார்கள்தஞ்சிந்தையுள்மன்னுமே. க0

வேதியர்கைதொழுவீழிமிழலைவிரும்பிய
ஆதியைவாழ்பொழிற்காழியுள்ஞானசம்பந்தனுய்க்
தோதியவொண்டமிழ்பத்திவையுற்றுரைசெய்பவர்
2899 மாதியல்பங்கன்மலரடிசேரவும்வல்லரே. கக

10 அலைவளர்தண்மதியோடயலேயடக்கியுமை
முலைவளர்பாகமுயங்கவல்லமுதல்வன்முனி
இலைவளர்தாழைகள்விம்முகானவிராமேச்சுரம்
2900 தலைவளர்கோலநன்மாலையன்தானிருந்தாட்சியே. க

தேவியைவவ்வியதென்னிலங்கைத்தசமாமுகன்
பூவியலும்முடிபொன்றுவித்தபழிபோயற
ஏவியலுஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சுரம்
2901 மேவியசிந்தையினார்கள்தம்மேல்வினைவீடுமே. ௨

மானனநோக்கியைதேவிதன்னைமொருமாயையால்
கானதில்வவ்வியகாரரக்கன்னுயிர்செற்றவன்
ஈனமிலாப்புகழண்ணல்செய்தவிராமேச்சுரம்
2902 ஞானமுநன்பொருளாகிநின்றதொருநன்மையே. ௩

உரையுணராதவன்காமமென்னும்முறுவேட்கையால்
வரைபொருதோளிறச்செற்றவில்விமகிழ்ந்தேத்திய
விரைமருவுங்கடலோதமல்கும்மிராமேச்சுரத்
2903 தரையரவாடநின்றாடல்பேணுமம்மானல்லனே. ௪

ஊறுடைவெண்டலைகையிலேந்திப்பலவூர்தொறும்
வீறுடைமங்கையரையம்பெய்யவிறலார்ந்ததோர்
ஏறுடைவெல்கொடியெந்தைமேயவிராமேச்சுரம்
2904 பேறுடையான்பெயரேத்துமாந்தர்பிணிபேருமே. ௫

அணையலைசூழ்கடலன்றடைத்துவழிசெய்தவன்
பணையிலங்கும்முடிபத்திறுத்தபழிபோக்கிய
இணையிலியென்றுமிருந்தகோயிலிராமேச்சுரம்
2905 துணையிலிதூமலர்ப்பாதமேத்தத்துயர்நீங்குமே. ௬

சனிபுதன்ஞாயிறுவெள்ளிதிங்கட்பலதீயன
முனிவதுசெய்துகந்தானைவென்றவ்வினைமுடிட
இனியருள்நல்கிடென்றண்ணல்செய்தவிராமேச்சுரம்
2906 பனிமதிசூடிநின்றாடவல்லபரமேட்டியே. ௭

பெருவரையன்றெடுத்தேந்தினான்றன்பெயர்சாய்கெட
அருவரையாலடர்த்தன்றுநல்கியயன்மாலெனும்
இருவருநாடிநின்றேத்துகோயிலிராமேச்சுரத்
2907 தொருவனுமேபலவாகிநின்றதொருவண்ணமே. அ, ௯

சாக்கியர்வன்சமண்கையர்மெய்யிற்றடுமாற்றத்தார்
வாக்கியலும்முரைபற்றுவிட்டுமதியொண்மையால்
ஏக்கியலுஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சுரம்
2908 ஆக்கியசெல்வனையேத்திவாழ்மின்னருளாகவே. ௧௦

பகலவன்மீதியங்காமைக்காத்தபதியோன்றனை
இகலழிவித்தவனைத்துகோயிலிராமேச்சுரம்
புகலியுள்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்புந்தியால்
2909 அகலிடமெங்குநின்றேத்தவல்லார்க்கில்லையல்லலே. கக

11 மின்னியல்செஞ்சடைவெண்பிறையன்விரிநூலினன்
பன்னியநான்மறைபாடியாடிப்பலவூர்கள்போய்
அன்னமன்னநடையாளொடும்மமரும்மிடம்
2910 புன்னைநன்மாமலர்பொன்னுதிர்க்கும்புனவாயிலே. க

விண்டவர்தம்புரமூன்றெரித்துவிடையேறிப்போய்
வண்டமருங்குழல்மங்கையொடும்மகிழ்ந்தானிடம்
கண்டலுஞாழலுநின்றுபெருங்கடற்கானல்வாய்ப்
2911 புண்டரீகம்மலர்ப்பொய்கைசூழ்ந்தபுனவாயிலே. உ

விடையுடைவெல்கொடியேந்தினானும்விறற்பாரிடம்
புடைபடவாடியவேடத்தானும்புனவாயிலில்
தொடைநவில்கொன்றையந்தாரினானுஞ்சுடர்வெண்மழுப்
2912 படைவலனேந்தியபால்நெய்யாடும்பரமனன்றே. ங

சங்கவெண்தோடணிகாதினானுஞ்சடைதாழவே
அங்கையிலங்கழலேந்தினானும்மழகாகவே
பொங்கரவம்மணிமார்பினானும்புனவாயிலில்
2913 பைங்கண்வெள்ளேற்றண்ணலாகிநின்றபரமேட்டியே. ச

கலிபடுதண்கடல்நஞ்சமுண்டகறைக்கண்டனும்
புலியதள்பாம்பரைச்சுற்றினானும்புனவாயிலில்
ஒலிதருதண்புனலோடெருக்கும்மதமத்தமும்
2914 மெலிதருவெண்பிறைசூடிநின்றவிடையூர்தியே. ரு

வாருறுமென்முலைமங்கைபாடநடமாடிப்போய்க்
காருறுகொன்றைவெண்டிங்களானுங்கனல்வாயதோர்
போருறுவெண்மழுவேந்தினானும்புனவாயிலில்
2915 சீருறுசெல்வமல்கவ்விருந்தசிவலோகனே. சு

பெருங்கடல்நஞ்சமுதுண்டுகந்துபெருங்காட்டிடைத்
திருந்திளமென்முலைத்தேவிபாடநடமாடிப்போய்ப்
பொருந்தலர்தம்புரமூன்றுமெய்துபுனவாயிலில்
2916 இருந்தவன்தன்கழலேத்துவார்கட்கிடரில்லையே. எ

மனமிகுவேலனவ்வாளரக்கன்வலியொல்கிட
வனமிகுமால்வரையாலடர்த்தானிடமன்னிய
இனமிகுதொல்புகழ்பாடலாடல்லெழின்மல்கிய
2917 புனமிகுகொன்றையங்தென்றலார்ந்தபுனவாயிலே. அ

திருவளர்தாமரைமேவினானுந்திகழ்பாற்கடற்
கருநிறவண்ணனுங்காண்பரியகடவுள்ளிடம்
நரல்சுரிசங்கொடுமிப்பியுந்திநலமல்கிய
2918 பொருகடல்வெண்டிரைவந்தெறியும்புனவாயிலே. கூ

போதியெனப்பெயராயினாரும்பொறியில்சமண்
சாதியுரைப்பனகொண்டயர்ந்துதளர்வெய்தன்மின்
போதவிழ்தண்பொழில்மல்குமந்தண்புனவாயிலில்
2919 வேதனைநாள்தொறுமேத்துவார்மேல்வினைவீடுமே. க0

பொற்றொடியாளுமைபங்கன்மேவும்புனவாயிலைக்
கற்றவர்தாந்தொழுதேத்தநின்றகடற்காழியான்
நற்றமிழ்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்நன்மையால்
2920 அற்றமில்பாடல்பத்தேத்தவல்லாரருள்சேர்வரே. கக

12 வேதியன்விண்ணவரேத்தநின்றான்விளங்கும்மறை
ஓதியவொண்பொருளாகிநின்றானொளியார்கிளி
கோதியதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
2921 ஆதியையேநினைந்தேத்தவல்லார்க்கல்லலில்லையே. க

ஏலமலர்க்குழல்மங்கைநல்லாளிமவான்மகள்
பாலமருந்திருமேனியெங்கள்பரமேட்டியும்
கோலமலர்ப்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
2922 ஆலநீழற்கீழிருந்தறஞ்சொன்னஅழகனே. உ

இலைமல்குசூலமொன்றேந்தினானுமிமையோர்தொழ
மலைமல்குமங்கையோர்பங்கனாயம்மணிகண்டனும்
குலைமல்குதண்பொழில்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
2923 அலைமல்குவார்சடையேற்றுகந்தஅழகனன்றே. ௩

ஊனமரும்முடலுள்ளிருந்தவ்வுமைபங்கனும்
வானமரும்மதிசென்னிவைத்தமறையோதியும்
தேனமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
2924 தானமரும்விடையானுமெங்கள்தலைவனன்றே. ௪

வம்பலரும்மலர்க்கோதைபாகம்மகிழ்மைந்தனும்
செம்பவளத்திருமேனிவெண்ணீறணிசெல்வனும்
கொம்பமரும்மலர்வண்டுகெண்டுந்திருக்கோட்டாற்றுள்
2925 நம்பனெனப்பணிவார்க்கருள்செய்யெங்கள்நாதனே. ரு

பந்தமரும்விரல்மங்கைநல்லாளொருபாகமா
வெந்தமரும்பொடிப்பூசவல்லவிகிர்தன்மிகும்
கொந்தமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
2926 அந்தணனைநினைந்தேத்தவல்லார்க்கில்லையல்லலே. சு

துண்டமரும்பிறைசூடிநீடுசுடர்வண்ணனும்
வண்டமருங்குழல்மங்கைநல்லாளொருபங்கனும்
தெண்டிரைநீர்வயல்சூழ்ந்தழகார்திருக்கோட்டாற்றுள்
2927 அண்டமுமெண்டிசையாகிநின்றஅழகனன்றே. எ

இரவமருந்நிறம்பெற்றுடையவிலங்கைக்கிறை
கரவமரக்கயிலையெடுத்தான்வலிசெற்றவன்
குரவமரும்மலர்ச்சோலைசூழ்ந்ததிருக்கோட்டாற்றுள்
2928 அரவமருஞ்சடையானடியார்க்கருள்செய்யுமே. அ

ஓங்கியநாரணன்நான்முகனும்முணராவகை
நீங்கியதீயுருவாகிநின்றநிமலன்நிழற்
கோங்கமரும்பொழில்சூழ்ந்தெழிலார்திருக்கோட்டாற்றுள்
2929 ஆங்கமரும்பெருமானமரர்க்கமரனன்றே. சு

கடுக்கொடுத்ததுவராடையர்சாட்சியில்லாததோர்
தடுக்கிடுக்கிச்சமணேதிரிவார்கட்குத்தன்னருள்
கொடுக்ககில்லாக்குழகன்னமருந்திருக்கோட்டாற்றுள்
2930 இடுக்கணின்றித்தொழுவாரமரர்க்கிறையாவரே. கO

கொடியுயர்மால்விடையூர்தியினன்திருக்கோட்டாற்றுள்
அடிகழலார்க்கநின்றாடவல்லஅருளாளனைக்
கடிகமழும்பொழிற்காழியுள்ஞானசம்பந்தன்சொல்
2931 படியிவைபாடிநின்றாடவல்லார்க்கில்லைபாவமே. கக

**13** மின்னனஎயிறுடைவிரவலோர்கள்தந்
துன்னியபுரமுகச்சுளிந்ததொன்மையர்
புன்னையம்பொழிலணிபூந்தராய்நகர்
2932 அன்னமன்னந்நடையரிவைபங்கரே. க

மூதணிமுப்புரத் தெண்ணிலோர்களை
வேதணிசாத்தினால்வீட்டினாரவர்
போதணிபொழிலமர்பூந்தராய்நகர்த்
2933 தாதணிகுழலுமைதலைவர்காண்மினே. ௨

தருக்கியதிரிபுரத் தவர்கள்தாமுகப்
பெருக்கியசிலைதனைப்பிடித்தபெற்றியர்
பொருக்கடல்புடைதருபூந்தராய்நகர்க்
2934 கருக்கியகுழலுமைகணவர்காண்மினே. ௩

நாகமும்வரையுமேநாணும்வில்லுமா
மாகமார்புரங்களைமறித்தமாண்பினர்
பூகமார்பொழிலணிபூந்தராய்நகர்ப்
2935 பாகமர்மொழியுமைபங்கர்காண்மினே. ௪

வெள்ளெயிறுடையவவ்விரவலார்களூர்
ஒள்ளெரியூட்டியவொருவனாரொளிர்
புள்ளணிபுறவினிற்பூந்தராய்நகர்க்
2936 கள்ளணிகுழலுமைகணவர்காண்மினே. ௫

துங்கியல்தானவர்தோற்றமாநகர்
அங்கியில்வீழ்தரவாய்ந்தவம்பினர்
பொங்கியகடலணிபூந்தராய்நகர்
2937 அங்கயலனகணியரிவைபங்கரே. ௬

அண்டர்களுய்ந்திடஅவுணர்மாய்தரக்
கண்டவர்சடல்விடமுண்டகண்டனார்
புண்டரீகவ்வயற்பூந்தராய்நகர்
2938 வண்டமர்குழலிதன்மணாளர்காண்மினே. ௭

மாசினஅரக்கனைவரையின்வாட்டிய
காய்சினவெயில்களைக்கறுத்தகண்டனார்
பூசுரர்பொலிதருபூந்தராய்நகர்க்
2939 காசைசெய்குழலுமைகணவர்காண்மினே. ௮

தாமுகமாக்கியஅசுரர்தம்பதி
வேமுகமாக்கியவிகிர்தர்கண்ணனும்
பூமகனறிகிலாப்பூந்தராய்நகர்க்
2940 கோமகனெழில்பெறுமரிவைகூறரே. ௯

முத்தரவசுரர்கள்மொய்த்தமுப்புரம்
அத்தகுமழலிடைவீட்டினுரமண்
புத்தருமறிவொணுப்பூந்தராய்நகர்க்
2941 கொத்தணிகுழலுமைகூறர்காண்மினே. ௧௦

புரமெரிசெய்தவர்பூந்தராய்நகர்ப்
பரமலிகுழலுமைநங்கைபங்கரைப்
பாவியபந்தன்மெய்ப்பாடல்வல்லவர்
2942 சிரமலிசிவகதிசேர்தல்திண்ணமே. ௧௧

14 ஆரிடம்பாடிலரடிகள்காடலால்
ஓரிடங்குறைவிலருடையர்கோவணம்
நீரிடஞ்சடைவிடையூர்திநித்தலும்
2943 பாரிடம்பணிசெயும்பயில்பைஞ்ஞீலியே. ௧

மருவிலார்திரிபுரமெரியமால்வரை
பருவிலாக்குனித்தபைஞ்ஞீலிமேவலான்
உருவிலான்பெருமையையுளங்கொளாதவத்
2944 திருவிலாரவர்களைத்தெருட்டலாகுமே. ௨

அஞ்சுரும்பணிமலரமுதமாந்தித்தேன்
பஞ்சுரம்பயிற்றுபைஞ்ஞீலிமேவலான்
வெஞ்சுரந்தனிலுமைவெருவவந்ததோர்
2945 குஞ்சரம்படவுரிபோர்த்தகொள்கையே. ௩

கோடல்கள்புறவணிகொல்லைமுல்லைமேல்
பாடல்வண்டிசைமுரல்பயில்பைஞ்ஞீலியார்
பேடலராணலர்பெண்ணுமல்லதோர்
2946 ஆடலையுகந்தவெம்மடிகளல்லரே. ௪

விழியிலாநகுதலைவிளங்கிளம்பிறை
சுழியிலார்வருபுனற்சூழல்தாங்கினன்
பழியிலார்பாவுபைஞ்ஞீலிபாடலான்
2947 கிழியிலார்கேண்மையைக்கெடுக்கலாகுமே. ௫

விடையுடைக்கொடிவலனேந்திவெண்மழுப்
படையுடைக்கடவுள்பைஞ்ஞீலிமேவலான்
துடியிடைக்கலையல்குலாளோர்பாகமாச்
2948 சடையிடைப்புனல்வைத்தசதுரனல்லனே. ௬

தூயவன்தூயவெண்ணீறுமேனிமேல்
பாயவன்பாயபைஞ்ஞீலிகோயிலா
மேயவன்வேய்புரைதோளிபாகமா
2949 ஏயவனெனைச்செயுந்தன்மையென்கொலோ. ௭

தொத்தினதோள்முடியுடையவன்றலை
பத்தினைநெரித்தபைஞ்ஞீலிமேவலான்
முத்தினைமுறுவல்செய்தாளோர்பாகமாப்
2950 பொத்தினன்றிருந்தடிபொருந்திவாழ்மினே. ௮

நீருடைப்போதுறைவானுமாலுமாய்ச்
சீருடைக்கழலடிசென்னிகாண்கிலர்
பாருடைக்கடவுள்பைஞ்ஞீலிமேவிய
2951 தாருடைக்கொன்றையந்தலைவர்தன்மையே. ௯

பீலியார்பெருமையும்பிடகர்நூன்மையும்
சாலியாதவர்களைச்சாதியாததோர்
கோலியாவருவரைகூட்டியெய்தபைஞ்
2952 ஞீலியான்கழலடிநினைந்துவாழ்மினே. ௧௦

கண்புனல்விளைவயற்காழிக்கற்பகம்
நண்புணருமறைஞானசம்பந்தன்.
பண்பினர்பரவுபைஞ்ஞீலிபாடுவார்
2953 உண்பினவுலகினிலோங்கிவாழ்வரே. ௧௧

15 மந்திரமறையவைவானவரொடும்
இந்திரன்வழிபடநின்றஎம்மிறை
வெந்தவெண்ணீற்றர்வெண்காடுமேவிய
2954 அந்தமுமுதலுடையடிகளல்லரே. ௧

படையுடைமழுவினர்பாய்புலித்தோலின்
உடைவிரிகோவணமுகந்தகொள்கையர்
விடையுடைக்கொடியர்வெண்காடுமேவிய
2955 சடையிடைப்புனல்வைத்தசதுரரல்லரே. ௨

பாலொடுநெய்தயிர்பலவுமாடுவர்
தோலொடுநூலிழைதுதைந்தமார்பினர்
மேலவர்பரவுவெண்காடுமேவிய
2956 ஆலமதமர்ந்தவெம்மடிகளல்லரே. ௩

ஞாழலுஞ்செருந்தியுநறுமலர்ப்புன்னையுந்
தாழைவெண்குருகயல்தயங்குகானலில்
வேழமதுரித்தவெண்காடுமேவிய
2957 யாழினதிசையுடையிறைவரல்லரே. ௪

பூதங்கள்பலவுடைப்புனிதர்புண்ணியர்
ஏதங்கள்பலஇடர்தீர்க்குமெம்மிறை
வேதங்கள்முதல்வர்வெண்காடுமேவிய
2958 பாதங்கள்தொழநின்றபரமரல்லரே. ௫

மண்ணவர்விண்ணவர்வணங்கவைகலும்
எண்ணியதேவர்களிறைஞ்சுமெம்மிறை
விண்ணமர்பொழில்கொள்வெண்காடுமேவிய
2959 அண்ணலையடிதொழஅல்லலில்லையே. ௬

நயந்தவர்க்கருள்பலநல்கியிந்திரன்
கயந்திரம்வழிபடநின்றகண்ணுதல்
வியந்தவர்பரவுவெண்காடுமேவிய
2960 பயந்தருமழுவுடைப்பரமரல்லரே. ௭

மலையுடனெடுத்தவல்லரக்கன்நீள்முடி
தலையுடன்நெரித்தருள்செய்தசங்கரர்
விலையுடைநீற்றர்வெண்காடுமேவிய
2961 அலையுடைப்புனல்வைத்தஅடிகளல்லரே. ௮

ஏடவிழ்நறுமலரயனும்மாலுமாய்த்
தேடவுந்தெரிந்தவர்தேரகிற்கிலார்
வேடமதுடையவெண்காடுமேவிய
2962 ஆடலையமர்ந்தவெம்மடிகளல்லரே. ௯

போதியர்பிண்டியர்பொருத்தமில்லிகள்
நீதிகள்சொல்லியும்நினையகிற்கிலார்
வேதியர்பரவுவெண்காடுமேவிய
2963 ஆதியையடிதொழஅல்லலில்லையே. ௰

நல்லவர்புகலியுள்ஞானசம்பந்தன்
செல்வனெஞ்சிவனுறைதிருவெண்காட்டின்மேற்
சொல்லியஅருந்தமிழ்பத்தும்வல்லவர்
2964 அல்லலோடருவினையறுதலாணையே. ௧௧

16 நிணம்படுசுடலையினீறுபூசிநின்
றிணங்குவர்பேய்களோடிடுவர்மாநடம்
உணங்கல்வெண்டலைதனிலுண்பராயினும்
2965 குணம்பெரிதுடையர்நங்கொள்ளிக்காடரே. க

ஆற்றநல்லடியிணையலர்கொண்டேத்துவான்
சாற்றியஅந்தணன்தகுதிகண்டநாள்
மாற்றலனாகிமுன்னடர்த்துவந்தணை
2966 கூற்றினையுதைத்தனர்கொள்ளிக்காடரே. உ

அத்தகுவானவர்க்காகமால்விடம்
வைத்தவர்மணிபுரைகண்டத்தினுளே
மத்தமும்வன்னியுமலிந்தசென்னிமேல்
2967 கொத்தலர்கொன்றையர்கொள்ளிக்காடரே. ங

பாவணமேவுசொல்மாலையிற்பல
நாவணங்கொள்கையில்நவின்றசெய்கையர்
ஆவணங்கொண்டெமையாள்வராயினும்
2968 கோவணங்கொள்கையர்கொள்ளிக்காடரே. ச

வாரணிவனமுலைமங்கையாளொடுஞ்
சீரணிதிருவுருத்திகழ்ந்தசென்னியர்
நாரணிசிலைதனால்நணுகலாரெயில்
2969 கூரெரிகொளுவினர்கொள்ளிக்காடரே. ரு

பஞ்சுதோய்மெல்லடிப்பாவையாளொடும்
மஞ்சுதோய்கயிலையுள்மகிழ்வர்நாடொறும்
வெஞ்சினமருப்பொடுவிரையவந்தடை
2970 குஞ்சரமுரித்தனர்கொள்ளிக்காடரே. சு

இறையுறுவரிவளையிசைகள்பாடிட
அறையுறுகழலடியார்க்கஆடுவர்
சிறையுறுவிரிபுனல்சென்னியின்மிசைக்
2971 குறையுறுமதியினர்கொள்ளிக்காடரே. எ

எடுத்தனன்கயிலையையியல்வலியினால்
அடர்த்தனர்திருவிரலாலலறிடப்
படுத்தனரென்றவன்பாடல்பாடலும்
2972 கொடுத்தனர்கொற்றவாள்கொள்ளிக்காடரே. அ

தேடினாயன்முடிமாலுஞ்சேவடி
காடினாரவரென்றுநணுககிற்றிலர்
பாடினார்பரிவொடுபத்தர்சித்தமும்
2973 கூடினார்க்கருள்செய்வர்கொள்ளிக்காடரே. கூ

நாடிநின்றறிவில்நாணிலிகள்சாக்கியர்
ஓடிமுன்னோதியவுரைகள்மெய்யல
பாடுவர்நான்மறைபயின்றமாதொடும்
2974 கூடுவர்திருவுருக்கொள்ளிக்காடரே. கO

நற்றவர்காழியுள்ஞானசம்பந்தன்
குற்றமில்பெரும்புகழ்க்கொள்ளிக்காடரைச்
சொற்றமிழின்னிசைமாலைசோர்வின்றிக்
2975 கற்றவர்கழலடிகாணவல்லரே. கக

17 மருவமர்குழலுமைபங்கர்வார்சடை
அரவமர்கொள்கையெம்மடிகள்கோயிலாம்
குரவமர்சரபுன்னைகோங்குவேங்கைகள்
2976 விரவியபொழிலணிவிசயமங்கையே. க

கீதமுன்னிசைதரக்கிளரும்வீணையர்
பூதமுன்னியல்புடைப்புனிதர்பொன்னகர்
கோதனம்வழிபடக்குலவுநான்மறை
2977 வேதியர்தொழுதெழுவிசயமங்கையே. உ

அக்கரவரையினரரிவைபாகமாத்
தொக்கநல்விடையுடைச்சோதிதொன்னகர்
தக்கநல்வானவர்தலைவர்நாள்தொறும்
2978 மிக்கவர்தொழுதெழுவிசயமங்கையே. ங

தொடைமலியிதழியுந்துன்னெருக்கொடு
புடைமலிசடைமுடியடிகள்பொன்னகர்
படைமலிமழுவினர்பைங்கண்மூரிவெள்
2979 விடைமலிகொடியண்ணல்விசயமங்கையே. ச

தோடமர்காதினன்றுதைந்தநீற்றினன்
ஏடமர்கோதையோடினிதமர்விடம்
காடமர்மாகரிகதறப்போர்த்ததோர்
2980 வேடமதுடையண்ணல்விசயமங்கையே. ரு

மைப்புரைகண்ணுமைபங்கன்வண்டழல்
ஒப்புரைமேனியெம்முடையவன்னகர்
அப்போடுமலர்கொடங்கிறைஞ்சிவானவர்
2981 மெய்ப்படஅருள்புரிவிசயமங்கையே. ௬

இரும்பொனின்மலைவில்லினெரிசரத்தினால்
வரும்புரங்களைப்பொடிசெய்தமைந்தனூர்
சுரும்பமர்கொன்றையுந்தூயமத்தமும்
2982 விரும்பியசடையண்ணல்விசயமங்கையே. ௭

உளங்கையஇருபதோடொருபதுங்கொடாங்
களந்தரும்வரையெடுத்திடுமரக்கனைத்
தளர்ந்துடல்நெரிதரஅடர்த்ததன்மையன்
2983 விளங்கிழையொடும்புகும்விசயமங்கையே. ௮

மண்ணினையுண்டவன்மலரின்மேலுறை
அண்ணல்கள்தமக்களப்பரியஅத்தனூர்
தண்ணறுஞ்சாந்தமும்பூவுநீர்கொடு
2984 விண்ணவர்தொழுதெழுவிசயமங்கையே. ௯

கஞ்சியுங்கவளமுண்கவணர்கட்டுரை
நஞ்சினுங்கொடியனநமர்கள்தேர்கிலார்
செஞ்சடைமுடியுடைத்தேவனன்னகர்
2985 விஞ்சையர்தொழுதெழுவிசயமங்கையே. ௧௦

விண்ணவர்தொழுதெழுவிசயமங்கையை
நண்ணியபுகலியுள்ஞானசம்பந்தன்
பண்ணியசெந்தமிழ்பத்தும்வல்லவர்
2986 புண்ணியர்சிவகதிபுகுதல்திண்ணமே. ௧௧

18 துளமதியுடைமறிதோன்றுகையினர்
இளமதியணிசடையெந்தையாரிடம்
உளமதியுடையவர்வைகலோங்கிய
2987 வளமதிதடவியமாடக்கோயிலே. ௧

மெய்யகமிளிரும்வெண்ணூலர்வேதியர்
மையகண்மலைமகளோடும்வைகிடம்
வையகமகிழ்தரவைகல்மேற்றிசைச்
2988 செய்யகண்வளவன்முன்செய்தகோயிலே. ௨

கணியணிமலர்கொடுகாலைமாலையும்
பணியணிபவர்க்கருள்செய்தபான்மையர்
தணியணியுமையொடுதாமுந்தங்கிடம்
2989 மணியணிகிளர்வைகல்மாடக்கோயிலே. ௩

கொம்பியல்கோதைமுன்னஞ்சக்குஞ்சரத்
தும்பியதுரிசெய்ததுங்கர்தங்கிடம்
வம்பியல்சோலைசூழ்வைகல்மேற்றிசைச்
2990 செம்பியன்கோச்செங்கணான்செய்கோயிலே. ௪

விடமடைமிடற்றினர்வேதநாவினர்
மடமொழிமலைமகளோடும்வைகிடம்
மடவனம்நடைபயில்வைகல்மாநகர்க்
2991 குடதிசைநிலவியமாடக்கோயிலே. ௫

நிறைபுனல்பிறையொடுநிலவுநீள்சடை
இறையவருறைவிடமிலங்குமூவெரி
மறையொடுவளர்வுசெய்வாணர்வைகலில்
2992 திறையுடைநிறைசெல்வன்செய்தகோயிலே. ௬

எரிசரம்வரிசிலைவளையஏவிமுன்
திரிபுரமெரிசெய்தசெல்வர்சேர்விடம்
வரிவளையவர்பயில்வைகல்மேற்றிசை
2993 வருமுகிலணவியமாடக்கோயிலே. ௭

மலையன இருபதுதோளினான்வலி
தொலைவுசெய்தருள்செய்தசோதியாரிடம்
மலர்மலிபொழிலணிவைகல்வாழ்வர்கள்
2994 வலம்வருமலையனமாடக்கோயிலே. ௮

மாலவன்மலரவன்நேடிமால்கொள
மாலெரியாகியவரதர்வைகிடம்
மாலைகொடணிமறைவாணர்வைகலில்
2995 மாலனமணியணிமாடக்கோயிலே. ௯

கடுவுடைவாயினர்கஞ்சிவாயினர்
பிடகுரைபேணிலார்பேணுகோயிலாம்
மடமுடையவர்பயில்வைகல்மாநகர்
2996 வடமலையனையநன்மாடக்கோயிலே. ௧௦

மைந்தனதிடம்வைகல்மாடக்கோயிலைச்
சந்தமர்பொழிலணிசண்பைஞானசம்
பந்தனதமிழ்கெழுபாடல்பத்திவை
2997 சிந்தைசெய்பவர்சிவலோகஞ்சேர்வரே. கக

19 எரிதரஅனல்கையிலேந்தியெல்லியில்
நரிதிரிகானிடைநட்டமாடுவர்
அரிசிலம்பொருபுனலம்பர்மாநகர்க்
2998 குரிசில்செங்கண்ணவன்கோயில்சேர்வரே. க

மையகண்மலைமகள்பாகமாயிருள்
கையதோர்கனலெரிகனலஆடுவர்
ஐயநன்பொருபுனலம்பர்ச்செம்பியர்
2999 செய்யகண்ணிறைசெய்தகோயில்சேர்வரே. உ

மறைபுனைபாடலர்சுடர்கைமல்கவோர்
பிறைபுனைசடைமுடிபெயரஆடுவர்
அறைபுனல்நிறைவயலம்பர்மாநகர்
3000 இறைபுனையெழில்வளரிடமதென்பரே. ங

இரவுமல்கிளமதிசூடியீடுயர்
பரவமல்கருமறைபாடியாடுவர்
அரவமோடுயர்செம்மலம்பர்க்கொம்பலர்
3001 மரவமல்கெழில்நகர்மருவிவாழ்வரே. ச

சங்கணிகுழையினர்சாமம்பாடுவர்
வெங்கனல்கனல்தரவீசியாடுவர்
அங்கணிவிழவமரம்பர்மாநகர்ச்
3002 செங்கணவிறைசெய்தகோயில்சேர்வரே. ரு

கழல்வளர்காலினர்சுடர்கைமல்கவோர்
சுழல்வளர்குளிர்புனல்சூடியாடுவர்
அழல்வளர்மறையவரம்பர்ப்பைம்பொழில்
3003 நிழல்வளர்நெடுநகரிடமதென்பரே. சு

இகலுறுசுடரெரியிலங்கவீசியே
பகலிடம்பலிகொளப்பாடியாடுவர்
அகலிடமலிபுகழம்பர்வம்பவிழ்
3004 புகலிடநெடுநகர்புகுவர்போலுமே. எ

எரியனமணிமுடியிலங்கைக்கோன்றன
கரியனதடக்கைகளடர்த்தகாலினர்
அரியவர்வளநகரம்பரின்பொடு
3005 புரியவர்பிரிவிலாப்பூதஞ்சூழவே. அ

வெறிகிளர்மலர்மிசையவனும்வெந்தொழிற்
பொறிகிளரரவணைப்புல்குசெல்வனும்
அறிகிலவரியவரம்பர்ச்செம்பியர்
3006 செறிகழலிறைசெய்தகோயில்சேர்வரே. கூ

வழிதலைபறிதலையவர்கள்கட்டிய
மொழிதலைப்பயனெனமொழியல்வம்மினோ
அழிதலைபொருபுனலம்பர்மாநகர்
3007 உழிதலையொழிந்துளருமையுந்தாமுமே. க0

அழகரையடிகளையம்பர்மேவிய
நிழல்திகழ்சடைமுடிநீலகண்டரை
உமிழ்திரையுலகினிலோதுவீர்கொள்மின்
3008 தமிழ்கெழுவிரகினன்தமிழ்செய்மாலையே. கக

20 மாதமர்மேனியனாகிவண்டொடு
போதமர்பொழிலணிபூவணத்துறை
வேதனைவிரவலாரணமூன்றெய்த
3009 நாதனையடிதொழநன்மையாகுமே க

வானணிமதிபுல்குசென்னிவண்டொடு
தேனணிபொழிற்றிருப்பூவணத்துறை
ஆனநல்லருமறையங்கமோதிய
3010 ஞானனையடிதொழநன்மையாகுமே. உ

வெந்துயருறுபிணிவினைகள்தீர்வதோர்
புந்தியர்தொழுதெழுபூவணத்துறை
அந்திவெண்பிறையினோடாறுசூடிய
3011 நந்தியையடிதொழநன்மையாகுமே. ௩

வாசநன்மலர்மலிமார்பில்வெண்பொடிப்
பூசனைப்பொழில்திகழ்பூவணத்துறை
ஈசனைமலர்புனைந்தேத்துவார்வினை
3012 நாசனையடிதொழநன்மையாகுமே. ச

குருந்தொடுமாதவிகோங்குமல்லிகை
பொருந்தியபொழிற்றிருப்பூவணத்துறை
அருந்திறலவுணர்தமரணம்மூன்றெய்த
3013 பெருந்தகையடிதொழப்பீடையில்லையே. ரு

வெறிகமழ்புன்னைபொன்ஞாழல்விம்மிய
பொறியரவணிபொழிற்பூவணத்துறை
கிறிபடுமுடையினன்கேடில்கொள்கையன்
3014 நறுமலரடிதொழநன்மையாகுமே. சு

பறைமல்குமுழவொடுபாடலாடலன்
பொறைமல்குபொழிலணிபூவணத்துறை
மறைமல்குபாடலன்மாதொர்கூறினன்
3015 அறைமல்குகழல்தொழஅல்லலில்லையே. எ

வரைதனையெடுத்தவல்லரக்கன்நீண்முடி
விரல்தனிலடர்த்தவன்வெள்ளைநீற்றினன்
பொருபுனல்புடையணிபூவணந்தனைப்
3016 பரவியஅடியவர்க்கில்லைபாவமே. அ

நீர்மல்குமலருறைவானும்மாலுமாய்ச்
சீர்மல்குதிருந்தடிசேரகிற்கிலர்
போர்மல்குமழுவினன்மேயபூவணம்
3017 ஏர்மல்குமலர்புனைந்தேத்தலின்பமே. கூ

மண்டைகொண்டுழிதருமதியில்தேரருங்
குண்டருங்குணமலபேசுங்கோலத்தர்
வண்டமர்வளர்பொழில்மல்குபூவணம்
3018 கண்டவரடிதொழுதேத்தல்கன்மமே. க0

புண்ணியர்தொழுதெழுபூவணத்துறை
அண்ணலையடிதொழுதந்தண்காழியுள்
நண்ணியஅருமறைஞானசம்பந்தன்
3019 பண்ணியதமிழ்சொலப்பறையும்பாவமே. கக

**21** நனவிலுங்கனவிலுநாளுந்தன்னொளி
நினைவிலுமெனக்குவந்தெய்துநின்மலன்
கனைகடல்வையகந்தொழுகருக்குடி
3020 அனலெரியாடுமெம்மடிகள்காண்மினே. க

வேதியன்விடையுடைவிமலனென்னலர்
மூதெயிலெரியெழமுனிந்தமுக்கணன்
காதியல்குழையினன்கருக்குடியமர்
3021 ஆதியையடிதொழஅல்லலில்லையே. உ

மஞ்சுறுபொழில்வளமலிகருக்குடி
நஞ்சுறுதிருமிடறுடையநாதனார்
அஞ்சுரும்பார்குழலரிவையஞ்சவே
3022 வெஞ்சுரந்தனில்விளையாடலென்கொலோ. ங

ஊனுடைப்பிறவியையறுக்கவுன்னுவீர்
கானிடையாடலான்பயில்கருக்குடிக்
கோனுயர்கோயிலைவணங்கிவைகலும்
3023 வானவர்தொழுகழல்வாழ்த்திவாழ்மினே. ச

சூடுவர்சடையிடைக்கங்கைநங்கையைக்
கூடுவருலகிடையையங்கொண்டொலி
பாடுவரிசைபறைகொட்டநட்டிருள்
3024 ஆடுவர்கருக்குடியண்ணல்வண்ணமே. ரு

இன்புடையாரிசைவீணைபூணரா
என்புடையாரெழில்மேனிமேலெரி
முன்புடையார்முதலைத்துமன்பருக்
3025 கன்புடையார்கருக்குடியெம்மண்ணலே. சு

காலமுஞாயிறுந்தீயுமாயவர்
கோலமுமுடியரவணிந்தகொள்கையர்
சீலமுமுடையவர்திருக்கருக்குடிச்
3026 சாலவுமினிதவருடையதன்மையே. எ

எறிகடல்புடைதழுவிலங்கைமன்னனை
முறிபடவரையிடையடர்த்தமூர்த்தியார்
கறைபடுபொழில்மதிதவழ்கருக்குடி
3027 அறிவொடுதொழுமவராள்வர்நன்மையே. அ

பூமனுந்திசைமுகன்றானும்பொற்பமர்
வாமனனறிகிலாவண்ணமோங்கெரி
ஆமெனவுயர்ந்தவனணிகருக்குடி
3028 நாமனனினில்வரவினைதல்நன்மையே. கூ

சாக்கியர்சமண்படுகையர்பொய்ம்மொழி
ஆக்கியவுரைகொளேலருந்திருந்நமக்
காக்கிய அரனுறையணிகருக்குடிப்
3029 பூக்கமழ்கோயிலேபுடைபட்டுய்ம்மினே. ௧௦

கானலில்விரைமலர்விம்முகாழியான்
வானவன்கருக்குடிமைந்தன்தன்னொளி
ஆனமெய்ஞ்ஞானசம்பந்தன்சொல்லிய
3030 ஊனமில்மொழிவலார்க்குயருமின்பமே ௧௧

**22** துஞ்சலுந்துஞ்சலிலாதபோழ்தினும்
நெஞ்சகநைந்துநினைமின்நாள்தோறும்
வஞ்சகமற்றடிவாழ்த்தவந்தகூற்
3031 றஞ்சவுதைத்தனஅஞ்செழுத்துமே. ௧

மந்திரநான்மறையாகிவானவர்
சிந்தையுள்நின்றவர்தம்மையாள்வன
செந்தழலோம்பியசெம்மைவேதியர்க்
3032 கந்தியுள்மந்திரம்அஞ்செழுத்துமே. ௨

ஊனிலுயிர்ப்பையொடுக்கியொண்சுடர்
ஞானவிளக்கினையேற்றிநன்புலத்
தேனைவழிதிறந்தேத்துவார்க்கிடர்
3033 ஆனகெடுப்பனஅஞ்செழுத்துமே. ௩

நல்லவர்தீயரெனாதுநச்சினர்
செல்லல்கெடச்சிவமுத்திகாட்டுவ
கொல்லநமன்றமர்கொண்டுபோமிடத்
3034 தல்லல்கெடுப்பனஅஞ்செழுத்துமே. ௪

கொங்கலர்வன்மதன்வாளியைந்தகத்
தங்குளபூதமுமஞ்சவைம்பொழில்
தங்கரவின்படமஞ்சுந்தம்முடை
3035 அங்கையிலைவிரலஞ்செழுத்துமே. ௫

தும்மலிருமல்தொடர்ந்தபோழ்தினும்
வெம்மைநரகம்விளைந்தபோழ்தினும்
இம்மைவினையடர்த்தெய்தும்போழ்தினும்
3036 அம்மையினுந்துணைஅஞ்செழுத்துமே. ௬

வீடுபிறப்பையறுத்துமெச்சினர்
பீடைகெடுப்பனபின்னைநாள்தொறும்
மாடுகொடுப்பனமன்னுமாநடம்
3037 ஆடியுகப்பன அஞ்செழுத்துமே. எ

வண்டமரோதிமடந்தைபேணின
பண்டையிராவணன்பாடியுய்ந்தன
தொண்டர்கள்கொண்டுதுதித்தபின்னவர்க்
3038 கண்டமளிப்பனஅஞ்செழுத்துமே. அ

கார்வணன்நான்முகன்காணுதற்கொணாச்
சீர்வணச்சேவடிசெவ்விநாள்தொறும்
பேர்வணம்பேசிப்பிதற்றும்பித்தர்கட்
3039 கார்வணமாவன அஞ்செழுத்துமே. கூ

புத்தர்சமண்கழுக்கையர்பொய்கொளாச்
சித்தத்தவர்கள்தெளிந்துதேறின
வித்தகநீறணிவார்வினைப்பகைக்
3040 கத்திரமாவன அஞ்செழுத்துமே. க0

நற்றமிழ்ஞானசம்பந்தன்நான்மறை
கற்றவன்காழியர்மன்னனுன்னிய
அற்றமில்மாலையீரைந்துமஞ்செழுத்
3041 துற்றனவல்லவரும்பராவரே. கக

23 உருவினாருமையொடுமொன்றிநின்றதோர்
திருவினான்வளர்சடைத்திங்கள்கங்கையான்
வெருவிவானவர்தொழவெகுண்டுநோக்கிய
3042 செருவினானுறைவிடந்திருவிற்கோலமே. க

சிற்றிடையுமையொருபங்கனங்கையில்
உற்றதோரெரியினனொருசரத்தினால்
வெற்றிகொளவுணர்கள்புரங்கள்வெந்தறச்
3043 செற்றவனுறைவிடந்திருவிற்கோலமே. உ

ஐயனல்லதிசயனயன்விண்ணோர்தொழும்
மையணிகண்டனார்வண்ணம்வண்ணவான்
பையரவல்குலாள்பாகமாகவும்
3044 செய்யவனுறைவிடந்திருவிற்கோலமே. ங

விதைத்தவன்முனிவருக்கறமுன்காலனை
உதைத்தவனுயிரிழந்துருண்டுவீழ்தரப்
புதைத்தவன்நெடுநகர்ப்புரங்கள்மூன்றையும்
3045 சிதைத்தவனுறைவிடந்திருவிற்கோலமே. ௪

முந்தினான்மூவருள்முதல்வனாயினான்
கொந்துலாமலர்ப்பொழிற்கூகமேவினான்
அந்திவான்பிறையினானடியர்மேல்வினை
3046 சிந்துவானுறைவிடந்திருவிற்கோலமே. ௫

தொகுத்தவனருமறையங்கமாகமம்
வகுத்தவன்வளர்பொழிற்கூகமேவினான்
மிகுத்தவன்மிகுத்தவர்புரங்கள்வெந்தறச்
3047 செகுத்தவனுறைவிடந்திருவிற்கோலமே. ௬

விரித்தவனருமறைவிரிசடைவெள்ளம்
தரித்தவன்தரியலர்புரங்களாசற
எரித்தவனிலங்கையர்கோனிடர்படச்
3048 சிரித்தவனுறைவிடந்திருவிற்கோலமே. ௭, ௮

திரிதருபுரமெரிசெய்தசேவகன்
வரியரவொடுமதிசடையில்வைத்தவன்
அரியொடுபிரமனதாற்றலானுருத்
3049 தெரியலனுறைவிடந்திருவிற்கோலமே. ௯

சீர்மையில்சமணொடுசீவரக்கையர்
நீர்மையிலுரைகள்கொள்ளாதநேசர்க்குப்
பார்மலிபெருஞ்செல்வம்பரிந்துநல்கிடும்
3050 சீர்மையினானிடந்திருவிற்கோலமே. ௧௦

கோடல்வெண்பிறையனைக்கூகமேவிய
சேடனசெழுமதில்திருவிற்கோலத்தை
நாடவல்லதமிழ்ஞானசம்பந்தன்
3051 பாடல்வல்லார்களுக்கில்லைபாவமே. ௧௧

24 மண்ணினல்லவண்ணம்வாழலாம்வைகலும்
எண்ணினல்லகதிக்கியாதுமோர்குறைவிலைக்
கண்ணினல்லஃதுறுங்கழுமலவளநகர்ப்
3052 பெண்ணினல்லாளொடும்பெருந்தகையிருந்ததே. ௧

போதையார்பொற்கிண்ணத்தடிசில்பொல்லாதெனத்
தாதையார்முனிவுறத்தானெனையாண்டவன்
காதையார்குழையினன்கழுமலவளநகர்ப்
3053 பேதையாளவளொடும்பெருந்தகையிருந்ததே. ௨

தொண்டணைசெய்தொழிற்றுயரறுத்துய்யலாம்
வண்டணைகொன்றையான்மதுமலர்ச்சடைமுடிக்
கண்துணைநெற்றியான்கழுமலவளநகர்ப்
3054 பெண்துணையாகவோர்பெருந்தகையிருந்ததே. ௩

அயர்வுளோமென்றுநீயசைவொழிநெஞ்சமே
நியர்வளைமுன்கையாள்நேரிழையவளொடுங்
கயல்வயல்குதிகொளுங்கழுமலவளநகர்ப்
3055 பெயர்பலதுதிசெயப்பெருந்தகையிருந்ததே. ௪

அடைவிலோமென்றுநீயயர்வொழிநெஞ்சமே
விடையமர்கொடியினான்விண்ணவர்தொழுதெழுங்
கடையுயர்மாடமார்கழுமலவளநகர்ப்
3056 பெடைநடையவளொடும்பெருந்தகையிருந்ததே. ௫

மற்றொருபற்றிலைநெஞ்சமேமறைபல
கற்றநல்வேதியர்கழுமலவளநகர்ச்
சிற்றிடைப்பேரல்குற்றிருந்திழையவளொடும்
3057 பெற்றெனையாளுடைப்பெருந்தகையிருந்ததே. ௬

குறைவளைவதுமொழிகுறைவொழிநெஞ்சமே
நிறைவளைமுன்கையாள்நேரிழையவளொடுங்
கறைவளர்பொழிலணிகழுமலவளநகர்ப்
3058 பிறைவளர்சடைமுடிப்பெருந்தகையிருந்ததே. ௭

அரக்கனாருருவரையெடுத்தவனலறிட
நெருக்கினார்விரலினால்நீடியாழ்பாடவே
கருக்குவாளருள்செய்தான்கழுமலவளநகர்ப்
3059 பெருக்குநீரவளொடும்பெருந்தகையிருந்ததே. ௮

நெடியவன்பிரமனுநினைப்பரிதாயவர்
அடியொடுமுடியறியா அழலுருவினன்
கடிகமழ்பொழிலணிகழுமலவளநகர்ப்
3060 பிடிநடையவளொடும்பெருந்தகையிருந்ததே. ௯

தாருறுதட்டுடைச்சமணர்சாக்கியர்கள்தம்
ஆருறுசொற்களைந்தடியிணையடைந்துய்ம்மின்
காருறுபொழில்வளர்கழுமலவளநகர்ப்
3061 பேரறத்தாளொடும்பெருந்தகையிருந்ததே. க0

கருந்தடந்தேன்மல்குகழுமலவளநகர்ப்
பெருந்தடங்கொங்கையோடிருந்தஎம்பிரான்றனை
அருந்தமிழ்ஞானசம்பந்தனசெந்தமிழ்
3062 விரும்புவாரவர்கள்போய்விண்ணுலகாள்வரே. கக

25 மருந்துவேண்டில்லிவைமந்திரங்கள்ளிவை
புரிந்துகேட்கப்படும்புண்ணியங்கள்ளிவை
திருந்துதேவன்குடித்தேவர்தேவெய்திய
3063 அருந்தவத்தோர்தொழுமடிகள்வேடங்களே. க

வீதிபோக்காவனவினையைவீட்டுவ்வன
ஓதியோர்க்கப்படாப்பொருளையோர்விப்பன
தீதில்தேவன்குடித்தேவர்தேவெய்திய
3064 ஆதியந்தம்மிலாஅடிகள்வேடங்களே. உ

மானமாக்குவ்வனமாசுநீக்குவ்வன
வானையுள்கச்செலும்வழிகள்காட்டுவ்வன
தேனும்வண்டும்மிசைபாடுந்தேவன்குடி
3065 ஆனஞ்சாடும்முடியடிகள்வேடங்களே. ங

செவிகளார்விப்பனசிந்தையுட்சேர்வன
கவிகள்பாடுவ்வனகண்குளிர்விப்பன
புவிகள்பொங்கப்புனல்பாயுந்தேவன்குடி
3066 அவிகளுய்க்கப்படுமடிகள்வேடங்களே. ச

விண்ணுலாவுந்நெறிவீடுகாட்டுந்நெறி
மண்ணுலாவுந்நெறிமயக்கந்தீர்க்குந்நெறி
தெண்ணிலாவெண்மதிதீண்டுதேவன்குடி
3067 அண்ணலானேறுடையடிகள்வேடங்களே. ரு

பங்கமென்னப்படர்பழிகளென்னப்படா
புங்கமென்னப்படர்புகழ்களென்னப்படும்
திங்கள்தோயும்பொழில்தீண்டுதேவன்குடி
3068 அங்கமாறுஞ்சொன்னஅடிகள்வேடங்களே. சு

கரைதலொன்றும்மிலைகருதவல்லார்தமக்
குரையிலூனம்மிலையுலகினின்மன்னுவர்
திரைகள்பொங்கப்புனல்பாயுந்தேவன்குடி
3069 அரையில்வெண்கோவணத்தடிகள்வேடங்களே. ௭

உலகமுட்குந்திறல்லுடையரக்கன்வலி
விலகுபூதக்கணம்வெருட்டும்வேடத்தின
திலகமாரும்பொழில்சூழ்ந்ததேவன்குடி
3070 அலர்தயங்கும்முடியடிகள்வேடங்களே. ௮

துளக்கமில்லாதனதூயதோற்றத்தன
விளக்கமாக்குவ்வனவெறிவண்டாரும்பொழில்
திளைக்குந்தேவன்குடித்திசைமுகனோடுமால்
3071 அளக்கவொண்ணாவண்ணத்தடிகள்வேடங்களே. ௯

செருமருதண்துவர்த்தேரமணாதர்கள்
உருமருவப்படாத்தொழும்பர்தம்முரைகொளேல்
திருமருவும்பொய்கைசூழ்ந்ததேவன்குடி
3072 அருமருந்தாவனஅடிகள்வேடங்களே. ௧௰

சேடர்தேவன்குடித்தேவர்தேவன்றனை
மாடமோங்கும்பொழில்மல்குதண்காழியான்
நாடவல்லதமிழ்ஞானசம்பந்தன
3073 பாடல்பத்தும்வல்லார்க்கில்லையாம்பாவமே. ௧௧

**26** பிடியெலாம்பின்செலப்பெருங்கைமாமலர்தழீஇ
விடியலேதடமூழ்கிவிதியினால்வழிபடும்
கடியுலாம்பூம்பொழிற்கானப்பேரண்ணல்நின்
3074 அடியலாலடைசரணுடையரோஅடியரே. ௧

நுண்ணிடைப்பேரல்குல்நூபுரமெல்லடிப்
பெண்ணினல்லாளையோர்பாகமாப்பேணினான்
கண்ணுடைநெற்றியான்கருதியகானப்பேர்
3075 விண்ணிடைவேட்கையார்விரும்புதல்கருமமே. ௨

வாவிவாய்த்தங்கியநுண்சிறைவண்டினம்
காவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளும்ஞானநீர்
3076 தூவிவாய்ப்பெய்துநின்றாட்டுவார்தொண்டரே. ௩

நிறையுடைநெஞ்சுளும்நீருளும்பூவுளும்
பறையுடைமுழவுளும்பலியுளும்பாட்டுளும்
கறையுடைமிடற்றண்ணல்கருதியகானப்பேர்
3077 குறையுடையவர்க்கலாற்களைகிலார்குற்றமே. ௪

ஏனப்பூண்மார்பின்மேலென்புபூண்டீறிலா
ஞானப்பேராயிரம்பேரினன்நண்ணிய
கானப்பேரூர்தொழுங்காதலர் தீதிலர்
3078 வானப்பேரூர்புகும்வண்ணமும்வல்லரே. ரு

பள்ளமேபடர்சடைப்பாற்படப்பாய்ந்தநீர்
வெள்ளமேதாங்கினன்வெண்மதிசூடினன்
கள்ளமேசெய்கிலார்கருதியகானப்பேர்
3079 உள்ளமேகோயிலாவுள்குமென்னுள்ளமே. சு

மானமாமடப்பிடி வன்கையாலலகிடக்
கானமார்கடகரிவழிபடுங்கானப்பேர்
ஊனமாமுடம்பினிலுறுபிணிகெடஎண்ணில்
3080 ஞானமாமலர்கொடுநணுகுதல்நன்மையே. எ

வாளினன்வேலினன்மால்வரையெடுத்ததிண்
தோளினன்நெடுமுடிதொலையவேயூன்றிய
தாளினன்கானப்பேர்தலையினால்வணங்குவார்
3081 நாளுநாளுயர்வதோர்நன்மையைப்பெறுவரே. அ

சிலையினன்முப்புரந்தீயெழச்செற்றவன்
நிலையிலாஇருவரைநிலைமைகண்டோங்கினன்
கலையினர்புறவிற்றேன்கமழ்தருகானப்பேர்
3082 தலையினால்வணங்குவார்தவமுடையார்களே. கூ

உறித்தலைச்சுரையொடுகுண்டிகைபிடித்துச்சி
பறித்தலும்போர்த்தலும்பயனிலைபாவிகாள்
மறித்தலைமடப்பிடி வளரிளங்கொழுங்கொடி
3083 கறித்தெழுகானப்பேர்கைதொழல்கருமமே. க0

காட்டகத்தாடலான்கருதியகானப்பேர்
கோட்டகத்திளவரால்குதிகொளுங்காழியான்
நாட்டகத்தோங்குசீர்ஞானசம்பந்தன
3084 பாட்டகத்திவைவலார்க்கில்லையாம்பாவமே. கக

27

படையினார்வெண்மழுப்பாய்புலித்தோலரை
உடையினாருமையொருகூறனாரூர்வதோர்
விடையினார்வெண்பொடிப்பூசியார்விரிபுனல்
3085 சடையினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. க

பாடினாரருமறைபனிமதிசடைமிசைச்
சூடினார்படுதலைதுன்னெருக்கதனொடும்
நாடினாரிடுபலிநண்ணியோர்காலனைச்
3086 சாடினார்வளநகர்சக்கரப்பள்ளியே. உ

மின்னினார்சடைமிசைவிரிகதிர்மதியமும்
பொன்னினார்கொன்றையும்பொறிகிளராவமும்
துன்னினாருலகெலாந்தொழுதெழநான்மறை
3087 தன்னினார்வளநகர்சக்கரப்பள்ளியே. ந

நலமலிகொள்கையார்நான்மறைபாடலார்
வலமலிமழுவினார்மகிழுமூர்வண்டறை
மலர்மலிசலமொடுவந்திழிகாவிரி
3088 சலசலமணிகொழிசக்கரப்பள்ளியே. ச

வெந்தவெண்பொடியணிவேதியர்விரிபுனல்
அந்தமிலணிமலைமங்கையோடமருமூர்
கந்தமார்மலரொடுகாரகில்பன்மணி
3089 சந்தினோடணைபுனற்சக்கரப்பள்ளியே. ரு

பாங்கினால்முப்புரம்பாழ்படவெஞ்சிலை
வாங்கினார்வானவர்தானவர்வணங்கிட
ஓங்கினாருமையொருகூறொடுமொலிபுனல்
3090 தாங்கினாருறைவிடஞ்சக்கரப்பள்ளியே. சு

பாரினார்தொழுதெழுபரவுபல்லாயிரம்
பேரினார்பெண்ணொருகூறனார்பேரொலி
நீரினார்சடைமுடிநிரைமலர்க்கொன்றையந்
3091 தாரினார்வளநகர்சக்கரப்பள்ளியே. எ

முதிரிலாவெண்பிறைசூடினார்முன்னநாள்
எதிரிலாமுப்புரமெரிசெய்தார்வரைதனால்
அதிரிலாவல்லரக்கன்வலிவாட்டிய
3092 கதிரினார்வளநகர்சக்கரப்பள்ளியே. அ

துணிபடுகோவணஞ்சுண்ணவெண்பொடியினர்
பணிபடுமார்பினர்பனிமதிச்சடையினர்
மணிவணனவனெடுமலர்மிசையானையும்
3093 தணிவினர்வளநகர்சக்கரப்பள்ளியே. கூ

உடம்புபோர்சீவரருண்தொழிற்சமணர்கள்
விடம்படுமுரையவைமெய்யலவிரிபுனல்
வடம்படுமலர்கொடுவணங்குமின்வைகலும்
3094 தடம்புனல்சூழ்தருசக்கரப்பள்ளியே. க0

தண்வயல்புடையணிசக்கரப்பள்ளியெங்
கண்ணுதலவனடிக்கழுமலவளநகர்
நண்ணியசெந்தமிழ்ஞானசம்பந்தன்சொல்
3095 பண்ணியஇவைசொலப்பறையுமெய்ப்பாவமே. கக

28 காலையார்வண்டினங்கிண்டியகாருறும்
சோலையார்பைங்கிளிசொற்பொருள்பயிலவே
வேலையார்விடமணிவேதியன்விரும்பிடம்
3096 மாலையார்மதிதவழ்மாமழபாடியே. க

கறையணிமிடறுடைக்கண்ணுதல்நண்ணிய
பிறையணிசெஞ்சடைப்பிஞ்ஞகன்பேணுமூர்
துறையணிகுருகினந்தூமலர்துதையவே
3097 மறையணிநாவினன்மாமழபாடியே. உ

அந்தணர்வேள்வியுமருமறைத்துழனியுஞ்
செந்தமிழ்க்கீதமுஞ்சீரினால்வளர்தரப்
பந்தணைமெல்விரலாளொடும்பயில்விடம்
3098 மந்தம்வந்துலவுசீர்மாமழபாடியே. ௩

அத்தியினுரிதனையழகுறப்போர்த்தவன்
முத்தியாய்மூவரின்முதல்வனாய்நின்றவன்
பத்தியாற்பாடிடப்பரிந்தவர்க்கருள்செயும்
3099 அத்தனாருறைவிடம்மணிமழபாடியே. ச

கங்கையார்சடையிடைக்கதிர்மதியணிந்தவன்
வெங்கண்வாளரவுடைவேதியன்தீதிலாச்
செங்கயற்கண்ணுமையாளொடுஞ்சேர்விடம்
3100 மங்கைமார்நடம்பயில்மாமழபாடியே. ரு

பாலனாருயிர்பாங்கினுலுணவரும்
காலனாருயிர்செகக்காலினற்சாடினன்
சேலினார்கண்ணினாள் தன்னெடுஞ்சேர்விடம்
3101 மாலினார்வழிபடுமாமழபாடியே. ௬

விண்ணிலாரிமையவர்மெய்ம்மகிழ்ந்தேத்தவே
எண்ணிலார்முப்புரமெரியுணநகைசெய்தார்
கண்ணினாற்காமனைக்கனலெழக்காய்ந்தஎம்
3102 அண்ணலாருறைவிடமணிமழபாடியே. ௭

கரத்தினாற்கயிலையையெடுத்தகாரரக்கன
சிரத்தினையூன்றலுஞ்சிவனடிசரணென
இரத்தினாற்கைந்நரம்பெடுத்திசைபாடலும்
3103 வரத்தினான்மருவிடமாமழபாடியே. ௮

ஏடுலாமலர்மிசை அயனெழில்மாலுமாய்
நாடினார்க்கரியசீர்நாதனாருறைவிடம்
பாடெலாம்பெண்ணையின் பழம்விழப்பைம்பொழில்
3104 மாடெலாமல்குசீர்மாமழபாடியே. ௯

உறிபிடித்தூத்தைவாய்ச்சமணொடுசாக்கியர்
நெறிபிடித்தறிவிலாநீசர்சொற்கொள்ளன்மின்
பொறிபிடித்தரவினம்பூணெனக்கொண்டுமான்
3105 மறிபிடித்தானிடமாமழபாடியே. ௧௦

ஞாலத்தாராதிரைநாளினான்நாள்தொறும்
சீலத்தான்மேவியதிருமழபாடியை
ஞாலத்தான்மிக்கசீர்ஞானசம்பந்தன்சொல்
3106 கோலத்தாற்பாடுவார்குற்றமற்றார்களே. ௧௧

29 வாருமன்னும்முலைமங்கையோர்பங்கினன்
ஊருமன்னும்பலியுண்பதும்வெண்தலை
காருமன்னும்பொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
3107 நீருமன்னுஞ்சடைநிமலர்தந்நீர்மையே. ௧

திருத்தனார்நீள்சடைமதியொடுபாம்பணி
கருத்தனார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
அருத்தனாரழகமர்மங்கையோர்பாகமாப்
3108 பொருத்தனார்கழலிணைபோற்றுதல்பொருளதே. ௨

பண்ணினாருமறைபாடினார்நெற்றியோர்
கண்ணினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
விண்ணினார்விரிபுனல்மேவினார்சடைமுடி
3109 அண்ணலாரெம்மையாளுடையஎம்மடிகளே. ௩

பணங்கொள்நாகம்மரைக்கார்ப்பதுபல்பலி
உணங்கலோடுண்கலனுறைவதுகாட்டிடைக்
கணங்கள்கூடித்தொழுதேத்துகாட்டுப்பள்ளி
3110 நிணங்கொள்சூலப்படைநிமலர்தந்நீர்மையே. ௪

வரையுலாஞ்சந்தொடுவந்திழிகாவிரிக்
கரையுலாமிடுமணல்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
திரையுலாங்கங்கையுந்திங்களுஞ்சூடியங்
3111 கரையுலாங்கோவணத்தடிகள்வேடங்களே. ௫

வேதனார்வெண்மழுவேந்தினாரங்கமுன்
ஓதினாருமையொருகூறனாரொண்குழைக்
காதினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
3112 நாதனார்திருவடிநாளுநின்றேத்துமே. ௬

மையினார்மிடறினார்மான்மழுவேந்திய
கையினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
தையலோர்பாகமாத்தண்மதிசூடிய
3113 ஐயனாரடிதொழஅல்லலொன்றில்லையே. ௭

சிலைதனால்முப்புரஞ்செற்றவன்சீரினார்
மலைதனால்வல்லரக்கன்வலிவாட்டினான்
கலைதனார்புறவணிமல்குகாட்டுப்பள்ளி
3114 தலைதனால்வணங்கிடத்தவமதுஆகுமே. ௮

செங்கண்மால்திகழ்தருமலருறைதிசைமுகன்
தங்கையாற்றொழுதெழத்தழலுருவாயினான்
கங்கையார்சடையினான்கருதுகாட்டுப்பள்ளி
3115 அங்கையாற்றொழுமவர்க்கல்லலொன்றில்லையே. ௯

போதியார்பிண்டியாரென்றஅப்பொய்யர்கள்
வாதினாலுரையவைமெய்யலவைகலும்
காரினார்கடிபொழில்சூழ்ந்தகாட்டுப்பள்ளி
3116 ஏரினாற்றொழுதெழஇன்பம்வந்தெய்துமே. ௧௦

பொருபுனல்புடையணிபுறவநன்னகர்மன்னன்
அருமறையவைவல்லஅணிகொள்சம்பந்தன்சொல்
கருமணிமிடற்றினன்கருதுகாட்டுப்பள்ளி
3117 பரவியதமிழ்சொல்லப்பறையுமெய்ப்பாவமே. கக

**30** பைத்தபாம்போடரைக்கோவணம்பாய்புலி
மொய்த்தபேய்கண்முழக்கம்முதுகாட்டிடை
நித்தமாகந்நடமாடிவெண்ணீறணி
3118 பித்தர்கோயில்லரதைப்பெரும்பாழியே. க

கயலசேலகருங்கண்ணியர்நாள்தொறும்
பயலைகொள்ளப்பலிதேர்ந்துழல்பான்மையார்
இயலைவானோர்நினைந்தோர்களுக்கெண்ணரும்
3119 பெயரர்கோயில்லரதைப்பெரும்பாழியே. உ

கோடல்சாலவ்வுடையார்கொலையானையின்
மூடல்சாலவ்வுடையார்முளிகானிடை
ஆடல்சாலவ்வுடையாரழகாகிய
3120 பீடர்கோயில்லரதைப்பெரும்பாழியே. ௩

மண்ணர்நீராரழலார்மலிகாலினர்
விண்ணவர்வேதம்விரித்தோதுவார்மெய்ப்பொருள்
பண்ணர்பாடலுடையாரொருபாகமும்
3121 பெண்ணர்கோயில்லரதைப்பெரும்பாழியே.

மறையர்வாயின்மொழிமானொடுவெண்மழுக்
கறைகொள்சூலம்முடைக்கையர்காரார்தரும்
நறைகொள்கொன்றைநயந்தார்தருஞ்சென்னிமேல்
3122 பிறையர்கோயில்லரதைப்பெரும்பாழியே. ரு

புற்றரவம்புலித்தோலரைக்கோவணம்
தற்றிரவின்னடமாடுவர்தாழ்தரு
சுற்றமர்பாரிடந்தொல்கொடியின்மிசைப்
3123 பெற்றர்கோயில்லரதைப்பெரும்பாழியே. சா

துணையிறுத்தஞ்சுரிசங்கமர்வெண்பொடி
இணையிலேற்றையுகந்தேறுவரும்மெரி
கணையினால்முப்புரஞ்செற்றவர்கையினில்
3124 பிணையர்கோயில்லரதைப்பெரும்பாழியே.

• சரிவிலாவல்லரக்கன் தடந்தோள் தலை
நெரிவிலாரவ்வடர்த்தார்நெறிமென்குழல்
அரிவைபாகம்மமர்ந்தாரடியாரொடும்
3125 பிரிவில்கோயில்லரதைப்பெரும்பாழியே. அ

வரியராஎன்பணிமார்பினர்நீர்மல்கும்
எரியராவுஞ்சடைமேற்பிறையேற்றவர்
கரியமாலோடயன்காண்பரிதாகிய
3126 பெரியர்கோயில்லரதைப்பெரும்பாழியே. கூ

நாணிலாதசமண்சாக்கியர்நாள்தொறும்
ஏணிலாதம்மொழியவ்வெழிலாயவர்
சேணுலாமும்மதில்தீயெழச்செற்றவர்
3127 பேணுகோயில்லரதைப்பெரும்பாழியே. கo

நீரினார்புன்சடைநிமலனுக்கிடமெனப்
பாரினார்பரவரதைப்பெரும்பாழியைச்
சீரினார்காழியுள்ஞானசம்பந்தன்செய்
3128 ஏரினார்தமிழ்வல்லார்க்கில்லையாம்பாவமே. கக

31 திரைதருபவளமுஞ்சீர்திகழ்வயிரமுங்
கரைதருமகிலொடுகனவளைபுகுதரும்
வரைவிலாலெயிலெய்தமயேந்திரப்பள்ளியுள்
3129 அரவரையழகனையடியிணைபணிமினே. க

கொண்டல்சேர்கோபுரங்கோலமார்மாளிகை
கண்டலுங்கைதையுங்கமலமார்வாவியும்
வண்டுலாம்பொழிலணிமயேந்திரப்பள்ளியிற்
3130 செண்டுசேர்விடையினன்திருந்தடிபணிமினே. உ

கோங்கிளவேங்கையுங்கொழுமலர்ப்புன்னையும்
தாங்குதேன்கொன்றையுந்தகுமலர்க்குரவமு
மாங்கரும்பும்வயன்மயேந்திரப்பள்ளியுள்
3131 ஆங்கிருந்தவன்கழலடியிணைபணிமினே. ங

வங்கமார்சேணுயர்வருகுறியான்மிகு
சங்கமாரொலியகில்தருபுகைகமழ்தரு
மங்கையோர்பங்கினன்மயேந்திரப்பள்ளியுள்
3132 எங்கள்நாயகன்றனதிணையடிபணிமினே. ச

நித்திலத்தொகைபலநிரைதருமலரெனச்
சித்திரப்புணரிசேர்த்திடத்திகழ்ந்திருந்தவன்
மைத்திகழ்கண்டனன்மயேந்திரப்பள்ளியுட்
3133 கைத்தலமழுவனைக்கண்டடிபணிமினே. ௫

சந்திரன்கதிரவன்தகுபுகழயனொடும்
இந்திரன்வழிபடஇருந்தஎம்மிறையவன்
மந்திரமறைவளர்மயேந்திரப்பள்ளியுள்
3134 அந்தமிலழகனையடிபணிந்துய்ம்மினே. ௬

சடைமுடிமுனிவர்கள்சமைவொடும்வழிபட
நடநவில்புரிவினன்நறவணிமலரொடு
படர்சடைமதியினன்மயேந்திரப்பள்ளியுள்
3135 அடல்விடையுடையவனடிபணிந்துய்ம்மினே. ௭

சிரமொருபதுமுடைச்செருவலியரக்கனைக்
கரமிருபதுமிறக்கனவரையடர்த்தவன்
மரவமர்பூம்பொழில்மயேந்திரப்பள்ளியுள்
3136 அரவமர்சடையனையடிபணிந்துய்ம்மினே. ௮

நாகணைத்துயில்பவன்நலமிகுமலரவன்
ஆகணைந்தவர்கழலணையவும்பெறுகிலர்
மாகணைந்தவர்பொழில்மயேந்திரப்பள்ளியுள்
3137 யோகணைந்தவன்கழலுணர்ந்திருந்துய்ம்மினே. ௯

உடைதுறந்தவர்களுமுடைதுவருடையரும்
படுபழியுடையவர்பகர்வனவிடுமினீர்
மடைவளர்வயலணிமயேந்திரப்பள்ளியுள்
3138 இடமுடையீசனையிணையடிபணிமினே. ௧௦

வமபுலாம்பொழிலணிமயேந்திரப்பள்ளியுள்
நம்பனார்கழலடிஞானசம்பந்தன்சொல்
நம்பரமிதுவெனநாவினால்நவில்பவர்
3139 உம்பராரெதிர்கொளவுயர்பதியணைவரே. ௧௧

**32** **வ**ன்னியுமத்தமுமதிபொதிசடையினன்
பொன்னியல்திருவடிபுதுமலரவைகொடு
மன்னியமறையவர்வழிபடஅடியவர்
3140 இன்னிசைபாடலரேடகத்தொருவனே. ௧

கொடிநெடுமாளிகைகோபுரங்குளிர்மதி
வடிவுறஅமைதரமருவியஏடகத்
தடிகளையடிபணிந்தாற்றுமினன்பினால்
3141 இடிபடும்வினைகள்போயில்லையதாகுமே. ௨

குண்டலந்திகழ்தருகாதுடைக்குழகனை
வண்டலம்பும்மலர்க்கொன்றைவான்மதியணி
செண்டலம்பும்விடைச்சேடனூரேடகம்
3142 கண்டுகைதொழுதலுங்கவலைநோய்கழலுமே. ௩

ஏலமார்தருகுழலேழையோடெழில்பெறும்
கோலமார்தருவிடைக்குழகனுறைவிடம்
சாலமாதவிகளுஞ்சந்தனஞ்சண்பகம்
3143 சீலமாரேடகஞ்சேர்தலாஞ்செல்வமே. ௪

வரியணிநயனிநன்மலைமகள்மறுகிடக்
கரியினையுரிசெய்தகறையணிமிடறினன்
பெரியவன்பெண்ணினோடாணலியாகிய
3144 எரியவனுறைவிடமேடகக்கோயிலே. ௫

பொய்கையின்பொழிலுறுபுதுமலர்த்தென்றலார்
வைகையின்வடகரைமருவியஏடகத்
தையனையடிபணிந்தாற்றுமினடர்தரும்
3145 வெய்யவன்பிணிகெடவீடெளிதாகுமே. ௬, ௭

தடவரையெடுத்தவன்தருக்கிறத்தோளடர்
படவிரலூன்றியேபரிந்தவற்கருள்செய்தான்
மடவரலெருக்கொடுவன்னியுமத்தமும்
3146 இடமுடைச்சடையினனேடகத்திறைவனே. ௮

பொன்னுமாமணிகளும்பொருதிரைச்சந்தகில்
தன்னுளார்வைகையின்கரைதனிற்சமைவுற
அன்னமாமயனுமாலடிமுடிதேடியும்
3147 இன்னவாறெனவொண்ணனேடகத்தொருவனே. ௯

குண்டிகைக்கையினர்குணமிலாத்தேரர்கள்
பண்டியைப்பெருக்கிடும்பளகர்கள்பணிகிலர்
வண்டிரைக்கும்மலர்க்கொன்றையும்வன்னியும்
3148 இண்டைசேர்க்குஞ்சடைஏடகத்தெந்தையே. ௧௦

கோடுசந்தனமகில்கொண்டிழிவைகைநீர்
ஏடுசென்றணைதருமேடகத்தொருவனை
நாடுதென்புகலியுள்ஞானசம்பந்தன
3149 பாடல்பத்திவைவல்லார்க்கில்லையாம்பாவமே. கக

33 நீரிடைத்துயின்றவன்தம்பிநீள்சாம்புவான்
போருடைச்சுக்கிரீவன்னநுமான்றொழக்
காருடைநஞ்சுண்டுகாத்தருள்செய்தஎம்
3150 சீருடைச்சேடர்வாழ்திருவுசாத்தானமே. க

கொல்லையேறுடையவன்கோவணஆடையன்
பல்லையார்படுதலைப்பலிகொளும்பரமனார்
முல்லையார்புறவணிமுதுமதிநறைகமழ்
3151 தில்லையானுறைவிடந்திருவுசாத்தானமே. உ

தாமலார்போலவேதக்கனார்வேள்வியை
ஊமனார்தங்கனாவாக்கினானொருகொடிக்
காமனாருடல்கெடக்காய்ந்தஎங்கண்ணுதல்
3152 சேமமாவுறைவிடந்திருவுசாத்தானமே. ௩

மறிதருகரத்தினன்மால்விடையேறியான்
குறிதருகோல்நற்குணத்தினாரடிதொழ
நெறிதருவேதியர்நித்தலுநியமஞ்செய்
3153 செறிதருபொழிலணிதிருவுசாத்தானமே. ச, ரு, சு

பண்டிரைத்தயனுமாலும்பலபத்தர்கள்
தொண்டிரைத்தும்மலர்தூவித்தோத்திரஞ்சொலக்
கொண்டிரைக்கொடியொடுங்குருகினினல்லினம்
3154 தெண்டிரைக்கழனிசூழ்திருவுசாத்தானமே. எ

மடவரல்பங்கினன்மலைதனைமதியாது
சடசடஎடுத்தவன்தலைபத்தும்நெரிதர
அடர்தரவூன்றியங்கேயவற்கருள்செய்தான்
3155 திடமெனவுறைவிடந்திருவுசாத்தானமே. அ

ஆணலார்பெண்ணலாயனொடுமாலுக்கும்
காணொணாவண்ணத்தான்கருதுவார்மனத்துளான்
பேணுவார்பிணியொடும்பிறப்பறுப்பானிடம்
3156 சேணுலாமாளிகைத்திருவுசாத்தானமே. கூ

கானமார்வாழ்க்கையான்காரமண்டேரர்சொல்
ஊனமாக்கொண்டுநீருரைமினுய்யவெனில்
வானமார்மதிலணிமாளிகைவளர்பொழில்
3157 தேனமாமதியந்தோய் திருவுசாத்தானமே. ௧0

வரைதிரிந்திழியுநீர்வளவயற்புகலிமன்
திரைதிரிந்தெறிகடற்றிருவுசாத்தானரை
உரைதெரிந்துணருஞ்சம்பந்தனேண்டமிழ்வல்லார்
3158 நரைதிரையின்றியேநன்னெறிசேர்வரே. ௧௧

**34** வண்ணமாமலர்கொடுவானவர்வழிபட
அண்ணலாராயிழையாளொடுமமர்விடம்
விண்ணின்மாமழைபொழிந்திழியவெள்ளருவிசேர்
3159 திண்ணிலார்புறவணிதிருமுதுகுன்றமே. ௧

வெறியுலாங்கொன்றையந்தாரினன்மேதகு
பொறியுலாமரவசைத்தாடியோர்புண்ணியன்
மறியுலாங்கையினன்மங்கையோடமர்விடஞ்
3160 செறியுளார்புறவணிதிருமுதுகுன்றமே. ௨

ஏறினர்விடைமிசையிமையவர்தொழவுமை
கூறனர்கொல்புலித்தோலினர்மேனிமேல்
நீறனர்நிறைபுனற்சடையனர்நிகழ்விடம்
3161 தேறலார்பொழிலணிதிருமுதுகுன்றமே. ௩

உரையினருருபொருளாயினனுமையொடும்
விரையினர்கொன்றைசேர்சடையினர்மேவிடம்
உரையினரொலியெனவோங்குமுத்தாறுமெய்த்
3162 திரையினரெறிபுனற்றிருமுதுகுன்றமே. ௪

கடியவாயினகுரற்களிற்றினைப்பிளிறவோர்
இடியவெங்குரலினேடாளிசென்றிடுநெறி
வடியவாய்மழுவினன்மங்கையோடமர்விடம்
3163 செடியதார்புறவணிதிருமுதுகுன்றமே. ௫

கானமார்கரியினீருரிவையார்பெரியதோர்
வானமார்மதியினேடரவர்தாமருவிடம
ஊனமாயினபிணியவைகெடுத்துமையொடும்
3164 தேனமார்பொழிலணிதிருமுதுகுன்றமே. ௬

மஞ்சர்தாமலர்கொடுவானவர்வணங்கிட
வெஞ்சொலார்வேடரோடாடவர்விரும்பவே
அஞ்சொலாளுமையொடும்மமர்விடமணிகலைச்
3165 செஞ்சொலார்பயில்தருந்திருமுதுகுன்றமே. எ

காரிஞரமர்தருங்கயிலைநன்மலையிளை
ஏரிஞர்முடியிராவணனெடுத்தானிற
வாரிஞர்முலையொடும்மன்னிஞர்மருவிடம்
3166 சீரிஞர்திகழ்தருந்திருமுதுகுன்றமே. அ

ஆடிஞர்கானகத்தருமறையின்பொருள்
பாடிஞர்பலபுகழ்ப்பரமனரிணையடி
ஏடிஞர்மலர்மிசையயனுமாலிருவரும்
3167 தேடிஞரறிவொணர்திருமுதுகுன்றமே. கூ

மாசுமெய்தூசுகொண்டுழல்சமண்சாக்கியர்
பேசுமெய்யுளவல்லபேணுவீர்காணுமின்
வாசமார்தருபொழில்வண்டினம்மிசைசெயத்
3168 தேசமார்புகழ்மிகுந்திருமுதுகுன்றமே. கo

திண்ணிஞர்புறவணிதிருமுதுகுன்றரை
நண்ணிஞன்காழியுள்ஞானசம்பந்தன்சொல்
எண்ணிஞனீரைந்துமாலையுமியனுமாப்
3169 பண்ணிஞற்பாடுவார்க்கில்லையாம்பாவமே. கக

35 முன்னைநான்மறையவைமுறைமுறைகுறையொடும்
தன்னதாள்தொழுதெழநின்றவன்தன்னிடம்
மன்னுமாகாவிரிவந்தடிவருடநல்
3170 செந்நெலார்வளவயல்தென்குடித்திட்டையே. க

மகரமாடுங்கொடிமன்மதவேள்தனை
நிகரலாகாநெருப்பெழவிழித்தானிடம்
பகரபாணித்திலம்பன்மகரத்தொடும்
3171 சிகரமாளிகைதொகுந்தென்குடித்திட்டையே. உ

கருவினலன்றியேகருவெலாமாயவன்
உருவினலன்றியேயுருவுசெய்தானிடம்
பருவநாள்விழவொடும்பாடலோடாடலும்
3172 திருவினல்மிகுபுகழ்த்தென்குடித்திட்டையே. ஙூ

உண்ணிலாவாவியாயோங்குதன்தன்மையை
விண்ணிலாரறிகிலாவேதவேதாந்தனூர்
எண்ணிலாரெழில்மணிக்கனகமாளிகையிளந்
3173 தெண்ணிலாவிரிதருந்தென்குடித்திட்டையே. ௪

வருந்திவானோர்கள்வந்தடையமாநஞ்சுதான்
அருந்தியாரமுதவர்க்கருள்செய்தானமருமூர்
செருந்திபூமாதவிப்பந்தர்வண்செண்பகம்
3174 திருந்துநீள்வளர்பொழில்தென்குடித்திட்டையே. ௫

ஊறினாரோசையுள்ளொன்றினாரொன்றிமால்
கூறினாரமர்தருங்குமரவேள்தாதையூர்
ஆறினார்பொய்யகத்தையுணர்வெய்திமெய்
3175 தேறினார்வழிபடுந்தென்குடித்திட்டையே. ௬

கானலைக்கும்மவன்கண்ணிடந்தப்பநீள்
வானலைக்குந்தவத்தேவுவைத்தானிடம்
தானலைத்தெள்ளமூர்தாமரைத்தண்டுறை
3176 தேனலைக்கும்வயல்தென்குடித்திட்டையே. ௭

மாலொடும்பொருதிறல்வாளரக்கன்னெரிந்
தோவிடும்படிவிரலொன்றுவைத்தானிடம்
காலொடுங்கனகமூக்குடன்வரக்கயல்வரால்
3177 சேலொடும்பாய்வயல்தென்குடித்திட்டையே. ௮

நாரணன்றன்னொடுநான்முகன்றானுமாய்க்
காரணன்னடிமுடிகாணவொண்ணானிடம்
ஆரணங்கொண்டுபூசுரர்கள்வந்தடிதொழச்
3178 சீரணங்கும்புகழ்த்தென்குடித்திட்டையே. ௯

குண்டிகைக்கையுடைக்குண்டரும்புத்தரும்
பண்டுரைத்தேயிடும்பற்றுவிட்டீர்தொழும்
வண்டிரைக்கும்பொழில்தண்டலைக்கொண்டலார்
3179 தெண்டிரைத்தண்புனல்தென்குடித்திட்டையே. ௧௦

தேனலார்சோலைசூழ்தென்குடித்திட்டையைக்
கானலார்கடிபொழில்சூழ்தருங்காழியுள்
ஞானமார்ஞானசம்பந்தனசெந்தமிழ்
3180 பானலார்மொழிவலார்க்கில்லையாம்பாவமே. ௧௧

**36** சந்தமாரகிலொடுசாதிதேக்கம்மரம்
உந்துமாமுகலியின்கரையினிலுமையொடும்
மந்தமார்பொழில்வளர்மல்குவண்காளத்தி
3181 எந்தையாரிணையடியென்மனத்துள்ளவே. ௧

ஆலமாமரவமோடமைந்தசீர்ச்சந்தனம்
சாலமாபீலியுஞ்சண்பகமுந்தியே
காலமார்முகலிவந்தணைதருகாளத்தி
3182 நீலமார்கண்டனைநினையுமாநினைவதே. ௨

கோங்கமேகுரவமேகொன்றையம்பாதிரி
மூங்கில்வந்தணைதருமுகலியின்கரையினில்
ஆங்கமர்காளத்தியடிகளையடிதொழ
3183 வீங்குவெந்துயர்கெடும்வீடெளிதாகுமே. ௩

கரும்புதேன்கட்டியுங்கதலியின்கனிகளும்
அரும்புநீர்முகலியின்கரையினிலணிமதி
ஒருங்குவார்சடையினன்காளத்தியொருவனை
3184 விரும்புவாரவர்கள்தாம்விண்ணுலகாள்வரே. ௪

வரைதருமகிலொடுமாமுத்தமுந்தியே
திரைதருமுகலியின்கரையினில்தேமலர்
விரைதருசடைமுடிக்காளத்திவிண்ணவன்
3185 நிரைதருகழலிணைநித்தலுநினைமினே. ௫, ௬, ௭

முத்துமாமணிகளுமுழுமலர்த்திரள்களும்
எத்துமாமுகலியின்கரையினிலெழில்பெறக்
கத்திடஅரக்கனைக்கால்விரலூன்றிய
3186 அத்தன்றன்காளத்தியணைவதுகருமமே. ௮

மண்ணுமாவேங்கையும்மருதுகள்பீழ்ந்துந்தி
நண்ணுமாமுகலியின்கரையினில்நன்மைசேர்
வண்ணமாமலரவன்மாலவன்காண்கிலா
3187 அண்ணலார்காளத்தியாங்கணைந்துய்ம்மினே. ௯

வீங்கியவுடலினர்விரிதருதுவருடைப்
பாங்கிலார்சொலைவிடும்பரனடிபணியுமின்
ஓங்குவண்காளத்தியுள்ளமோடுணர்தர
3188 வாங்கிடும்வினைகளைவானவர்க்கொருவனே. ௰

அட்டமாசித்திகளணைதருகாளத்தி
வட்டவார்சடையனை வயலணிகாழியான்
சிட்டநான்மறைவலஞானசம்பந்தன்சொல்
3189 இட்டமாப்பாடுவார்க்கில்லையாம்பாவமே. கக

37 கரமுனம்மலராற்புனல்மலர்தூவியேகலந்தேத்துமின்
பரமனூர்பலபேரினாற்பொலிபத்தர்சித்தர்கள்தாம்பயில்
வரமுன்னவ்வருள்செய்யவல்லஎம்மையன்நாள்தொறும்மேயசீர்ப்
3190 பிரமனூர்பிரமாபுரத்துறைபிஞ்ஞகனருள்பேணியே. க

விண்ணிலார்மதிசூடினான்விரும்புமறையவன்தன்தலை
உண்ணநன்பலிபேணினானுலகத்துளுணுயிரான்மலைப்
பெண்ணினார்திருமேனியான்பிரமாபுரத்துறைகோயிலுள்
3191 அண்ணலாருளாளனாயமர்கின்றஎம்முடையாதியே. உ

எல்லையில்புகழாளனும்மிமையோர்கணத்துடன்கூடியும்
பல்லையார்தலையிற்பலியதுகொண்டுகந்தபடிறனுந் [தவே
தொல்லைவையகத்தேறுதொண்டர்கள்தூமலர்சொரிந்தேத்
3192 மல்லையம்பொழில்தேன்பில்கும்பிரமாபுரத்துறைமைந்தனே. ந

அடையலார்புரஞ்சீறியந்தண ரேத்தமாமடமாதொடும்,
பெடையெலாங்கடற்கானல்புல்கும்பிர மாபுரத்துறைகோயி
லான், தொடையலார்நறுங்கொன்றையான்தொழிலேபரவி
நின்றேத்தினால், இடையிலார்சிவலோகமெய்துதற்கீதுகார
3193 ணங்காண்மினே. ச

வாயிடைம்மறையோதிமங்கையர்வந்திடப்பலிகொண்டு
போயிடம்மெரிகானிடைப்புரிநாடகம்மினிதாடினான் [போய்ப்
பேயொடுங்குடிவாழ்வினான்பிரமாபுரத்துறைபிஞ்ஞகன்
3194 தாயிடைப்பொருள்தந்தையாகுமென்றோதுவார்க்கருள்தன்மையே

ஊடினாலினியாவதென்னுயர்நெஞ்சமேயுறுவல்வினைக்
கோடிநீயுழல்கின்றதென்னழலன்றுதன்கையிலேந்தினான்
பீடுநேர்ந்ததுகொள்கையான்பிரமாபுரத்துறைவேதியன்
3195 ஏடுநேர்மதியோடராவணியெந்தையென்றுநின்றேத்திடே.

செய்யன்வெள்ளியனொள்ளியார்சிலரென்றுமேத்திநினைந்திட
ஐயனாண்டகையந்தணனருமாமறைப்பொருளாயினான்
பெய்யுமாமழையானவன்பிரமாபுரமிடம்பேணிய [வே.
3196 வெய்யவெண்மழுவேந்தியைந்நினைந்தேத்துமின்வினைவீட

கன்றொருக்கையிலேந்திநல்விளவின்கனிபட நூறியுஞ் [மாய்
சென்றொருக்கியமாமறைப்பொருள்தேர்ந்தசெம்மலரோனு
அன்றரக்கனைச்செற்றவனடியும்முடியவைகாண்கிலார்
3197 பின்தருக்கியதண்பொழிற்பிரமாபுரத்தரன்பெற்றியே. அ

உண்டுடுக்கைவிட்டார்களும்முயர்கஞ்சிமண்டைகொள்தேரும், பண்டடக்குசொற்பேசுமப்பரிவொன்றிலார்கள் சொற்கொள்ளன்மின், தண்டொடக்குவன்சூலமுந்தழல் மாமழுப்படைதன்கையிற், கொண்டொடுக்கியமைந்தனெம்
3198 பிரமாபுரத்துறைகூத்தனே. கூ

பித்தனைப்பிரமாபுரத்துறை பிஞ்ஞகன்கழல்பேணியே, மெய்த்தவத்துநின்றோர்களுக்குரை செய்துநன்பொருள் மேவிட, வைத்தசிந்தையுள்ஞானசம்பந்தன்வாய்நவின்றெழுமாலைகள், பொய்த்தவம்பொறிநீங்கஇன்னிசைபோற்றி
3199 செய்யும்மெய்ம்மாந்தரே. கo

38 வினவினேனறியாமையில்லுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர், கனைவிலார்புனற்காவிரிக்கரைமேயகண்டியூர் வீரட்டன், தனமுனேதனக்கின்மையோதமராயினாண்ட மாளத்தான், வனனில்வாழ்க்கைகொண்டாடிப்பாடியிவ்
3200 வையமாப்பலிதேர்ந்ததே. க

உள்ளவாறெனக்குரைசெய்மின்னுயர்வாயமாதவம்பேணுவீர்
கள்ளவிழ்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகாதலான்
பிள்ளைவான்பிறைசெஞ்சடைம்மிசைவைத்ததும்பெருநீரொலி
3201 வெள்ளந்தாங்கியதென்கொலோமிகுமங்கையாளுடனாகவே.

அடியராயினீர்சொல்லுமின்னறிகின்றிலேனரன்செய்கையைப்
படியெலாந்தொழுதேத்துகண்டியூர்வீரட்டத்துறைபான்மையான்
முடிவுமாய்முதலாயிவ்வையமுழுதுமாயழகாயதோர்
3202 பொடியதார்திருமார்பினிற்புரிநூலும்பூண்டெழுபொற்பதே.

பழையதொண்டர்கள்பகருமின்பலவாயவேதியன்பான்மையைக்
கழையுலாம்புனல்மல்குகாவிரிமன்னுகண்டியூர்வீரட்டன்
குழையொர்காதினிற்பெய்துகந்தொருகுன்றின்மங்கைவெருவுறப்
3203 புழைநெடுங்கைநன்மாவுரித்ததுபோர்த்துகந்தபொலிவதே.

விரவிலா துமைக்கேட்கின்றேனடிவிரும்பியாட்செய்வீர்
விளம்புமின், கரையெலாந்திரைமண்டுகாவிரிக்கண்டியூரு
றைவீரட்டன், முரவமொந்தைமுழவொலிக்கழுழங்குபே
யொடுங்கூடிப்போய்ப், பரவுவானவர்க்காகவார்கடல்நஞ்ச
3204 முண்டபரிசதே. ரு

இயலுமாறெனக் கியம்புமின்னிறைவனுமாய்நிறை
செய்கையைக்,கயல்நெடுங்கண்ணினார்கள் தாம்பொலிகண்டி
யூருறைவீரட்டன், புயல்பொழிந்திழிவானுளோர்களுக்
காகவன்றயன்பொய்ச்சிரம், அயனகவ்வ தரிந்துமற்றதிலூ
3205 ணுகந்தவருத்தியே. சா

திருந்துதொண்டர்கள்செப்புமின்மிகச்செல்வன்றன்ன து
திறமெலாம், கருந்தடங்கண்ணினார்கள் தாந்தொழுகண்டி
யூருறைவீரட்டன், இருந்துநால்வரொடால்நிழலறமுரைத்
ததும்மிகுவெம்மையார், வருந்தவன்சிலையாலம்மாமதில்
3206 மூன்றுமாட்டியவண்ணமே. எ

நாவிரித்தரன்தொல்புகழ்பலபேணுவீரிறைநல்குமின்
காவிரித்தடம்புனல்செய்கண்டியூர்வீரட்டத்துறைகண்ணுதல்
கோவிரிப்பயன்ஆனஞ்சாடியகொள்கையுங்கொடிவரைபெற
3207 மாவரைத்தலத்தாலரக்கனைவலியைவாட்டியமாண்பதே. அ

பெருமையேசரணாகவாழ்வுறுமாந்தர்காளிறைபேசுமின்
கருமையார்பொழில்சூழுந்தண்வயற்கண்டியூருறைவீரட்டன்
ஒருமையாலுயர்மாலுமற்றைமலரவன்னுணர்ந்தேத்தவே
3208 அருமையாலவருக்குயர்ந்தெரியாகிநின்றஅத்தன்மையே. கூ

நமரெழுபிறப்பறுக்குமாந்தர்காள்நவிலுமின்னுமைக்கேட்கின்றேன்
கமரழிவயல்சூழுந்தண்புனற்கண்டியூருறைவீரட்டன்
தமரழிந்தெழுசாக்கியச்சமணாதரோதமதுகொளா
3209 தமரானவரேத்தஅந்தகன்தன்னைச்சூலத்திலாய்ந்ததே. க௦

கருத்தனைப்பொழில்சூழுங்கண்டியூர்வீரட்டத்துறைகள்வனை
அருத்தனைத்திறமடியர்பால்மிகக்கேட்டுகந்தவினாவுரை
திருத்தமாந்திகழ்காழிஞானசம்பந்தன்செப்பியசெந்தமிழ்
3210 ஒருத்தராகிலும்பலர்களாகிலுமுரைசெய்வாருயர்ந்தார்களே.

39 மானினேர்விழிமாதராய்வழுதிக்குமாபெருந்தேவிகேள்
பானல்வாயொருபாலனீங்கிவனென்றுநீபரிவெய்திடேல்
ஆனைமாமலையாதியாயஇடங்களிற்பலஅல்லல்சேர்
3211 ஈனர்கட்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. க

ஆகமத்தொடுமந்திரங்களமைந்தசங்கதபங்கமாப்
பாகதத்தொடிரைத்துரைத்தசனங்கள்வெட்குறுபக்கமா
மாகதக்கரிபோற்றிரிந்துபுரிந்துநின்றுணுமாசுசேர்
3212 ஆகதர்க்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. உ

அத்தகுபொருளுண்டுமில்லையுமென்றுநின்றவர்க்கச்சமா
ஒத்தொவ்வாமைமொழிந்துவாதிலழிந்தெழுந்தகவிப்பெயர்ச்
சத்திரத்தின்மடிந்தொடிந்துசனங்கள்வெட்குறநக்கமே
3213 சித்திரர்க்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௩

சந்துசேனனுமிந்துசேனனுந்தருமசேனனுங்கருமைசேர்
கந்துசேனனுங்கனகசேனனுமுதலதாகியபெயர்கொளா
மந்திபோற்றிரிந்தாரியத்தொடுசெந்தமிழ்ப்பயனறிகிலா
3214 அந்தகர்க்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௪

கூட்டினார்கிளியின்விருத்தமுரைத்ததோரொலியின்றொழிற்
பாட்டுமெய்சொலிப்பக்கமேசெலுமெக்கர்தங்களைப்பல்லறம்
காட்டியேவருமாடெலாங்கவர்கையரைக்கசிவொன்றிலாச்
3215 சேட்டைகட்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௫

கனகநந்தியும்புட்பநந்தியும்பவணநந்தியுங்குமணமா
சுனகநந்தியுங்குனகநந்தியுந்திவணநந்தியுமொழிகொளா
அனகநந்தியர்மதுவொழிந்தவமேதவம்புரிவோமெனும்
3216 சினகருக்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௬

பந்தணம்மவையொன்றிலம்பரிவொன்றிலம்மெனவாசக
மந்தணம்பலபேசிமாசறுசீர்மையின்றியநாயமே
அந்தணம்மருகந்தணம்மதுபுத்தணம்மதுசித்தணச்
3217 சிந்தணர்க்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௭

மேலெனக்கெதிரில்லையென்றஅரக்கனார்மிகைசெற்றதீப்
போலியைப்பணியாக்கிலாதொருபொய்த்தவங்கொடுகுண்டிகை
பீலிகைக்கொடுபாயிடுக்கிநடுக்கியேபிறர்பின்செலும்
3218 சீலிகட்கெளியேனலேன்திருஆலவாயரன்நிற்கவே. ௮

பூமகற்குமரிக்குமோர்வருபுண்ணியன்னடிபோற்றிலார்
சாமவத்தையினர்கள்போல்தலையைப்பறித்தொருபொய்த்தவம்
வேமவத்தைசெலுத்திமெய்ப்பொடியட்டிவாய்சகதிக்குநேர்
3219 ஆமவர்க்கெளியேனலேன் திருஆலவாயான்நிற்கவே. ௯

தங்களுக்குமச்சாக்கியர்க்குந்தரிப்பொணாதநற்சேவடி
எங்கள்நாயகனேத்தொழிந்திடுக்கேமடுத்தொருபொய்த்தவம்
பொங்குநூல்வழியன்றியேபுலவோர்களைப்பழிக்கும்பொலா
3220 அங்கதர்க்கெளியேனலேன் திருஆலவாயான்நிற்கவே. ௧௦

எக்கராமமண்கையருக்கெளியேனலேன் திருஆலவாய்ச்
சோக்கனேன்னுளிருக்கவேதுளங்கும்முடித்தென்னன்முன்னிவை
தக்கசீர்ப்புகலிக்குமன் தமிழ்நாதன் ஞானசம்பந்தன்வாய்
3221 ஒக்கவேயுரைசெய்தபத்துமுரைப்பவர்க்கிடரில்லையே. ௧௧

40 கல்லால்நீழல், அல்லத்தேவை
3222 நல்லார்பேணார், அல்லோநாமே. ௧

கொன்றைசூடி, நின்றதேவை
3223 அன்றியொன்று, நன்றிலோமே. ௨

கல்லாநெஞ்சின், நில்லானீசன்
3224 சொல்லாதாரோ, டல்லோநாமே. ௩

கூற்றுதைத்த, நீற்றினானைப்
3225 போற்றுவார்கள், தோற்றினாரே. ௪

காட்டுளாடும், பாட்டுளானை
3226 நாட்டுளாரும், தேட்டுளாரே. ௫

தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த
3227 மிக்கதேவர், பக்கத்தோமே. ௬

பெண்ணொருபால், விண்ணோர்கோவை
3228 நண்ணாதாரை, எண்ணோநாமே. ௭

தூர்த்தன்வீரம், தீர்த்தகோவை
3229 ஆத்தமாக, ஏத்தினோமே. ௮

பூவினானும், தாவினானும்
3230 நாவினாலும், நோவினாரே. ௯

மொட்டமணர், கட்டர்தேரர்
3231 பிட்டர்சொல்லை, விட்டுளோமே. ௧0

அந்தண்காழிப், பந்தன்சொல்லைச்
3232 சிந்தைசெய்வோர், உய்ந்துளோரே. ௧௧

41 கருவார்கச்சித், திருவேகம்பத்
3233 தொருவாவென்ன, மருவாவினையே. ௧

மதியார்கச்சி, நதியேகம்பம்
3234 விதியாலேத்தப், பதியாவாரே. ௨

கலியார்கச்சி, மலியேகம்பம்
3235 பலியாற்போற்ற, நலியாவினையே. ௩

வரமார்கச்சிப், புரமேகம்பம்
3236 பரவாவேத்த, விரவாவினையே. ௪

படமார்கச்சி, இடமேகம்பத்
3237 துடையாயென்ன, அடையாவினையே. ௫

நலமார்கச்சி, நிலவேகம்பம்
3238 குலவாவேத்தக், கலவாவினையே. ௬

கரியின் னுரியன், திருவேகம்பன்
3239 பெரியபுரமூன், றெரிசெய்தானே. ௭

இலங்கையரசைத், துலங்கவூன்றும்
3240 நலங்கொள்கம்பன், இலங்குசரணே. ௮

மறையோனரியும், அறியா அனலன்
3241 நெறியேகம்பம், குறியாற்றொழுமே. ௯

பறியாத்தேரர், நெறியில்கச்சிச்
3242 செறிகொள்கம்பம், குறுகுவோமே. ௧0

கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
3243 மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. ௧௧

42 நிறைவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடநீள்சடைக்
குறைவெண்டிங்கள்சூடியோராடல்மேயகொள்கையான்
சிறைவண்டியாழ்செய்பைம்பொழிற்பழனஞ்சூழ்சிற்றேமத்தான்
3244 இறைவனென்றேயுலகெலாமேத்தநின்றபெருமானே. ௧

மாகத்திங்கள்வாண்முகமாதர்பாடவார்சடைப்
பாகத்திங்கள்சூடியோராடல்மேயபண்டங்கன்
மேகத்தாடுசோலைசூழ்மிடைசிற்றேமமேவினான்
3245 ஆகத்தோர்கொளாமையைப்பூண்டஅண்ணலல்லனே. ௨

நெடுவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடநீள்சடைக்
கொடுவெண்டிங்கள்சூடியோராடல்மேயகொள்கையான்
படுவண்டியாழ்செய்பைம்பொழிற்பழனஞ்சூழ்சிற்றேமத்தான்
3246 கடுவெங்கூற்றைக்காலினாற்காய்ந்தகடவுளல்லனே. ௩

கதிரார்திங்கள்வாண்முகமாதர்பாடக்கண்ணுதல்
முதிரார்திங்கள்சூடியோராடல்மேயமுக்கணன்
எதிரார்புனலம்புன்சடையெழிலாருஞ்சிற்றேமத்தான்
3247 அதிரார்பைங்கணேறுடையாதிமூர்த்தியல்லனே. ௪

வானார்திங்கள்வாண்முகமாதர்பாடவார்சடைக்
கூனார்திங்கள்சூடியோராடல்மேயகொள்கையான்
தேனார்வண்டுபண்செயுந்திருவாருஞ்சிற்றேமத்தான்
3248 மானார்விழிநன்மாதொடும்மகிழ்ந்தமைந்தனல்லனே. ௫

பனிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடப்பல்சடைக்
குனிவெண்டிங்கள்சூடியோராடல்மேயகொள்கையான்
தனிவெள்விடையன்புள்ளினத்தாமஞ்சூழ்சிற்றேமத்தான்
3249 முனிவுமூப்புநீக்கியமுக்கண்மூர்த்தியல்லனே. ௬

கிளருந்திங்கள்வாண்முகமாதர்பாடக்கேடிலா
வளருந்திங்கள்சூடியோராடல்மேயமாதவன்
தளிருங்கொம்புமதுவுமார்தாமஞ்சூழ்சிற்றேமத்தான்
3250 ஒளிரும்வெண்ணூல்மார்பனென்னுள்ளத்துள்ளானல்லனே.

சூழ்ந்ததிங்கள்வாண்முகமாதர்பாடச்சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள்சூடியோராடல்மேயபுண்ணியன்
தாழ்ந்தவயற்சிற்றேமத்தான்தடவரையைத்தன்தாளினால்
3251 ஆழ்ந்தஅரக்கனொல்கஅன்றடர்த்தஅண்ணலல்லனே. ௮

தனிவெண்டிங்கள்வாண்முகமாதர்பாடத்தாழ்சடைத்
துணிவெண்டிங்கள்சூடியோராடல்மேயதொன்மையான்
அணிவண்ணச்சிற்றேமத்தானலர்மேலந்தணாளனும்
3252 மணிவண்ணனுமுன்காண்கிலாமழுவாட்செல்வனல்லனே.

வெள்ளைத்திங்கள்வாண்முகமாதர்பாடவீழ்சடைப்
பிள்ளைத்திங்கள்சூடியோராடல்மேயபிஞ்ஞகன்
உள்ளத்தார்சிற்றேமத்தானுருவார்புத்தரொப்பிலாக்
3253 கள்ளத்தாரைத்தாணுக்கியுட்கரந்துவைத்தானல்லனே. ௧௦

கல்விலோதமல்குதண்கானல்சூழ்ந்தகாழியான்
நல்லவாயவின்தமிழ்நவிலுஞானசம்பந்தன்
செல்வனூர்சிற்றேமத்தைப்பாடல்சீரார்நாவினல்
3254 வல்லராகிவாழ்த்துவாரல்லலின்றிவாழ்வரே. ௧௧

**43** சந்தமார்முலையாள்தனகூறனர்
வெந்தவெண்பொடியாடியமெய்யனர்
சுந்தமார்பொழில்சூழ்தருகாழியுள்
3255 எந்தையாரடியென்மனத்துள்ளவே. ௧

மானிடம்முடையார்வளர்செஞ்சடைத்
தேனிடங்கொளுங்கொன்றையந்தாரினர்
கானிடங்கொளுந்தண்வயற்காழியார்
3256 ஊனிடங்கொண்டென்னுச்சியினிற்பரே. ௨

மைகொள்கண்டத்தர்வான்மதிச்சென்னியர்
பைகொள்வாளரவாட்டும்படிறனர்
கைகொள்மான்மறியார்கடற்காழியுள்
3257 ஐயனந்தணர்போற்றஇருக்குமே. ௩

புற்றில்நாகமும்பூளையும்வன்னியுங்
கற்றைவார்சடைவைத்தவர்காழியுட்
பொற்றொடியொடிருந்தவர்பொற்கழல்
3258 உற்றபோதுடனேத்தியுணருமே. ௪

நலியுங்குற்றமுநம்முடலேனுப்வினை
மெலியுமாறதுவேண்டுதிரேல்வெய்ய
கலிகடிந்தகையார்கடற்காழியுள்
3259 அலைகொள்செஞ்சடையாரடிபோற்றுமே. ௫

பெண்ணொர்கூறினர்பேயுடனுடுவர்
பண்ணுமேத்திசைபாடியவேடத்தர்
கண்ணுமூன்றுடையார்கடற்காழியுள்
3260 அண்ணலாயஅடிகள்சரிதையே. ௬

பற்றுமானுமழுவுமழகுற
முற்றுமூர்திரிந்துபலிமுன்னுவர்
கற்றமாநன்மறையவர்காழியுட்
3261 பெற்றமேறதுகந்தார்பெருமையே. ௭

எடுத்தவல்லரக்கன்முடிதோளிற
அடர்த்துகந்தருள்செய்தவர்காழியுட்
கொடித்தயங்குநற்கோயிலுளின்புற
3262 இடத்துமாதொடுதாமுமிருப்பரே. ௮

காலன்தன்னுயிர்வீட்டுகழலடி
மாலுநான்முகன்தானும்வனப்புற
ஓலமிட்டுமுன்தேடியுணர்கிலாச்
3263 சீலங்கொண்டவனூர்திகழ்காழியே. ௯

உருவநீத்தவர்தாமுமுறுதுவர்
தருவலாடையினாருந்தகவிலர்
கருமம்வேண்டுதிரேற்கடற்காழியுள்
3264 ஒருவன்சேவடியேயடைந்துய்ம்மினே. ௧௦

கானல்வந்துலவுங்கடற்காழியுள்
ஈனமில்லிஇணையடியேத்திடும்
ஞானசம்பந்தன்சொல்லியநற்றமிழ்
3265 மானமாக்குமகிழ்ந்துரைசெய்யவே. ௧௧

**44** வெந்தகுங்குலியப்புகைவிம்மவே
கந்தநின்றுலவுங்கழிப்பாலையார்
அந்தமும்மளவும்மறியாததோர்
3266 சந்தமாலவர்மேவியசாந்தமே. ௧

வானிலங்கவிளங்குமிளம்பிறை
தானலங்கலுகந்ததலைவனார்
கானிலங்கவருங்கழிப்பாலையார்
3267 மானலம்மடநோக்குடையாளொடே. ௨

கொடிகொளேற்றினர்கூற்றையுதைத்தனர்
பொடிகொள்மார்பினிற்பூண்டதொராமையர்
கடிகொள்பூம்பொழில்சூழ்கழிப்பாலையுள்
3268 அடிகள்செய்வனவார்க்கறிவொண்ணுமே. ௩

பண்ணலம்படவண்டறைகொன்றையின்
தண்ணலங்கலுகந்ததலைவனார்
கண்ணலங்கவருங்கழிப்பாலையுள்
3269 அண்ணலெங்கடவுள்ளவனல்லனே. ௪

ஏரினாருலகத்திமையோரொடும்
பாரினாருடனேபரவப்படுங்
காரினார்பொழில்சூழ்கழிப்பாலையெம்
3270 சீரினார்கழலேசிந்தைசெய்ம்மினே. ௫

துள்ளுமான்மறியங்கையிலேந்தியூர்
கொள்வனாரிடுவெண்டலையிற்பலி
கள்வனாருறையுங்கழிப்பாலையை
3271 உள்ளுவார்வினையாயினவோயுமே. ௬

மண்ணினார்மலிசெல்வமும்வானமும்
எண்ணிநீரினிதேத்துமின்பாகமும்
பெண்ணினார்பிறைநெற்றியொடுற்றமுக்
3272 கண்ணினாருறையுங்கழிப்பாலையே. ௭

இலங்கைமன்னனைவீரைந்திரட்டிதோள்
துலங்கவூன்றியதூமழுவாளினார்
கலங்கள்வந்துலவுங்கழிப்பாலையை
3273 வலங்கொள்வார்வினையாயினமாயுமே. ௮

ஆட்சியாலலராணொடுமாலுமாய்த்
தாட்சியாலறியாதுதளர்ந்தனர்
காட்சியாலறியான்கழிப்பாலையை
3274 மாட்சியாற்றொழுவார்வினைமாயுமே. ௯

செய்யநுண்துவராடையினாரொடு
மெய்யின்மாசுபிறக்கியவீறிலாக்
கையர்கேண்மையெனோகழிப்பாலையெம்
3275 ஐயன்சேவடியேயடைந்துய்ம்மினே. ௰

அந்தண்காழியருமறைஞானசம்
பந்தன்பாய்புனல்சூழ்கழிப்பாலையைச்
சிந்தையாற்சொன்னசெந்தமிழ்வல்லவர்
3276 முந்திவானுலகாடன்முறைமையே. ௧௧

45 அந்தமாயுலகாதியுமாயினான்
வெந்தவெண்பொடிப்பூசியவேதியன்
சிந்தையேபுகுந்தான்திருஆரூரெம்
3277 எந்தைதானெனையேன்றுகோளுங்கோலோ. ௧

கருத்தனேகருதார்புரமூன்றெய்த
ஒருத்தனேயுமையாளொருகூறனே
திருத்தனேதிருஅரூரெந்தீவண்ண
3278 அருத்தவேன்னேனையஞ்சலேன்னாததே. ௨

மறையன்மாமுனிவன்மருவார்புரம்
இறையின்மாத்திரையில்லெரியூட்டினான்
சிறைவண்டார்பொழில்சூழ்திருஆரூரெம்
3279 இறைவன்றானேனையேன்றுகோளுங்கோலோ. ௩

பல்விலோடுகையேந்திப்பலிதிரிந்
தெல்லிவந்திடுகாட்டெரியாடுவான்
செல்வமல்கியதென்திருஆரூரான்
3280 அல்லல்தீர்த்தேனையஞ்சலெனுங்கோலோ. ௪

குருந்தமேறிக்கொடிவிடுமாதவி
விரிந்தலர்ந்தவிரைகமழ்தேன்கொன்றை
திருந்துமாடங்கள்சூழ்திருஆரூரான்
3281 வருந்தும்போதெனைவாடலெனுங்கொலோ. ௫

வார்கொள்மென்முலையாளொருபாகமா
ஊர்களாரிடுபிச்சைகொளுத்தமன்
சீர்கொள்மாடங்கள்சூழ்திருஆரூரான்
3282 ஆர்கணாவேனையஞ்சலேனாததே. ௬

வளைக்கைமங்கைநல்லாளையோர்பாகமாத்
துளைக்கையானைதுயர்படப்போர்த்தவன்
திளைக்குந்தண்புனல்சூழ்திருஆரூரான்
3283 இளைக்கும்போதேனையேன்றுகோளுங்கோலோ. ௭

இலங்கைமன்னனிருபதுதோளிறக்
கலங்கக்கால்விரலாற்கடைக்கண்டவன்
வலங்கொள்மாமதில்சூழ்திருஆரூரான்
3284 அலங்கல்தந்தேனையஞ்சலெனுங்கோலோ. ௮

நெடியமாலும்பிரமனுநேர்கிலாப்
படியவன்பனிமாமதிச்சென்னியான்
செடிகள்நீக்கியதென்திருஆரூரெம்
3285 அடிகள்தானெனையஞ்சலெனுங்கொலோ. ௯

மாசுமெய்யினர்வண்துவராடைகொள்
காசைபோர்க்குங்கலதிகள்சொற்கொளேல்
தேசமல்கியதென்திருஆரூரெம்
3286 ஈசன்தானெனையேன்றுகொளுங்கொலோ. ௧௦

வன்னிகொன்றைமதியொடுகூவிளம்
சென்னிவைத்தபிரான்திருஆரூரை
மன்னுகாழியுள்ஞானசம்பந்தன்வாய்ப்
3287 பன்னுபாடல்வல்லார்க்கில்லைபாவமே. ௧௧

46 முத்திலங்குமுறுவல்லுமையஞ்சவே
மத்தயானைமறுகவ்வுரிவாங்கியக்
கத்தைபோர்த்தகடவுள்கருகாவூரெம்
3288 அத்தர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. ௧

விமுதவல்லசடையான்வினையுள்குவார்க்
கமுதநீழலகலாததோர்செல்வமாம்
கமுதமுல்லைசமழ்கின்றகருகாவூர்
3289 அமுதர்வண்ணமழலுமழல்வண்ணமே. ௨

பழகவல்லசிறுத்தொண்டர்பாவின்னிசைக்
குழகரென்றுகுழையாவழையாவரும்
கழல்கொள்பாடலுடையார்கருகாவூரெம்
3290 அழகர்வண்ணமழலுமழல்வண்ணமே. ௩

பொடிமெய்பூசிமலர்கொய்துபுணர்ந்துடன்
செடியரல்லாவுள்ளநல்கியசெல்வத்தர்
கடிகொள்முல்லைகமழுங்கருகாவூரெம்
3291 அடிகள்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. ௪

மையலின்றிமலர்கொய்துவணங்கிடச்
செய்யவுள்ளம்மிகநல்கியசெல்வத்தர்
கைதன்முல்லைகமழுங்கருகாவூரெம்
3292 ஐயர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. ௫

மாசில்தொண்டர்மலர்கொண்டுவணங்கிட
ஆசையார அருள் நல்கியசெல்வத்தர்
காய்சினத்தவிடையார்கருகாவூரெம்
3293 ஈசர்வண்ணம்மெரியும்மெரிவண்ணமே. ௬

வெந்தநீறுமெய்பூசியவேதியன்
சிந்தைநின்றருள் நல்கியசெல்வத்தன்
கந்தமௌவல்கமழுங்கருகாவூரெம்
3294 எந்தைவண்ணம்மெரியும்மெரிவண்ணமே. ௭, ௮

பண்ணினேர்மொழியாளையோர்பாகனூர்
மண்ணுகோலம்முடையம்மலரானொடும்
கண்ணனேட அரியார்கருகாவூரெம்
3295 அண்ணல்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. ௯

போர்த்தமெய்யினர்போதுழல்வார்கள்சொல்
தீர்த்தமென்றுதெளிவீர்தெளியேன்மின்
கார்த்தண்முல்லைகமழுங்கருகாவூரெம்
3296 ஆத்தர்வண்ணம்மழலும்மழல்வண்ணமே. ௧௦

கலவமஞ்ஞையுலவுங்கருகாவூர்
நிலவுபாடலுடையான்றனநீள்கழல்
குலவுஞானசம்பந்தனசெந்தமிழ்
3297 சொலவலாரவர்தொல்வினைதீருமே. ௧௧

**47** காட்டுமாவதுரித்துரிபோர்த்துடல்
நாட்டமூன்றுடையாயுரைசெய்வனூன்
வேட்டுவேள்விசெய்யாஅமண்கையரை
3298 ஓட்டிவாதுசெயத்திருவுள்ளமே. ௧

மத்தயானையினீருரிமூடிய
அத்தனேயணிஆலவாயாய்பணி
பொய்த்தவன்தவவேடத்தராஞ்சமண்
3299 சித்தரையழிக்கத்திருவுளளமே. ௨

மண்ணகத்திலும்வானிலுமெங்குமாம்
திண்ணகத்திருஆலவாயாயருள்
பெண்ணகத்தெழிற்சாக்கியப்பேயமண்
3300 தெண்ணர்கற்பழிக்கத்திருவுள்ளமே. ௩

ஓதியோத்தறியா அமணாதரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
ஆதியே திருஆலவாயண்ணலே
3301 நீதியாகநினைந்தருள்செய்திடே. ௪

வையமார்புகழாயடியார்தொழும்
செய்கையார்திருஆலவாயாய்செப்பாய்
கையிலுண்டுழலுமமண்கையரைப்
3302 பையவாதுசெயத்திருவுள்ளமே. ௫

நாறுசேர்வயல்தண்டலைமிண்டிய
தேறலார்திருஆலவாயாய்செப்பாய்
வீறிலாத்தவமோட்டமண்வேடரைச்
3303 சீறிவாதுசெயத்திருவுள்ளமே. ௬

பண்டடித்தவத்தார்பயில்வாற்றெழும்
தொண்டருக்கெளியாய்திருஆலவாய்
அண்டனேயமண்கையரைவாதினில்
3304 சேண்டடித்துளறத்திருவுள்ளமே. ௭

அரக்கன்றன்கிரியேற்றவன்றன்முடிச்
செருக்கினைத்தவிர்த்தாய்திருஆலவாய்ப்
பரக்குமாண்புடையாயமண்பாவரைக்
3305 கரக்கவாதுசெயத்திருவுள்ளமே. ௮

மாலும்நான்முகனும்மறியாநெறி
ஆலவாயுறையும்மண்ணலேபணி
மேலைவீடேணராவெற்றரையரைச்
3306 சாலவாதுசெயத்திருவுள்ளமே. ௯

கழிக்கரைப்படுமீன்கவர்வாரமண்
அழிப்பரையழிக்கத்திருவுள்ளமே
தெழிக்கும்பூம்புனல்சூழ்திருஆலவாய்
3307 மழுப்படையுடைமைந்தனேநல்கிடே. ௧௦

செந்தெனமுரலுந்திருஆலவாய்
மைந்தனேயென்றுவல்லமணசறச்
சந்தமார்தமிழ்கேட்டமெய்ஞ்ஞானசம்
3308 பந்தன்சொற்பகரும்பழிநீங்கவே. ௧௧

48 அங்கையாரழலன்னழகார்சடைக்
கங்கையான்கடவுள்ளிடமேவிய
மங்கையானுறையும்மழபாடியைத்
3309 தங்கையாற்றொழுவார்தகவாளரே. க

விதியுமாம்விளைவாமொளியார்ந்ததோர்
கதியுமாங்கசிவாம்வசியாற்றமா
மதியுமாம்வலியாமழபாடியுள்
3310 நதியந்தோய்சடைநாதன்நற்பாதமே. உ

முழவினான்முதுகாடுறைபேய்க்கணக்
குழுவினான்குலவுங்கையிலேந்திய
மழுவினானுறையும்மழபாடியைத்
3311 தொழுமினுந்துயரானவைதீரவே. ங

கலையினான்மறையான்கதியாகிய
மலையினான்மருவார்புரமூன்றெய்த
சிலையினான்சேர்திருமழபாடியைத்
3312 தலையினால்வணங்கத்தவமாகுமே. ச

நல்வினைப்பயன்நான்மறையின்பொருள்
கல்வியாயகருத்தனுருத்திரன்
செல்வன்மேயதிருமழபாடியைப்
3313 புல்கியேத்துமதுபுகழாகுமே. ரு

நீடினாருலகுக்குயிராய்நின்றான்
ஆடினானெரிகானிடைமாநடம்
பாடினாரிசைமாமழபாடியை
3314 நாடினார்க்கில்லைநல்குரவானவே. சா

மின்னினாரிடையாளொருபாகமாய்
மன்னினானுறைமாமழபாடியைப்
பன்னினாரிசையால்வழிபாடுசெய்
3315 துன்னினார்வினையாயினவோயுமே. எ

தென்னிலங்கையர்மன்னன்செழுவரை
தன்னிலங்கஅடர்த்தருள்செய்தவன்
மன்னிலங்கியமாமழபாடியை
3316 உன்னிலங்கவுறுபிணியில்லையே. அ

திருவின்நாயகனுஞ்செழுந்தாமரை
மருவினானுந்தொழத்தழல்மாண்பமர்
உருவினானுறையும்மழபாடியைப்
3317 பரவினார்வினைப்பற்றறுப்பார்களே. ௯

நலியுநன்றறியாச்சமண்சாக்கியர்
வலியசொல்லினுமாமழபாடியுள்
ஒலிசெய்வார்கழலான்திறமுள்கவே
3318 மெலியுநம்முடன்மேல்வினையானவே. ௧௦

மந்தமுந்துபொழில்மழபாடியுள்
எந்தைசந்தமினிதுகந்தேத்துவான்
கந்தமார்கடற்காழியுள்ஞானசம்
3319 பந்தன்மாலைவல்லார்க்கில்லைபாவமே. ௧௧

49 காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
ஓதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
3320 நாதன்நாமநமச்சிவாயவே. ௧

நம்புவாரவர்நாவினவிற்றினால்
வம்புநாண்மலர்வார்மதுவொப்பது
செம்பொனார்திலகம்முலகுக்கெலாம்
3321 நம்பன்நாமநமச்சிவாயவே. ௨

நெக்குளார்வமிகப்பெருகிநினைந்
தக்குமாலைகொடங்கையிலெண்ணுவார்
தக்கவானவராத்தகுவிப்பது
3322 நக்கன்நாமநமச்சிவாயவே. ௩

இயமன்றூதருமஞ்சுவரின்சொலால்
நயம்வந்தோதவல்லார்தமைநண்ணினால்
நியமந்தான்நினைவார்க்கினியான்நெற்றி
3323 நயனன்நாமநமச்சிவாயவே. ௪

கொல்வாரேனுங்குணம்பலநன்மைகள்
இல்லாரேனுமியம்புவராயிடின்
எல்லாத்தீங்கையுநீங்குவரென்பரால்
3324 நல்லார்நாமநமச்சிவாயவே. ௫

மந்தரம்மனபாவங்கள்மேவிய
பந்தனையவர்தாமும்பகர்வரேல்
சிந்தும்வல்வினைசெல்வமுமல்குமால்
3325 நந்திநாமநமச்சிவாயவே. சு

நரகமேழ்புகநாடினராயினும்
உரைசெய்வாயினராயினுருத்திரர்
விரவியேபுகுவித்திடுமென்பரால்
3326 வரதன்நாமநமச்சிவாயவே. எ

இலங்கைமன்னனெடுத்த அடுக்கல்மேல்
தலங்கொள்கால்விரல்சங்கரனூன்றலும்
மலங்கிவாய்மொழிசெய்தவனுய்வகை
3327 நலங்கொள்நாமநமச்சிவாயவே. அ

போதன்போதனகண்ணனுமண்ணல்தன்
பாதந்தான்முடிநேடியபண்பராய்
யாதுங்காண்பரிதாகியலந்தவர்
3328 ஓதுநாமநமச்சிவாயவே. கூ

கஞ்சிமண்டையர்கையிலுண்கையர்கள்
வெஞ்சொல்மிண்டர்விரவிலரென்பரால்
விஞ்சையண்டர்கள்வேண்ட அமுதுசெய்
3329 நஞ்சுண்கண்டன்நமச்சிவாயவே. க0

நந்திநாமநமச்சிவாயவெனும்
சந்தையாற்றமிழ்ஞானசம்பந்தன்சொல்
சிந்தையால்மகிழ்ந்தேத்தவல்லாரெலாம்
3330 பந்தபாசமறுக்கவல்லார்களே. கக

50 விரும்புந்திங்களுங்கங்கையும்விம்மவே
சுரும்புந்தும்பியுஞ்சூழ்சடையார்க்கிடம்
கரும்புஞ்செந்நெலுங்காய்கமுகின்வளம்
3331 நெருங்குந்தண்டலைநீணெறிகாண்மினே. க

இகழுங்காலனிதயத்துமென்னுளுந்
திகழுஞ்சேவடியான்திருந்தும்மிடம்
புகழும்பூமகளும்புணர்பூசுரர்
3332 நிகழுந்தண்டலைநீணெறிகாண்மினே. உ

பரந்தநீலப்படரெரிவல்விடம்
கரந்தகண்டத்தினான்கருதும்மிடம்
சுரந்தமேதிதுறைபடிந்தோடையில்
3333 நிரந்ததண்டலைநீணெறிகாண்மினே. ௫

தவந்தவென்புந்தவளப்பொடியுமே
உவந்தமேனியினானுறையும்மிடம்
சிவந்தபொன்னுஞ்செழுந்தாளங்களும்
3334 நிவந்ததண்டலைநீணெறிகாண்மினே. ௪, ௫, ௬, ௭

இலங்கைவேந்தனிருபதுதோளிற
விலங்கலில்லடர்த்தான்விரும்பும்மிடம்
சலங்கொளிப்பிதாளமுஞ்சங்கமும்
3335 நிலங்கொள்தண்டலைநீணெறிகாண்மினே. ௮

கருவருந்தியின்நான்முகன்கண்ணனென்
றிருவருந்தெரியாவொருவன்னிடம்
செருவருந்தியசெம்பியன்கோச்செங்கண்
3336 நிருபர்தண்டலைநீணெறிகாண்மினே. ௯

கலவுசீவரத்தார்கையிலுண்பவர்
குலவமாட்டாக்குழகனுறைவிடம்
சுலவுமாமதிலுஞ்சுதைமாடமும்
3337 நிலவுதண்டலைநீணெறிகாண்மினே. ௰

நீற்றர்தணடலைநீணெறிநாதனைத்
தோற்றுமேன்மையர்தோணிபுரத்திறை
சாற்றுஞானசம்பந்தன் தமிழ்வலார்
3338 மாற்றில்சேல்வர்மறப்பர்பிறப்பையே. ௧௧

51 செய்யனேதிருஆலவாய்மேவிய
ஐயனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
3339 பையவேசென்றுபாண்டியற்காகவே. ௧

சித்தனேதிருஆலவாய்மேவிய
அத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
எத்தராமமணர்கொளுவுஞ்சுடர்
3340 பத்திமன்தென்னன்பாண்டியற்காகவே. ௨

தக்கன்வேள்வி தகர்த்தருளாலவாய்ச்
சோக்கனேயஞ்சலென்றருள்செய்யெனை
எக்கராமமணர்கொளுவுஞ்சுடர்
3341 பக்கமேசென்றுபாண்டியற்காகவே. ௩

சிட்டனே திருஆலவாய்மேவிய
அட்டமூர்த்தியனேயஞ்சலென்றருள்
துட்டராமமணர்கொளுவுஞ்சுடர்
3342 பட்டிமன்தென்னன்பாண்டியற்காகவே. ௪

நண்ணலார்புரமூன்றெரியாலவாய்
அண்ணலேயஞ்சலென்றருள்செய்யெனை
எண்ணிலா அமணர்கொளுவுஞ்சுடர்
3343 பண்ணியற்றமிழ்ப்பாண்டியற்காகவே. ௫

தஞ்சமென்றுன்சரண்புகுந்தேனையும்
அஞ்சலென்றருளாலவாயண்ணலே
வஞ்சஞ்செய்தமணர்கொளுவுஞ்சுடர்
3344 பஞ்சவன்தென்னன்பாண்டியற்காகவே. ௬

செங்கண்வெள்விடையாய்திருஆலவாய்
அங்கணா அஞ்சலென்றருள்செய்யெனைக்
கங்குலாரமண்கையரிடுங்கனல்
3345 பங்கமில்தென்னன்பாண்டியற்காகவே. ௭

தூர்த்தன்வீரந்தொலைத்தருளாலவாய்
ஆத்தனேயஞ்சலென்றருள்செய்யெனை
ஏத்திலா அமணர்கொளுவுஞ்சுடர்
3346 பார்த்திவன்தென்னன்பாண்டியற்காகவே. ௮

தாவினனயன்தானறியாவகை
மேவினாய்திருஆலவாயாயருள்
தூவிலா அமணர்கொளுவுஞ்சுடர்
3347 பாவினான்தென்னன்பாண்டியற்காகவே. ௯

எண்டிசைக்கெழிலாலவாய்மேவிய
அண்டனேயஞ்சலென்றருள்செய்யெனைக்
குண்டராமமணர்கொளுவுஞ்சுடர்
3348 பண்டிமன்தென்னன்பாண்டியற்காகவே. ௧௦

அப்பனாலவாயாதியருளினால்
வெப்பந்தென்னவன்மேலுறமேதினிக்
கொப்பஞானசம்பந்தனுரைபத்தும்
3349 செப்பவல்லவர்தீதிலாச்செல்வரே. கக

52 வீடலாலவாயிலாய்விழுமியார்கள்நின்கழல்
பாடலாலவாயிலாய்பரவநின்றபண்பனே
காடலாலவாயிலாய்கபாலிநீள்கடிம்மதில்
3350 கூடலாலவாயிலாய்குலாயதென்னகொள்கையே. க

பட்டிசைந்தஅல்குலாள்பாவையாளோர்பாகமா
ஒட்டிசைந்ததன்றியும்முச்சியாளொருத்தியாக்
கொட்டிசைந்தஆடலாய்கூடலாலவாயிலாய்
3351 எட்டிசைந்தமூர்த்தியாயிருந்தவாறிதென்னையே. உ

குற்றநீகுணங்கள்நீகூடலாலவாயிலாய்
சுற்றநீபிரானுநீதொடர்ந்திலங்குசோதிநீ
கற்றநூற்கருத்துநீயருத்தமின்பமென்றிவை
3352 முற்றுநீபுகழ்ந்துமுன்னுரைப்பதென்முகம்மனே. ௩

முதிருநீர்ச்சடைமுடிமுதல்வன்நீமுழங்கழல்
அதிரவீசியாடுவாயழகன்நீபுயங்கன்நீ
மதுரன்நீமணாளன்நீமதுரையாலவாயிலாய்
3353 சதுரன்நீசதுர்முகன்கபாலமேந்துசம்புவே. ௪

கோலமாயநீள்மதிற்கூடலாலவாயிலாய்
பாலனாயதொண்டுசெய்துபண்டுமின்றுமுன்னையே
நீலமாயகண்டனேநின்னையன்றிநித்தலும்
3354 சீலமாயசிந்தையிற்றேர்வதில்லைதேவரே. ௫

பொன்தயங்கிலங்கொளிந்நலங்குளிர்ந்தபுன்சடை
பின்தயங்கஆடுவாய்பிஞ்ஞகாபிறப்பிலீ
கொன்றையம்முடியினாய்கூடலாலவாயிலாய்
3355 நின்றயங்கியாடலேநினைப்பதேநியமமே. ௬

ஆதியந்தமாயினாயாலவாயிலண்ணலே
சோதியந்தமாயினாய்சோதியுள்ளோர்சோதியாய்
கீதம்வந்தவாய்மையாற்கிளர்தருக்கினார்க்கலால்
3356 ஓதிவந்தவாய்மையாலுணர்ந்துரைக்கலாகுமே. ௭

கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடற்
றுறையிலங்கைமன்னனைத்தோளடரவூன்றினாய்
மறையிலங்குபாடலாய்மதுரையாலவாயிலாய்
3537 நிறையிலங்குநெஞ்சினால்நினைப்பதே நியமமே. அ

தாவணவ்விடையினாய்தலைமையாகநாள்தொறும்
கோவணவ்வுடையினாய்கூடலாலவாயிலாய்
தீவணம்மலர்மிசைத்திசைமுகனுமாலுநின்
3358 தூவணம்மளக்கிலார்துளக்கமெய்துவார்களே. கூ

தேற்றமில்வினைத்தொழிற்றேரருஞ்சமணரும்
போற்றிசைத்துநின்கழற்புகழ்ந்துபுண்ணியங்கொளார்
கூற்றுதைத்ததாளினாய்கூடலாலவாயிலாய்
3359 நாற்றிசைக்குமூர்த்தியாகிநின்றதென்னநன்மையே. க0

போயநீர்வளங்கொளும்பொருபுனற்புகலியான்
பாயகேள்விஞானசம்பந்தன்நல்லபண்பினால்
ஆயசொல்லின்மாலைகொண்டாலவாயிலண்ணலைத்
3360 தீயதீரஎண்ணுவார்கள்சிந்தையாவர்தேவரே. கக

53 வானைக்காவில்வெண்மதிமல்குபுல்குவார்சடைத்
தேனைக்காவிலின்மொழித்தேவிபாகமாயினான்
ஆனைக்காவிலண்ணலையபயமாகவாழ்பவர்
3361 ஏனைக்காவல்வேண்டுவோர்க்கேதுமேதமில்லையே. க

சேறுபட்டதண்வயற்சென்றுசென்றுசேணுலா
வாறுபட்டநுண்டுறையானைக்காவிலண்ணலார்
நீறுபட்டமேனியார்நிகரில்பாதமேத்துவார்
3362 வேறுபட்டசிந்தையார்விண்ணிலெண்ணவல்லரே. உ

தாரமாயமாதராள்தானோர்பாகமாயினான்
ஈரமாயபுன்சடையேற்றதிங்கள்சூடினான்
ஆரமாயமார்புடையானைக்காவிலண்ணலை
3363 வாரமாய்வணங்குவார்வல்வினைகள்மாயுமே. ங

விண்ணினண்ணுபுல்கியவீரமாயமால்விடைச்
சுண்ணவெண்ணீறாடினான்சூலமேந்துகையினான்
அண்ணல்கண்ணோர்மூன்றினானானைக்காவுகைதொழ
3364 எண்ணும்வண்ணம்வல்லவர்க்கேதமொன்றுமில்லையே. ச

வெய்யபாவங்கைவிடவேண்டுவீர்களாண்டசீர்
மைகொள்கண்டன்வெய்யதீமாலையாடுகாதலான்
கொய்யவிண்டநாண்மலர்க்கொன்றைதுன்றுசென்னியெம்
3365 ஐயன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. ரு

நாணுமோர்வுசார்வுமுன்நகையுமுட்குநன்மையும்
பேணுறாதசெல்வமும்பேசநின்றபெற்றியான்
ஆணும்பெண்ணுமாகியஆனைக்காவிலண்ணலார்
3366 காணுங்கண்ணுமூன்றுடைக்கறைகொள்மிடறனல்லனே. சு

கூறுமாலைநண்பகற்கூடிவல்லதொண்டர்கள்
பேருமூருஞ்செல்வமும்பேசநின்றபெற்றியான்
பாரும்விண்ணுங்கைதொழப்பாயுங்கங்கைசெஞ்சடை
3367 ஆரநீரோடேந்தினானானைக்காவுசேர்மினே. எ

பொன்னமல்குதாமரைப்போதுதாதுவண்டினம்
அன்னமல்குதண்டுறைஆனைக்காவிலண்ணலைப்
பன்னவல்லநான்மறைபாடவல்லதன்மையோர்
3368 முன்னவல்லர்மோய்கழல்துன்னவல்லர்விண்ணையே. அ

ஊனொடுண்டல்நன்றெனவூனொடுண்டல்தீதென
ஆனதொண்டரன்பினாற்பேசநின்றதன்மையான்
வானொடொன்றுசூடினான் வாய்மையாகமன்னிநின்
3369 றூனொடஞ்சுமாடினானானைக்காவுசேர்மினே. கூ

கையிலுண்ணுங்கையருங்கடுக்கடின்கழுக்களும்
மெய்யைப்போர்க்கும்பொய்யரும்வேதநெறியையறிகிலார்
தையல்பாகமாயினான்தழலதுருவத்தானெங்கள்
3370 ஐயன்மேயபொய்கைசூழானைக்காவுசேர்மினே. க0

ஊழியூழிவையகத்துயிர்கள்தோற்றும்வானொடும்
ஆழியானுங்காண்கிலாஆனைக்காவிலண்ணலைக்
காழிஞானசம்பந்தன்கருதிச்சொன்னபத்திவை
3371 வாழியாகக்கற்பவர்வல்வினைகள்மாயுமே. கக

**54** வாழ்கஅந்தணர்வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
ஆழ்கதீயதெல்லாமரன்நாமமே
3372 சூழ்கவையகமுந்துயர்தீர்கவே. க

அரியகாட்சியராய்த்தமதங்கைசேர்
எரியரேறுகந்தேறுவர்கண்டமும்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
3373 பெரியராரறிவாரவர்பெற்றியே. உ

வேந்தசாம்பல்விரையெனப்பூசியே
தந்தையாரொடுதாயிலர்தம்மையே
சிந்தியாஎழுவார்வினைதீர்ப்பரால்
3374 எந்தையாரவரெவ்வகையார்கொலோ. ௩

ஆட்பாலவர்க்கருளும்வண்ணமுமாதிமாண்பும்
கேட்பான்புகிலளவில்லைகிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங்குறுகாமையெந்தை
3375 தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார். ௪

ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
3376 சாதுக்கள்மிக்கீரிறையேவந்துசார்மின்களே. ௫

ஆடும்மெனவும்மருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்பும்மறுக்கும்மெனக்கேட்டீராகில்
3377 நாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே. ௬

கடிசேர்ந்தபோதுமலரானகைக்கொண்டுநல்ல
படிசேர்ந்தபால்கொண்டங்காட்டிடத்தாதைபண்டு
முடிசேர்ந்தகாலையறவெட்டிடமுக்கண்மூர்த்தி
3378 அடிசேர்ந்தவண்ணம்மறிவார்சொலக்கேட்டுமன்றே. ௭

வேதமுதல்வன்முதலாகவிளங்கிவையம்
ஏதப்படாமையுலகத்தவரேத்தல்செய்யப்
பூதமுதல்வன்முதலேமுதலாப்பொலிந்த
3379 சூதனொலிமாலையென்றேகலிக்கோவைசொல்லே. ௮

பாராழிவட்டம்பகையானலிந்தாட்டஆடிப்
பேராழியானதிடர்கண்டருள்செய்தல்பேணி
நீராழிவிட்டேறிநெஞ்சிடங்கொண்டவர்க்குப்
3380 போராழியீந்தபுகழும்புகழுற்றதன்றே. ௯

மாலாயவனும்மறைவல்லநான்முகனும்
பாலாயதேவர்பகரில்லமுதூட்டல்பேணிக்
காலாயமுந்நீர்கடைந்தார்க்கரிதாயெழுந்த
3381 ஆலாலமுண்டங்கமரர்க்கருள்செய்ததாமே. ௧௦

அற்றன்றியந்தண்மதுரைத்தொகையாக்கினானும்
தெற்றென்றுதெய்வந்தெளியார்கரைக்கோலைதெண்ணீர்ப்
பற்றின்றிப்பாங்கெதிர்வினூரவும்பண்புநோக்கில்
3382 பெற்றொன்றுயர்த்தபெருமான்பெருமானுமன்றே. ௧௧

நல்லார்கள்சேர்புகலிஞானசம்பந்தன்நல்ல
எல்லார்களும்பரவுமீசனையேத்துபாடல்
பல்லார்களும்மதிக்கப்பாசுரஞ்சொன்னபத்தும்
3383 வல்லார்கள்வானோருலகாளவும்வல்லரன்றே. ௧௨

55 விரையார்கொன்றையினாய்விடமுண்டமிடற்றினனே
உரையார்பல்புகழாயுமைநங்கையோர்பங்குடையாய்
திரையார்தெண்கடல்சூழ்திருவான்மியூருறையும்
3384 அரையாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௧

இடியாரேறுடையாயிமையோர்தம்மணிமுடியாய்
கொடியார்மாமதியோடரவம்மலர்க்கொன்றையினாய்
செடியார்மாதவிசூழ்திருவான்மியூருறையும்
3385 அடிகேளுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௨

கையார்வெண்மழுவாகனல்போற்றிருமேனியனே
மையாரொண்கணல்லாளுமையாள்வளர்மார்பினனே
செய்யார்செங்கயல்பாய்திருவான்மியூருறையும்
3386 ஐயாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௩

பொன்போலுஞ்சடைமேற்புனல்தாங்கியபுண்ணியனே
மின்போலும்புரிநூல்விடையேறியவேதியனே
தென்பால்வையமெலாந்திகழுந்திருவான்மிதன்னில்
3387 அன்பாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௪

கண்ணாருந்நுதலாய்கதிர்சூழொளிமேனியின்மேல்
எண்ணார்வெண்பொடிநீறணிவாயெழில்வார்பொழில்சூழ்
திண்ணார்வண்புரிசைத்திருவான்மியூருறையும்
3388 அண்ணாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௫

நீதிநின்னையல்லால்நெறியாதுநினைந்தறியேன்
ஓதிநான்மறைகள்மறையோன் தலையொன் றினையும்
சேதீசேதமில்லாத்திருவான்மியூருறையும்
3389 ஆதீயுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௬

வானூர்மாமதிசேர்சடையாய்வரைபோலவரும்
கானாரானையின்தோலுரித்தாய்கறைமாமிடற்றாய்
தேனார்சோலைகள்சூழ்திருவான்மியூருறையும்
3390 ஆனாயுன்னையல்லாலடையாதெனதாதரவே. எ, அ

பொறிவாய்நாகணையானொடுபூமிசைமேயவனும்
நெறியார்நீள்கழல்மேல்முடிகாண்பரிதாயவனே
செறிவார்மாமதில்சூழ்திருவான்மியூருறையும்
3391 அறிவேயுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௯

குண்டாடுஞ்சமணர்கொடுஞ்சாக்கியரென்றிவர்கள்
கண்டார்காரணங்கள்கருதாதவர்பேசநின்றாய்
திண்டேர்வீதியதார்திருவான்மியூருறையும்
3392 அண்டாவுன்னையல்லாலடையாதெனதாதரவே. ௧0

கன்றாருங்கமுகின்வயல்சூழ்தருகாழிதனில்
நன்றானபுகழால்மிகுஞானசம்பந்தனுரை
சென்றார்தம்மிடர்தீர்திருவான்மியூரதன்மேல்
3393 குன்றாதேத்தவல்லார்கொடுவல்வினைபோயறுமே. ௧௧

56 இறையவன்ஈசனெந்தையிமையோர்தொழுதேத்தநின்ற
கறையணிகண்டன்வெண்தோடணிகாதினன்காலத்தன்று
மறைமொழிவாய்மையினான்மலையாளொடுமன்னுசென்னிப்
3394 பிறையணிசெஞ்சடையான்பிரமாபுரம்பேணுமினே. ௧

சடையினன்சாமவேதன்சரிகோவணவன்மழுவாட்
படையினன்பாய்புலித்தோலுடையான்மறைபல்கலைநூல்
உடையவனூனமில்லியுடனாயுமைநங்கையென்னும்
3395 பெடையொடும்பேணுமிடம்பிரமாபுரம்பேணுமினே. ௨

மாணியைநாடுகாலனுயிர்மாய்தரச்செற்றுக்காளி
காணியஆடல்கொண்டான்கலந்தூர்வழிசென்றுபிச்சை
ஊணியல்பாகக்கொண்டங்குடனேயுமைநங்கையொடும்
3396 பேணியகோயில்மன்னும்பிரமாபுரம்பேணுமினே. ௩

பாரிடம்விண்ணுமெங்கும்பயில்நஞ்சுபரந்துமிண்டப்
பேரிடர்த்தேவர்கணம்பெருமானிதுகாஎனலும்
ஓரிடத்தேகரந்தங்குமைநங்கையொடும்முடனே
3397 பேரிடமாகக்கொண்டபிரமாபுரம்பேணுமினே. ௪

நச்சரவச்சடைமேல்நளிர்திங்களுமொன்றவைத்தங்
கச்சமெழவிடைமேலழகார்மழுவேந்திநல்ல
இச்சைபகர்ந்துமிகஇடுமின்பலியென்றுநாளும்
3398 பிச்சைகொளண்ணல்நண்ணும்பிரமாபுரம்பேணுமினே. ௫

பெற்றவன்முப்புரங்கள்பிழையாவண்ணம்வாளியினாற்
செற்றவன்செஞ்சடையிற்றிகழ்கங்கைதனைத்தரித்திட்
டொற்றைவிடையினனுமுமைநங்கையொடும்முடனே
3399 பெற்றிமையாலிருந்தான்பிரமாபுரம்பேணுமினே. ௬

வேதமலிந்தவொலிவிழவின்னொலிவீணையொலி
கீதமலிந்துடனேகிளரத்திகழ்பௌவமறை
ஓதமலிந்துயர்வான்முகடேறவொண்மால்வரையான்
3400 பேதையொடும்மிருந்தான்பிரமாபுரம்பேணுமினே. ௭

இமையவரஞ்சியோடஎதிர்வாரவர்தம்மையின்றி
அமைதருவல்லரக்கன்னடர்த்தும்மலையன்றெடுப்பக்
குமையதுசெய்துபாடக்கொற்றவாளொடுநாள்கொடுத்திட்
3401 டுமையொடிருந்தபிரான்பிரமாபுரமுன்னுமினே. ௮

ஞாலமளித்தவனும்மரியும்மடியோடுமுடி
காலம்பலசெலவுங்கண்டிலாமையினாற்கதறி
ஓலமிடஅருளியுமைநங்கையொடும்முடனாய்
3402 ஏலஇருந்தபிரான்பிரமாபுரமேத்துமினே. ௯

துவருறுமாடையினார்தொக்கபீலியர்நக்கரையர்
அவரவர்தன்மைகள்கண்டணுகேன்மின்னருள்பெறுவீர்
கவருறுசிந்தையொன்றிக்கழிகாலமெல்லாம்படைத்த
3403 இவரவரென்றிறைஞ்சிப்பிரமாபுரமேத்துமினே. ௧௦

உரைதருநான்மறையோர்புகழ்ந்தேத்தவொண்மாதினொடும்
வரையெனவீற்றிருந்தான்மலிகின்றபிரமபுரத்
தரசினையேத்தவல்லஅணிசம்பந்தன்பத்தும்வல்லார்
3404 விரைதருவிண்ணுலகம்மெதிர்கொள்ளவிரும்புவரே. ௧௧

57 விடையவன்விண்ணுமண்ணுந்தொழநின்றவன்வெண்மழுவாட்
படையவன்பாய்புலித்தோலுடைகோவணம்பல்கரந்தைச்
சடையவன்சாமவேதன்சசிதங்கியசங்கவெண்டோ
3405 டுடையவன்னூனமில்லியுறையும்மிடமொற்றியூரே. க

பாரிடம்பாணிசெய்யப்பறைக்கட்செறுபல்கணப்பேய்
சீரொடும்பாடலாடலிலயஞ்சிதையாதகொள்கைத்
தாரிடும்போர்விடையன்றலைவன்றலையேகலனா
3406 ஊரிடும்பிச்சைகொள்வானுறையும்மிடமொற்றியூரே. உ

விளிதருநீருமண்ணும்விசும்போடனல்காலுமாகி
அளிதருபேரருளானரனாகியஆதிமூர்த்தி
களிதருவண்டுபண்செய்கமழ்கொன்றையினோடணிந்த
3407 ஒளிதருவெண்பிறையானுறையும்மிடமொற்றியூரே. ங

அரவமேகச்சதாகஅசைத்தானலர்கொன்றையந்தார்
விரவிவெண்ணூல்கிடந்தவிரையார்வரைமார்பனெந்தை
பரவுவார்பாவமெல்லாம்பறைத்துப்படர்புன்சடைமேல்
3408 உரவுநீரேற்றபெம்மானுறையும்மிடமொற்றியூரே. ச

விலகினார்வெய்யபாவம்விதியாலருள்செய்துநல்ல
பலகினார்மொந்தைதாளந்தகுணிச்சமும்பாணியாலே
அலகினால்வீசிநீர்கொண்டடிமேலலரிட்டுமுட்டா
3409 துலகினாரேத்தநின்றானுறையும்மிடமொற்றியூரே. ரு

கமையொடுநின்றசீரான்கழலுஞ்சிலம்புமொலிப்பச்
சுமையொடுமேலும்வைத்தான்விரிகொன்றையுஞ்சோமனையும்
அமையொடுநீண்டதிண்டோளழகாயபொற்றோடிலங்க
3410 உமையொடுங்கூடிநின்றானுறையும்மிடமொற்றியூரே. சு

நன்றியால்வாழ்வதுள்ளம்முலகுக்கொருநன்மையாலே
கன்றினார்மும்மதிலுங்கருமால்வரையேசிலையாப்
பொன்றினார்வார்சுடலைப்பொடிநீறணிந்தாரழலம்
3411 பொன்றினாலெய்தபெம்மானுறையும்மிடமொற்றியூரே. எ

பெற்றியாற்பித்தனொப்பான்பெருமான்கருமானுரிதோல்
சுற்றியான்சுத்திசூலஞ்சுடர்க்கண்ணுதல்மேல்விளங்கத்
தெற்றியாற்செற்றரக்கனுடலைச்செழுமால்வரைக்கீழ்
3412 ஒற்றியான்முற்றுமாள்வானுறையும்மிடமொற்றியூரே. அ

திருவினார்போதினானுந்திருமாலுமோர்தெய்வமுன்னித்
தெரிவினாற்காணமாட்டார்திகழ்சேவடிசிந்தைசெய்து
பரவினார்பாவமெல்லாம்பறையப்படர்பேரொளியோ
3413 டொருவனாய்நின்றபெம்மானுறையுமிடமொற்றியூரே. ௯

தோகையம்பீலிகொள்வார்துவர்க்கூறைகள்போர்த்துழல்
ஆகமசெல்வனாரையலர்தூற்றுதல்காரணமாக் [வார்
கூகையம்மாக்கள்சொல்லைக்குறிக்கொள்ளன்மினேழுலகும்
3414 ஓகைதந்தாளவல்லானுறையுமிடமொற்றியூரே. ௰

ஒண்பிறைமல்குசென்னியிறைவனுறையொற்றியூரைச்
சண்பையர்தந்தலைவன்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
பண்புனைபாடல்பத்தும்பரவிப்பணிந்தேத்தவல்லார்
3415 விண்புனைமேலுலகம்விருப்பெய்துவர்வீடெளிதே. ௧௧

58 திருமலர்க்கொன்றைமாலைதிளைக்கும்மதிசென்னிவைத்தீர்
இருமலர்க்கண்ணிதன்னோடுடனாவதுமேற்பதொன்றே
பெருமலர்ச்சோலைமேகமுரிஞ்சும்பெருஞ்சாத்தமங்கை
3416 அருமலராதிமூர்த்தீ அயவந்தியமர்ந்தவனே. ௧

பொடிதனைப்பூசுமார்பிற்புரிநூலொருபாற்பொருந்தக்
கொடியனசாயலாளோடுடனாவதுங்கூடுவதே
கடிமணமல்கிநாளுங்கமழும்பொழிற்சாத்தமங்கை
3417 அடிகள்நக்கன்பரவ அயவந்தியமர்ந்தவனே. ௨

நூனலந்தங்குமார்பில்நுகர்நீறணிந்தேறதேறி
மானனோக்கிதன்னோடுடனாவதுமாண்பதுவே
தானலங்கொண்டுமேகந்தவழும்பொழிற்சாத்தமங்கை
3418 ஆனலந்தோய்ந்தஎம்மான் அயவந்தியமர்ந்தவனே. ௩

மற்றவின்மால்வரையாமதிலெய்துவெண்ணீறுபூசிப்
புற்றரவல்குலாளோடுடனாவதும்பொற்பதுவே
கற்றவர்சாத்தமங்கைநகர்கைதொழச்செய்தபாவம்
3419 அற்றவர்நாளுமேத்த அயவந்தியமர்ந்தவனே. ௪

வெந்தவெண்ணீறுபூசிவிடையேறியவேதகீதன்
பந்தணவும்விரலாளுடனாவதும்பாங்கதுவே
சந்தமாறங்கம்வேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
3420 அந்தமாயாதியாகி அயவந்தியமர்ந்தவனே. ௫

வேதமாய்வேள்வியாகிவிளங்கும்பொருள்வீடதாகிச்
சோதியாய்மங்கைபாகநிலைதான்சொல்லலாவதொன்றே
சாதியால்மிக்கசீராற்றகுவார்தொழுஞ்சாத்தமங்கை
3421 ஆதியாய்நின்றபெம்மான் அயவந்தியமர்ந்தவனே. ௬

இமயமெல்லாமிரியமதிலெய்துவெண்ணீறுபூசி
உமையையொர்பாகம்வைத்தநிலைதானுன்னலாவதொன்றே
சமயமாறங்கம்வேதந்தரித்தார்தொழுஞ்சாத்தமங்கை
3422 அமையவேறோங்குசீரான் அயவந்தியமர்ந்தவனே. ௭

பண்ணுலாம்பாடல்வீணைபயில்வானோர்பரமயோகி
விண்ணுலாமால்வரையான்மகள்பாகமும்வேண்டினையே
தண்ணிலாவெண்மதியந்தவழும்பொழிற்சாத்தமங்கை
3423 அண்ணலாய்நின்றஎம்மான் அயவந்தியமர்ந்தவனே. ௮

பேரெழிற்றோளரக்கன்வலிசெற்றதும்பெண்ணோர்பாகம்
ஈரெழிற்கோலமாகியுடனாவதுமேற்பதொன்றே
காரெழில்வண்ணனோடுகனகம்மனையானுங்காணா
3424 ஆரழல்வண்ணமங்கை அயவந்தியமர்ந்தவனே. ௯

கங்கையோர்வார்சடைமேலடையப்புடையேகமழும்
மங்கையோடொன்றிநின்றம்மதிதான்சொல்லலாவதொன்
சங்கையில்லாமறையோரவர்தாந்தொழுசாத்தமங்கை [றே
3425 அங்கையிற்சென்னிவைத்தாய் அயவந்தியமர்ந்தவனே. ௰

மறையினார்மல்குகாழித்தமிழ்ஞானசம்பந்தன்மன்னும்
நிறையினார்நீலநக்கன்நெடுமாநகரென்றுதொண்டர்
அறையுமூர்சாத்தமங்கைஅயவந்திமேலாய்ந்தபத்தும்
3426 முறைமையாலேத்தவல்லாரிமையோரிலும்முந்துவரே. ௧௧

59 அரவிரிகோடனீடலணிகாவிரியாற்றயலே
மாவிரிபொதுமௌவல்மணமல்லிகைகள்ளவிழும்
குரவிரிசோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
3427 இரவிரிதிங்கள்சூடியிருந்தானவனெம்மிறையே. ௧

ஒத்தரவங்களோடுமொலிகாவிரியாற்றயலே
பூத்தரவங்களோடும்புகைகொண்டடிபோற்றிநல்ல
கூத்தரவங்களோவாக்குழகன்குடமூக்கிடமா
3428 ஏத்தரவங்கள்செய்யஇருந்தானவனெம்மிறையே. ௨

மயில்பெடைபுல்கிபாலமணல்மேல்மடஅன்னமல்கும்
பயில்பெடைவண்டுபண்செய்பழங்காவிரிப்பைம்பொழில்
குயில்பெடையொடுபாடலுடையான்குடமூக்கிடமா[வாய்க்
3429 இயலொடுவானமேத்தஇருந்தானவனெம்மிறையே. ரு

மிக்கரைதாழவேங்கையுரியார்த்துமையாள்வெருவ
அக்கரவாமையேனமருப்போடவைபூண்டழகார்
கொக்கரையோடுபாடலுடையான்குடமூக்கிடமா
3430 எக்கரையாருமேத்தஇருந்தானவனெம்மிறையே. சா

வடிவுடைவாட்டடங்கண் ணுமையஞ்சவோர்வாரணத்தைப்
பொடியணிமேனிமூடவுரிகொண்டவன்புன்சடையான்
கொடிநெடுமாடமோங்குங்குழகன்குடமூக்கிடமா
3431 இடிபடுவானமேத்தஇருந்தானவனெம்மிறையே. ௫

கழைவளர்கவ்வைமுத்தங்கமழ்காவிரியாற்றயலே
தழைவளர்மாவின்நல்லபலவின்கனிகள்தயங்கும்
குழைவளர்சோலைசூழ்ந்தகுழகன்குடமூக்கிடமா
3432 இழைவளர்மங்கையோடுமிருந்தானவனெம்மிறையே. சு

மலைமலிமங்கைபாகம்மகிழ்ந்தானெழில்வையமுய்யச்
சிலைமலிவெங்கணையாற்சிதைத்தான்புரமூன்றினையும்
குலைமலிதண்பலவின்பழம்வீழ்குடமூக்கிடமா
3433 இலைமலிசூலமேந்தியிருந்தானவனெம்மிறையே. எ

நெடுமுடிபத்துடையவிகழ்வாளரக்கன்னுடலைப்
படுமிடர்கண்டயரப்பருமால்வரைக்கீழடர்த்தான்
கொடுமடல்தங்குதெங்குபழம்வீழ்குடமூக்கிடமா
3434 இடுமணலெக்கர்சூழஇருந்தானவனெம்மிறையே. அ

ஆரெரியாழியானுமலரானுமளப்பரிய
நீரிரிபுன்சடைமேல்நிரம்பாமதிசூடிநல்ல
கூரெரியாகிநீண்டகுழகன்குடமூக்கிடமா
3435 ஈரிருகோவணத்தோடிருந்தானவனெம்மிறையே. கூ

மூடியசீவரத்தார்முதுமட்டையர்மோட்டமணர்
நாடியதேவரெல்லாநயந்தேத்தியநன்னலத்தான்
கூடியகுன்றமெல்லாமுடையான்குடமூக்கிடமா
3436 ஏடலர்கொன்றைசூடியிருந்தானவனெம்மிறையே. ௧௦

வெண்கொடிமாடமோங்குவிறல்வெங்குருநன்னகரான்
நண்பொடுநின்றசீரான்தமிழ்ஞானசம்பந்தன்னல்ல
தண்குடமூக்கமர்ந்தானடிசேர்தமிழ்பத்தும்வல்லார்
3437 விண்புடைமேலுலகம்வியப்பெய்துவர்வீடெளிதே. கக

60 கறையணிமாமிடற்றான்கரிகாடரங்காவுடையான்
பிறையணிகொன்றையினானொருபாகமும்பெண்ணமர்ந்தான்
மறையவன்றன்தலையிற்பலிகொள்பவன்வக்கரையில்
3438 உறைபவனெங்கள்பிரானொலியார்கழலுள்குதுமே. க

பாய்ந்தவன்காலனைமுன்பணைத்தோளியோர்பாகமதா
ஏய்ந்தவனெண்ணிறந்தவ்விமையோர்கள்தொழுதிறைஞ்ச
வாய்ந்தவன்முப்புரங்களெரிசெய்தவன்வக்கரையில்
3439 தேய்ந்திளவெண்பிறைசேர்சடையானடிசெப்புதுமே. உ

சந்திரசேகரனேயருளாயென்றுதண்விசும்பில்
இந்திரனும்முதலாஇமையோர்கள்தொழுதிறைஞ்ச
அந்தரமூவெயிலுமனலாய்விழவோரம்பினால்
3440 மந்தரமேருவில்லாவளைத்தானிடம்வக்கரையே. ங

நெய்யணிசூலமொடுநிறைவெண்மழுவும்மரவும்
கையணிகொள்கையினான்கனல்மேவியஆடலினான்
மெய்யணிவெண்பொடியான்விரிகோவணஆடையின்மேல்
3441 மையணிமாமிடற்றானுறையும்மிடம்வக்கரையே. ச

ஏனவெண்கொம்பினொடுமிளஆமையும்பூண்டுகந்து
கூனிளவெண்பிறையுங்குளிர்மத்தமுஞ்சூடிநல்ல
மானனமென்விழியாளொடும்வக்கரைமேவியவன்
3442 தானவர்முப்புரங்களெரிசெய்ததலைமகனே. ரு

கார்மலிகொன்றையொடுங்கதிர்மத்தமும்வாளரவும்
நீர்மலியுஞ்சடைமேல்நிரம்பாமதிசூடிநல்ல
வார்மலிமென்முலையாளொடும்வக்கரைமேவியவன்
3443 பார்மலிவெண்டலையிற்பலிகொண்டுழல்பான்மையனே. சு

கானணவும்மறிமானொருகையதோர்கைமழுவாள்
தேனணவுங்குழலாளுமைசேர்திருமேனியினான்
வானணவும்பொழில்சூழ்திருவக்கரைமேவியவன்
3444 ஊனணவுந்தலையிற்பலிகொண்டுழலுத்தமனே. எ

இலங்கையர்மன்னனாகியெழில்பெற்றஇராவணனைக்
கலங்கவோர்கால்விரலாற்கதிர்பொன்முடிபத்தலற
நலங்கெழுசிந்தையனாயருள்பெற்றலுநன்களித்த
3445 வலங்கெழுமூவிலைவேலுடையானிடம்வக்கரையே. அ

காமனையீடழித்திட்டவன்காதலிசென்றிரப்பச்
சேமமேயுன்றனக்கென்றருள்செய்தவன்தேவர்பிரான்
சாமவெண்டாமரைமேலயனுந்தரணியளந்த
3446 வாமனனும்மறியாவகையானிடம்வக்கரையே. கூ

மூடியசீவரத்தர்முதிர்பிண்டியரென்றிவர்கள்
தேடியதேவர்தம்மாலிறைஞ்சப்படுந்தேவர்பிரான்
பாடியநான்மறையன்பலிக்கென்றுபல்வீதிதொறும்
3447 வாடியவெண்டலைகொண்டுழல்வானிடம்வக்கரையே. க0

தண்புனலும்மரவுஞ்சடைமேலுடையான்பிறைதோய்
வண்பொழில்சூழ்ந்தழகாரிறைவன்னுறைவக்கரையைச்
சண்பையர்தந்தலைவன்தமிழ்ஞானசம்பந்தன்சொன்ன
3448 பண்புனைபாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. கக

61 ஆதியனாதிரையன்னனலாடியஆரழகன்
பாதியோர்மாதினொடும்பயிலும்பரமாபரமன்
போதியலும்முடிமேற்புனலோடரவம்புனைந்த
3449 வேதியன்மாதிமையால்விரும்புமிடம்வெண்டுறையே. க

காலனையோருதையில்லுயிர்வீடுசெய்வார்கழலான்
பாலொடுநெய்தயிரும்பயின்றாடியபண்டரங்கன்
மாலைமதியொடுநீரரவம்புனைவார்சடையான்
3450 வேலனகண்ணியொடும்விரும்புமிடம்வெண்டுறையே. உ

படைநவில்வெண்மழுவான்பலபூதப்படையுடையான்
கடைநவில்மும்மதிலும்மெரியூட்டியகண்ணுதலான்
உடைநவிலும்புலித்தோலுடையாடையினான்கடிய
3451 விடைநவிலுங்கொடியான்விரும்புமிடம்வெண்டுறையே.

பண்ணமர்வீணையினான்பரவிப்பணிதொண்டர்கள்தம்
எண்ணமர்சிந்தையினானிமையோர்க்குமறிவரியான்
பெண்ணமர்கூறுடையான்பிரமன்தலையிற்பலியான்
3452 விண்ணவர்தம்பெருமான்விரும்புமிடம்வெண்டுறையே.

பாரியலும்பலியான்படியார்க்குமறிவரியான்
சீரியலும்மலையாளொருபாகமுஞ்சேரவைத்தான்
போரியலும்புரமூன்றுடன்பொன்மலையேசிலையா
3453 வீரியநின்றுசெய்தான்விரும்பும்மிடம்வெண்டுறையே. ரு

ஊழிகளாயுலகாயொருவர்க்குமுணர்வரியான்
போழிள்வெண்மதியும்புனலும்மணிபுன்சடையான் [பின்
யாழின்மொழியுமையாள்வெருவவ்வெழில்வெண்மருப்
3454 வேழமுரித்தபிரான்விரும்பும்மிடம்வெண்டுறையே. சு

கன்றியகாலனையும்முருளக்கனல்வாயலறிப்
பொன்றமுன்நின்றபிரான்பொடியாடியமேனியினான்
சென்றிமையோர்பரவுந்திகழ்சேவடியான்புலன்கள்
3455 வென்றவனெம்மிறைவன்விரும்பும்மிடம்வெண்டுறையே.

கரமிருபத்தினாலுங்கடுவன்சினமாயெடுத்த
சிரமொருபத்துமுடையரக்கன்வலிசெற்றுகந்தான்
பரவவல்லார்வினைகளறுப்பானொருபாகமும்பெண்
3456 விரவியவேடத்தினான்விரும்பும்மிடம்வெண்டுறையே. அ

கோலமலாயனுங்குளிர்கொண்டல்நிறத்தவனும்
சீலமறிவரிதாய்த்திகழ்ந்தோங்கியசெந்தழலான்
மூலமதாகிநின்றான்முதிர்புன்சடைவெண்பிறையான்
3457 வேலைவிடமிடற்றான்விரும்பும்மிடம்வெண்டுறையே. கூ

நக்குருவாயவருந்துவராடைநபந்துடையாம்
பொக்கர்கள்தம்முரைகள்ளவைபொய்யெனஎம்மிறைவன்
திக்குநிறைபுகழார்தருதேவர்பிரான்கனகம்
3458 மிக்குயர்சோதியவன்விரும்பும்மிடம்வெண்டுறையே. க0

திண்ணமரும்புரிசைத்திருவெண்டுறைமேயவனைத்
தண்ணமரும்பொழில்சூழ்தருசண்பையர்தந்தலைவன்
எண்ணமர்பல்கலையானிசைஞானசம்பந்தன்சொன்ன
3459 பண்ணமர்பாடல்வல்லார்வினையாயினபற்றறுமே. கக

62 கண்பொலிநெற்றியினான்திகழ்கையிலோர்வெண்மழுவான்
பெண்புணர்கூறுடையான்மிகுபீடுடைமால்விடையான்
விண்பொலிமாமதிசேர்தருசெஞ்சடைவேதியனூர்
3460 தண்பொழில்சூழ்பனந்தாள்திருத்தாடகையீச்சரமே. க

விரித்தவன்நான்மறையைமிக்கவிண்ணவர்வந்திறைஞ்ச
எரித்தவன்முப்புரங்கள்ளியலேழுலகில்லுயிரும் [னைத்
பிரித்தவன்செஞ்சடைமேல்நிறைபேரொலிவெள்ளந்தன்
3461 தரித்தவனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௨

உடுத்தவன்மானுரிதோல்கழலுள்கவல்லார்வினைகள்
கெடுத்தருள்செய்யவல்லான்கிளர்கீதமோர்நான்மறையான்
மடுத்தவன்நஞ்சமுதாமிக்கமாதவர்வேள்வியைமுன்
3462 தடுத்தவனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௩

சூழ்தருவல்வினையும்முடல்தோன்றியபல்பிணியும்
பாழ்படவேண்டுதிரேல்மிகவேத்துமின்பாய்புனலும்
போழிளவெண்மதியும்மனல்பொங்கரவும்புனைந்த
3463 தாழ்சடையான்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௪

விடம்படுகண்டத்தினானிருள்வெள்வளைமங்கையொடும்
நடம்புரிகொள்கையினானவனெம்மிறைசேருமிடம்
படம்புரிநாகமொடுதிரைபன்மணியுங்கொணரும்
3464 தடம்புனல்சூழ்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௫

விடையுயர்வெல்கொடியானடிவிண்ணொடுமண்ணுமெல்லாம்
புடைபடஆடவல்லான்மிகுபூதமார்பல்படையான் [ணிந்த
தொடைநவில்கொன்றையொடுவன்னிதுன்னெருக்கும்ம
3465 சடையவனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௬

மலையவன்முன்பயந்தமடமாதையோர்கூறுடையான்
சிலைமலிவெங்கணையாற்புரமூன்றவைசெற்றுகந்தான்
அலைமலிதண்புனலும்மதியாடரவும்மணிந்த
3466 தலையவனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௭

செற்றரக்கன்வலியைத்திருமெல்விரலாலடர்த்து
முற்றும்வெண்ணீறணிந்ததிருமேனியன்மும்மையினான்
புற்றரவம்புலியினுரிதோலொடுகோவணமும்
3467 தற்றவனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௮

வின்மலைநாணரவம்மிகுவெங்கனலம்பதனால்
புன்மைசெய்தானவர்தம்புரம்பொன்றுவித்தான்புனிதன்
நன்மலர்மேலயனுந்நண்ணுநாரணனும்மறியாத்
3468 தன்மையனூர்பனந்தாள் திருத்தாடகையீச்சரமே. ௯

ஆதர்சமணரொடும்மடையைந்துகில்போர்த்துழலும்
நீதருரைக்குமொழியவைகொள்ளன்மின்னின்மலனூர்
போதவிழ்பொய்கைதனுள்திகழ்புள்ளிரியப்பொழில்வாய்த்
3469 தாதவிழும்பனந்தாள்திருத்தாடகையீச்சரமே. க௦

தண்வயல்சூழ்பனந்தாள்திருத்தாடகையீச்சரத்துக்
கண்ணயலேபிறையானவன்றன்னைமுன்காழியர்கோன்
நண்ணியசெந்தமிழால்மிகுஞானசம்பந்தன்நல்ல
3470 பண்ணியல்பாடல்வல்லாரவர்தம்வினைபற்றறுமே. கக

63 பைங்கோட்டுமலர்ப்புன்னைப்பறவைகாள்பயப்பூரச்
சங்காட்டந்தவிர்த்தென்னைத்தவிராநோய்தந்தானே
செங்காட்டங்குடிமேயசிறுத்தொண்டன்பணிசெய்ய
3471 வெங்காட்டுளனலேந்திவிளையாடும்பெருமானே. க

பொன்னம்பூங்கழிக்கானற்புணர்துணையோடுடன்வாழும்
அன்னங்காளன்றில்காளகன்றும்போய்வருவீர்காள்
கன்னவில்தோள்சிறுத்தொண்டன்கணபதீச்சரமேய
3472 இன்னமுதனிணையடிக்கீழெனதல்லலுரையீரே. உ

குட்டத்துங்குழிக்கரையுங்குளிர்பொய்கைத்தடத்தகத்தும்
இட்டத்தாலிரைதேருமிருஞ்சிறகின்மடநாராய்
சிட்டன்சீர்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3473 வட்டவார்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. ௩

கானருகும்வயலருகுங்கழியருகுங்கடலருகும்
மீனிரியவருபுனலிலிரைதேர்வெண்மடநாராய்
தேனமர்தார்ச்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3474 வானமருஞ்சடையார்க்கென்வருத்தஞ்சென்றுரையாயே. ௪

ஆரலாஞ்சுறவமேய்ந்தகன்கழனிச்சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச்சிறுகுருகேபயில்தூவிமடநாராய்
சீருலாஞ்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3475 நீருலாஞ்சடையார்க்கென்நிலைமைசென்றுரையீரே. ௫

குறைக்கோண்டாரிடர்தீர்த்தல்கடனன்றேகுளிர்பொய்கைத்
துறைக்கெண்டைகவர்குருகேதுணைபிரியாமடநாராய்
கறைக்கண்டன்பிறைச்சென்னிக்கணபதீச்சரமேய
3476 சிறுத்தொண்டன்பெருமான்சீருளொருநாட்பெறலாமே.

கருவடியபசுங்கால்வெண்குருகேயொண்கழிநாராய்
ஒருஅடியாளிரந்தாளென்றொருநாட்சென்றுரையீரே
செருவடிதோட்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3477 திருவடிதன்திருவருளேபெறலாமோதிறத்தவர்க்கே. ௭

கூராரலிரைதேர்ந்துகுளமுலவிவயல்வாழும்
தாராவேமடநாராய்தமியேற்கொன்றுரையீரே
சீராளன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3478 பேராளன்பெருமான்றனருளொருநாட்பெறலாமே. ௮

நறப்பொலிபூங்கழிக்கானல்நவில்குருகேயுலகெல்லாம்
அறப்பலிதேர்ந்துழல்வார்க்கென்னலர்கோடலழகியதே
சிறப்புலவன்சிறுத்தொண்டன்செங்காட்டங்குடிமேய
3479 பிறப்பிலிபேர்பிதற்றிநின்றிழக்கோவெம்பெருநலமே. ௯

செந்தண்பூம்புனல்பரந்தசெங்காட்டங்குடிமேய
வெந்தநீறணிமார்பன்சிறுத்தொண்டனவன்வேண்ட
அந்தண்பூங்கலிக்காழியடிகளையேயடிபரவும்
3480 சந்தங்கொள்சம்பந்தன்தமிழுரைப்போர்தக்கோரே. ௧௦

64 அண்ணாவுங்கழுக்குன்றுமாயமலையவைவாழ்வார்
விண்ணோருமண்ணோரும்வியந்தேத்தஅருள்செய்வார்
கண்ணாவாருலகுக்குக்கருத்தானார்புரமெரித்த
3481 பெண்ணாணும்பெருமானார்பெருவேளூர்பிரியாரே. ௧

கருமானினுரியுடையர்கரிகாடரிமவானார்
மருமானாரிவரென்றுமடவாளோடுடனாவர்
பொருமானவிடையூர்வதுடையார்வெண்பொடிப்பூசும்
3482 பெருமானார்பிஞ்ஞகனார்பெருவேளூர்பிரியாரே. ௨

குணக்குந்தென்திசைக்கண்ணுங்குடபாலும்வடபாலும்
கணக்கென்னஅருள்செய்வார்கழிந்தோர்க்குமொழிந்தோர்க்
வணக்கஞ்செய்மனத்தராய்வணங்காதார்தமக்கென்றும் [கும்
3483 பிணக்கஞ்செய்பெருமானார்பெருவேளூர்பிரியாரே. ௩

இறைக்கொண்டவளையாளோடிருகூறாயொருகூறு
மறைக்கண்டத்திறைநாவர்மதிலெய்தசிலைவலவர்
கறைக்கொண்டமிடறுடையர்கனல்கிளருஞ்சடைமுடிமேல்
3484 பிறைக்கொண்டபெருமானார்பெருவேளூர்பிரியாரே. ௪

விழையாதார்விழைவார்போல்விகிர்தங்கள்பலபேசிக்
குழையாதார்குழைவார்போற்குணநல்லபலகூறி
அழையாவுமாற்றுவுமடிவீழ்வார்தமக்கென்றும்
3485 பிழையாதபெருமானூர்பெருவேளூர்பிரியாரே. ரு

விரித்தார்நான்மறைப்பொருளையுமையஞ்சவிறல்வேழம்
உரித்தாராமுரிபோர்த்துமதில்மூன்றுமொருகணையால்
எரித்தாராமிமைப்பளவிலிமையோர்கள்தொழுதிறைஞ்சப்
3486 பெருத்தாரெம்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே. சு

மறப்பிலா அடிமைக்கண்மனம்வைப்பார்தமக்கெல்லாம்
சிறப்பிலார்மதிலெய்தசிலைவல்லாரொருகணையால்
இறப்பிலார்பிணியில்லார்தமக்கென்றுங்கேடிலார்
3487 பிறப்பிலாப்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே. எ

எரியார்வேற்கடற்றானையிலங்கைக்கோன்றனைவீழ
முரியார்ந்ததடந்தோள்களடர்த்துகந்தமுதலாளர்
வரியார்வெஞ்சிலைபிடித்துமடவாளையொருபாகம்
3488 பிரியாதபெருமானூர்பெருவேளூர்பிரியாரே. அ

சேணியலுநெடுமாலுந்திசைமுகனுஞ்செருவெய்திக்
காணியல்பையறிவிலாய்க்கனல்வண்ணரடியிணைக்கீழ்
நாணியவர்தொழுதேத்தநாணுமேயருள்செய்து
3489 பேணியஎம்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே. கூ

புற்றேறியுணங்குவார்புகையார்ந்ததுகில்போர்ப்பார்
சொற்றேறவேண்டாநீர்தொழுமின்கள்சுடர்வண்ணம்
மற்றேறும்பரிமாவுமதகளிறும்மிவையொழியப்
3490 பெற்றேறும்பெருமானூர்பெருவேளூர்பிரியாரே. க0

பைம்பொன்சீர்மணிவாரிப்பலவுஞ்சேர்கனியுந்தி
அம்பொன்செய்மடவரலாரணிமல்குபெருவேளூர்
நம்பன்றன்கழல்பரவிநவில்கின்றமறைஞான
3491 சம்பந்தன்தமிழ்வல்லார்க்கருவினைநோய்சாராவே. கக

65 வாரணவுமுலைமங்கைபங்கினராயங்கையினில்
போரணவுமழுவொன்றங்கேந்திவெண்பொடியணிவர்
காரணவுமணிமாடங்கடைநவின்றகலிக்கச்சி
3492 நீரணவுமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. க

காருருமணிமிடற்றார்கரிகாடருடைதலைகொண்
டூரூரன்பலிக்குழல்வாருழைமானினுரியதளர்
தேருருநெடுவீதிச்செழுங்கச்சிமாநகர்வாய்
3493 நீருருமலர்ப்பொய்கைநெறிக்காரைக்காட்டாரே. உ

கூறணிந்தார்கொடியிடையைக்குளிர்சடைமேலிளமதியோ
டாறணிந்தாராடரவம்பூண்டுகந்தாரான்வெள்ளை
ஏறணிந்தார்கொடியதன்மேலென்பணிந்தார்வரைமார்பில்
3494 நீறணிந்தார்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ங

பிறைநவின்றசெஞ்சடைகள்பின்தாழப்பூதங்கள்
மறைநவின்றபாடலோடாடலராய்மழுவேந்திச்
சிறைநவின்றவண்டினங்கள்தீங்கனிவாய்த்தேன்கதுவும்
3495 நிறைநவின்றகச்சிநெறிக்காரைக்காட்டாரே. ச

அன்றாலின்கீழிருந்தங்கறம்புரிந்தஅருளாளர்
குன்றாதவெஞ்சிலையிற்கோளரவநாண்கொளுவி
ஒன்றாதார்புரமூன்றுமோங்கெரியில்வெந்தவிய
3496 நின்றாருங்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. ரு

பன்மலர்கள்கொண்டடிக்கீழ்வானோர்கள்பணிந்திறைஞ்ச
நன்மையிலாவல்லவுணர்நகர்மூன்றுமொருநொடியில்
வின்மலையின்நாண்கொளுவிவெங்கணையாலெய்தழித்த
3497 நின்மலனார்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. சா

புற்றிடைவாளரவினொடுபுனைகொன்றைமதமத்தம்
எற்றொழியாஅலைபுனலோடிளமதியமேந்துசடைப்
பெற்றுடையாரொருபாகம்பெண்ணுடையார்கண்ணமரும்
3498 நெற்றியினார்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. எ

ஏழ்கடல்சூழ்தென்னிலங்கைக்கோமானையெழில்வரைவாய்த்
தாழ்விரலாலூன்றியதோர்தன்மையினார்நன்மையினார்
ஆழ்கிடங்குஞ்சூழ்வயலுமதில்புல்கியழகமரும்
3499 நீள்மறுகிற்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. அ

ஊண்டானுமொலிகடல்நஞ்சுடைதலையிற்பலிகொள்வர்
மாண்டார்தம்மெலும்பணிவர்வரியரவோடெழிலாமை
பூண்டாருமோரிருவரறியாமைப்பொங்கெரியாய்
3500 நீண்டாருங்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. கூ

குண்டாடிச்சமண்படுவார்கூறைதனைமெய்போர்த்து
மிண்டாடித்திரிதருவாருரைப்பனகள்மெய்யல்ல
வண்டாருங்குழலாளைவரையாகத்தொருபாகங்
3501 கண்டாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டாரே. க0

கண்ணாருங்கலிக்கச்சிநெறிக்காரைக்காட்டுறையும்
பெண்ணாருந்திருமேனிப்பெருமானதடிவாழ்த்தித்
தண்ணாரும்பொழிற்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
3502 பண்ணாருந்தமிழ்வல்லார்பரலோகத்திருப்பாரே. கக

66 வண்டிரைக்கும்மலர்க்கொன்றைவிரிசடைமேல்வரியரவம்
கண்டிரைக்கும்பிறைச்சென்னிக்காபாலிகனைகழல்கள் [ளம்
தொண்டிரைத்துத்தொழுதிறைஞ்சத்துளங்கொளிநீர்ச்சுடர்ப்பவ
3503 தெண்டிரைக்கள்கொணர்ந்தெறியுந்திருவேட்டக்குடியாரே.

பாய்திமிலர்வலையோடுமீன்வாரிப்பயின்றெங்கும்
காசினியிற்கொணர்ந்தட்டுங்கைதல்சூழ்கழிக்கானல்
போயிரவிற்பேயோடும்புறங்காட்டிற்புரிந்தழகார்
3504 தீயெரிகைமகிழ்ந்தாருந்திருவேட்டக்குடியாரே. உ

தோத்திரமாமணலிலிங்கந்தொடங்கியஆன்நிரையிற்பால்
பாத்திரமாஆட்டுதலும்பரஞ்சோதிபரிந்தருளி
ஆத்தமெனமறைநால்வர்க்கறம்புரிநூலன்றுரைத்த
3505 தீர்த்தமல்குசடையாருந்திருவேட்டக்குடியாரே. ந

கலவஞ்சேர்கழிக்கானல்கதிர்முத்தங்கலந்தெங்கும்
அலவஞ்சேரணைவாரிக்கொணர்ந்தெறியுமகன்றுறைவாய்
நிலவஞ்சேர்நுண்ணிடையநேரிழையாளவளோடும்
3506 திலகஞ்சேர்நெற்றியினார்திருவேட்டக்குடியாரே. ச

பங்கமார்கடலலறப்பருவரையோடரவுழலச்
செங்கண்மால்கடையஎழுநஞ்சருந்துஞ்சிவமூர்த்தி
அங்கநான்மறைநால்வர்க்கறம்பொருளின்பயனளித்த
3507 திங்கள்சேர்சடையாருந்திருவேட்டக்குடியாரே. ரு

நாவாயபிறைச்சென்னிநலந்திகழுமிலங்கிப்பி
கோவாதநித்திலங்கள்கொணர்ந்தெறியுங்குளிர்கானல்
ஏவாரும்வெஞ்சிலையாலெயில்மூன்றுமெரிசெய்த
3508 தேவாதிதேவனார்திருவேட்டக்குடியாரே. சா

பானிலவும்பங்கயத்துப்பைங்கானல்வெண்குருகு
கானிலவுமலர்ப்பொய்கைக்கைதல்சூழ்கழிக்கானல்
மானின்விழிமலைமகளோடொருபாகம்பிரிவரியார்
3509 தேனிலவுமலர்ச்சோலைத்திருவேட்டக்குடியாரே. எ

துறையுலவுகடலோதஞ்சுரிசங்கமிடறிப்போய்
நறையுலவும்பொழிற்புன்னைநன்னீழற்கீழமரும்
இறைபயிலுமிராவணன்றன்தலைபத்துமிருபதுதோள்
3510 திறலழியஅடர்த்தாருந்திருவேட்டக்குடியாரே. அ

அருமறைநான்முகத்தானுமகலிடநீரேற்றானும்
இருவருமாயளப்பரியஎரியுருவாய்நீண்டபிரான்
வருபுனலின்மணியுந்திமறிதிரையார்சுடர்ப்பவளத்
3511 திருவுருவில்வெண்ணீற்றார்திருவேட்டக்குடியாரே. கூ

இகழ்ந்துரைக்குஞ்சமணர்களுமிடும்போர்வைச்சாக்கியரும்
புகழ்ந்துரையாப்பாவிகள்சொற்கொள்ளேன்மின்பொருளென்ன
நிகழ்ந்திலங்குவெண்மணலினிறைத்துண்டப்பிறைக்கற்றை
3512 திகழ்ந்திலங்குசெஞ்சடையார்திருவேட்டக்குடியாரே. ௧௦

தெண்டிரைசேர்வயலுடுத்ததிருவேட்டக்குடியாரைத்
தண்டலைசூழ்கலிக்காழித்தமிழ்ஞானசம்பந்தன்
ஒண்டமிழ்நூலிவைபத்துமுணர்ந்தேத்தவல்லார்போய்
3513 உண்டுடுப்பில்வானவரோடுயர்வானத்திருப்பாரே. ௧௧

67 சூரருலகுநரர்கள்பயில்தரணிதலமுரணழியஅரணம
தில்முப், புரமெரியவிரவுவகைசரவிசைகொள்கருமுடைய
பரமனிடமாம், வரமருளவரன்முறையினிரைநிறைகொள்
வருசுருதிசிரவுரையினாற், பிரமனுயரரனெழில்கொள்சரண
3514 விணைபரவவளர்பிரமபுரமே. ௧

தாணுமிகுவாணிசைகொள்தாணுவியர்பேணுமதுகாணு
மளவிற், கோணுநுதல்நீள்நயனிகோணில்பிடிமாணிமது
நாணும்வகையே, ஏணுகரிபூணழியவாணியல்கொள்மாணி
பதிசேணமரர்கோன், வேணுவினையேணிநகர்காணிறிவி
3515 காணநடுவேணுபுரமே. ௨

பகலொளிசெய்நகமணியைமுகைமலரைநிகழ்சரணவக
வுமுனிவர்க், ககலமலிசகலகலைமிகவுரைசெய்முகமுடைய

பகவனிடமாம், பகைகளையும்வகையிலறுமுகஇறையைமிக
அருளநிகரிலிமையோர், புகவுலகுபுகழஎழில்திகழநிகழலர்
3516 பெருகுபுகலிநகரே. ரு

அங்கண்மதி கங்கைநதிவெங்கணரவங்களெழில்தங்கு
மிதழித், துங்கமலர்தங்குசடையங்கிநிகரெங்களிறைதங்கு
மிடமாம், வெங்கதிர்விளங்குலகமெங்குமெதிர்பொங்கெரி
புலன்கள்களைவோர், வெங்குருவிளங்கியுமைபங்கர்சரணங்
3517 கள்பணிவெங்குருவதே. சு

ஆணியல்புகாணவனவாணவியல்பேணியெதிர்பாணமழைசேர்
தூணியறநாணியறவேணுசிலைபேணியறநாணிவிசயன்
பாணியமர்பூணவருள்மாணுபிரமாணியிடமேணிமுறையிற்
3518 பாணியுலகாளமிகவாணின்மலிதோணிநிகர்தோணிபுரமே.

நிராமயபராபரபுராதனபராவுசிவராகவருளென்
றிராவுமெதிராயதுபராநினைபுராணனமராதிபதியாம்
அராமிசையிராதெழில்தராயபராயணவராகவுருவா
3519 தராயனைவிராயெரிபராய்மிகுதராய்மொழிவிராயபதியே. சு

அரணையுறுமுரணர்பலர்மரணம்வரவிரணமதிலாமலிபடைக்
கரம்விசிறுவிரகனமர்காரணனுயர்பரனெறிகொள்கரனதிடமாம்
பரவமுதுவிரவவிடல்புரளமுறுமாவையரிசிரமரியவச்
3520 சிரமானசாணமவைபரவவிருசிரகமமர்சிரபுரமதே. எ

அறமழிவுபெறவுலகுதெறுபுயவன் விறலழியநிறுவி
விரன்மா, மறையிஞெலிமுறைமுரல்செய்பிறையெயிறனுற
அருளுமிறைவனிடமாங், குறைவின்மிகநிறைதையுழிமறை
யமரர்நிரையருளமுறையொடுவரும், புறவனெதிர்நிறை
3521 நிலவுபொறையனுடல்பெறவருளுபுறவமதுவே. அ

விண்பயிலமண்பகிரி வண்பிரமனெண்பெரியபண்படை
கொண்மால், கண்பரியுமொண்பொழியநுண்பொருள்கள்
தண்புகழ்கொள்கண்டனிடமாம், மண்பரியுமொண்பொழிய
நுண்புசகர்புண்பயிலவிண்படரவச், சண்பைமொழிபண்ப
3522 முனிகண்பழிசெய்பண்புகளைசண்பைநகரே. கூ

பாழியுறைவேழநிகர்பாழமணர்சூழுமுடலாளருணரா
வழினிசையாழின்மொழியேழையவள்வாழுமிறைதாழுமிடமாங்

கீழிசைகொள்மேலுலகில்வாழரசுசூழரசுவாழவரனுக்
3523 காழியசில்காழிசெயவேழுலகிலூழிவளர்காழிநகரே. ௧௦

நச்சரவுகச்செனவசைச்சுமதியுச்சியின்மிலைச்சொருகையான்
மெய்ச்சிரமணைச்சுலகினிச்சமிடுபிச்சையமர்பிச்சனிடமாம்
மச்சமதநச்சிமதமச்சிறுமியைச்செய்தவவச்சவிரதக்
3524 கொச்சைமுரவச்சர்பணியச்சுரர்கள்நச்சிமிடைகொச்சைநகரே.

ஒழுகலரிதழிகலியிலுழியுலகு பழிபெருகுவழியை
நினையா,முழுதுடலிலெழுமயிர்கள் தழுவுமுனிகுழுவினொடு
கெழுவுசிவனைத், தொழுதுலகிலிழுகுமலமழியும்வகை
கழுவுமுரைகழுமலநகர்ப், பழுதிலிறையெழுதுமொழி
3525 தமிழ்விரகன்வழிமொழிகள்மொழிதகையவே. ௧௨

68 வாளவரிகோளபுலிகீளதுரிதாளின்மிசைநாளுமகிழ்வர்
ஆளுமவர்வேளநகர்போளயிலகோளகளிறுளிவரவில்
தோளமரர்தாளமதர்கூளியெழமீளிமிளிர்தூளிவளர்பொன்
3526 காளமுகில்மூளுமிருள்கீளவிரிதாளகயிலாயமலையே. ௧

புற்றரவுபற்றியகைநெற்றியது மற்றொருகணொற்றை
விடையன், செற்றதெயிலுற்றதுமைபற்றவர்கணற்றுணைவ
னுற்றநகர்தான், சுற்றுமணிபெற்றதொளிசெற்றமொடு
குற்றமிலதெற்றெனவினுய்க், கற்றவர்கள்சொற்றொகையின்
3527 முற்றுமொளிபெற்றகயிலாயமலையே. ௨

சிங்கவரைமங்கையர்கள்தங்களன செங்கைநிறைகொங்
குமலர்தூய், எங்கள்வினைசங்கையவைஇங்ககலவங்கமொழி
யெங்குமுளவாய்த், திங்களிருள்நொங்கவொளிவிங்கிமிளிர்
தொங்கலொடுதங்கவயலே, கங்கையொடுபொங்குசடை
3528 யெங்களிறைதங்குகயிலாயமலையே. ௩

முடியசடைபிடியதொருவடியமழுவுடையர்செடியுடைய
தலையில், வெடியவினைகொடியர்கெடவிடுசில்பலிநொடிய
மகிழடிகளிடமாம், கொடியகுரலுடையவிடைகடியதுடியடி
யினொடுமிடியினதிரக், கடியகுரல்நெடியமுகில்மடியவதரடி
3529 கொள்கயிலாயமலையே. ௪

குடங்கையினுடங்கெரிதொடர்ந்தெழ விடங்கிளர்படங்
கொளரவம், மடங்கொளிபடர்ந்திடநடந்தருவிடங்கன

திடந்தண்முகில்போய்த், தடங்கடல்தொடர்ந்துடனுடங்
குவவிடங்கொளமிடைந்தகுரலால், கடுங்கலின்முடங்களை
3530 நடங்காவொடுங்குகயிலாயமலையே. ரு

ஏதமிலபூதமொடுகோதைதுணையாதிமுதல்வேதவிகிர்தன்
கீதமொடுநீதிபலவோதிமறவாதுபயில்கின்றநகர்தான்
தாதுபொதிபோதுவிடவூதுசிறைமீதுதுளிகூதனலியக்
3531 காதல்மிகுசோதிகிளர்மாதுமயில்கோதுகயிலாயமலையே. சு

சென்றுபலவென்றுலவுபுன்றலையர்துன்றலொடுமொன்
றியுடனே, நின்றமரரென்றுமிறைவன்றனடிசென்றுபணி
கின்றநகர்தான், துன்றுமலர்பொன்றிகழ்செய்கொன்றை
விரைதென்றலொடுசென்றுகமழக், கன்றுபிடிதுன்றுகளி
3532 றென்றிவைமுன்னின்றகயிலாயமலையே. எ

மருப்பிடைநெருப்பெழுதருக்கொடுசெருச்செய்தபருத்
தகளிறின், பொருப்பிடைவிருப்புறவிருக்கையையொருக்
குடனரக்கனுணரா, தொருத்தியைவெருக்குறவெருட்டலு
நெருக்கெனமிருத்தவிரலால், கருத்திலவொருத்தனையெ
3533 ருத்திறநெரித்தகயிலாயமலையே. அ

பரியதிரைபெரியபுனல்வரியபுலியுரியதுடைபரிசையுடையான்
வரியவளையரியகணியுருவினெடுபுரிவினவர்பிரிவில்நகர்தான்
பெரியஎரியுருவமதுதெரியவுருபரிவுதருமருமையதனுல்
3534 கரியவனுமரியமறைபுரியவனுமருவுகயிலாயமலையே. கூ

அண்டர்தொழுசண்டிபணிகண்டடிமைகொண்டவிறை
துண்டமதியோ, டிண்டைபுனைவுண்டசடைமுண்டதரசண்
டஇருள்கண்டரிடமாம், குண்டமணவண்டரவர்மண்டை
கையிலுண்டுளறிமிண்டுசமயம், கண்டவர்கள்கொண்டவர்
3535 கள்பண்டுமறியாதகயிலாயமலையே. க0

அந்தண்வரைவந்தபுனல்தந்ததிரைசந்தனமொடுந்தியகிலு
கந்தமலர்கொந்தினெடுமந்திபலசிந்துகயிலாயமலைமேல் [ம்
எந்தையடிவந்தணுகுசந்தமொடுசெந்தமிழிசைந்தபுகலிப்
3536 பந்தனுரைசிந்தைசெயவந்தவினைநைந்துபரலோகமெளிதே.

69 **வானவர்கள்** தானவர்கள்வாதைபட வந்ததொருமாக
டல்விடம், தானமுதுசெய்தருள்புரிந்தசிவன்மேவுமலைதன்

னைவினவில், ஏனமினமானிளெடுகிள்ளைதினைகொள்ளஎழி
லார்கவணினால், கானவர்தமாமகளிர்கனகமணிவிலகுகா
3537 ளத்திமலையே. க

முதுசினவிலவுணர்புரம்மூன்றுமொரு நொடிவரையின்
மூளஎரிசெய், சதுரர்மதிபொதிசடையர்சங்கரர்விரும்புமலை
தன்னைவினவில், எதிரெதிரவெதிர்பிணையஎழுபொறிகள்
சிதறஎழிலேனமுழுத, கதிர்மணியின்வளரொளிகளிரு
3538 ளகலநிலவுகாளத்திமலையே. உ

வல்லைவருகாளியைவகுத்துவலியாகிமிகுதாரகனைநீ
கொல்லெனவிடுத்தருள்புரிந்தசிவன்மேவுமலைகூறிவினவில்
பல்பலஇருங்கனிபருங்கிமிகவுண்டவைநெருங்கியினமாய்க்
3539 கல்லதிரநின்றுகருமந்திவிளையாடுகாளத்திமலையே. ங

வேயனையதோளுமையொர்பாகமதுவாகவிடையேறிசடை
தூயமதிசூடிசுடுகாடில்நடமாடிமலைதன்னைவினவில் [மேல்
வாய்கலசமாகவழிபாடுசெயும்வேடன்மலராகுநயனம்
3540 காய்கணையினாலிடந்தீசனடிகூடுகாளத்திமலையே. ச

மலையின்மிசைதனில்முகில்போல் வருவதொருமத
கரியைமழைபோலலறக், கொலைசெய்துமையஞ்சவுரிபோர்த்
தசிவன்மேவுமலைகூறிவினவில், அலைகொள்புனலருவிபல
சுனைகள்வழியிழியவயல்நிலவுமுதுவேய்,கலகலெனவொளி
3541 கொள்கதிர்முத்தமவைசிந்துகாளத்திமலையே. ரு

பாரகம்விளங்கியபகீரதனருந்தவமுயன்றபணிகண்[வினவில்
டாரருள்புரிந்தலைகொள்கங்கைசடையேற்றஅரன்மலையை
வாரதரிருங்குறவர்சேவலின்மடுத்தவரெரித்தவிறகில்
3542 காரகிலிரும்புகைவிசும்புகமழ்கின்றகாளத்திமலையே. சு

ஆருமெதிராதவலியாகியசலந்தரனையாழியதனால்
ஈரும்வகைசெய்தருள்புரிந்தவனிருந்தமலைதன்னைவினவில்
ஊருமரவம்மொளிகொள்மாமணியுமிழ்ந்தவையுலாவிவரலால்
3543 காரிருள்கடிந்துகனகம்மெனவிளங்குகாளத்திமலையே. எ

எரியனையசுரிமயிரிராவணனையீடழியஎழில்கொள்விரலால்
பெரியவரையூன்றியருள்செய்தசிவன்மேவுமலைபெற்றிவினவில்
வரியசிலைவேடுவர்களாடவர்கள்நீடுவரையூடுவரலால்
3544 கரியினெடுவரியுழுவையரியினமும்வெருவுகாளத்திமலையே.

இனதளவிலவன தடியிணையுமுடியறிதுமெனஇகலுமிருவர்
தனதுருவமறிவரியசகலசிவன்மேவுமலைதன்னைவினவில்
புனவர்புனமயிலனையமாதரொடுமைந்தருமணம்புணரும்நாள்
3545 கனகமெனமலர்களணிவேங்கைகள்நிலாவுகாளத்திமலையே.

நின்றுகவளம்பலகொள்கையரொடுமெய்யிலிடுபோர்வையரும்
நன்றியறியாதவகைநின்றசிவன்மேவுமலைநாடிவினவில்
குன்றில்மலிதுன்றுபொழில்நின்றகுளிர்சந்தின்முறிதின்றுகுலவிக்
3546 கன்றினொடுசென்றுபிடிநின்றுவிளையாடுகாளத்திமலையே.

காடதிடமாகநடமாடுசிவன்மேவுகாளத்திமலையை
மாடமொடுமாளிகைகள்நீடுவளர்கொச்சைவயமன்னுதலைவன்
நாடுபலநீடுபுகழ்ஞானசம்பந்தனுரைநல்லதமிழின்
3547 பாடலொடுபாடுமிசைவல்லவர்கள்நல்லர்பரலோகமெளிதே.

70 ஏனவெயிருடரவொடென்புவரியாமையிவைபூண்டிளைஞராய்க்
கானவரிநீடுழுவையதளுடையபடர்சடையர்காணியெனலாம்
ஆனபுகழ்வேதியர்களாகுதியின்மீதுபுகைபோகியழகார்
3548 வானமுறுசோலைமிசைமாசுபடமூசுமயிலாடுதுறையே. க

அந்தண்மதிசெஞ்சடையாங்கணெழில்கொன்றையொ
டணிந்தழகாம்,எந்தமடிகட்கினியதானமதுவேண்டிலெழி
லார்பதியதாம்,கந்தமலிசந்தினொடுகாரகிலும்வாரிவருகாவிரி
யுளால், வந்ததிரையுந்தியெதிர்மந்திமலர்சிந்துமயிலாடு
3549 துறையே. உ

தோளின்மிசைவரியரவநஞ்சழலவீக்கிமிகுநோக்கரியராய்
மூளைபடுவெண்டலையிலுண்டுமுதுகாடுறையுமுதல்வரிடமாம்
பாளைபடுபைங்கமுகுசெங்கனியுதிர்த்திடநிரந்துகமழ்பூ
3550 வாளைகுதிகொள்ளமடல்விரியமணநாறுமயிலாடுதுறையே.

ஏதமிலரரியமறைமலையர்மகளாகியஇலங்குநுதலொண்
பேதைதடமார்பதிடமாகவுறைகின்றபெருமானதிடமாம்
காதல்மிகுகவ்வையொடுமவ்வலவைகூடிவருகாவிரியுளால்
3551 மாதர்மறிதிரைகள்புகவெறியவெறிகமழுமயிலாடுதுறையே.

பூவிரிகதுப்பின்மடமங்கையாகந்தொறுநடந்துபலிதேர்
பாவிரியிசைக்குரியபாடல்பயிலும்பரமர்பழமையெனலாம்
காவிரிநுரைத்திருகரைக்குமணிசிந்தவரிவண்டுகவர
3552 மாவிரிமதுக்கிழியமந்திகுதிகொள்ளுமயிலாடுதுறையே. ௩

கடந்திகழ்கருங்களிறுரித்துமையுமஞ்சமிகநோக்கரிய
ராய்,விடந்திகழுமூவிலைநல்வேலுடையவேதியர்விரும்புமிட
மாம்,தொடர்ந்தொளிர்கிடந்தவொருசோதிமிகுதொண்டை
யெழில்கொண்டதுவர்வாய், மடந்தையர்குடைந்தபுனல்
3553 வாசமிகநாறுமயிலாடுதுறையே. சு

அவ்வதிசையாருமடியாருமுளராகஅருள்செய்தவர்கள்மேல்
எவ்வமறவைகலுமிரங்கியெரியாடுமெமதீசனிடமாம்
கவ்வையொடுகாவிரிகலந்துவருதென்கரைநிரந்துகமழ்பூ
3554 மவ்வலொடுமாதவிமயங்கிமணநாறுமயிலாடுதுறையே. எ

இலங்கைநகர் மன்னன்முடி யொருபதினொ டிருபது
தோள்நெரியவிரலால்,விலங்கலிலடர்த்தருள்புரிந்தவரிருந்த
விடம்வினவுதிர்களேல், கலங்கல்நுரையுந்தியெதிர்வந்தகய
மூழ்கிமலர்கொண்டுமகிழா, மலங்கிவருகாவிரிநிரந்துபொழி
3555 கின்றமயிலாடுதுறையே. அ

ஒண்டிறலின்நான்முகனுமாலுமிகநேடியுணராதவகையால்
அண்டமுறஅங்கியுருவாகிமிகநீண்டஅரனாரதிடமாம்
கெண்டையிரைகொண்டுகெளிறுருடனிருந்துகிளர்வாயறுதல்சேர்
3556 வண்டல்மணல்கெண்டிமடநாரைவிளையாடுமயிலாடுதுறையே. கூ

மிண்டுதிறலமணரொடுசாக்கியருமலர்தூற்றமிக்கதிற
லோன், இண்டைகுடிகொண்டசடையெங்கள்பெருமான
திடமென்பரெழிலார், தெண்டிரைபரந்தொழுகுகாவிரிய
தென்கரைநிரந்துகமழ்பூ, வண்டவைதிளைக்கமதுவந்தொ
3557 ழுகுசோலைமயிலாடுதுறையே. க0

நிணந்தருமயானநிலவானமதியாதவொரு சூலமொடு
பேய்க், கணந்தொழுகபாலிகழலேத்திமிகவாய்த்தவொரு
காதன்மையினால், மணந்தண்மலிகாழிமறைஞானசம்பந்
தன்மயிலாடுதுறையைப், புணர்ந்ததமிழ்பத்துமிசையாலு
3558 ரைசெய்வார்பெறுவர்பொன்னுலகமே. கக

71 கோழைமிடறாககவிகோளுமிலவாகஇசை கூடும்வகையால்
ஏழையடியாரவர்கள்யாவைசொனசொல்மகிழுமீசனிடமாம்
தாழையிளநீர்முதியகாய்கமுகின்வீழநிரைதாறுசிதறி
3559 வாழையுதிர்வீழ்கனிகளூறிவயல்சேறுசெயும்வைகாவிலே.

அண்டமுறுமேருவரையங்கிகணைநாணரவதாகவெழிலார்
விண்டவர்தமுப்புரமெரித்தவிகிர்தன்னவன்விரும்புமிடமாம்
புண்டரிகமாமலர்கள்புக்குவிளையாடுவயல்சூழ்தடமெலாம்
3560 வண்டினிசைபாடஅழகார்குயில்மிழற்றுபொழில்வைகாவிலே.

ஊனமிலராகியுயர்நற்றவமெய்கற்றவையுணர்ந்தஅடியார்
ஞானமிகநின்றுதொழநாளுமருள்செய்யவலநாதனிடமாம்
ஆனவயல்சூழ்தருமல்சூழியருகேபொழில்கள்தோறுமழகார்
3561 வானமதியோடுமழைநீள்முகில்கள்வந்தணவும்வைகாவிலே.

இன்னவுருஇன்னநிலமேன்றறிவதேலரிதுநீதிபலவும்
தன்னவுருவாமெனமிகுத்தவன்நீதியோடுதானமர்விடம்
முன்னைவினைபோய்வகையினல்முழுதுணர்ந்துமுயல்கின்றமுனிவர்
3562 மன்னஇருபோதுமருவித்தொழுதுசேரும்வயல்வைகாவிலே.

வேதமொடுவேள்விபலவாயினமிகுத்துவிதியாறுசமயம்
ஓதியுமுணர்ந்துமுளதேவர்தொழநின்றருள்செயொருவனிடமாம்
மேதகையகேதகைகள்புன்னையொடுஞாழலவைமிக்கஅழகால்
3563 மாதவிமணங்கமழவண்டுபலபாடுபொழில்வைகாவிலே. ௫

நஞ்சமுதுசெய்தமணிகண்டன்நமையாளுடையஞான
முதல்வன், செஞ்சடையிடைப்புனல்கரந்தசிவலோகனமர்
கின்றஇடமாம், அஞ்சுடரொடாறுபதமேழினிசையெண்ண
ரியவண்ணமுளவாய், மைஞ்சரொடுமாதர்பலருந்தொழுது
3564 சேரும்வயல்வைகாவிலே. ௬

நாளுமிகபாடலோடுஞானமிகுநல்லமலர்வல்லவகையால்
தோளினேடுகைதுளிரவேதொழுமவர்க்கருள்செய்சோதியிடமாம்
நீளவளர்சோலைதொறுகாளிபலதுன்றுகனிநின்றதுதிர
3565 வாளைகுதிகொள்ளமதுநாறமலர்விரியும்வயல்வைகாவிலே.

கையிருபதோடுமெய்கலங்கிடவிலங்கலையெடுத்தகடியோன்
ஐயிருசிரங்களையொருங்குடன்நெரித்தஅழகன்றனிடமாம்
கையின்மலர்கொண்டுநலகாலையொடுமாலைகருதிப்பலவிதம்
3566 வையகமெலாமருவிநின்றுதொழுதேத்துமெழில்வைகாவிலே.

அந்தமுதலாதிபெருமானமரர்கோனையயன்மாலுமிவர்
கள், எந்தைபெருமானிறைவனென்றுதொழநின்றருள்செ
யீசனிடமாம், சிந்தைசெய்துபாடுமடியார்பொடிமெய்பூசி

பெழுதொண்டரவர்கள், வந்துபலசந்தமலர்முந்தியணையும்
3567 பதிநல்லவைகாவிலே. ௬

ஈசனெமையாளுடையஎந்தைபெருமானிறைவனென்று தனையே
பேசுதல்செயா அமணர்புத்தரவர்சித்தமணையா அவனிடம்
தேசமதெலாமருவிநின்றுபரவித்திகழநின்றபுகழோன்
3568 வாசமலரானபல தூவியணையும்பதிநல்லவைகாவிலே. ௧௦

முற்றுநமையாளுடையமுக்கண்முதல்வன்திருவைகாவிலதனைச்
செற்றமலிஞர்சிரபுரத்தலைவன்ஞானசம்பந்தனுரைசெய்
உற்றதமிழ்மாலையீரைந்துமிவைவல்லவருருத்திரரெனப்
3569 பெற்றமரலோகமிகவாழ்வர்பிரியாரவர்பெரும்புகழொடே.

72

விங்குவிளைகழனிமிகுகடைசியர்கள்பாடல்விளையாட
லரவம், மங்குலொடுநீள்கொடிகள்மாடமலிநீடுபொழில்மா
கறலுளான், கொங்குவிரிகொன்றையொடுகங்கைவளர்திங்க
ளணிசெஞ்சடையினன், செங்கண்விடையண்ணலடிசேர்
3570 பவர்கள்தீவினைகள்தீருமுடனே. ௧

கலையினொலிமங்கையர்கள்பாடலொலியாடல்கவினெய்
தியழகார், மலையின்நிகர்மாடமுயர்நீள்கொடிகள்வீசுமலி
மாகறலுளான், இலையின்மலிவேல்நுனையசூலம்வலனேந்தி
யெரிபுன்சடையினுள், அலைகொள்புனலேந்துபெருமானடி
3571 யையேத்தவினையகலுமிகவே. ௨

காலையொடுதுந்துபிகள்சங்குகுழல்யாழ்முழவுகாமருவு
சீர், மாலைவழிபாடுசெய்துமாதவர்களேத்திமகிழ்மாகறலு
ளான், தோலையுடைபேணியதன்மேலொர்சுடர்நாகமசையா
அழகிதாப், பாலையனநீறுபுனைவானடியையேத்தவினை
3572 பறையுமுடனே. ௩

இங்குகதிர்முத்தினொடு பொன்மணிகளுந்தியெழில்
மெய்யுளுடனே, மங்கையருமைந்தர்களுமன்னுபுனலாடி
மகிழ்மாகறலுளான், கொங்குவளர்கொன்றைகுளிர்திங்க
ளணிசெஞ்சடையினனடியையே, நுங்கள்வினைதீரமிகவேத்தி
3573 வழிபாடுநுகராஎழுமினே. ௪

துஞ்சுநறுநீலமிருள்நீங்கவொளிதோன்றுமதுவார்கழ
னிவாய், மஞ்சுமலிபூம்பொழிலின்மயில்கள்நடமாடல்மலி

மாகறலுளான், வஞ்சமதயானையுரிபோர்த்துமகிழ்வானோர்
மழுவாளன்வளரும், நஞ்சமிருள்கண்டமுடைநாதனடியா
3574 ரைநலியாவினைகளே. ௫

மன்னுமறையோர்களொடுபல்படிமமாதவர்கள்கூடியுட
னாய்,இன்னவகையாலினிதிறைஞ்சியிமையோரிலெழுமாகற
லுளான், மின்னைவிரிபுன்சடையின்மேல்மலர்கள்கங்கை
யொடுதிங்களெனவே, உன்னுமவர்தொல்வினைகளொல்க
3575 வுயர்வானுலகமேறலெளிதே. ௬

வெய்யவினைநெறிகள்செல வந்தணையுமேல்வினைகள்
வீட்டலுறுவீர், மைகொள்விரிகானல்மதுவார்கழனிமாகற
லுளானெழிலதார், கையகரிகால்வரையின்மேலதுரிதோ
லுடையமேனியழகார், ஐயனடிசேர்பவரை அஞ்சியடையா
3576 வினைகளகலுமிகவே. ௭

தூசுதுகில்நீள்கொடிகள்மேகமொடுதோய்வனபொன்மாடமிசை
மாசுபடுசெய்கைமிகமாதவர்களோதிமலிமாகறலுளான்[யே
பாசுபதவிச்சைவரிநச்சரவுகச்சையுடைபேணியழகார்
3577 பூசுபொடியீசனெனவுத்தவினைநிற்றலிலபோகுமுடனே. ௮

தூயவிரிதாமரைகள்நெய்தல்கழுநீர்குவளைதோன்றமதுவுண்
பாயவரிவண்டுபலபண்முரலுமோசைபயில்மாகறலுளான்
சாயவிரலூன்றியஇராவணன்தன்மைகெடநின்றபெருமான்
3578 ஆயுபுகழேத்துமடியார்கள்வினையாயினவுமகல்வதெளிதே.

காவினலபைங்கழல்கள்நீள்முடியின்மேலுணர்வுகாமுறவினார்
மாலுமலரானுமறியாமையெரியாகியுயர்மாகறலுளான்
நாலுமெரிதோலுமுரிமாமணியநாகமொடுகூடியுடனாய்
3579 ஆலும்விடையூர்தியுடையடிகளடியாரையடையாவினைகளே.

கடைகள்நெடுமாடமிகவோங்குகமழ்வீதிமலிகாழியவர்
கோன், அடையும்வகையாற்பரவியரனையடிகூடுசம்பந்த
னுரையால்,மடைகொள்புனலோடுவயல்கூடுபொழில்மாகற
லுளானடியையே, உடையதமிழ்பத்துமுணர்வாரவர்கள்
3580 தொல்வினைகளொல்குமுடனே. ௧௧

73 பாடல்மறைசூடல்மதி பல்வளையொர்பாகமதில்மூன்
றொர்கணையால், கூடஎரியூட்டியெழில்காட்டிநிழல்கூட்டு

பொழில்சூழ்பழையையுள், மாடமழபாடியுறைபட்டிசரம்
மேயகடிகட்டரவினுர், வேடநிலைகொண்டவரைவீடுநெறி
3581 காட்டிவினைவீடுமவரே. க

நீரின்மலிபுன்சடையர்நீளரவுகச்சையதுநச்சிலையதோர்
கூரின்மலிசூலமதுவந்தியுடைகோவணமுமானினுரிதோல்
காரின்மலிகொன்றைவிரிதார்கடவுள்காதல்செய்துமேயநகர்தான்
3582 பாரின்மலிசீர்பழையைபட்டிசரமேத்தவினைபற்றழியுமே. உ

காலைமடவார்கள்புனலாடுவதுகௌவைகடியார்மறுகெலாம்
மாலைமணநாறுபழையாறைமழபாடியழகாயமலிசீர்ப்
பாலையனநீறுபுனைமார்பனுறைபட்டிசரமேபரவுவார்
3583 மேலையொருமால்கடல்கள்போல்பெருகிவிண்ணுலகமாளுமவரே.

கண்ணின்மிசைநண்ணியிழிவிப்பமுகமேத்துகமழ்செஞ்
சடையினன், பண்ணின்மிசைநின்றுபலபாணிபடஆடவல
பான்மதியினன், மண்ணின்மிசைநேரின்மழபாடிமலிபட்டி
சரமேமருவுவார், விண்ணின்மிசைவாழுமிமையோரொடுட
3584 னுதலதுமேவலெளிதே. ச

மருவமுழவதிரமழபாடிமலிமத்தவிழவார்க்கஅரையார்,
பருவமழைபண்கவர்செய் பட்டிசரமேயபடர்புன்சடையி
னன், வெருவமதயானையுரிபோர்த்துமையைஅஞ்சவரு
வெள்விடையினன், உருவமெரிகழல்கள்தொழவுள்ள
3585 முடையாரையடையாவினைகளே. ரு

மறையினெலிகீதமொடுபாடுவனபூதமடிமருவிவிரவார்,
பறையினெலிபெருகநிகழ்நட்டமமர்பட்டிசரமேயபனிகூர்,
பிறையினெடுமருவியதொர் சடையினிடையேற்றபுனல்
தோற்றநிலையாம், இறைவனடிமுறைமுறையினேத்துமவர்
3586 தீத்தொழில்களில்லர்மிகவே. சு

பிறவிபிணிமூப்பினெடுநீங்கியிமையோருலகுபேணலுறு
வார், துறவியெனுமுள்ளமுடையார்கள்கொடிவீதியழகாய
தொகுசீர், இறைவனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்
வினையேதுமிலவாய், நறவவிரையாலுமொழியாலும்வழி
3587 பாடுமறவாதவவரே. எ

நேசமிகுதோள்வலவனாகியிறைவன்மலையைநீக்கியிடலும்
நீசன்விறல்வாட்டிவரையுற்றதுணராதநிரம்பாமதியினன்

ஈசனுறைபட்டிசரமேத்தியெழுவார்கள்வினையேதுமிலவாய்
3558 நாசமறவேண்டுதலின் நண்ணலெளிதாமமார்விண்ணுலகமே.

தூயமலரானுநெடியானுமறியாரவனதோற்றநிலையின்
ஏயவகையானதனையாரதறிவாரணிகொள்மார்பினகலம்
பாயநலநீறதணிவானுமைதனோடுமுறைபட்டிசரமே
3589 மேயவனதீரடியுமேத்தவெளிதாகுநலமேலுலகமே. ௯

தடுக்கினையிடுக்கிமடவார்களிடுபிண்டமதுவுண்டுழல்தரும்
கடுப்பொடியுடற்கவசர்கத்துமொழிகாதல்செய்திடாதுகமழ்சேர்
மடைக்கயல்வயற்கொள்மழபாடிநகர்நீடுபழையாறையதனுள்
3590 படைக்கொருகரத்தன்மிகுபட்டிசரமேத்தவினைபற்றறுதலே.

மந்தமலிசோலைமழபாடிநகர்நீடுபழையாறையதனுள்
பந்தமுயர்வீடுநலபட்டிசரமேயபடர்புன்சடையனை
அந்தண்மறையோரினிதுவாழ்புகலிஞானசம்பந்தனணியார் [வே.
3591 செந்தமிழ்கள்கொண்டினிதுசெப்பவலதொண்டர்வினைநிற்பதில

74 காடுபயில்வீடுமுடையோடுகலன்மூடுமுடையாடைபுலிதோல்
தேடுபலியூணதுடைவேடமிகுவேதியர்திருந்துபதிதான்
நாடகமதாடமஞ்ஞைபாடவரிகோடல்கைமறிப்பநலமார்
3592 சேடுமிகுபேடையனமூடிமகிழ்மாடமிடைதேவூரதுவே. ௧

கோளரவுகொன்றைநகு வெண்டலையெருக்குவன்னி
கொக்கிறகொடும்,வாளரவுதண்சலமகட்குலவுசெஞ்சடைவ
ரத்திறைவனூர், வேளரவுகொங்கையிளமங்கையர்கள்குங்
குமம்விரைக்குமணமார், தேளரவுதென்றல்தருவெங்கு
3593 நிறைவொன்றிவருதேவூரதுவே. ௨

பண்தடவுசொல்லின்மலைவல்லியுமைபங்கனெமையாளு
மிறைவன், எண்தடவுவானவ ரிறைஞ்சுகழலோனினி
திருந்தஇடமாம், விண்தடவுவார்பொழிலுகுத்தநறவாடி
மலர்சூடிவிரையார், செண்தடவுமாளிகைசெறிந்துதிரு
3594 வொன்றிவளர்தேவூரதுவே. ௩

மாசில்மனநேசர்தமதாசைவளர்சூலதான்மேலையிமையோர்
ஈசன்மறையோதியெரியாடிமிகுபாசுபதன்மேவுபதிதான்
வாசமலர்கோதுகுயில்வாசகமுமாதரவர்பூவைமொழியும்
3595 தேசவொலிவீணையொடுகீதமதுவீதிநிறைதேவூரதுவே. ௪

கானமுறுமான்மறியனானையுரிபோர்வைகனலாடல்புரிவோன்
ஏனஎயிறாமையிளநாகம்வளர்மார்பினிமையோர்தலைவனூர்
வானணவுசூதமிளவாழைமகிழ்மாதவிபலாநிலவிவார்
3596 தேனமுதுவுண்டுவரிவண்டுமருள்பாடிவருதேவூரதுவே. ௫

ஆறினொடுகீறுமதியேறுசடையேறனடையார்நகர்கள்தான்
சீறுமவைவேறுபடநீறுசெய்தநீறன்நமையாளுமானூர்
வீறுமலரூறுமதுவேறிவளர்வாயவிளைகின்றகழனிச்
3597 சேறுபடுசெங்கயல்விளிப்பஇளவாளைவருதேவூரதுவே. ௬

கன்றியெழவென்றிநிகழ்துன்றுபுர மன்றவியநின்று
நகைசெய், என்றனதுசென்றுநிலையெந்தைதனதந்தையம
ரின்பநகர்தான்,முன்றின்மிசைநின்றபலவின்கனிகள்தின்று
கறவைக்குருளைகள், சென்றிசையநின்றுதுளியொன்றவிளை
3598 யாடிவளர்தேவூரதுவே. ௭

ஓதமலிகின்றதென்னிலங்கையரையன்மலிபுயங்கள்நெரியப்
பாதமலிகின்றவிரலொன்றினிலடர்த்தபரமன்றனதிடம்
போதமலிகின்றமடவார்கள்நடமாடலொடுபொங்குமுரவம்
3599 சேதமலிகின்றகரம்வென்றிதொழிலாளர்புரிதேவூரதுவே.

வண்ணமுகிலன்னஎழிலண்ணலொடு சுண்ணமலிவண்
ணமலர்மேல், நண்ணவனுமெண்ணரியவிண்ணவர்கள்
கண்ணவன்நலங்கொள்பதிதான், வண்ணவனநுண்ணி
டையினெண்ணரியஅன்னநடையின்மொழியினர், திண்
3600 ணவணமாளிகைசெறிந்தஇசையாழ்மருவுதேவூரதுவே. ௯

பொச்சமமர்பிச்சைபயிலச்சமணுமெச்சமறுபோதியருமா
மொச்சைபயிலிச்சைகடிபிச்சன்மிகுநச்சரவன்மொச்சநகர்
மைச்சின்முகில்வைச்சபொழில் * * [தான்
3601 * * * * * * ௰

துங்கமிகுபொங்கரவுதங்குசடைநங்களிறைதுன்றுகுழ
லார், செங்கயல்கண்மங்கையுமைநங்கையொருபங்கனமர்தே
வூரதன்மேல், பைங்கமலமங்கணிகொள்திண்புகலிஞான
சம்பந்தனுரைசெய், சங்கமலிசெந்தமிழ்கள்பத்துமிவை
3602 வல்லவர்கள்சங்கையிலரே. ௧௧

75 எந்தமதுசிந்தைபிரியாத பெருமானெனஇறைஞ்சி
யிமையோர், வந்துதுதிசெய்யவளர்தூபமொடுதீபமலிவாய்

மையதனால், அந்தியமர்சந்திபலஅர்ச்சனைகள்செய்யஅமர்கின்றஅழகன், சந்தமலிகுந்தளநன்மாதினொடுமேவுபதி
3603 சண்பைநகரே. க

அங்கம்விரிதுத்தியரவாமைவிரவாரமமர்மார்பிலழகன்
பங்கையமுகத்தரிவையோடுபிரியாதுபயில்கின்றபதிதான்
பொங்குபரவைத்திரைகொணர்ந்துபவளத்திரள்பொலிந்தவயலே
3604 சங்குபுரியிப்பிதாளத்திரள்பிறங்கொளிகொள்சண்பைநகரே.

போழுமதிதாழுநதிபொங்கரவு தங்குபுரிபுன்சடையினன், யாழின்மொழிமாழைவிழியேழையிளமாதினொடிருந்தபதிதான், வாழைவளர்ஞாழல்மகிழ்மன்னுபுனைதுன்னுபொழில்மாடுமடலார், தாழைமுகிழ்வேழமிகுதந்தமெனவுந்து
3605 தருசண்பைநகரே. ந

கொட்டமுழவிட்டவடிவட்டணைகள்கட்டநடமாடிகுலவும், பட்டநுதல்கட்டுமலர்மட்டுமலிபாவையொடுமேவுபதிதான், வட்டமதிதட்டுபொழிலுட்டமதுவாய்மைவழுவாதமொழியார், சட்டகலையெட்டுமருவெட்டும்வளர்தத்தை
3606 பயில்சண்பைநகரே. ச

பணங்கெழுவுபாடலினொடாடல்பிரியாதபரமேட்டிபகவன், அணங்கெழுவுபாகமுடையாகமுடையன்பர்பெருமானதிடமாம், இணங்கெழுவியாடுகொடிமாடமதில்நீடுவிரையார்புறவெலாந், தணங்கெழுவியேடலர்கொள்தாமரையி
3607 லன்னம்வளர்சண்பைநகரே. ரு

பாலனுயிர்மேலணவுகாலனுயிர்பாறவுதைசெய்தபரமன்
ஆலுமயில்போலியலிஆயிழைதனோடுமமர்வெய்துமிடமாம்
ஏலமலிசோலையினவண்டுமலர்கிண்டிநறவுண்டிசைசெயச்
3608 சாலிவயல்கோலமலிசேலுகளநீலம்வளர்சண்பைநகரே. சு

விண்பொயதனால்மழைவிழாதொழியினும்விளைவுதான்மிகவுடை, மண்பொயதனால்வளமிலாதொழியினுந்தமதுவண்மைவழுவார், உண்பகாவாருலகினூழிபலதோறும்நிலையானபதிதான், சண்பைநகரீசனடிதாழுமடியார்தமது
3609 தன்மையதுவே. எ

வரைக்குலமகட்கொருமறுக்கம்வருவித்தமதியில்வலியுடை, அரக்கனதாக்கரசிரத்துறவடர்த்தருள்புரிந்தஅழ

கன், இருக்கைய தருக்கன்முதலான இமையோர்குழுமியேழ்
விழவினில், தருக்குலநெருக்குமலிதண்பொழில்கள்கொண்
3610 டலனசண்பைநகரே. அ

நீலவரைபோலநிகழ்கேழலுருநீள்பறவைநேருருவமாம்
மாலுமலரானுமறியாமைவளர்தீயுருவமானவரதன் [லாஞ்
சேலுமினவேலுமனகண்ணியொடுநண்ணுபதிசூழ்புறவெ
3611 சாலிமலிசோலைகுயில்புள்ளிநெடுகிள்ளைபயில்சண்பைநகரே.

போதியர்கள்பிண்டியர்கள்போதுவழுவாதவகையுண்டு
பலபொய், ஓதியவர்கொண்டுசெய்வதொன்றுமிலைநன்ற
துணர்வீருரைமினோ, ஆதியெமையாளுடையஅரிவையோடு
பிரிவிலியமர்ந்தபதிதான், சாதிமணிதெண்டிரைகொணர்ந்
3612 துவயல்புகஎறிகொள்சண்பைநகரே. • க0

வாரின்மலிகொங்கையுமைநங்கையொடுசங்கரன்மகிழ்ந்
தமருமூர், சாரின்முரல்தெண்கடல்விசும்புறமுழங்கொலி
கொள்சண்பைநகர்மேற், பாரின்மலிகின்றபுகழ்நின்றதமிழ்
ஞானசம்பந்தனுரைசெய், சீரின்மலிசெந்தமிழ்கள்செப்பு
3613 மவர்சேர்வர்சிவலோகநெறியே. கக

76 கற்பொலிசுரத்திநெரி கானினிடைமாநடமதாடிமட
வார், இற்பலிகொளப்புகுதுமெந்தைபெருமானதிடமென்
பர்புவிமேல், மற்பொலிகலிக்கடன்மலைக்குவடெனத்திரை
கொழித்தமணியை, விற்பொலிநுதற்கொடியிடைக்கணி
3614 கைமார்கவரும்வேதவனமே. க

பண்டிரைபவப்புணரியிற்கனகமால்வரையைநட்டரவி
னைக், கொண்டுகயிறிற்கடையவந்தவிடமுண்டகுழகன்ற
னிடமாம், வண்டிரைநிழற்பொழிலின்மாதவியின்மீதணவு
தென்றல்வெறியார், வெண்திரைகள்செம்பவளமுந்துகடல்
3615 வந்தமொழிவேதவனமே. உ

காரியன்மெல்லோதிநதிமாதைமுடிவார்சடையில்வைத்
துமலையார், நாரியொருபால்மகிழுநம்பருறைவென்பர்நெடு
மாடமறுகில், தேரியல்விழாவினொலிதிண்பணிலமொண்
படகநாளுமிசையால், வேரிமலிவார்குழல்நன்மாதரிசை
3616 பாடலொலிவேதவனமே. ௩

நீறுதிருமேனியின்மிசைத்தொளிபெறத்தடவிவந்திடபமே
ஏறியுலகங்கள்தொறும்பிச்சைநுகரிச்சையரிருந்தபதியாம்
ஊறுபொருளின்தமிழியற்கிளவிதேரும்மடமாதருடனார்
3617 வேறுதிசையாடவர்கள்கூறஇசைதேருமெழில்வேதவனமே.

கத்திரிகைதுத்திரிகறங்குதுடிதக்கையொடிடக்கைபடகம்
எத்தனையுலப்பில்கருவித்திரளலம்பஇமையோர்கள்பரச
ஒத்தறமிதித்துநடமிட்டவொருவர்க்கிடமதென்பருலகில்
3618 மெய்த்தகையபத்தரோடுசித்தர்கள்மிடைந்துகளும்வேதவனமே.

மாலைமதிவாளரவுகொன்றைமலர் துன்றுசடைநின்று சுழலக், காலையிலெழுந்தகதிர்தாரகைமடங்கஅனலாடுமரனார், சோலையின்மரங்கள்தொறும்மிண்டியினவண்டுமதுவண்டிசைசெய, வேலையொலிசங்குதிரைவங்கசுறவங்
3619 கொணரும்வேதவனமே. ௬

வஞ்சகமனத்தவுணர்வல்லரணமன்றவியவார்சிலைவளைத்
தஞ்சகமவித்தஅமரர்க்கமரனாதிபெருமானதிடமாம்
கிஞ்சுகஇதழ்க்கனிகளூறியசெவ்வாயவர்கள்பாடல்பயில
3620 விஞ்சகஇயக்கர்முனிவக்கணநிறைந்துமிடைவேதவனமே.௭

முடித்தலைகள்பத்துடைமுருட்டுருஅரக்கனைநெருக்கிவிரலால், அடித்தலமுன்வைத்தலமரக்கருணைவைத்தவனிடம்பலதுயர், கெடுத்தலைநினைத்தறவியற்றுதல்கிளர்ந்துபுலவாணர்வறுமை, விடுத்தலைமதித்துநிதிநல்குமவர்மல்கு
3621 பதிவேதவனமே. ௮

வாசமலர்மேவியுறைவானுநெடுமாலுமறியாதநெறியைக்
கூசுதல்செயாதஅமணாதரொடுதேரர்குறுகாதஅரனூர்
காசுமணிவார்கனகநீடுகடலோடுதிரைவார்துவலைமேல்
3622 வீசுவலைவாணரவைவாரிவிலைபேசுமெழில்வேதவனமே. ௯

மந்தமுரவங்கடல்வளங்கெழுவுகாழிபதிமன்னுகவுணி
வெந்தபொடிநீறணியும்வேதவனமேவுசிவனின்னருளினால்
சந்தமிவைதண்டமிழினின்னிசையெனப்பரவுபாடலுலகில்
3623 பந்தனுரைகொண்டுமொழிவார்கள்பயில்வார்களுயர்வானுலகமே.

77 பொன்னியல்பொருப்பரையன்மங்கையொருபங்கர்புனல்தங்குசடைமேல், வன்னியொடுமத்தமலர்வைத்தவிறல்வித்தகர்மகிழ்ந்துறைவிடம், கன்னியிளவாளைகுதிகொள்ள

விளவள்ளைபடரள்ளல்வயல்வாய், மன்னியிளமேதிகள்ப
3624 டிந்துமனைசேருதவிமாணிகுழியே. க

சோதிமிகுநீறதுமெய்பூசியொருதோலுடைபுனைந்துதெருவே
மாதர்மனைதோறுமிசைபாடிவசிபேசுமரனூர்மகிழ்விடம்
தாதுமலிதாமரைமணங்கமழவண்டுமுரல்தண்பழனமிக்
3625 கோதமலிவேலைபுடைசூழுலகில்நீடுதவிமாணிகுழியே. உ

அம்பனையகண்ணுமைமடந்தையவளஞ்சிவெருவச்சினமுடைக்
கம்பமதயானையுரிசெய்தஅரனூர்கருதிமேயவிடமாம்
வம்புமலிசோலைபுடைசூழமணிமாடமதுநீடியழகார்
3626 உம்பரவர்கோனகரமென்னமிகமன்னுதவிமாணிகுழியே.

நித்தநியமத்தொழிலனாகிநெடுமால்குறளனாகிமிகவும்
சித்தமதொருக்கிவழிபாடுசெயநின்றசிவலோகனிடமாம்
கொத்தலர்மலர்ப்பொழிலின்நீடுகுலமஞ்ஞைநடமாடலதுகண்
2627 டொத்தவரிவண்டுகளுலாவியிசைபாடுதவிமாணிகுழியே.

மாசில்மதிசூடுசடைமாமுடியர்வல்லசுரர்தொல்நகரமுன்
நாசமதுசெய்துநலவானவர்களுக்கருள்செய்நம்பனிடமாம்
வாசமலிமென்குழல்மடந்தையர்கள்மாளிகையின்மன்னியழகார்
3628 ஊசல்மிசையேறியினிதாகஇசைபாடுதவிமாணிகுழியே. ரு

மந்தமலர்கொண்டுவழிபாடுசெயுமாணியுயிர்வவ்வமனமாய்
வந்தவொருகாலனுயிர்மாளவுதைசெய்தமணிகண்டனிடமாம்
சந்தினொடுகாரகில்சுமந்துதடமாமலர்கள்கொண்டுகெடிலம்
3629 உந்துபுனல்வந்துவயல்பாயுமணமாருதவிமாணிகுழியே. சு

எண்பெரியவானவர்கள்நின்றுதுதிசெய்யஇறையேகரு
ணையாய், உண்பரியநஞ்சதனையுண்டுலகமுய்யஅருளுத்தம
னிடம், பண்பயிலும்வண்டுபலகெண்டிமதுவுண்டுநிறை
பைம்பொழிலின்வாய், ஒண்பலவினின்கனிசொரிந்துமண
3630 நாறுதவிமாணிகுழியே. எ

எண்ணமதுவின்றியெழிலார்கைலைமாமலையெடுத்ததிறலார்
திண்ணியஅரக்கனைநெரித்தருள்புரிந்தசிவலோகனிடமாம்
பண்ணமருமென்மொழியினார்பணைமுலைப்பவளவாயழகதார்
3631 ஒண்ணுதல்மடந்தையர்குடைந்துபுனலாடுதவிமாணிகுழியே.

நேடுமயனோடுதிருமாலுமுணராவகைநிமிர்ந்துமுடிமேல்
ஏடுலவுதிங்கள்மதமத்தமிதழிச்சடையெம்மீசனிடமாம்
மாடுலவுமல்லிகைகுருந்துகொடிமாதவிசெருந்திகுரவின்
3632 ஊடுலவுபுன்னைவிரைதாதுமலிசேருதவிமாணிகுழியே. ௯

மொட்டையமணாதர்முதுதேரர்மதியில்லிகள்முயன்றன
படும், முட்டைகள்மொழிந்தமொழிகொண்டருள்செய்யா
தமுதல்வன்றனிடமாம், மட்டைமலிதாழையிளநீர்முதிய
வாழையில்விழுந்தஅதரில், ஒட்டமலிபூகநிரைதாறுதிர
3633 வேறுதவிமாணிகுழியே. ௧௦

உந்திவருதண்கெடிலமோடுபுனல்சூழுதவிமாணிகுழிமேல்
அந்திமதிசூடியஎம்மானையடிசேருமணிகாழிநகரான்
சந்தநிரைதண்தமிழ்தெரிந்துணருஞானசம்பந்தனதுசொல்
3634 முந்தியிசைசெய்துமொழிவார்களுடையார்கள்நெடுவானநிலனே.

78 நீறுவரியாடரவொடாமைமனஎன்புநிரைபூண்பரிடபம்
ஏறுவரியாவருமிறைஞ்சுகழலாதியரிருந்தவிடமாம்
தாறுவிரிபூகமலிவாழைவிரைநாறவிணைவாளைமடுவில்
3635 வேறுபிரியாதுவிளையாடவளமாரும்வயல்வேதிகுடியே. ௧

சொற்பிரிவிலாதமறைபாடிநடமாடுவர்தொலானையுரிவை
மற்புரிபுயத்தினிதுமேவுவரெந்நாளும்வளர்வானவர்தொழத்
துற்பரியநஞ்சமுதமாகமுனயின்றவரியன்றதொகுசீர்
3636 வெற்பரையன்மங்கையொருபங்கர்நகரென்பர்திருவேதிகுடியே.

போழுமதிபூணாவுகொன்றைமலர்துன்றுசடைவென்றிபுகமேல்
வாழுநதிதாழுமருளாளரிருளார்மிடறர்மாதரிமையோர்
சூழுமிரவாளர்திருமார்பில்விரிநூலர்வரிதோலருடைமேல்
3637 வேழவுரிபோர்வையினர்மேவுபதியென்பர்திருவேதிகுடியே.

காடர்கரிகாலர்கனல்கையரனல்மெய்யருடல்செய்யர்செவியில்
தோடர்தெரிகீளர்சரிகோவணவராவணவர்தொல்லைநகர்தான்
பாடலுடையார்களடியார்கள்மலரோடுபுனல்கொண்டுபணிவார்
3638 வேடமொளியானபொடிபூசியிசைமேவுதிருவேதிகுடியே.

சொக்கர்துணைமிக்கஎயிலுக்கறமுனிந்துதொழுமூவர்மகிழத்
தக்கவருள்பக்கமுறவைத்தஅரனாரினிதுதங்குநகர்தான்
கொக்கரவமுற்றபொழில்வெற்றிநிழல்பற்றிவரிவண்டிசைகுலாம்
3639 மிக்கமரர்மெச்சியினிதச்சமிடர்போகநல்குவேதிகுடியே.

செய்யதிருமேனிமிசை வெண்பொடியணிந்துகருமா
னுரிவைபோர்த், தையமிடுமென் றுமடமங்கைபொடகந்
திரியுமண்ணலிடமாம்,வையம்விலைமாறிடினுமேறுபுகழ்மிக்
கிழிவிலாதவகையார், வெய்யமொழிதண்புலவருக்குரை
3640 செயாதஅவர்வேதிகுடியே. ௬

உன்னியிருபோதுமடிபேணுமடியார்தமிடரொல்கஅரு
ளித், துன்னியொருநால்வருடனால்நிழலிருந்ததுணைவன்ற
னிடமாம், கன்னியரொடாடவர்கள்மாமணம்விரும்பியரு
மங்கலமிக,மின்னியலுநுண்ணிடைநன்மங்கையரியற்றுபதி
3641 வேதிகுடியே. எ

உரக்கரநெருப்பெழ நெருக்கிவரைபற்றியவொருத்தன்
முடிதோள், அரக்கனையடர்த்தவனிசைக்கினிதுநல்கியரு
ளங்கணனிடம், முருக்கிதழ்மடக்கொடிமடந்தையருமாட
வருமொய்த்தகலவை, விரைக்குழல்மிகக்கமழவிண்ணிசை
3642 யுலாவுதிருவேதிகுடியே. அ

பூவின்மிசையந்தணனொடாழிபொலியங்கையனுநேட
எரியாய்த்,தேவுமிவரல்லரினியாவரெனநின்றுதிகழ்கின்றவ
ரிடம்,பாவலர்களோசையியல்கேள்வியதழுதகொடையாளர்
பயில்வாம், மேவரியசெல்வநெடுமாடம்வளர்வீதிநிகழ்வேதி
3643 குடியே. ௯

வஞ்சமணர்தேரர்மதி கேடர்தமனத்தறிவிலாதவர்
மொழி, தஞ்சமெனஎன்றுமுணராதஅடியார்கருதுசைவ
னிடமாம், அஞ்சுபுலன்வென்றறுவகைப்பொருள்தெரிந்
தேழுஇசைக்கிளவியால், வேஞ்சினமொழித்தவர்கள்மேவி
3644 நிகழ்கின்றதிருவேதிகுடியே. ௧௦

கந்தமலிதண்பொழில்நன் மாடமிடைகாழிவளர்ஞான
முணர்சம், பந்தன்மலிசெந்தமிழின்மாலைகொடுவேதிகுடி
யாதிகழலே, சிந்தைசெயவல்லவர்கள்நல்லவர்களென்ன
நிகழ்வெய்தியிமையோர், அந்தவுலகெய்தியரசாளுமதுவே
3645 சரதமாணைநமதே. ௧௧

79 என்றுமரியானயலவர்க்கியலிசைப்பொருள்களாகியெ
னதுள், நன்றுமொளியானொளிசிறந்தபொன்முடிக்கடவுள்

நண்ணுமிடமாம், ஒன்றியமனத்தடியர்கூடியிமையோர்பரவு
நீடரவமார், குன்றுகள்நெருங்கிவிரிதண்டலைமிடைந்து
3646 வளர்கோகரணமே. க

பேதைமடமங்கையொரு பங்கிடமிகுத்திடபமேறியம
ரர், வாதைபடவண்கடலெழுந்தவிடமுண்டசிவன்வாழு
மிடமாம், மாதரொடுமாடவர்கள்வந்தடியிறைஞ்சிநிறை
மாமலர்கள்தூய்க், கோதைவரிவண்டிசைகொள்கீதமுரல்
3647 கின்றவளர்கோகரணமே. உ

முறைத்திறமுறப்பொருள் தெரிந்துமுனிவர்க்கருளி
யாலநிழல்வாய், மறைத்திறமறத்தொகுதிகண்டுசமயங்
களைவகுத்தவனிடம், துறைத்துறைமிகுத்தருவிதூமலர்
சுமந்துவரையுந்திமதகைக், குறைத்தறையிடக்கரிபுரிந்
3648 திடறுசாரல்மலிகோகரணமே. ௩

இலைத்தலைமிகுத்தபடையெண்கரம்விளங்கஎரிவீசிமுடி
மேல், அலைத்தலைதொகுத்தபுனல்செஞ்சடையில்வைத்த
அழகன்றனிடமாம், மலைத்தலைவகுத்தமுழைதோறுமுழை
வாளரிகள்கேழல்களிறு, கொலைத்தலைமடப்பிடிகள்கூடி
3649 விளையாடிநிகழ்கோகரணமே. ௪

தொடைத்தலைமலைத்திதழிதுன்னியஎருக்கலரிவன்னிமுடியின்
சடைத்தலைமிலைச்சியதபோதனனெம்மாதிபயில்கின்றபதியாம்
படைத்தலைபிடித்துமறவாளரொடுவேடர்கள்பயின்றுகுழுமிக்
3650 குடைத்தலைநதிப்படியநின்றுபழிதீரநல்குகோகரணமே. ௫

நீறுதிருமேனிமிசையாடிநிறைவார்கழல்சிலம்பொலிசெய
ஏறுவிளையாடவிசைகொண்டிடுபலிக்குவருமீசனிடமாம்
ஆறுசமயங்களும்விரும்பியடிபேணியரனுகமமிகக்
3651 கூறுமனம்வேறிரதிவந்தடியர்கம்பம்வருகோகரணமே. ௬

கல்லவடமொந்தைகுழல்தாளமலிகொக்கரையாக்கரைமிசை
பல்லபடநாகம்விரிகோவணவராளுநகரென்பரயலே
நல்லமடமாதரரனாமமுநவிற்றியதிருத்தமுழுகக்
3652 கொல்லவிடநோயகல்தரப்புகல்கொடுத்தருளுகோகரணமே.

வரைத்தலநெருக்கியமுருட்டிருள்நிறத்தவனவாய்களலற
விரற்றலையுகிர்ச்சிறிதுவைத்தபெருமானினிதுமேவுமிடமாம்

புரைத்தலைகெடுத்தமுனிவாணர்பொலிவாகிவினைதீரஅதன்மேல்
3653 குரைத்தலைகழற்பணியஓமம்விலகும்புகைசெய்கோகரணமே. அ

வில்லிமையினால்விறலரக்கனுயிர்செற்றவனும்வேதமுத
லோன், இல்லையுளதென்றிகலிநேடஎரியாகியுயர்கின்றபர
னார், எல்லையில்வரைத்தகடல்வட்டமுமிறைஞ்சிநிறைவாச
முருவக், கொல்லையிளங்குறவர்தம்மயிர்புலர்த்திவளர்
3654 கோகரணமே. கூ

நேசமில்மனச்சமணர்தேரர்கள்நிரந்தமொழிபொய்களகல்வித்
தாசைகொள்மனத்தையடியாரவர்தமக்கருளுமங்கணனிடம்
பாசமதறுத்தவனியிற்பெயர்கள்பத்துடையமன்னனவனைக்
3655 கூசவகைகண்டுபினவற்கருள்நல்கவலகோகரணமே. ௧௦

கோடலரவீனும்விரிசாரல்முன்நெருங்கிவளர்கோகரணமே
ஈடமினிதாகவுறைவானடிகள்பேணியணிகாழிநகரான் [கள்
நாடியதமிழ்க்கிளவியின்னிசைசெய்ஞானசம்பந்தன்மொழி
3656 பாடவலபத்தரவரெத்திசையுமாள்வர்பரலோகமெளிதே.

80 சீர்மருவுதேசினொடுதேசமலிசெல்வமறையோர்கள்பணியத்
தார்மருவுகொன்றையணிதாழ்சடையினானமர்சயங்கொள்பதி
பார்மருவுபங்கயமுயர்ந்தவயல்சூழ்பழனநீடஅருகே [தான்
3657 கார்மருவுவெண்கனகமாளிகைகவின்பெருகுவீழிநகரே. ௧

பட்டமுழவிட்டபணி லத்தினொடுபன்மறைகளோது
பணிநல், சிட்டர்கள்சயத்துதிகள்செய்யவருள்செய்தழல்
கொள்மேனியவனார், மட்டுலவுசெங்கமலவேலிவயல்செந்
நெல்வளர்மன்னுபொழில்வாய், விட்டுலவுதென்றல்விரை
3658 நாறுபதிவேதியர்கள்வீழிநகரே. ௨

மண்ணிழிசுரர்க்குவளமிக்கபதிமற்றுமுளமன்னுயிர்களுக்
கெண்ணிழிவின்பநிகழ்வெய்தஎழிலார்பொழிலிலங்கறுபதம்
பண்ணிழிவிலாதவகைபாடமடமஞ்ஞைநடமாடஅழகார்
3659 விண்ணிழிவிமானமுடைவிண்ணவர்பிரான்மருவுவீழிநகரே.

செந்தமிழர்தெய்வமறைநாவர்செழுநற்கலைதெரிந்தவ
வரோ, டந்தமல்குணத்தவர்களர்ச்சனைகள்செய்யஅமர்கின்ற
அரனார், கொந்தலர்பொழிற்பழனவேலிகுளிர்தண்புனல்வ
ளம்பெருகவே, வெந்தறல்விளங்கிவளர்வேதியர்விரும்பு
3660 பதிவீழிநகரே. ௪

பூதபதியாகியபுராணமுனிபுண்ணியநன்மாதைமருவிப்
பேதமதிலாதவகைபாகமிகவைத்தபெருமானதிடமாம்
மாதவர்களன்னமறையாளர்கள்வளர்த்தமலிவேள்வியதனால்
3661 ஏதமதிலாதவகையின்பமமர்கின்றஎழில்வீழிநகரே. ரு

மண்ணின்மறையோர்மருவுவைதிகமுமாதவமுமற்று
முலகத், தெண்ணில்பொருளாயவைபடைத்தஇமையோர்
கள்பெருமானதிடமாம், நண்ணிவருநாவலர்கள்நாள்தொ
றும்வளர்க்கநிகழ்கின்றபுகழ்சேர், விண்ணுலவுமாளிகை
3662 நெருங்கிவளர்நீள்புரிசைவீழிநகரே. சு

மந்திரநன்மாமறையினோடுவளர்வேள்விமிசைமிக்கபுகைபோய்
அந்தரவிசும்பணவியற்புதமெனப்படருமாழியிருள்வாய்
மந்தரநன்மாளிகைநிலாவுமணிநீடுகதிர்விட்டஒளிபோய்
3663 வெந்தழல்விளக்கெனவிரும்பினர்திருந்துபதிவீழிநகரே. எ

ஆனவலியிற்றசமுகன்றலையரங்கவணியாழிவிரலால்
ஊனமருயர்ந்தகுருதிப்புனலில்வீழ்தரவுணர்ந்தபரனூர்
தேனமர்திருந்துபொழில்செங்கனகமாளிகைதிகழ்ந்தமதிளோ
3664 டானதிருவுற்றுவளரந்தணர்நிறைந்தஅணிவீழிநகரே. அ

ஏனவுருவாகிமண்ணிடந்தஇமையோனுமெழிலன்னவுருவம்
ஆனவனுமாதியினொடந்தமறியாதஅழல்மேனியவனூர்
வானணவுமாமதிள்மருங்கலர்நெருங்கியவளங்கொள்பொழில்வாய்
3665 வேனலமர்வெய்திடவிளங்கொளியின்மிக்கபுகழ்வீழிநகரே.

குண்டமணராகியொருகோலமிகுபீலியொடுகுண்டிகை
பிடித், தெண்டிசையுமில்லதொருதெய்வமுளதென்பரது
வென்னபொருளாம், பண்டையயனன்னவர்கள்பாவனை
விரும்புபரன்மேவுபதிசீர், வெண்டரளவாள்நகைநன்மாதர்
3666 கள்விளங்குமெழில்வீழிநகரே. ௧0

மத்தமலிகொன்றைவளர்வார்சடையில்வைத்தபரன்
வீழிநகர்சேர், வித்தகனைவெங்குருவில்வேதியன்விரும்பு
தமிழ்மாலைகள்வலார், சித்திரவிமானமமர்செல்வமலிகின்ற
கின்றசிவலோகமருவி, அத்தகுகுணத்தவர்களாகியனுபோ
3667 கமொடியோகம்மவரதே. ௧௧

81 சங்கமருமுன்கைமடமாதையொருபாலுடன்விரும்பி
அங்கமுடன்மேலுறவணிந்துபிணிதீரஅருள்செய்யும்
எங்கள்பெருமானிடமெனத்தகுமுனைக்கடலின்முத்தந்
3668 துங்கமணியிப்பிகள்கரைக்குவருதோணிபுரமாமே. ௧

சல்லரியியாழ்முழவமொந்தைகுழல்தாளமதியம்பக்
கல்லரியமாமலையர்பாவையொருபாகநிலைசெய்து
அல்லெரிகையேந்திநடமாடுசடையண்ணலிடமென்பர்
3669 சொல்லரியதொண்டர்துதிசெய்யவளர்தோணிபுரமாமே.

வண்டரவுகொன்றைவளர்புன்சடையின்மேல்மதியம்வைத்
பண்டரவுதன்னரையிலார்த்தபரமேட்டிபழிதீரக் [துப்
கண்டரவவொண்கடலில்நஞ்சமமுதுண்டகடவுளூர்
3670 தொண்டரவர்மிண்டிவழிபாடுமல்குதோணிபுரமாமே. ௩

கொல்லைவிடையேறுடையகோவணவனாவணவுமாலை
ஒல்லையுடையானடையலாரரணமொள்ளழல்விளைத்த
வில்லையுடையான்மிகவிரும்புபதிமேவிவளர்தொண்டர்
3671 சொல்லையடைவாகஇடர்தீர்த்தருள்செய்தோணிபுரமாமே.

தேயுமதியஞ்சடையிலங்கிடவிலங்கன்மலிகானிற்
காயுமடுதிண்கரியினீருரிவைபோர்த்தவனினைப்பார்
தாயெனநிறைந்ததோருதன்மையினர்நன்மையொடுவாழ்வு
3672 தூயமறையாளர்முறையோதிநிறைதோணிபுரமாமே. ௫

பற்றலர்தமுப்புரமெரித்தடிபணிந்தவர்கள்மேலைக்
குற்றமதொழித்தருளுகொள்கையினன்வெள்ளின்முதுகா
பற்றவனிசைக்கிளவிபாரிடமதேத்தநடமாடுந் [னிற்
3673 துற்றசடையத்தனுறைகின்றபதிதோணிபுரமாமே. ௬

பண்ணமருநான்மறையர்நூன்முறைபயின்றதிருமார்பிற்
பெண்ணமருமேனியினர்தம்பெருமைபேசுமடியார்மெய்த்
திண்ணமரும்வல்வினைகள்தீரஅருள்செய்தலுடையானூர்
3674 துண்ணெனவிரும்புசரியைத்தொழிலர்தோணிபுரமாமே.௭

தென்றிசையிலங்கையரையன்றிசைகள்வீரம்விளைவித்து
வென்றிசைபுயங்களையடர்த்தருளும்வித்தகனிடஞ்சீர்
ஒன்றிசையியற்கிளவிபாடமயிலாடவளர்சோலை
3675 துன்றுசெயவண்டுமலிதும்பிமுரல்தோணிபுரமாமே. ௮

நாற்றமிகுமாமலரின்மேலயனுநாரணனுநாடி
ஆற்றலதனால்மிகஅளப்பரியவண்ணமெரியாகி
ஊற்றமிகுகீழுலகுமேலுலகுமோங்கியெழுதன்மைத்
3676 தோற்றமிகநாளுமரியானுறைவுதோணிபுரமாமே. ௯

மூடுதுவராடையினர்வேடநிலைகாட்டுமமணாதர்
கேடுபலசொல்லிடுவரம்மொழிகெடுத்தடைவினானைக்
காடுபதியாகநடமாடிமடமாதொடிருகாதில்
3677 தோடுகுழைபெய்தவர்தமக்குறைவுதோணிபுரமாமே. ௧௦

துஞ்சிருளினின்றுநடமாடிமிகுதோணிபுரமேய
மஞ்சனைவணங்குதிருஞானசம்பந்தனசொன்மாலை
தஞ்சமெனநின்றிசைமொழிந்தஅடியார்கள்தடுமாற்றம்
3678 வஞ்சமிலர்நெஞ்சிருளுநீங்கியருள்பெற்றுவளர்வாரே. ௧௧

82 கொம்பிரியவண்டுலவுகொன்றைபுரிநூலொடுகுலாவித்
தம்பரிசினோடுசுடுநீறுதடவந்திடபமேறிக்
கம்பரியசெம்பொனெடுமாடமதில்கல்வரைவிலாக
3679 அம்பெரியவெய்தபெருமானுறைவதவளிவணல்லூரே. ௧

ஓமையனகள்ளியனவாகையனகூகைமுரலோசை
ஈமமெரிசூழ்சுடலைவாசமுதுகாடுநடமாடித்
தூய்மையுடையக்கொடரவம்விரவிமிக்கொளிதுளங்க
3680 ஆமையொடுபூணுமடிகளுறைவதவளிவணல்லூரே. ௨

நீறுடையமார்பிலிமவான்மகளொர்பாகநிலைசெய்து
கூறுடையவேடமொடுகூடியழகாயதொருகோலம்
ஏறுடையரேனுமிடுகாடிரவில்நின்றுநடமாடும்
3681 ஆறுடையவார்சடையினானுறைவதவளிவணல்லூரே. ௩

பிணியுமிலர்கேடுமிலர்தோற்றமிலரென்றுலகுபேணிப்
பணியுமடியார்களனபாவமறஇன்னருள்பயந்து
துணியுடையதோலுமுடைகோவணமுநாகமுடல்தொங்க
3682 அணியுமழகாகவுடையானுறைவதவளிவணல்லூரே. ௪

குழலின்வரிவண்டுமுரல்மெல்லியனபொன்மலர்கள்கொண்டு
கழலின்மிசையிண்டைபுனைவார்கடவுளென்றமரர்கூடித்
தொழலும்வழிபாடுமுடையார்துயருநோயுமிலராவர்
3683 அழலுமழுவேந்துகையினானுறைவதவளிவணல்லூரே. ௫

துஞ்சலிலாயமரர்நின்றுதொழுதேத்தஅருள்செய்து
நஞ்சுமிடறுண்டுகரிதாயஎளிதாகியொருநம்பன்
மஞ்சுறநிமிர்ந்துமைநடுங்கஅகலத்தொடுவளாவி
3684 அஞ்சமதவேழவுரியானுறைவதவளிவணல்லூரே. ௬

கூடரவமொந்தைகுழல்யாழ்முழவினோடுமிசைசெய்யப்
பீடரவமாகுபடரம்புசெய்துபேரிடபமோடும்
காடரவமாகுகனல்கொண்டிரவில்நின்றுநடமாடி
3685 ஆடரவமார்த்தபெருமானுறைவதவளிவணல்லூரே. ௭

ஒருவரையுமேல்வலிகொடேனெனஎழுந்தவிறலோனிப்
பெருவரையின்மேலொர்பெருமானுமுளனோவெனவெகுண்ட
கருவரையுமாழ்கடலுமன்னதிறல்கைகளுடையோனை
3686 அருவரையிலூன்றியடர்த்தானுறைவதவளிவணல்லூரே.

பொறிவரியநாகமுயர்பொங்கணையணைந்தபுகழோனும்
வெறிவரியவண்டறையவிண்டமலர்மேல்விழுமியோனும்
செறிவரியதோற்றமொடுஆற்றல்மிகநின்றுசிறிதேயும்
3687 அறிவரியனாயபெருமானுறைவதவளிவணல்லூரே. ௯

கழியருகுபள்ளியிடமாகவடுமீன்கள்கவர்வாரும்
வழியருகுசாரவெயினின்றடிசிலுள்கிவருவாரும்
பழியருகினாரொழிகபான்மையொடுநின்றுதொழுதேத்தும்
3688 அழியருவிதோய்ந்தபெருமானுறைவதவளிவணல்லூரே.

ஆனமொழியானதிறலோர்பரவுமவளிவண லூர்மேல்
போனமொழிநன்மொழிகளாயபுகழ்தோணிபுரவூரன்
ஞானமொழிமாலைபலநாடுபுகழ்ஞானசம்பந்தன்
3689 தேனமொழிமாலைபுகழ்வார்துயர்கள்தீயதிலார்தாமே. ௧௧

83 வண்டிரியவிண்டமலர்மல்குசடைதாழவிடையேறிப்
பண்டெரிகைகொண்டபரமன்பதியதென்பரதனயலே
நண்டிரியநாரையிரைதேரவரைமேலருவிமுத்தம்
3690 தெண்டிரைகள்மோதவிரிபோதுகமழுந்திருநல்லூரே. ௧

பல்வளருநாகமரையார்த்துவரைமங்கையொருபாகம்
மல்வளர்புயத்திலணைவித்துமகிழும்பரமனிடமாம்
சொல்வளரிசைக்கிளவிபாடிமடவார்நடமதாடச்
3691 செல்வமறையோர்கள்முறையேத்தவளருந்திருநல்லூரே. ௨

நீடுவரைமேருவிலதாகநிகழ்நாகமழலம்பால்
கூடலர்கள்மூவெயிலெரித்தகுழகன்குலவுசடைமேல்
ஏடுலவுகொன்றைபுனல்நின்றுதிகழுந்நிமலனிடமாம்
3692 சேடுலவுதாமரைகள்நீடுவயலார்திருநல்லூரே. ௩

கருகுபுரிமிடறர்கரிகாடரெரிகையதனிலேந்தி
அருகுவருகரியினுரியதளர்படஅரவரிடம்வினவில்
முருகுவிரிபொழிலின்மணநாறமயிலாலமரமேறித்
3693 திருகுசினமந்திகனிசிந்தமதுவார்திருநல்லூரே. ௪

பொடிகொள்திருமார்பர்புரிநூலர்புனல்பொங்கரவுதங்கும்
முடிகொள்சடைதாழவிடையேறுமுதலாளரவரிடமாம்
இடிகொள்முழவோசையெழிலார்செய்தொழிலாளர்விழமல்கச்
3694 செடிகொள்வினையகலமனமினியவர்கள்சேர்திருநல்லூரே.

புற்றரவர்நெற்றியொர்கண்ணொற்றைவிடையூர்வரடையாளம்
சுற்றமிருள்பற்றியபல்பூதமிசைபாடநசையாலே
கற்றமறையுற்றுணர்வர்பற்றலர்கள்முற்றுமெயில்மாளச்
3695 செற்றவரிருப்பிடநெருக்குபுனலார்திருநல்லூரே. ௬

பொங்கரவரங்கமுடன்மேலணிவர்ஞாலமிடுபிச்சை
தங்கரவமாகவுழிதந்துமெய்துலங்கியவெண்ணீற்றர்
கங்கையரவம்விரவுதிங்கள்சடையடிகளிடம்வினவில்
3696 செங்கயல்வதிக்குதிகொளும்புனலதார்திருநல்லூரே. ௭

ஏறுபுகழ்பெற்றதெனிலங்கையவர்கோனையருவரையில்
சீறியவனுக்கருளுமெங்கள்சிவலோகனிடமாகும்
கூறுமடியார்களிசைபாடிவலம்வந்தயருமருவிச்
3697 சேறுகமானவழியத்திகழ்தருந்திருநல்லூரே. ௮

மாலுமலர்மேலயனுகேடியறியாமையெரியாய
கோலமுடையானுணர்வுகோதில்புகழானிடமதாகும்
நாலுமறையங்கமுதலாறுமெரிமூன்றுதழலோம்பும்
3698 சீலமுடையார்கள்நெடுமாடம்வளருந்திருநல்லூரே. ௯

கீறுமுடைகோவணமிலாமையிலொலோவியதவத்தர்
பாறுமுடன்மூடுதுவராடையர்கள்வேடமவைபாரேல்
ஏறுமடவாளொடினிதேறிமுனிருந்தவிடமென்பர்
3699 தேறுமனவாரமுடையார்குடிசெயுந்திருநல்லூரே. ௧௦

திரைகளிருகரையும்வருபொன்னிநிலவுந்திருநல்லூர்மேல்
பரசுதருபாணியைநலந்திகழ்செய்தோணிபுரநாதன்
உரைசெய்தமிழ்ஞானசம்பந்தனிசைமாலைமொழிவார்போய்
3700 விரைசெய்மலர்தூவவிதிபேணுகதிபேறுபெறுவாரே. கக

84 பெண்ணியவுருவினர்பெருகியபுனல்விரவியபிறைக்
கண்ணியர்கடுநடைவிடையினர்கழல்தொழுமடியவர்
நண்ணியபிணிகெடஅருள்புரிபவர்நணுகுயர்பதி
3701 புண்ணியமறையவர்நிறைபுகழொலிமலிபுறவமே. க

கொக்குடையிறகொடுபிறையொடுகுளிர்சடைமுடியினர்
அக்குடைவடமுமொரரவமுமலரரைமிசையினில்
திக்குடைமருவியவுருவினர்திகழ்மலைமகளொடும்
3702 புக்குடனுறைவதுபுதுமலர்விரைகமழ்புறவமே. உ

கொங்கியல்சுரிகுழல்வரிவளையிளமுலையுமையொரு
பங்கியல்திருவுருவுடையவர்பரசுவொடிரலைமெய்
தங்கியகரதலமுடையவர்விடையவருறைபதி
3703 பொங்கியபொருகடல்கொளவதன்மிசையுயர்புறவமே. ங

மாதவமுடைமறையவனுயிர்கொளவருமறலியை
மேதகுதிருவடியிறையுறவுயிரதுவிலகினர்
சாதகவுருவியல்கானிடையுமைவெருவுறவரு
3704 போதகவுரியதள்மருவினருறைபதிபுறவமே. ச

காமனையழல்கொளவிழிசெய்துகருதலர்கடிமதில்
தூமமதுறவிறல்சுடர்கொளுவியஇறைதொகுபதி
ஓமமொடுயர்மறைபிறவியவகைதனொடொளிகெழு
3705 பூமகனலரொடுபுனல்கொடுவழிபடுபுறவமே. ரு

சொன்னயமுடையவர்சுருதிகள்கருதியதொழிலினர்
பின்னையர்நடுவுணர்பெருமையர்திருவடிபேணிட
முன்னையமுதல்வினையறஅருளினருறைமுதுபதி
3706 புன்னையின்முகைநிதிபொதியவிழ்பொழிலணிபுறவமே. சு

வரிதருபுலியதளுடையினர்மழுவெறிபடையினர்
பிரிதருநகுதலைவடமுடிமிசையணிபெருமையர்
எரிதருமுருவினரிமையவர்தொழுவதொரியல்பினர்
3707 புரிதருகுழலுமையொடுமினிதுறைபதிபுறவமே. எ

வசிதருமுருவொடுமலர்தலையுலகினைவலிசெயும்
நிசிசரனுடலொடுநெடுமுடியொருபதுநெரிவுற
ஒசிதரவொருவிரல்நிறுவினரொளிவளர்வெளிபொடி
3708 பொசிதருதிருவுருவுடையவருறைபதிபுறவமே. அ

தேனகமருவியசெறிதருமுளரிசெய்தவிசினில்
ஊனகமருவியபுலனுகர்வுணர்வுடையொருவனும்
வானகவரையகமறிகடல்நிலனெனுமெழுவகைப்
3709 போனகமருவினனறிவரியவர்பதிபுறவமே. கூ

கோசரநுகர்பவர்கொழுகியதுவரனதுகிலினர்
பாசுரவினைதருபளகர்கள்பழிதருமொழியினர்
நீசரைவிடுமினிநினைவுறுநிமலர்தமுறைபதி
3710 பூசுரர்மறைபயில்நிறைபுகழொலிமலிபுறவமே. க0

போதியல்பொழிலணிபுறவநன்னகருறைபுனிதனை
வேதியரதிபதிமிகுதலைதமிழ்கெழுவிரகினன்
ஓதியவொருபதுமுரியதொரிசைகொளவுரைசெயும்
3711 நீதியரவரிருநிலனிடைநிகழ்தருபிறவியே. கக

85 மட்டொளிவிரிதருமலர்நிறைசுரிகுழல்மடவரல்
பட்டொளிமணியல்குலுமையமையுருவொருபாகமாக்
கட்டொளிர்புனலொடுகடியரவுடனுறைமுடிமிசை
3712 விட்டொளியுதிர்பிதிர்மதியவர்பதிவிழிமிழலையே. க

எண்ணிறவரிவளைநெறிகுழலெழில்மொழியிளமுலைப்
பெண்ணுறுமுடலினர்பெருகியகடல்விடமிடறினர்
கண்ணுறுநுதலினர்கடியதொர்விடையினர்கனலினர்
3713 விண்ணுறுபிறையணிசடையினர்பதிவிழிமிழலையே. உ

மைத்தகுமதர்விழிமலைமகளுருவொருபாகமா
வைத்தவர்மதகரியுரிவைசெய்தவர்தமைமருவினர்
தெத்தெனஇசைமுரல்சரிதையர்திகழ்தருமாவினர்
3714 வித்தகநகுதலையுடையவரிடம்விழிமிழலையே. ந

செவ்வழலெனநனிபெருகியவுருவினர்செறிதரு
கவ்வழலரவினர்கதிர்முதிர்மழுவினர்தொழுவிலா
முவ்வழல்நிசிசரர்விறலவையழிதருமுதுமதிள்
3715 வெவ்வழல்கொளநனிமுனிபவர்பதிவிழிமிழலையே. ச

பைங்கணதொருபெருமழலைவெளேற்றினர்பலியெனா
எங்கணுமுழிதர்வரிமையவர்தொழுதெழுமியல்பினர்
அங்கணரமரர்களடியிணைதொழுதெழஆரமா
3716 வெங்கணஅரவினருறைதருபதிவிழிமிழலையே. ரு

பொன்னனபுரிதருசடையினர்பொடியணிவடிவினர்
உன்னினர்வினையவைகளைதலைமருவியவொருவனார்
தென்னெனவிசைமுரல்சரிதையர்திகழ்தருமார்பினில்
3717 மின்னெனமிளிர்வதொரரவினர்பதிவிழிமிழலையே. சு

அக்கினொடரவரையணிதிகழொளியதொராமைபூண்
டிக்குகமலிதலைகலனெனவிடுபலியேகுவர்
கொக்கரைகுழல்முழவிழவொடுமிசைவதொர்சரிதையர்
3718 மிக்கவருறைவதுவிரைகமழ்பொழில்விழிமிழலையே. எ

பாதமொர்விரலுறமலையடர்பலதலைநெரிதரப்
பூதமொடடியவர்புனைகழல்தொழுதெழுபுகழினர்
ஓதமொடொலிதிரைபடுகடல்விடமுடைமிடறினர்
3719 வேதமொடுறுதொழின்மதியவர்பதிவிழிமிழலையே. அ

நீரணிமலர்மிசையுறைபவனிறைகடலுறுதுயில்
நாரணனெனஇவரிருவருநறுமலரடிமுடி
ஓருணர்வினர்செலலுறலருமுருவினொடொளிதிகழ்
3720 வீரணருறைவதுவெறிகமழ்பொழில்விழிமிழலையே. கூ

இச்சையரினிதெனவிடுபலிபடுதலைமகிழ்வதோர்
பிச்சையர்பெருமையையிறைபொழுதறிவெனவுணர்விலர்
மொச்சையஅமணருமுடைபடுதுகிலருமழிவதோர்
3721 விச்சையருறைவதுவிரைகமழ்பொழில்விழிமிழலையே. க0

உன்னியஅருமறையொலியினைமுறைமிகுபாடல்செய்
இன்னிசையவருறையெழில்திகழ்பொழில்விழிமிழலையை
மன்னியபுகலியுள்ஞானசம்பந்தன வண் தமிழ்
3722 சொன்னவர்துயரிலர்வியனுலகுறுகதிபெறுவரே. கக

86 முறியுறுநிறமல்குமுகிழ்முலைமலைமகள்வெருவமுன்
வெறியுறுமதகரியதள்படவுரிசெய்தவிறலினர்
நறியுறுமிதழியின்மலரொடுநதிமதிநகுதலை
3723 செறியுறுசடைமுடியடிகள்தம்வளநகர்சேறையே. க

புனமுடைநறுமலர்பலகொடுதொழுவதொர்புரிவினர்
மனமுடையடியவர்படுதுயர்களைவதொர்வாய்மையர்
இனமுடைமணியினொடரசிலையொளிபெறமிளிர்வதோர்
3724 சினமுதிர்விடையுடையடிகள்தம்வளநகர்சேறையே. ௨

புரிதருசடையினர்புலியதளரையினர்பொடிபுல்கும்
எரிதருமுருவினரிடபமதேறுவரீடுலா
வரிதருவளையினரவர்வர்மகிழ்தாமனைதொறும்
3725 திரிதருசரிதையருறைதருவளநகர்சேறையே. ௩

துடிபடுமிடையுடைமடவரலுடனொருபாகமா
இடிபடுகுரலுடைவிடையினர்படமுடையரவினர்
பொடிபடுமுருவினர்புலியுரிபொலிதருமரையினர்
3726 செடிபடுசடைமுடியடிகள்தம்வளநகர்சேறையே. ௪

அந்தரமுழிதருதிரிபுரமொருநொடியளவினில்
மந்தரவரிசிலையதனிடையரவரிவாளியால்
வெந்தழிதரவெய்தவிடலையர்விடமணிமிடறினர்
3727 செந்தழல்நிறமுடையடிகள்தம்வளநகர்சேறையே. ௫

மத்தரமுறுதிறன்மறவர்தம்வடிவுகொடுருவுடைப்
பத்தொருபெயருடைவிசயனையசைவுசெய்பரிசினால்
அத்திரமருளுநமடிகளதணிகிளர்மணியணி
3728 சித்திரவளநகர்செறிபொழில்தழுவியசேறையே. ௬

பாடினருமறைமுறைமுறைபொருளெனவருநடம்
ஆடினருலகிடையலர்கொடுமடியவர்துதிசெய
வாடினர்படுதலையிடுபலியதுகொடுமகிழ்தரும்
3729 சேடர்தம்வளநகர்செறிபொழில்தழுவியசேறையே. ௭

கட்டுரமதுகொடுகயிலைநன்மலைமலிகாமுடை
நிட்டுரனுடலொடுநெடுமுடியொருபதுநெரிசெய்தார்
மட்டுரமலரடியடியவர்தொழுதெழஅருள்செயும்
3730 சிட்டர்தம்வளநகர்செறிபொழில்தழுவியசேறையே. ௮

பன்றியர்பறவையர்பரிசுடைவடிவொடுபடர்தர
அன்றியஅவரவரடியொடுமுடியவையறிகிலார்
நின்றிருபுடைபடநெடுவெரிநடுவெயொர்நிகழ்தரச்
3731 சென்றுயர்வெளிபடஅருளியஅவர்நகர்சேறையே. ௯

துகடுறுவிரிதுகிலுடையவரமணெனும்வடிவினர்
விகடமதுறுசிறுமொழியவைநலமிலவினவிடல்
முகிடருமிளமதியரவொடுமழகுறமுதுநதி
3732 திகடருசடைமுடியடிகள்தம்வளநகர்சேறையே. ௧௦

கற்றநன்மறைபயிலடியவரடிதொழுகவினுறு
சிற்றிடையவளொடுமிடமெனவுறைவதொர்சேறைமேல்
குற்றமில்புகலியுளிகலறுஞானசம்பந்தன
3733 சொற்றகவுறமொழிபவரழிவிலர்துயர்தீருமே. ௧௧

**87** தளிரிளவளரொளிதனதெழில்தருதிகழ்மலைமகள்
குளிரிளவளரொளிவனமுலையிணையவைகுலவலின்
நளிரிளவளரொளிமருவுநள்ளாறர்தந்நாமமே
3734 மிளிரிளவளரெரியிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௧

போதமர்தருபுரிகுழலெழின்மலைமகள்பூணணி
சீதமதணிதருமுகிழிளவனமுலைசெறிதலின்
நாதமதெழிலுருவனையநள்ளாறர்தந்நாமமே
3735 மீதமதெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௨

இட்டுறுமணியணியிணர்புணர்வளரொளியெழில்வடம்
கட்டுறுகதிரிளவனமுலையிணையொடுகலவலின்
நட்டுறுசெறிவயல்மருவுநள்ளாறர்தந்நாமமே
3736 இட்டுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௩

மைச்சணிவரியரிநயனிதொன்மலைமகள்பயனுறு
கச்சணிகதிரிளவனமுலையவையொடுகலவலின்
நச்சணிமிடறுடையடிகள்நள்ளாறர்தந்நாமமே
3737 மெச்சணியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௪

பண்ணியல்மலைமகள்கதிர்விடுபருமணியணிநிறக்
கண்ணியல்கலசமதனமுலையிணையொடுகலவலின்
நண்ணியகுளிர்புனல்புகுதுநள்ளாறர்தந்நாமமே
3738 விண்ணியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௫

போதுறுபுரிகுழல்மலைமகளிளவளர்பொன்னணி
சூதுறுதளிர்நிறவனமுலையவையொடுதுதைதலின்
தாதுறுநிறமுடையடிகள்நள்ளாறர்தந்நாமமே
3739 மீதுறுமெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே.

கார்மலிநெறிபுரிசுரிகுழல்மலைமகள்கவினுறு
சீர்மலிதருமணியணிமுலைதிகழ்வொடுசெறிதலின்
தார்மலிநகுதலையுடையநள்ளாறர்தந்நாமமே
3740 ஏர்மலியெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௭

மன்னியவளரொளிமலைமகள்தளிர்நிறமதமிகு
பொன்னியல்மணியணிகலசமதனமுலைபுணர்தலின்
தன்னியல்தசமுகன்நெரியநள்ளாறர்தந்நாமமே
3741 மின்னியலெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௮

கான்முகமயிலியல்மலைமகள்கதிர்விடுகனமிகு
பான்முகமியல்பணையிணைமுலைதுணையொடுபயிறலின்
நான்முகனரியறிவரியநள்ளாறர்தந்நாமமே
3742 மேன்முகஎரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௯

அத்திரநயனிதொன்மலைமகள்பயனுறுமதிசயச்
சித்திரமணியணிதிகழ்முலையிணையொடுசெறிதலின்
புத்தரொடமணர்பொய்ப்பெயருநள்ளாறர்தந்நாமமே
3743 மெய்த்திரளெரியினிலிடிலிவைபழுதிலைமெய்ம்மையே. ௧௦

சிற்றிடையரிவைதன்வனமுலையிணையொடுசெறிதரும்
நற்றிறமுறுகழுமலநகர்ஞானசம்பந்தன
கொற்றவனெதிரிடையெரியினிலிடஇவைகூறிய
3744 சொற்றெரியொருபதுமறிபவர்துயரிலர்தூயரே. ௧௧

88 மத்தகமணிபெறமலர்வதொர்மதிபுரைநுதல்கரம்
ஒத்தகநகமணிமிளிர்வதொரரவினொளிகிளர்
அத்தகஅடிதொழஅருள்பெறுகணனொடுமுமையவள்
3745 வித்தகருறைவதுவிரிபொழில்வளநகர்விளமரே. ௧

பட்டிலகியமுலையரிவையருலகினிலிடுபலி
ஒட்டிலகிணைமரவடியினருமையுறுவடிவினர்
சிட்டிலகழகியபொடியினர்விடைமிசைசேர்வதோர்
3746 விட்டிலகழகொளிபெயரவருறைவதுவிளமரே. ௨

அங்கதிரொளியினரரையிடைமிளிர்வதொரரவொடு
செங்கதிரெனநிறமனையதொர்செழுமணிமார்பினர்
சங்கதிர்பறைகுழல்முழவினொடிசைதருசரிதையர்
3747 வெங்கதிருறுமழுவுடையவரிடமெனில்விளமரே. ௩

மாடமதெனவளர்மதிலவையெரிசெய்வர்விரவுசீர்ப்
பீடெனவருமறையுரைசெய்வர்பெரியபல்சரிதைகள்
பாடலராடியசுடலையிலிடமுறநடநவில்
3748 வேடமதுடையவர்வியனகரதுசொலில்விளமரே. ௪

பண்டலைமழலைசெயாழெனமொழியுமைபாகமாக்
கொண்டலைகுரைகழலடிதொழுமவர்வினைகுறுகிலர்
விண்டலையமரர்கள்துதிசெயஅருள்புரிவிறவினர்
3749 வெண்டலைபலிகொளும்விமலர்தம்வளநகர்விளமரே. ௫

மனைகள்தொறிடுபலியதுகொள்வர்மதிபொதிசடையினர்
கனைகடலடுவிடமமுதுசெய்கறையணிமிடறினர்
முனைகெடவருமதிளெரிசெய்தவவர்கழல்பரவுவார்
3750 வினைகெடஅருள்புரிதொழிலினர்செழுநகர்விளமரே. ௬

நெறிகமழ்தருமுரையுணர்வினர்புணர்வுறுமடவரல்
செறிகமழ்தருமுருவுடையவர்படைபலபயில்பவர்
பொறிகமழ்தருபடஅரவினர்விரவியசடைமிசை
3751 வெறிகமழ்தருமலரடைபவரிடமெனில்விளமரே. ௭

தெண்கடல்புடையணிநெடுமதிலிலங்கையர்தலைவனைப்
பண்படவரைதனிலடர்செய்தபைங்கழல்வடிவினர்
திண்கடலடைபுனல்திகழ்சடைபுகுவதொர்சேர்வினர்
3752 விண்கடல்விடமலியடிகள்தம்வளநகர்விளமரே. ௮

தொண்டசையுறவருதுயருறுகாலனைமாள்வுற
அண்டல்செய்திருவரைவெருவுறவாரழலாயினர்
சொண்டல்செய்தருதிருமிடறினரிடமெனிலளியினம்
3753 விண்டிசையுறுமலர்நறுமதுவிரிபொழில்விளமரே. ௯

ஒள்ளியர்தொழுதெழவுலகினிலுரைசெயுமொழிபல
கொள்ளியகளவினர்குண்டிகையவர்தவமறிகிலார்
பள்ளியைமெய்யெனக்கருதன்மின்பரிவொடுபேணுவீர்
3754 வெள்ளியபிறையணிசடையினர்வளநகர்விளமரே. ௧௦

வெந்தவெண்பொடியணியடிகளைவிளமருள்விகிர்தரைச்
சிந்தையுளிடைபெறவுரைசெய்ததமிழிவைசெழுவிய
அந்தணர்புகலியுளழகமருமறைஞானசம்
3755 பந்தனமொழியிவையுரைசெயுமவர்வினைபறையுமே. ௧௧

89 திருந்துமாகளிற்றிளமருப்பொடுதிரண்மணிச்சந்தமுந்திக்
குருந்துமாகுரவமுங்குடசமும்பீலியுஞ்சுமந்துகொண்டு
நிரந்துமாவயல்புகுநீடுகோட்டாறுசூழ்கொச்சைமேவிப்
3756 பொருந்தினார்திருந்தடிபோற்றிவாழ்நெஞ்சமேபுகலதாமே.

ஏலமாரிலவமோடினமலர்த்தொகுதியாயெங்குநுந்திக்
கோலமாமிளகொடுகொழுங்கனிகொன்றையுங்கொண்டுகோ
றுலியாவயல்புகுமணிதருகொச்சையேநச்சிமேவும் [ட்டா
3757 நீலமார்கண்டனைநினைமடநெஞ்சமேயஞ்சல்நீயே. உ

பொன்னுமாமணிகொழித்தெறிபுனற்கரைகள்வாய்நுரைக
கன்னிமார்முலைநலங்கவரவந்தேறுகோட்டாறுசூழ[ளுந்திக்
மன்னினார்மாதொடும்மருவிடங்கொச்சையேமருவினாளும்
3758 முன்னைநோய்தொடருமாறில்லைகாண்நெஞ்சமேயஞ்சல்நீயே.

கந்தமார்கேதகைச்சந்தனக்காடுசூழ்கதலிமாடே
வந்துமாவள்ளையின்பவரளிக்குவளையைச்சாடியோடக்
கொந்துவார்குழலினார்குதிகொள்கோட்டாறுசூழ்கொச்சை
3759 எந்தையாரடிநினைந்துய்யலாநெஞ்சமேயஞ்சல்நீயே. [மேய

மறைகொளுந்திறலினாராகுதிப்புகைகள்வானண்டமிண்டிச்
சிறைகொளும்புனலணிசெழும்பதிதிகழ்மதிற்கொச்சைதன்
உறைவிடமெனமனமதுகொளும்பிரமனார்சிரமறுத்த [பால்
3760 இறைவனதடியிணையிறைஞ்சிவாழ்நெஞ்சமேயஞ்சல்நீயே. ரு

சுற்றமுமக்களுந்தொக்கஅத்தக்கனைச்சாடியன்றே
உற்றமால்வரையுமைநங்கையைப்பங்கமாவுள்கினானோர்
குற்றமில்லடியவர்குழுமியவீதிசூழ்கொச்சைமேவி
3761 நற்றவமருள்புரிநம்பனைநம்பிடாய்நாளுநெஞ்சே. சு

கொண்டலார்வந்திடக்கோலவார்பொழில்களிற்கூடிமந்தி
கண்டவார்கழைபிடித்தேறிமாமுகில்தனைக்கதுவுகொச்சை
அண்டவானவர்களுமமரருமுனிவரும்பணியஆலம்
3762 உண்டமாகண்டனார்தம்மையேயுள்குநீயஞ்சல்நெஞ்சே. எ

அடலெயிற்றரக்கனார்நெருக்கிமாமலையெடுத்தார்த்தவாய்கள்
உடல்கெடத்திருவிரலூன்றினாருறைவிடமொளிகொள்வெள்ளி
மடவிடைப்பவளமும்முத்தமுந்தொத்துவண்புன்னைமாடே
3763 பெடையொடுங்குருகினம்பெருகுதண்கொச்சையேபேணுநெஞ்சே.

அரவினிற்றுயில்தருமரியுநற்பிரமனுமன்றயர்ந்து
குரைகழல்திருமுடியளவிட அரியவர்கொங்குசெம்பொன்
விரிபொழிலிடைமிகுமலைமகள்மகிழ்தரவீற்றிருந்த
3764 கரியநன்மிடறுடைக்கடவுளார்கொச்சையேகருதுநெஞ்சே.

கடுமலியுடலுடையமணருங்கஞ்சியுண்சாக்கியரும்
இடுமறவுரைதனையிகழ்பவர்கருதுநம்மீசர்வானோர்
நடுவுறைநம்பனைநான்மறையவர்பணிந்தேத்தஞாலம்
3765 உடையவன்கொச்சையேயுள்கிவாழ்நெஞ்சமேயஞ்சல்நீயே.

காய்ந்துதங்காலினாற்காலனைச்செற்றவர்கடிகொள்கொச்சை
ஆய்ந்துகொண்டிடமென இருந்தநல்லடிகளையாதரித்தே [ன
எய்ந்ததொல்புகழ்மிகுமெழில்மறைஞானசம்பந்தன்சொன்
3766 வாய்ந்தஇம்மாலைகள்வல்லவர்நல்லர்வானுலகின்மேலே. கக

90 ஓங்கிமேலுழிதருமொலிபுனல்கங்கையையொருசடைமேல்
தாங்கினாரிடுபலிதலைகலனாக்கொண்டதம்மடிகள்
பாங்கினாலுமையொடும்பகலிடம்புகலிடம்பைம்பொழில்சூழ்
3767 வீங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. க

தூறுசேர்சுடலையிற்சுடரெரியாடுவர்துளங்கொளிசேர்
நீறுசாந்தெனவுகந்தணிவர்வெண்பிறைபுல்குசடைமுடியார்
நாறுசாந்திளமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
3768 வீறுசேர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. உ

மழைவளரிளமதிமலரொடுதலைபுல்குவார்சடைமேல்
கழைவளர்புனல்புகக்கண்டவெங்கண்ணுதற்கபாலியார்தாம்
இழைவளர்துகிலல்குலரிவையோடொருபகலமர்ந்தபிரான்
3769 விழைவளர்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

கரும்பனவரிசிலைப்பெருந்தகைக்காமனைக்கவினழித்த
சுரும்பொடுதேன்மல்குதூமலர்க்கொன்றையஞ்சுடர்ச்சடையார்
அரும்பனவனமுலையரிவையோடொருபகலமர்ந்தபிரான்
3770 விரும்பிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

வளங்கிளர்மதியமும்பொன்மலர்க்கொன்றையும்வாளரவும்
களங்கொளச்சடையிடைவைத்தளங்கண்ணுதற்கபாலியார்தாம்
துளங்குநூன்மார்பினரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
3771 விளங்குநீர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

பொறியுலாமடுபுலியுரிவையர்வரியராப்பூண்டிலங்கும்
நெறியுலாம்பலிகொளுநீர்மையர்சீர்மையைநினைப்பரியார்
மறியுலாங்கையினர்மங்கையோடொருபகலமர்ந்தபிரான்
3772 வெறியுலாந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

புரிதருசடையினர்புலியுரியரையினர்பொடியணிந்து
திரிதருமியல்பினர்திரிபுரமூன்றையுந்தீவளைத்தார்
வரிதருவனமுலைமங்கையோடொருபகலமர்ந்தபிரான்
3773 விரிதருதுருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே. எ

நீண்டிலங்கவிரொளிநெடுமுடியரக்கனிந்நீள்வரையைக்
கீண்டிடந்திடுவனென்றெழுந்தவனுள்வினைகீழ்ப்படுத்தார்
பூண்டநூல்மார்பினரரிவையோடொருபகலமர்ந்தபிரான்
3774 வேண்டிடந்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

கரைகடலரவணைக்கடவுளுந்தாமரைநான்முகனும்
குரைகழலடிதொழக்கூரெரியெனநிறங்கொண்டபிரான் [ழ்
வரைகெழுமகளொடும்பகலிடம்புகலிடம்வண்பொழில்சூ
3775 விரைகமழ்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

அயமுகவெயினிலையமணருங்குண்டருஞ்சாக்கியரும்
நயமுகவுரையினர்நகுவனசரிதைகள்செய்துழல்வார்
சயலனவரிநெடுங்கண்ணியோடொருபகலமர்ந்தபிரான்
3776 வியனகர்த்துருத்தியாரிரவிடத்துறைவர்வேள்விக்குடியே.

விண்ணுலாம்விரிபொழில்விரைமணற்றுருத்திவேள்விக்குடியும்
ஒண்ணுலாமொலிகழலாடுவாரரிவையோடுறைபதியை
நண்ணுலாம்புகலியுளருமறைஞானசம்பந்தன்சொன்ன
3777 பண்ணுலாமருந்தமிழ்பாடுவாராடுவார்பழியிலரே. கக

91 கோங்கமேகுரவமேகொழுமலர்ப்புன்னையேகொகுடிமுல்லை
வேங்கையேஞாழலேவிம்முபாதிரிகளேவிரவியெங்கும்
ஒங்குமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
3778 வீங்குநீர்ச்சடைமுடியடிகளாரிடமெனவிரும்பினரே. க

மந்தமாயிழிமதக்களிற்றிளமருப்பொடுபொருப்பின்நல்ல
சந்தமாரகிலொடுசாதியின்பலங்களுந்தகையமோதி
உந்துமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
3779 எந்தையாரிணையடியிமையவர்தொழுதெழுமியல்பினரே. உ

முத்துமாமணியொடுமுழைவளராரமும்முகந்துநுந்தி
எத்துமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
மத்தமாமலரொடுமதிபொதிசடைமுடியடிகள்தம்மேல்
3780 சித்தமாமடியவர்சிவகதிபெறுவதுதிண்ணமன்றே. ௬

கறியுமாமிளகொடுகதலியின்பலங்களுங்கலந்துநுந்தி
எறியுமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறை
மறியுலாங்கையினர்மலரடிதொழுதெழமருவுமுள்ளக்
3781 குறியினரவர்மிகக்கூடுவார்நீடுவானுலகினூடே. ௪

கோடிடைச்சொரிந்ததேனதனொடுங்கொண்டல்வாய்விண்டமுன்
காடுடைப்பீலியுங்கடறுடைப்பண்டமுங்கலந்துநுந்தி [னீர்
ஓடுடைக்காவிரிவடகரையடைகுரங்காடுதுறை
3782 பீடுடைச்சடைமுடியடிகளாரிடமெனப்பேணினரே. ௫

கோலமாமலரொடுதூபமுஞ்சாந்தமுங்கொண்டுபோற்றி
வாலியார்வழிபடப்பொருந்தினர்திருந்துமாங்கனிகளுந்தி
ஆலுமாகாவிரிவட கரையடைகுரங்காடுதுறை
3783 நீலமாமணிமிடற்றடிகளைநினையவல்வினைகள்வீடே. ௬, ௭

நீலமாமணிநிறத்தரக்கனையிருபதுகரத்தொடொல்க
வாலினாற்கட்டியவாலியார்வழிபடமன்னுகோயில்
ஏலமோடிலையிலவங்கமேயிஞ்சியேமஞ்சளுந்தி
3784 ஆலியாவருபுனல்வடகரையடைகுரங்காடுதுறையே. ௮

பொருந்திறற்பெருங்கைமாவுரித்துமையஞ்சவேயொருங்குநோக்
பெருந்திறத்தநங்கனையநங்கமாவிழித்ததும்பெருமைபோலும் [கிப்
வருந்திறற்காவிரிவடகரையடைகுரங்காடுதுறை
3785 அருந்திறத்திருவரையல்லல்கண்டோங்கியஅடிகளாரே. ௯

கட்டமண்டேரருங்கடுக்கடின்கழுக்களுங்கசிவொன்றில்லாப்
பிட்டர்தம்மறவுரைகொள்ளலும்பெருவரைப்பண்டமுந்தி
எட்டுமாகாவிரிவடகரையடைகுரங்காடுதுறைச்
3786 சிட்டனாடிதொழச்சிவகதிபெறுவதுதிண்ணமாமே. ௧௦

தாழிளங்காவிரிவடகரையடைகுரங்காடுதுறைப்
போழிளமதிபொதிபுரிதருசடைமுடிப்புண்ணியனைக்
காழியானருமறைஞானசம்பந்தனகருதுபாடல்
3787 கோழையாஅழைப்பினுங்கூடுவார்நீடுவானுலகினூடே. ௧௧

92 மருந்தவைமந்திரமறுமைநன்னெறியவைமற்றுமெல்லாம்
அருந்துயர்கெடுமவர்நாமமேசிந்தைசெய்நன்னெஞ்சமே
பொருந்துதண்புறவினிற்கொன்றைபொன்சொரிதரத்துன்றுபைம்
3788 செருந்திசெம்பொன்மலர்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே[பூஞ்

என்றுமோரியல்பினரெனநினைவரியவரேறதேறிச் [துவே
சென்றுதாஞ்செடிச்சியர்மனைதொறும்பலிகொளும்மியல்ப
துன்றுதண்பொழில்நுழைந்தெழுவியகேதகைப்போதளைந்து
3789 தென்றல்வந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. உ

பொறிகிளரரவமும்போழிளமதியமுங்கங்கையென்னும்
நெறிபடுகுழலியைச்சடைமிசைச்சுலவிவெண்ணீறுபூசிக்
கிறிபடநடந்துநற்கிளிமொழியவர்மனங்கவர்வர்போலும்
3790 செறிபொழில்தழுவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே.

காண்டகுமலைமகள்கதிர்நிலாமுறுவல்செய்தருளவேயும்
பூண்டநாகம்புறங்காடரங்காநடமாடல்பேணி
ஈண்டுமாமாடங்கள்மாளிகைமீதெழுகொடிமதியம்
3791 தீண்டிவந்துலவியதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. ச

ஏனவெண்கொம்பொடுமெழில்திகழ்மத்தமுமிள அரவும்
கூனல்வெண்பிறைதவழ்சடையினர்கொல்புலித்தோலுடையார்
ஆனினல்லைந்துகந்தாடுவர்பாடுவாருமறைகள் [மே.
3792 தேனில்வண்டமர்பொழிற்றிருநெல்வேலியுறைசெல்வர்தா

வெடிதருதலையினர்வேனல்வெள்ளேற்றினர்விரிசடையர்
பொடியணிமார்பினர்புலியதளாடையர்பொங்கரவர்
வடிவுடைமங்கையோர்பங்கினர்மாதரைமையல்செய்வார்
3793 செடிபடுபொழிலணிதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. சு

அக்குலாமறையினர்திரையுலாமுடியினரடிகளன்று
தக்கனார்வேள்வியைச்சாடியசதுரனார்கதிர்கொள்செம்மை
புக்கதோர்புரிவினர்வரிதருவண்டுபண்முரலுஞ்சோலைத்
3794 திக்கெலாம்புகழுறுந்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. எ

முந்திமாவிலங்கலன்றெடுத்தவன்முடிகள்தோள்நெரிதரவே
உந்திமாமலரடியொருவிரலுகிர்நுதியாலடர்த்தார்
கந்தமார்தருபொழில்மந்திகள்பாய்தரமதுத்திவலை
3795 சிந்துபூந்துறைகமழ்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. அ

பைங்கண்வாளரவணையவனொடுபனிமலரோனுங்காணா
அங்கணாஅருளென அவரவர்முறைமுறையிறைஞ்சநின்றார்
சங்கநான்மறையவர்நிறைதர அரிவையோடாடல்பேணத்
3796 திங்களுள்விழமல்குதிருநெல்வேலியுறைசெல்வர்தாமே. ௯

துவருறுவிரிதுகிலாடையர்வேடமில்சமணரென்னும்
அவருறுசிறுசொலையவமெனநினையுமெம்மண்ணலார்தாம்
கவருறுகொடிமல்குமாளிகைச்சூளிகைமயில்களாலத்
3797 திவருறுமதிதவழ்திருநெல்வேலியுறைசெல்வர்தாமே. ௧0

பெருந்தண்மாமலர்மிசையயனவனனையவர்பேணுகல்வித்
திருந்துமாமறையவர்திருநெல்வேலியுறைசெல்வர்தம்மைப்
பொருந்துநீர்த்தடமல்குபுகலியுள்ஞானசம்பந்தன்சொன்ன
3798 அருந்தமிழ்மாலைகள்பாடியாடக்கெடுமருவினையே. ௧௧

**93** படியுளார்விடையினர்பாய்புலித்தோலினர்பாவநாசர்
பொடிகொள்மாமேனியர்பூதமார்படையினர்பூணநூலர்
கடிகொள்மாமலரிடுமடியினர்பிடிநடைமங்கையோடும்
3799 அடிகளாரருள்புரிந்திருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௧

கையின்மாமழுவினர்கடுவிடமுண்டஎங்காளகண்டர்
செய்யமாமேனியரூனமருடைதலைப்பலிதிரிவார்
வையமார்பொதுவினின்மறையவர்தொழுதெழநடமதாடும்
3800 ஐயன்மாதேவியோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௨

பரவினஅடியவர்படுதுயர்கெடுப்பவர்பரிவிலார்பால்
கரவினர்கனலனவுருவினர்படுதலைப்பலிகொடேகும்
இரவினர்பகலெரிகானிடையாடியவேடர்பூணும்
3801 அரவினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௩

நீற்றினர்நீண்டவார்சடையினர்படையினர்நிமலர்வெள்ளை
ஏற்றினரெரிபுரிகரத்தினர்புரத்துளாருயிரைவவ்வும்
கூற்றினர்கொடியிடைமுனிவுறநனிவருங்குலவுகங்கை
3802 ஆற்றினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௪

புறத்தினரகத்துளர்போற்றிநின்றழுதெழுமன்பர்சிந்தைத்
திறத்தினரறிவிலாச்செதுமதித்தக்கன்றன்வேள்விசெற்ற
மறத்தினர்மாதவர்நால்வருக்காலின்கீழருள்புரிந்த
3803 அறத்தினரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௫

பழகமாமலர்பறித்திண்டைகொண்டிறைஞ்சுவார்பாற்செறி
குழகனார்குணம்புகழ்ந்தேத்துவாரவர்பலர்கூடநின்ற [ந்த
கழகனார்கரியுரித்தாடுகங்காளர்நங்காளியேத்தும்
3804 அழகனாரரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௬

சங்கவார்குழையினர்தழலனவுருவினர்தமதருளே
எங்குமாயிருந்தவரருந்தவமுனிவருக்களித்துகந்தார்
பொங்குமாபுனல்பரந்தரிசிலின்வடகரைதிருத்தம்பேணி
3805 அங்கமாறோதுவாரிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௭

பொருசிலைமதனனைப்பொடிபடவிழித்தவர்பொழிலிலங்கைக்
குரிசிலைக்குலவரைக்கீழுற அடர்த்தவர்கோயில்கூறில்
பெருசிலைநலமணிபீலியொடேலமும்பெருகநுந்தும்
3806 அரிசிலின்வடகரையழகமாம்பர்மாகாளந்தானே. ௮

வரியரா அதன்மிசைத்துயின்றவன்றானுமாமலருளானும்
எரியராமணிகழலேத்தவொண்ணாவகையுயர்ந்துபின்னும்
பிரியராமடியவர்க்கணியராய்ப்பணிவிலாதவருக்கென்றும்
3807 அரியராயரிவையோடிருப்பிடமம்பர்மாகாளந்தானே. ௯

சாக்கியக்கயவர்வன்தலைபறிக்கையரும்பொய்யினால்நூல்
ஆக்கியமொழியவைபிழையவையாதலில்வழிபடுவீர்
வீக்கிய அரவுடைக்கச்சையானிச்சையானவர்கட்கெல்லாம்
3808 ஆக்கிய அரனுறையம்பர்மாகாளமேயடைமினீரே. ௧௦

செம்பொன்மாமணிகொழித்தெழுதிரைவருபுனலரிசில்சூழ்ந்த
அம்பர்மாகாளமேகோயிலா அணங்கினோடிருந்தகோனைக்
கம்பினார்நெடுமதிற்காழியுள்ஞானசம்பந்தன்சொன்ன
3809 நம்பிநாள்மொழிபவர்க்கில்லையாம்வினைநலம்பெறுவர்தாமே.

94 விண்ணவர்தொழுதெழுவெங்குருமேவிய
சுண்ணவெண்பொடியணிவீரே
சுண்ணவெண்பொடியணிவீருமதொழுகழல்
3810 எண்ணவல்லாரிடரிலரே. ௧

வேதியர்தொழுதெழுவெங்குருமேவிய
ஆதிய அருமறையீரே
ஆதிய அருமறையீருமையலர்கொடு
3811 ஓதியருணர்வுடையோரே. ௨

விளங்குதண்பொழிலணிவெங்குருமேவிய
இளம்பிறையணிசடையீரே
இளம்பிறையணிசடையீருமதிணையடி
3812 உளங்கொளவுறுபிணியில்ரே. ௬

விண்டலர்பொழிலணிவெங்குருமேவிய
வண்டமர்வளர்சடையீரே
வண்டமர்வளர்சடையீருமைவாழ்த்துமத்
3813 தொண்டர்கள் துயர்பிணியிலரே. ௪

மிக்கவர்தொழுதெழுவெங்குருமேவிய
அக்கினொடரவசைத்தீரே
அக்கினொடரவசைத்தீருமதடியிணை
3814 தக்கவருறுவது தவமே. ௫

வெந்தவெண்பொடியணிவெங்குருமேவிய
அந்தமில்பெருமையினீரே
அந்தமில்பெருமையினீருமையலர்கொடு
3815 சிந்தைசெய்வோர்வினைசிதைவே. ௬

விழமல்குபொழிலணிவெங்குருமேவிய
அழல்மல்குமங்கையினீரே
அழல்மல்குமங்கையினீருமையலர்கொடு
3816 தொழஅல்லல்கெடுவது துணிவே. ௭

வித்தகமறையவர்வெங்குருமேவிய
மத்தநன்மலர்புனைவீரே
மத்தநன்மலர்புனைவீருமதடிதொழுஞ்
3817 சித்தமதுடையவர்திருவே. ௮

மேலவர்தொழுதெழுவெங்குருமேவிய
ஆலநன்மணிமிடற்றீரே
ஆலநன்மணிமிடற்றீருமதடிதொழுஞ்
3818 சீலமதுடையவர்திருவே. ௯

விரைமல்குபொழிலணிவெங்குருமேவிய
அரைமல்குபுலியதளீரே
அரைமல்குபுலியதளீருமதடியிணை
3819 உரைமல்குபுகழவருயர்வே. ௰

95 எண்டிசைக்கும்புகழின்னம்பர்மேவிய
வண்டிசைக்குஞ்சடையீரே
வண்டிசைக்குஞ்சடையீருமைவாழ்த்துவார்
3820 தொண்டிசைக்குந்தொழிலோரே. க

யாழ்நரம்பின்னிசையின்னம்பர்மேவிய
தாழ்தருசடைமுடியீரே
தாழ்தருசடைமுடியீருமைச்சார்பவர்
3821 ஆழ்துயரருவினையிலரே. உ

இளமதிநுதலியோடின்னம்பர்மேவிய
வளமதிவளர்சடையீரே
வளமதிவளர்சடையீருமைவாழ்த்துவார்
3822 உளமதிமிகவுடையோரே. ங

இடிகுரலிசைமுரலின்னம்பர்மேவிய
கடிகமழ்சடைமுடியீரே
கடிகமழ்சடைமுடியீருமகழல்தொழும்
3823 அடியவரருவினையிலரே. ச

இமையவர்தொழுதெழுமின்னம்பர்மேவிய
உமையொருகூறுடையீரே
உமையொருகூறுடையீருமையுள்குவார்
3824 அமைகிலராகிலரன்பே. ரு

எண்ணரும்புகழுடையின்னம்பர்மேவிய
தண்ணருஞ்சடைமுடியீரே
தண்ணருஞ்சடைமுடியீருமைச்சார்பவர்
3825 விண்ணவரடைவுடையோரே. சா

எழில்திகழும்பொழிலின்னம்பர்மேவிய
நிழல்திகழ்மேனியினீரே
நிழல்திகழ்மேனியினீருமைநினைபவர்
3826 குழறியகொடுவினையிலரே. எ

ஏத்தரும்புகழணியின்னம்பர்மேவிய
தூர்த்தனைத்தொலைவுசெய்தீரே
தூர்த்தனைத்தொலைவுசெய்தீருமைத்தொழுபவர்
3827 கூர்த்தநற்குணமுடையோரே. அ

இயலுளோர்தொழுதெழுமின்னம்பர்மேவிய
அயனுமாலறிவரியீரே
அயனுமாலறிவரியீருமதடிதொழும்
3828 இயலுளார்மறுபிறப்பிலரே. கூ

ஏமர்பொழிலணியின்னம்பர்மேவிய
தேமண்சிதைவுசெய்தீரே
தேமண்சிதைவுசெய்தீருமைச்சேர்பவர்
3829 ஆர்துயராருவினையிலரே. க0

ஏடமர்பொழிலணியின்னம்பரீசனை
நாடமர்ஞானசம்பந்தன்
நாடமர்ஞானசம்பந்தனநற்றமிழ்
3830 பாடவல்லார்பழியிலரே. கக

96 நல்வெண்ணெய்விழுதுபெய்தாடுதிர்நாள்தொறும்
நெல்வெண்ணெய்மேவியநீரே
நெல்வெண்ணெய்மேவியநீருமைநாள்தொறும்
3831 சொல்வணமிடுவதுசொல்லே. க

நிச்சலுமடியவர்தொழுதெழுநெல்வெண்ணெய்க்
கச்சிள அரவசைத்தீரே
கச்சிள அரவசைத்தீருமைக்காண்பவர்
3832 அச்சமொடருவினையிலரே. உ

நிரைவிரிதொல்புகழ்நெல்வெண்ணெய்மேவிய
அரைவிரிகோவணத்தீரே
அரைவிரிகோவணத்தீருமையலர்கொடு
3833 உரைவிரிப்போருயர்ந்தோரே. ங

நீர்மல்குதொல்புகழ்நெல்வெண்ணெய்மேவிய
ஊர்மல்கியுறையவல்லீரே
ஊர்மல்கியுறையவல்லீருமையுள்குதல்
3834 பார்மல்குபுகழவர்பண்பே. ச

நீடிளம்பொழிலணிநெல்வெண்ணெய்மேவிய
ஆடிளம்பாப்பசைத்தீரே
ஆடிளம்பாப்பசைத்தீருமையன்பொடு
3835 பாடுளமுடையவர்பண்பே. ரு

நெற்றியோர்கண் ணுடைநெல்வெணெய்மேவிய
பெற்றிகொள்பிறைநுதலீரே
பெற்றிகொள்பிறைநுதலீருமைப்பேணுதல்
3836 கற்றறிவோர்கள் தங்கடனே. சு

நிறையவர்தொழுதெழுநெல்வெணெய்மேவிய
கறையணிமிடறுடையீரே
கறையணிமிடறுடையீருமைக்காண்பவர்
3837 உறைவதுமும்மடிக்கீழே. எ

நெருக்கியபொழிலணிநெல்வெணெய்மேவியன்
றரக்கனையசைவுசெய்தீரே
அரக்கனையசைவுசெய் தீருமையன்புசெய்
3838 திருக்கவல்லாரிடரிலரே. அ

நிரைவிரிசடைமுடிநெல்வெணெய்மேவியன்
றிருவரையிடர்கள்செய்தீரே
இருவரையிடர்கள்செய் தீருமையிசைவொடு
3839 பரவவல்லார்பழியிலரே. கூ

நீக்கியபுனலணிநெல்வெணெய்மேவிய
சாக்கியச்சமண்கெடுத்தீரே
சாக்கியச்சமண்கெடுத்தீருமைச்சார்வது
3840 பாக்கியமுடையவர்பண்பே. க0

நிலமல்குதொல்புகழ்நெல்வெணெயீசனை
நலமல்குஞானசம்பந்தன்
நலமல்குஞானசம்பந்தனசெந்தமிழ்
3841 சொலமல்குவார்துயரிலரே. கக

97 திடமலிமதிலணிசிறுகுடிமேவிய
படமலியரவுடையீரே
படமலியரவுடையீருமைப்பணிபவர்
3842 அடைவதுமமருலகதுவே. க

சிற்றிடையுடன்மகிழ்சிறுகுடிமேவிய
சுற்றியசடைமுடியீரே
சுற்றியசடைமுடியீருமதொழுகழல்
3843 உற்றவருறுபிணியிலரே. உ

தெள்ளியபுனலணிசிறுகுடிமேவிய
துள்ளியமானுடையீரே
துள்ளியமானுடையீருமதொழுகழல்
3844 உள்ளுதல்செயநலமுறுமே. ௩

செந்நெலவயலணிசிறுகுடிமேவிய
ஒன்னலர்புரமெரித்தீரே
ஒன்னலர்புரமெரித்தீருமையுள்குவார்
3845 சொன்னலமுடையவர்தொண்டே. ௪

செற்றினின்மலிபுனற்சிறுகுடிமேவிய
பெற்றிகொள்பிறைமுடியீரே
பெற்றிகொள்பிறைமுடியீருமைப்பேணிநஞ்
3846 சற்றவரருவினையிலரே. ௫

செங்கயல்புனலணிசிறுகுடிமேவிய
மங்கையையிடமுடையீரே
மங்கையையிடமுடையீருமைவாழ்த்துவார்
3847 சங்கையதிலர்நலர்தவமே. ௬

செறிபொழில்தழுவியசிறுகுடிமேவிய
வெறிகமழ்சடைமுடியீரே
வெறிகமழ்சடைமுடியீருமைவிரும்பிமெய்ந்
3848 நெறியுணர்வோருயர்ந்தோரே. ௭

திசையவர்தொழுதெழுசிறுகுடிமேவிய
தசமுகனுரநெரித்தீரே
தசமுகனுரநெரித்தீருமைச்சார்பவர்
3849 வசையறுமதுவழிபாடே. ௮

செருவரைவயலமர்சிறுகுடிமேவிய
இருவரையசைவுசெய்தீரே
இருவரையசைவுசெய்தீருமையேத்துவார்
3850 அருவினையொடுதுயரிலரே. ௯

செய்த்தலைபுனலணிசிறுகுடிமேவிய
புத்தரொடமண்புறத்தீரே
புத்தரொடமண்புறத்தீருமைப்போற்றுதல்
3851 பத்தர்கள்தம்முடைப்பரிசே. ௧௦

தேனமர்பொழிலணிசிறுகுடிமேவிய
மானமர்காமுடையீரே
மானமர்காமுடையீருமைவாழ்த்திய
3852 ஞானசம்பந்தனதமிழே. கக

98 வெண்மதிதவழ்மதில்மிழலையுளீர்சடை
ஒண்மதியணியுடையீரே
ஒண்மதியணியுடையீருமையுணர்பவர்
3853 கண்மதிமிகுவதுகடனே. க

விதிவழிமறையவர்மிழலையுளீர்நடம்
சதிவழிவருவதோர்சதிரே
சதிவழிவருவதோர்சதிருடையீருமை
3854 அதிகுணர்புகழ்வதுமழகே. உ

விரைமலிபொழிலணிமிழலையுளீரொரு
வரைமிசையுறைவதும்வலதே
வரைமிசையுறைவதோர்வலதுடையீருமை
3855 உரைசெயுமவைமறையொலியே. ௩

விட்டெழில்பெறுபுகழ்மிழலையுளீர்கையில்
இட்டெழில்பெறுகிறதெரியே
இட்டெழில்பெறுகிறதெரியுடையீர்புரம்
3856 அட்டதுவரைசிலையாலே. ௪

வேல்நிகர்கண்ணியர்மிழலையுளீர்நல
பால்நிகருருவுடையீரே
பால்நிகருருவுடையீருமதுடனுமை
3857 தான்மிகவுறைவதுதவமே. ௫

விரைமலிபொழிலணிமிழலையுளீர்சென
நிரையுறஅணிவதுநெறியே
நிரையுறஅணிவதோர்நெறியுடையீரும
3858 தரையுறஅணிவனஅரவே. ௬

விசையுறுபுனல்வயல்மிழலையுளீரர
வசையுறஅணிவுடையீரே
வசையுறஅணிவுடையீருமையறிபவர்
3859 நசையுறுநாவினர்தாமே. ௭

விலங்கலொண்மதிலணிமிழலையுளீரன்றவ்
இலங்கைமன்னிடர்கெடுத்தீரே
இலங்கைமன்னிடர்கெடுத்தீருமையேத்துவார்
3860 புலன்களைமுனிவதுபொருளே. அ

வெற்பமர்பொழிலணிமிழலையுளீருமை
அற்புதனயனறியானே
அற்புதனயனறியாவகைநின்றவன்
3861 நற்பதமறிவதுநயமே. கூ

வித்தகமறையவர்மிழலையுளீரன்று
புத்தரொடமணழித்தீரே
புத்தரொடமணழித்தீருமைப்போற்றுவார்
3862 பத்திசெய்மனமுடையவரே. கO

விண்பயில்பொழிலணிமிழலையுளீசனைச்
சண்பையுள்ஞானசம்பந்தன்
சண்பையுள்ஞானசம்பந்தனதமிழிவை
3863 ஒண்பொருளுணர்வதுமுணர்வே. கக

99 முரசதிர்ந்தெழுதருமுதுகுன்றமேவிய
பரசமர்படையுடையீரே
பரசமர்படையுடையீருமைப்பரவுவார்
3864 அரசர்களுலகிலாவாரே. க

மொய்குழலாளொடுமுதுகுன்றமேவிய
பையரவம்மசைத்தீரே
பையரவம்மசைத்தீருமைப்பாடுவார்
3865 நைவிலர்நாள்தொறும்நலமே. உ

முழவமர்பொழிலணிமுதுகுன்றமேவிய
மழவிடையதுவுடையீரே
மழவிடையதுவுடையீருமைவாழ்த்துவார்
3866 பழியொடுபகையிலர்தாமே. ங

முருகமர்பொழிலணிமுதுகுன்றமேவிய
உருவமர்சடைமுடியீரே
உருவமர்சடைமுடியீருமையோதுவார்
3867 திருவொடுதேசினர்தாமே. ச, ரு, சு,

முத்திதருமுயர்முதுகுன்றமேவிய
பத்துமுடியடர்த்தீரே
பத்துமுடியடர்த்தீருமைப்பாடுவார்
3868 சித்தநல்லவ்வடியாரே. அ

முயன்றவருள்பெறுமுதுகுன்றமேவியன்
றியன்றவரறிவரியீரே
இயன்றவரறிவரியீருமையேத்துவார்
3869 பயன்தலைநிற்பவர்தாமே. கூ

மொட்டலர்பொழிலணிமுதுகுன்றமேவிய
கட்டமண்தேரைக்காய்ந்தீரே
கட்டமண்தேரைக்காய்ந்தீருமைக்கருதுவார்
3870 சிட்டர்கள்சீர்பெறுவாரே. க0

மூடியசோலைசூழ்முதுகுன்றத்தீசனை
நாடியஞானசம்பந்தன்
நாடியஞானசம்பந்தனசெந்தமிழ்
3871 பாடியஅவர்பழியிலரே. கக

**100** கரும்பமர்வில்லியைக்காய்ந்துகாதற்காரிகைமாட்டருளி
அரும்பமர்கோங்கையோர்பால்மகிழ்ந்தஅற்புதஞ்செப்பரிதால்
பெரும்பகலேவந்தேன்பெண்மைகொண்டுபேர்த்தவர்சேர்ந்தஇ
3872 சுரும்பமர்சோலைகள்சூழ்ந்தசெம்மைத்தோணிபுரந்தானே. [டஞ்

கொங்கியல்பூங்குழற்கொவ்வைச்செவ்வாய்க்கோமளமாதுமையா
பங்கியலுந்திருமேனியெங்கும்பால்வெள்ளைநீறணிந்து [ள்
சங்கியல்வெள்வளைசோரவந்தேன்சாயல்கொண்டார்தமதூர்
3873 துங்கியன்மாளிகைசூழ்ந்தசெம்மைத்தோணிபுரந்தானே.

மத்தக்களிற்றுரிபோர்க்கக்கண்டுமாதுமைபேதுறலுஞ்
சித்தந்தெளியநின்றாடியேறூர்தீவண்ணர்சில்பலிக்கென்
றொத்தபடிவந்தென்னுள்ளங்கொண்டஒருவர்க்கிடம்போலுந்
3874 துத்தநல்லின்னிசைவண்டுபாடுந்தோணிபுரந்தானே. ௩-எ

வள்ளலிருந்தமலையதனைவலஞ்செய்தல்வாய்மையெனு
உள்ளங்கொள்ளாதுகொதித்தெழுந்தன்றெடுத்தோனுரநெரிய
மெள்ளவிரல்வைத்தென்னுள்ளங்கொண்டார்மேவுமிடம்போலுந்
3875 துள்ளொலிவெள்ளத்தின்மேல்மிதந்ததோணிபுரந்தானே. அ

வெல்பறவைக்கொடிமாலுமற்றைவிரைமலர்மேலயனும்
பல்பறவைப்படியாயுயர்ந்தும்பன்றியதாய்ப்பணிந்துஞ்
செல்வறநீண்டெஞ்சிந்தைகொண்டசெல்வரிடம்போலுந்
3876 தொல்பறவைசுமந்தோங்குசெம்மைத்தோணிபுரந்தானே.

குண்டிகைபீலிதட்டோடுநின்றுகோசரங்கொள்ளியரும்
மண்டைகையேந்திமனங்கொள்கஞ்சியூணரும்வாய்மடிய
இண்டைபுனைந்தெருதேறிவந்தெனெழில்கவர்ந்தாரிடமாந்
3877 தொண்டிசைபாடலறாததொன்மைத்தோணிபுரந்தானே. ௧0

தூமருமாளிகைமாடநீடுதோணிபுரத்திறையை
மாமறைநான்கினொடங்கமாறும்வல்லவன்வாய்மையினால்
நாமருகேள்விநலந்திகழுஞானசம்பந்தன்சொன்ன
3878 பாமருபாடல்கள்பத்தும்வல்லார்பார்முழுதாள்பவரே. ௧௧

101 திரிதருமாமணிநாகமாடத்திளைத்தொருதீயழல்வாய்
நரிகதிக்கவெரியேந்தியாடுநலமேதெரிந்துணர்வார்
எரிகதிர்முத்தமிலங்குகானவிராமேச்சுரமேய
3879 விரிகதிர்வெண்பிறைமல்குசென்னிவிமலர்செயுஞ்செயலே.

பொறிகிளர்பாம்பரையார்த்தயலேபுரிவோடுமைபாடத்
தெறிகிளரப்பெயர்ந்தெல்லியாடுந்திறமேதெரிந்துணர்வார்
எறிகிளர்வெண்டிரைவந்துபேருமிராமேச்சுரமேய
3880 மறிகிளர்மான்மழுப்புல்குகையெம்மணாளர்செயுஞ்செயலே.

அலைவளர்தண்புனல்வார்சடைமேலடக்கியொருபாகம்
மலைவளர்காதலிபாடஆடிமயக்காவருமாட்சி
இலைவளர்தாழைமுகிழ்விரியுமிராமேச்சுரமேயார்
3881 தலைவளர்கோலநன்மாலைசூடுந்தலைவர்செயுஞ்செயலே. ௩

மாதனநேரிழையேர்தடங்கண்மலையான்மகள்பாடத்
தேதெரியங்கையிலேந்தியாடுந்திறமேதெரிந்துணர்வார்
ஏதமிலார்தொழுதேத்திவாழ்த்துமிராமேச்சுரமேயார்
3882 போதுவெண்திங்கள்பைங்கொன்றைசூடும்புனிதர்செயுஞ்செயலே.

சூலமோடொண்மழுநின்றிலங்கச்சுடுகாடிடமாகக்
கோலநன்மாதுடன்பாடஆடுங்குணமேகுறித்துணர்வார்
ஏலநறும்பொழில்வண்டுபாடுமிராமேச்சுரமேய
3883 நீலமார்கண்டமுடையவெங்கள்நிமலர்செயுஞ்செயலே. ரு

கணைபிணைவெஞ்சிலைகையிலேந்திக்காமனைக்காய்ந்தவர்தாம்
இணைபிணைநோக்கிநல்லாளொடாடுமியல்பினராகிநல்ல
இணைமலர்மேலன்னம்வைகுகானலிராமேச்சுரமேயார்
3884 அணைபிணைபுல்குகாந்தைசூடுமடிகள்செயுஞ்செயலே. ௬

நீரினார்புன்சடைபின்தாழநெடுவெண்மதிசூடி
ஊரினார்துஞ்சிருள்பாடியாடுமுவகைதெரிந்துணர்வார்
ஏரினார்பைம்பொழில்வண்டுபாடுமிராமேச்சுரமேய [லே.
3885 காரினார்கொன்றைவெண்திங்கள்சூடுங்கடவுள்செயுஞ்செய

பொன்திகழ்சுண்ணவெண்ணீறுபூசிப்புலித்தோலுடையாக
மின்திகழ்சோதியர்பாடலாடல்மிக்கார்வருமாட்சி
என்றுநல்லோர்கள்பரவியேத்துமிராமேச்சுரமேயார்[கையே.
3886 குன்றினாலன்றரக்கன்தடந்தோளடர்த்தார்கொளுங்கொள்

கோவலன்நான்முகன்நோக்கொணாதகுழகனழகாய
மேவலனொள்ளெரியேந்தியாடுமிமையோரிறைமெய்ம்மை
ஏவலனார்புகழ்ந்தேத்திவாழ்த்துமிராமேச்சுரமேய[செயலே.
3887 சேவலவெல்கொடியேந்துகொள்கையெம்மிறைவர்செயுஞ்

பின்னொடுமுன்னிடுதட்டைச்சாத்திப்பிரட்டேதிரிவாரும்
பொன்னெடுஞ்சீவரப்போர்வையார்கள்புறங்கூறல்கேளாதே
இன்னெடுஞ்சோலைவண்டியாழ்முரலுமிராமேச்சுரமேய
3888 பன்னெடுவெண்டலைகொண்டுழலும்பரமர்செயுஞ்செயலே.

தேவியைவவ்வியதென்னிலங்கையரையன்திறல்வாட்டி
ஏவியல்வெஞ்சிலையண்ணல்நண்ணுமிராமேச்சுரத்தாரை
நாவியன்ஞானசம்பந்தன்நல்லமொழியால்நவின்றேத்தும்
3889 பாவியன்மாலைவல்லாரவர்தம்வினையாயினபற்றறுமே. ௧௧

102 காம்பினைவென்றமென்றோளிபாகங்கலந்தானலந்தாங்கு
தேம்புனல்சூழ்திகழ்மாமடுவில்திருநாரையூர்மேய
பூம்புனல்சேர்புரிபுன்சடையான்புலியின்னுரிதோல்மேல்
3890 பாம்பினைவீக்கியபண்டரங்கன்பாதம்பணிவோமே. ௧

தீவினையாயினதீர்க்கநின்றான்திருநாரையூர்மேயான்
பூவினைமேவுசடைமுடியான்புடைசூழப்பலபூதம்
ஆவினிலைந்துங்கொண்டாட்டுகந்தானடங்கார்மதில்மூன்றும்
3891 ஏவினையெய்தழித்தான்கழலேபரவாஎழுவோமே. ௨

மாயவன்சேயவன்வெள்ளியவன்விடஞ்சேருமைமிடற்றன்
ஆயவனாகியோரந்தரமும்மவனென்றுவரையாகம்
தீயவன்நீரவன்பூமியவன்திருநாரையூர்தன்னில்
3892 மேயவனைத்தொழுவாரவர்மேல்வினையாயினவீடுமே. ௫

துஞ்சிருளாடுவர்தூமுறுவல்துளங்குமுடம்பினராய்
அஞ்சுடராரெரியாடுவாரழலார்விழிக்கண்
நஞ்சுமிழ்நாகமரைக்கசைப்பர்நலனோங்குநாரையூர்
3893 எஞ்சிவனார்க்கடிமைப்படுவார்க்கினியில்லையேதமே. ௬

பொங்கிளங்கொன்றையினார்கடலில்விடமுண்டிமையோர்கள்
தங்களையாரிடர்தீரநின்றதலைவர்சடைமேலோர்
திங்களைவைத்தனலாடலினார்திருநாரையூர்மேய
3894 வெங்கனல்வெண்ணீறணியவல்லாரவரேவிழுமியரே. ௭

பாருறுவாய்மையினார்பரவும்பரமேட்டிபைங்கொன்றைத்
தாருறுமார்புடையான்மலையின்தலைவன்மலைமகளைச்
சீருறுமாமறுகிற்சிறைவண்டறையுந்திருநாரை
3895 ஊருறையெம்மிறைவர்க்கிவையொன்றொடொன்றொவ்வாவே.

கள்ளியிடுதலையேந்துகையர்கரிகாடர்கண்ணுதலர்
வெள்ளியகோவணஆடைதன்மேல்மிளிராடரவார்த்து
நள்ளிருள்நட்டமதாடுவர்நன்னலனோங்குநாரையூர்
3896 உள்ளியபோழ்திலெம்மேல்வருவல்வினையாயினவோடுமே.

நாமமெனப்பலவும்முடையான்நலனோங்குநாரையூர்
தாமொம்மெனப்பறையால்குழலாளார்கழல்பயில
ஈமவிளக்கெரிசூழ்சுடலையியம்பும்மிடுகாட்டில்
3897 சாமமுரைக்கநின்றாடுவானுந்தழலாயசங்கரனே. ௮

ஊனுடைவெண்டலைகொண்டுழல்வானொளிர்புன்சடைமேலோர்
வானிடைவெண்மதிவைத்துகந்தான்வரிவண்டியாழ்முரலத்
தேனுடைமாமலரன்னம்வைகுந்திருநாரையூர்மேய
3898 ஆனிடைஐந்துகந்தானடியேபரவாஅடைவோமே. ௯

தூசுபுனைதுவராடைமேவுந்தொழிலாருடம்பினிலுள்
மாசுபுனைந்துடைநீத்தவர்கள்மயல்நீர்மைகேளாதே
தேசுடையீர்கள்தெளிந்தடைமின்திருநாரையூர்தன்னில்
3899 பூசுபொடித்தலைவரடியாரடியேபொருத்தமே. ௧௦

தண்மதிதாழ்பொழில்சூழ்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
ஒண்மதிசேர்சடையானுறையுந்திருநாரையூர்தன்மேல்
பண்மதியாற்சொன்னபாடல்பத்தும்பயின்றார்வினைபோகி
3900 மண்மதியாதுபோய்வான்புகுவர்வானோரெதிர்கொளவே.

103 கொடியுடைமும்மதிலூடுருவக்குனிவெஞ்சிலைதாங்கி
இடிபடஎய்தஅமரர்பிரானடியாரிசைந்தேத்தத்
துடியிடையாளையோர்பாகமாகத்துதைந்தாரிடம்போலும்
3901 வடிவுடைமேதிவயல்படியும்வலம்புரநன்னகரே. க

சோத்தகல்லாடையுங்கோவணமுங்கொடுகொட்டிகொண்டொரு
தேய்த்தன்றநங்கனைத்தேசழித்துத்திசையார்தொழுதேத்தக் [கைத்
காய்த்தகல்லாலதன்கீழிருந்தகடவுள்ளிடம்போலும்
3902 வாய்த்தமுத்தீத்தொழில்நான்மறையோர்வலம்புரநன்னகரே.

நொய்யதோர்மான்மறிகைவிரலின்நுனைமேல்நிலையாக்கி
மெய்யெரிமேனிவெண்ணீறுபூசிவிரிபுன்சடைதாழ
மையிருஞ்சோலைமணங்கமழஇருந்தாரிடம்போலும்
3903 வைகலுமாமுழவம்மதிரும்வலம்புரநன்னகரே. ங

ஊனமதாக்கையுடம்புதன்னையுணரிற்பொருளன்று
தேனமர்கொன்றையினானடிக்கேசிறுகாலையேத்துமினோ
ஆனபரைந்துங்கொண்டாட்டுகந்தஅடிகளிடம்போலும்
3904 வானவர்நாள்தொறும்வந்திறைஞ்சும்வலம்புரநன்னகரே. ச

செற்றெறியுந்திரையார்கலுழிச்செழுநீர்கிளர்செஞ்சடைமேல்
அற்றறியாதனலாடுநட்டமணியார்தடங்கண்ணி
பெற்றறிவாரெருதேறவல்லபெருமானிடம்போலும்
3905 வற்றறியாப்புனல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. ரு

உண்ணவண்ணத்தொளிநஞ்சமுண்டுவுமையோடுடனாகிச்
சுண்ணவண்ணப்பொடிமேனிபூசிச்சுடர்ச்சோதிநின்றிலங்கப்
பண்ணவண்ணத்தனபாணிசெய்யப்பயின்றாரிடம்போலும்
3906 வண்ணவண்ணப்பறைபாணியறாவலம்புரநன்னகரே. சு

புரிதருபுன்சடைபொன்தயங்கப்புரிநூல்புரண்டிலங்க
விரைதருவேழத்தினீருரிதோல்மேல்மூடிவேய்புரைதோள்
அரைதருபூந்துகிலாரணங்கையமர்ந்தாரிடம்போலும்
3907 வரைதருதொல்புகழ்வாழ்க்கையறாவலம்புரநன்னகரே. எ

தண்டணைதோளிருபத்தினொடுந்தலைபத்துடையானை
ஒண்டணைமாதுமைதான்நடுங்கவொருகால்விரலூன்றி
மிண்டதுதீர்த்தருள்செய்யவல்லவிகிர்தர்க்கிடம்போலும்
3908 வண்டணைதன்னொடுவைகுபொழில்வலம்புரநன்னகரே. அ

தாருறுதாமரைமேலயனுந்தரணியளந்தானும்
தேர்வறியாவகையாலிகலித்திகைத்துத்திரிந்தேத்தப்
பேர்வறியாவகையானிமிர்ந்தபெருமானிடம்போலும்
3909 வாருறுசோலைமணங்கமழும்வலம்புரநன்னகரே. கூ

காவியநற்றுவராடையினார்கடுநோன்புமேல்கொள்ளும்
பாவிகள்சொல்லைப்பயின்றறியாப்பழந்தொண்டருள்ளுருக
ஆவியுள்நின்றருள்செய்யவல்லஅழகரிடம்போலும்
3910 வாவியின்நீர்வயல்வாய்ப்புடையவலம்புரநன்னகரே. க0

நல்லியனூன்மறையோர்புகலித்தமிழ்ஞானசம்பந்தன்
வல்லியந்தோலுடையாடையினான்வலம்புரநன்னகரைச்
சொல்லியபாடல்கள்பத்துஞ்சொல்லவல்லவர்தொல்வினைபோய்ச்
3911 செல்வனசேவடிசென்றணுகிச்சிவலோகஞ்சேர்வாரே. கக

104 விண்கொண்டதூமதிசூடிநீடுவிரிபுன்சடைதாழப் [ந்து
பெண்கொண்டமார்பில்வெண்ணீறுபூசிப்பேணார்பலிதேர்
கண்கொண்டசாயலோடேர்கவர்ந்தகள்வர்க்கிடம்போலும்
3912 பண்கொண்டவண்டினம்பாடியாடும்பரிதிநியமமே. க

அரவொலிவில்லொலியம்பினொலியடங்கார்புரமூன்றும்
நிரவவல்லார்நிமிர்புன்சடைமேல்நிரம்பாமதிசூடி [ம்
இரவில்புகுந்தென்னெழில்கவர்ந்தஇறைவர்க்கிடம்போலு
3913 பரவவல்லார்வினைபாழ்படுக்கும்பரிதிநியமமே. உ

வாண்முகவார்குழல்வாள்நெடுங்கண்வளைத்தோள்மாதஞ்ச
நீண்முகமாகியபைங்களிற்றின்னுரிமேல்நிகழ்வித்து
நாண்முகங்காட்டிநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
3914 பாண்முகவண்டினம்பாடியாடும்பரிதிநியமமே. ந

வெஞ்சுரஞ்சேர்விளையாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
துஞ்சிருள்மாலையும்நண்பகலுந்துணையார்பலிதேர்ந்து [ம்
அஞ்சுரும்பார்குழல்சோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடம்போலு
3915 பஞ்சுரம்பாடிவண்டியாழ்முரலும்பரிதிநியமமே. ச

நீர்புல்குபுன்சடைநின்றிலங்கநெடுவெண்மதிசூடித்
தார்புல்குமார்பில்வெண்ணீறணிந்துதலையார்பலிதேர்வார்
ஏர்புல்குசாயலெழில்கவர்ந்தஇறைவர்க்கிடம்போலும்
3916 பார்புல்குதொல்புகழால்விளங்கும்பரிதிந்நியமமே. ௫

வெங்கடுங்காட்டகத்தாடல்பேணிவிரிபுன்சடைதாழத்
திங்கள்திருமுடிமேல்விளங்கத்திசையார்பலிதேர்வார்
சங்கொடுசாயலெழில்கவர்ந்தசைவர்க்கிடம்போலும்
3917 பைங்கொடிமுல்லைபடர்புறவிற்பரிதிந்நியமமே. ௬

பிறைவளர்செஞ்சடைபின்தயங்கப்பெரியமழுவேந்தி
மறையொலிபாடிவெண்ணீறுபூசிமனைகள்பலிதேர்வார்
இறைவளைசோரஎழில்கவர்ந்தஇறைவர்க்கிடம்போலும்
3918 பறையொலிசங்கொலியால்விளங்கும்பரிதிந்நியமமே. ௭

ஆசடைவானவர்தானவரோடடியாரமர்ந்தேத்த
மாசடையாதவெண்ணீறுபூசிமனைகள்பலிதேர்வார்
காசடைமேகலைசோரவுள்ளங்கவர்ந்தார்க்கிடம்போலும்
3919 பாசடைத்தாமரைவைகுபொய்கைப்பரிதிந்நியமமே. ௮

நாடினர்காண்கிலர்நான்முகனுந்திருமால்நயந்தேத்தக்
கூடலராடலராகிநாளுங்குழகர்பலிதேர்வார்
ஏடலர்சோரஎழில்கவர்ந்தஇறைவர்க்கிடம்போலும்
3920 பாடலராடலராய்வணங்கும்பரிதிந்நியமமே. ௯

கல்வளராடையர்கையிலுண்ணுங்கழுக்களிழுக்கான
சொல்வளமாகநினைக்கவேண்டாசுடுநீறதுவாடி
நல்வளைசோரநலங்கவர்ந்தநாதர்க்கிடம்போலும்
3921 பல்வளர்முல்லையங்கொல்லைவேலிப்பரிதிந்நியமமே. ௧0

பையரவம்விரிகாந்தள்விம்முபரிதிந்நியமத்துத்
தையலொர்பாகமமர்ந்தவனைத்தமிழ்ஞானசம்பந்தன்
பொய்யிலிமாலைபுனைந்தபத்தும்பரவிப்புகழ்ந்தேத்த
3922 ஐயுறவில்லைபிறப்பறுத்தல்அவலம்மடையாவே. ௧௧

105 மடல்வரையின்மதுவிம்முசோலைவயல்சூழ்ந்தழகாருங்
கடல்வரையோதங்கலந்துமுத்தஞ்சொரியுங்கலிக்காழூர்
உடல்வரையின்னுயிர்வாழ்க்கையாயவொருவன்கழலேத்த
3923 இடர்தொடராவினையானசிந்தும்மிறைவன்னருளாமே. ௧

மைவரைபோற்றிரையோடுகூடிப்புடையேமலிந்தோதம்
கைவரையால்வளர்சங்கமெங்குமிகுக்குங்கலிக்காமூர்
மெய்வரையான்மகள்பாகன்றன்னைவிரும்பவுடல்வாழும்
3924 ஐவரையாசறுத்தாளுமென்பரதுவுஞ்சரதமே. ௨

தூவியநீர்மலரேந்திவையத்தவர்கள்தொழுதேத்தக்
காவியினேர்விழிமாதரென்றுங்கவினார்கலிக்காமூர்
மேவியஈசனையெம்பிரானைவிரும்பிவழிபட்டால்
3925 ஆவியுள்நீங்கலனாதிமூர்த்தியமார்பெருமானே. ௩

குன்றுகள்போற்றிரையுந்தியந்தண்மணியார்தரமேதி
கன்றுடன்புல்கியாயம்மனைசூழ்கவினார்கலிக்காமூர்
என்றுணரூழியும்வாழுமெந்தைபெருமானடியேத்தி
3926 நின்றுணர்வாரைநினையகில்லார்நீசர்நமன்தமரே. ௪

வானிடைவாண்மதிமாடந்தீண்டமருங்கேகடலோதங்
கானிடைநீழலிற்கண்டல்வாழுங்கழிசூழ்கலிக்காமூர்
ஆனிடையைந்துகந்தாடினானையமரர்தொழுதேத்த
3927 நானடைவாம்வணமன்புதந்தநலமேநினைவோமே. ௫

துறைவளர்கேதகைமீதுவாசஞ்சூழ்வான்மலிதென்றல்
கறைவளருங்கடலோதமென்றுங்கலிக்குங்கலிக்காமூர்
மறைவளரும்பொருளாயினானைமனத்தால்நினைந்தேத்த
3928 நிறைவளரும்புகழெய்தும்வாதைநினையாவினைபோமே. ௬

கோலநன்மேனியின்மாதர்மைந்தர்கொணர்மங்கலியத்திற்
காலமும்பொய்க்கினுந்தாம்வழுவாதியற்றுங்கலிக்காமூர்
ஞாலமுந்தீவளிஞாயிறாயநம்பன்கழலேத்தி
3929 ஓலமிடாதவரூழியென்றுமுணர்வைதுறந்தாரே. ௭

ஊரரவந்தலைநீள்முடியானொலிநீருலகாண்டு
காரரவக்கடல்சூழவாழும்பதியாங்கலிக்காமூர்
தேரரவல்குலம்பேதையஞ்சத்திருந்துவரைபேர்த்தான்
3930 ஆரரவம்படவைத்தபாதமுடையானிடமாமே. ௮

அருவரையேந்தியமாலுமற்றையலர்மேலுறைவானும்
இருவருமஞ்சவெரியுருவாயெழுந்தான்கலிக்காமூர்
ஒருவரையான்மகள்பாகன்றன்னையுணர்வால்தொழுதேத்த
3931 திருமருவுஞ்சிதைவில்லைச்செம்மைத்தேசுண்டவர்பாலே.

மாசுபிறக்கியமேனியாருமருவுந்துவராடை
மீசுபிறக்கியமெய்யினாருமறியாரவர்தோற்றங்
காசினிநீர்த்திரள்மண்டியெங்கும்வளமார்கலிக்காழூர்
3932 ஈசனையெந்தைபிரானையேத்திநினைவார்வினைபோமே. ௧௦

ஆழியுள்நஞ்சமுதாரவுண்டன்றமரர்க்கமுதுண்ண
ஊழிதோறும்முளராஅளித்தானுலகத்துயர்கின்ற
காழியுள்ஞானசம்பந்தன்சொன்னதமிழாற்கலிக்காழூர்
3933 வாழியெம்மானைவணங்கியேத்தமருவாபிணிதானே. ௧௧

106 பள்ளமதாயபடர்சடைமேற்பயிலுந்திரைக்கங்கை
வெள்ளமதாரவிரும்பிநின்றவிகிர்தன்விடையேறும்
வள்ளல்வலஞ்சுழிவாணனென்றுமருவிநினைந்தேத்தி
3934 உள்ளமுருகவுணருமின்களுறுநோயடையாவே. ௧

காரணிவெள்ளைமதியஞ்சூடிக்கமழ்புன்சடைதன்மேல்
தாரணிகொன்றையுந்தண்ணெருக்குந்தழையநுழைவித்து
வாரணிகொங்கைநல்லாள்தன்னொடும்வலஞ்சுழிமேவியவர்
3935 ஊரணிபெய்பலிகொண்டுகந்தவ்வகையறியோமே. ௨

பொன்னியலுந்திருமேனிதன்மேற்புரிநூல்பொலிவித்து
மின்னியலுஞ்சடைதாழவேழவுரிபோர்த்தரவாட
மன்னியமாமறையோர்கள்போற்றும்வலஞ்சுழிவாணர்தம்மேல்
3936 உன்னியசிந்தையினீங்ககில்லார்க்குயர்வாம்பிணிபோமே. ௩

விடையொருபாலொருபால்விரும்புமெல்லியல்புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொள்தாழ்குழல்போற்றிசைப்ப
நடையொருபாலொருபால்சிலம்புநாளும்வலஞ்சுழிசேர்
3937 அடையொருபாலடையாதசெய்யுஞ்செய்கையறியோமே. ௪

கையமரும்மழுநாகம்வீணைகலைமான்மறியேந்தி
மெய்யமரும்பொடிப்பூசிவீசுங்குழையார்தருதோடும்
பையமரும்மரவாடஆடும்படர்சடையார்க்கிடமாம்
3938 மையமரும்பொழில்சூழும்வேலிவலஞ்சுழிமாநகரே. ௫

தண்டொடுசூலந்தழையஏந்தித்தையலொருபாகம்
கண்டிடுபெய்பலிபேணிநாணார்கரியினுரிதோலர்
வண்டிடுமொய்பொழில்சூழ்ந்தமாடவலஞ்சுழிமன்னியவர்
3939 தொண்டொடுகூடித்துதைந்துநின்றதொடர்பைத்தொடர்வோமே.

கல்வியலும்மலையங்கைநீங்கவளைத்துவளையாதார்
சொல்லியலும்மதில்மூன்றுஞ்செற்றசுடரானிடர்நீங்க
மல்லியலுந்திரள்தோளெம்மாதிவலஞ்சுழிமாநகரே
3940 புல்கியவேந்தனைப்புல்கியேத்தியிருப்பவர்புண்ணியரே. எ

வெஞ்சினவாளரக்கன்வரையைவிறலாலெடுத்தான்தோள்
அஞ்சுமொராறிருநான்குமொன்றுமடர்த்தாரழகாய
நஞ்சிருள்கண்டத்துநாதரென்றுநணுகுமிடம்போலும்
3941 மஞ்சுலவும்பொழில்வண்டுகெண்டும்வலஞ்சுழிமாநகரே. அ

ஏடியனூன்முகன்சீர்நெடுமாலெனநின்றவர்காணார்
கூடியகூரெரியாய்நிமிர்ந்தகுழகருலகேத்த
வாடியவெண்டலைகையிலேந்திவலஞ்சுழிமேயஎம்மான்
3942 பாடியநான்மறையாளர்செய்யுஞ்சரிதைபலபலவே. கூ

குண்டருஞ்புத்தருங்கூறையின்றிக்குழுவாருரைநீத்துத்
தொண்டருந்தன்தொழில்பேணநின்றகழலானழலாடி
வண்டமரும்பொழில்மல்குபொன்னிவலஞ்சுழிவாணனெம்மான்
3943 பண்டொருவேள்விமுனிந்துசெற்றபரிசேபகர்வோமே. க0

வாழியெம்மானெனக்கெந்தைமேயவலஞ்சுழிமாநகர்மேல்
காழியுள்ஞானசம்பந்தன்சொன்னகருத்தின்தமிழ்மாலை
ஆழியிவ்வையகத்தேத்தவல்லாரவர்க்குந்தமருக்கும்
3944 ஊழியொருபெருமின்பமோக்குமுருவும்முயர்வாமே. கக

107 கடலிடைவெங்கடுநஞ்சமுண்டகடவுள்விடையேறி
உடலிடையிற்பொடிப்பூசவல்லானுமையோடொருபாகன்
அடலிடையிற்சிலைதாங்கியெய்தஅம்மானடியார்மேல்
3945 நடலைவினைத்தொகைதீர்த்துகந்தானிடநாரையூர்தானே. க

விண்ணின்மின்னேர்மதிதுத்திநாகம்விரிபூமலர்க்கொன்றை
பெண்ணின்முன்னேமிகவைத்துகந்தபெருமானெரியாடி
நண்ணியதன்னடியார்களோடுந்திருநாரையூரானென்
3946 றெண்ணுமின்நும்வினைபோகும்வண்ணமிறைஞ்சுந்நிறைவாமே.

தோடொருகாதொருகாதுசேர்ந்தகுழையானிழைதோன்றும்
பீடொருகால்பிரியாதுநின்றபிறையான்மறையோதி
நாடொருகாலமுஞ்சேரநின்றதிருநாரையூரானைப்
3947 பாடுமினீர்பழிபோகும்வண்ணம்பயிலுமுயர்வாமே. ௩

வெண்ணிலவஞ்சடைசேரவைத்துவிளங்குந்தலையேந்திப்
பெண்ணிலமர்ந்தொருகூறதாயபெருமானருளார்ந்த
அண்ணல்மன்னியுறைகோயிலாகுமணிநாரையூர்தன்னை
3948 நண்ணலமர்ந்துறைவாக்குமின்கள்நடலைகரிசறுமே. ௪

வானமர்தீவளிநீர்நிலனுய்வழங்கும்பழியாகும்
ஊனமரின்னுயிர்தீங்குகுற்றமுறைவாற்பிறிதின்றி
கானமரும்பொருளாகிநின்றான்திருநாரையூரெந்தை
3949 கோனவனைக்குறுகக்குறுகாகொடுவல்வினைதானே. ரு

கொக்கிறகுங்குளிர்சென்னிமத்தங்குலாயமலர்சூடி
அக்கரவோடரையார்த்துகந்தஅழகன்குழகாக
நக்கமருந்திருமேனியாளன்திருநாரையூர்மேவிப்
3950 புக்கமரும்மனத்தோர்கள்தம்மைப்புணரும்புகல்தானே. சு

ஊழியுமின்பமுங்காலமாகியுயருந்தவமாகி [பாகி
ஏழிசையின்பொருள்வாழும்வாழ்க்கைவினையின்புணர்ப்
நாழிகையும்பலஞாயிறாகிநளிர்நாரையூர்தன்னில்
3951 வாழியர்மேதகுமைந்தர்செய்யும்வகையின்விளைவாமே. எ

கூசமிலாதரக்கன்வரையைக்குலுங்கவெடுத்தான்தோள்
நாசமதாகிஇறஅடர்த்தவிரலான்கரவாதார்
பேசவியப்பொடுபேணநின்றபெரியோனிடம்போலும்
3952 தேசமுறப்புகழ்செம்மைபெற்றதிருநாரையூர்தானே. அ

பூமகனும்மவனைப்பயந்தபுயலார்நிறத்தானும்
ஆமளவுந்திரிந்தேத்திக்காண்டலறிதற்கரியானூர்
பாமருவுங்குணத்தோர்களீண்டிப்பலவும்பணிசெய்யும்
3953 தேமருவுந்திகழ்சோலைசூழ்ந்ததிருநாரையூர்தானே. கூ

வெற்றரையாகியவேடங்காட்டித்திரிவார்துவராடை
உற்றரையோர்களுரைக்குஞ்சொல்லையுணராதெழுமின்கள்
குற்றமிலாதகேதார்கொள்கையெம்மான்குழகன்தொழிலாரப்
3954 பெற்றரவாட்டிவரும்பெருமான்திருநாரையூர்சேர்வே. ௧௦

பாடியலுந்திரைசூழ்புகலித்திருஞானசம்பந்தன்
சேடியலும்புகழோங்குசெம்மைத்திருநாரையூரான்மேல்
பாடியதண்தமிழ்மாலைபத்தும்பரவித்திரிந்தாக
3955 வாடியசிந்தையினார்க்குநீங்குமவலக்கடல்தானே. ௧௧

108 வேதவேள்வியைநிந்தனைசெய்துழல்
ஆதமில்லியமணொடுதேரரை
வாதில்வென்றழிக்கத்திருவுள்ளமே
பாதிமாதுடனாயபரமனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தேன்
3956 ஆலவாயிலுறையுமெம்மாதியே. க

வைதிகத்தின்வழியொழுகாதஅக்
கைதவம்முடைக்காரமண்தேரரை
எய்திவாதுசெயத்திருவுள்ளமே
மைதிகழ்தருமாமணிகண்டனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3957 ஆலவாயிலுறையுமெம்மாதியே. உ

மறைவழக்கமிலாதமாபாவிகள்
பறிதலைக்கையர்பாயுடுப்பார்களை
முறியவாதுசெயத்திருவுள்ளமே
மறியுலாங்கையில்மாமழுவாளனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3958 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௩

அறுத்தவங்கமாறாயினநீர்மையைக்
கறுத்தவாழமண்கையர்கள் தம்மொடும்
செறுத்துவாதுசெயத்திருவுள்ளமே
முறித்தவாண்மதிக்கண்ணிமுதல்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3959 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ச

அந்தணாளர்புரியுமருமறை
சிந்தைசெய்யாஅருகர்திறங்களைச்
சிந்தவாதுசெயத்திருவுள்ளமே
வெந்தநீறதணியும்விகிர்தனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3960 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ரு

வேட்டுவேள்விசெயும்பொருளைவிளி
மூட்டுசிந்தைமுருட்டமண்குண்டரை
ஓட்டிவாதுசெயத்திருவுள்ளமே
காட்டிலானையுரித்தஎங்கள்வனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3961 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௬

அழலதோம்புமருமறையோர்திறம்
விழலதென்னுமருகர்திறத்திறம்
கழலவாதுசெயத்திருவுள்ளமே
தழலிலங்குதிருவுருச்சைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3962 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௭

நீற்றுமேனியராயினர்மேலுற்ற
காற்றுக்கொள்ளவும்நில்லாஅமணரைத்
தேற்றிவாதுசெயத்திருவுள்ளமே
ஆற்றவாளரக்கற்குமருளினாய்
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3963 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௮

நீலமேனியமணர்திறத்துநின்
சீலம்வாதுசெயத்திருவுள்ளமே
மாலுநான்முகனுங்காண்பரியதோர்
கோலமேனியதாகியகுன்றமே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3964 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௯

அன்றுமுப்புரஞ்செற்றஅழகநின்
துன்றுபொற்கழல்பேணாஅருகரைத்
தென்றவாதுசெயத்திருவுள்ளமே
கன்றுசாக்கியர்காணாத்தலைவனே
ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென்
3965 ஆலவாயிலுறையுமெம்மாதியே. ௧0

கூடலாலவாய்க்கோனைவிடைகொண்டு
வாடல்மேனியமணரைவாட்டிட
மாடக்காழிச்சம்பந்தன்மதித்தஇப்
3966 பாடல்வல்லவர்பாக்கியவாளரே. கக

109 மண்ணதுவுண்டரிமலரோன்காணு
வெண்ணுவல்விரும்புமயேந்திரும்
கண்ணதுவோங்கியகயிலையாரும்
3967 அண்ணலாரூராதியானைக்காவே. க

வந்துமாலயனவர்காண்பரியார்
வெந்தவெண்ணீறணிமயேந்திரும்
கந்தவார்சடையுடைக்கயிலையாரும்
3968 அந்தணுரூராதியானைக்காவே. உ

மாலயன்தேடியமயேந்திரும்
காலனையுயிர்கொண்டகயிலையாரும்
வேலையதோங்கும்வெண்ணுவலாரும்
3969 ஆலையாரூராதியானைக்காவே. ந

கருடனையேறரி அயனேர்காணு
வெருள்விடையேறியமயேந்திரும்
கருடருகண்டத்தெங்கயிலையாரும்
3970 அருளணுரூராதியானைக்காவே. ச

மதுசூதனன்நான்முகன்வணங்கரியார்
மதியதுசொல்லியமயேந்திரும்
கதிர்முலைபுல்கியகயிலையாரும்
3971 அதியனுரூராதியானைக்காவே. ரு

சக்கரம்வேண்டுமால்பிரமன்காணு
மிக்கவர்கயிலைமயேந்திரும்
தக்கனைத்தலையரிதழலுருவர்
3972 அக்கணியவராரூரானைக்காவே. சு

கண்ணனும்நான்முகன்காண்பரியார்
வெண்ணுவல்விரும்புமயேந்திரும்
கண்ணப்பர்க்கருள்செய்தகயிலையெங்கள்
3973 அண்ணலாரூராதியானைக்காவே. எ

கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்
தடவரையரக்கனைத் தலைநெரித்தார்
விடமதுவுண்ட வெம்மயேந்திரும்
3974 அடல்விடையாரூராதியானைக்காவே. அ

ஆதிமாலயனவர்காண்பரியார்
வேதங்கள் துதிசெயுமயேந்திரும்
காதிலோர்குழையுடைக்கயிலையாரும்
3975 ஆதியாரூரெந்தையானைக்காவே. கூ

அறிவிலமண்புத்தரறிவுகொள்ளேல்
வெறியமான்கரத்தாரூர்மயேந்திரும்
மறிகடலோனயன்தேடத்தானும்
3976 அறிவருகயிலையோனானைக்காவே. க0

ஏனமாலயனவர்காண்பரியார்
கானமார்கயிலைநன்மயேந்திரும்
ஆனஆரூராதியானைக்காவை
3977 ஞானசம்பந்தன் தமிழ்சொல்லுமே. கக

110 வரமதேகொளாவுரமதேசெயும்புரமெரித்தவன்பிரமநற்பு
3978 தரனுமமேபரவுவார்கள்சீர்விரவுநீள்புவியே. [ரத்

சேணுலாமதில்வேணுமண்ணுளோர்காணமன்றலார்வேணு
3979 தாணுவின்கழல்பேணுகின்றவராணியோத்தவரே. [நற்புரத்

அகலமார்தரைப்புகலுநான்மறைக்கிகலியோர்கள்வாழ்புகலிமாநக
3980 பகல்செய்வோனெதிர்ச்சகலசேகரனகிலநாயகனே. [ர்ப்

துங்கமாகரிபங்கமாவடுஞ்செங்கையானிகழ்வெங்குருத்திகழ்
3981 அங்கணனடிதங்கையாற்றொழத்தங்குமோவினையே. ச

காணியொண்பொருட்கற்றவர்க்கீகையுடைமையோரவர்காதல்
3982 றோணிவண்புரத்தாணியென்பவர்தூமதியினரே. [செய்யுநற்

ஏந்தராவெதிர்வாய்ந்தநுண்ணிடைப்பூந்தணோதியாள்சேர்ந்தபங்கி
3983 பூந்தராய்தொழுமாந்தர்மேனிமேற்சேர்ந்திராவினையே. [னன்

சுரபுரத்தினைத்துயர்செய்தாரகன்துஞ்சவெஞ்சினக்காளியைத்தரு
3984 சிரபுரத்துளானென்னவல்லவர்சித்திபெற்றவரே. [ஞ்

உறவுமாகியற்றவர்களுக்குமாநிதிகொடுத்துநீள்புவியிலங்குசீர்ப்
3985 புறவமாநகர்க்கிறைவனேயெனத்தெறகிலாவினையே. அ

பண்புசேரிலங்கைக்குநாதனன்முடிகள்பத்தையுங்கெடநெரித்தவன்
3986 சண்பையாதியைத்தொழுமவர்களைச்சாதியாவினையே. கூ

ஆழியங்கையிற்கொண்டமாலயனறிவொணாததோர்வடிவுகொண்
3987 காழிமாநகர்க்கடவுள்நாமமேகற்றல்நற்றவமே. [டவன்

விச்சையொன்றிலாச்சமணர்சாக்கியப்பிச்சர்தங்களைக்கரிசறுத்தவ
3988 கொச்சைமாநகர்க்கன்புசெய்பவர்குணங்கள்கூறுமினே. [ன்

கழுமலத்தினுட்கடவுள்பாதமேகருதுஞானசம்பந்தனின்தமிழ்
3989 முழுதும்வல்லவர்க்கின்பமேதருமுக்கணெம்மிறையே. கഠ

111 வேலினேர்தருகண்ணினாளுமைபங்கனங்கணன்மிழலைமா
3990 ஆலநீழலின்மேவினானடிக்கன்பர்துன்பிலரே. [நகர்

விளங்குநான்மறைவல்லவேதியர்மல்குசீர்வளர்மிழலையானடி
3991 உளங்கொள்வார்தமையுளங்கொள்வார்வினைஒல்லையாசறுமே.

விசையினேடெழுபசையுநஞ்சினையசைவுசெய்தவன்மிழலைமாநகர்
3992 இசையுமீசனைநசையின்மேவினான்மிசைசெயாவினையே. ௩

வென்றிசேர்கொடிமூடுமாமதில்மிழலைமாநகர்மேவிநாள்தொறும்
3993 நின்றஆதிதன்னடிநினைப்பவர்துன்பமொன்றிலரே. ௪

போதகந்தனையுரிசெய்தோன்புயனேர்வரும்பொழில்மிழலைமாநகர்
3994 ஆதரஞ்செய்தஅடிகள்பாதமலாலோர்பற்றிலமே. ௫

தக்கன்வேள்வியைச்சாடினார்மணிதொக்கமாளிகைமிழலைமேவிய
3995 நக்கனாடிதொழுவர்மேல்வினைநாள்தொறுங்கெடுமே. ௬

போரணவுமுப்புரமெரித்தவன்பொழில்கள்சூழ்தருமிழலைமாநகர்ச்
3996 சேருமீசனைச்சிந்தைசெய்பவர்தீவினைகெடுமே. ௭

இரக்கமிஃறெழிலரக்கனுருடல்நெருக்கினான்மிகுமிழலையானடி
3997 சிரக்கொள்பூவெனஒருக்கினார்புகழ்பரக்குநீள்புவியே. அ

துன்றுபூமகன்பன்றியானவனொன்றுமோர்கிலாமிழலையானடி
3998 சென்றுபூம்புனல்நின்றுதூவினார்நன்றுசேர்பவரே. கூ

புத்தர்கைச்சமண்பித்தர்பொய்க்குவைவைத்தவித்தகன்மிழலைமா
3999 சித்தம்வைத்தவரித்தலத்தினுள்மெய்த்தவத்தவரே. [நகர்

சந்தமார்பொழில்மிழலையீசனைச்சண்பைஞானசம்பந்தன்வாய்நவில்
4000 பந்தமார்தமிழ்பத்தும்வல்லவர்பத்தராகுவரே. கக

112 பரசுபாணியர்பாடல்வீணையர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
4001 தரசுபேணிநின்றாரிவர்தன்மையறிவாரார். க

பட்டநெற்றியர்நட்டமாடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
4002 திட்டமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். உ

பவளமேனியர்திகழுநீற்றினர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
4003 தழகராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். ௩

பண்ணில்யாழினர்பயிலுமொந்தையர்பட்டினத்துறைபல்லவ
4004 தண்ணலாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [னீச்சரத்

பல்லிலோட்டினர்பலிகொண்டுண்பவர்பட்டினத்துறைபல்லவ
4005 தெல்லியாட்டுகந்தாரிவர்தன்மையறிவாரார். [னீச்சரத்

பச்சைமேனியர்பிச்சைகொள்பவர்பட்டினத்துறைபல்லவனீச்சர
4006 திச்சையாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [த்

பைங்கணேற்றினர்திங்கள்சூடுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
4007 தெங்குமாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். எ

பாதங்கைதொழவேதமோதுவர்பட்டினத்துறைபல்லவனீச்சரத்
4008 தாதியாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். அ

படிகொள்மேனியர்கடிகொள்கொன்றையர்பட்டினத்துறைபல்ல
4009 தடிகளாயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [வனீச்சரத்

பறைகொள்பாணியர்பிறைகொள்சென்னியர்பட்டினத்துறைபல்
4010 திறைவராயிருப்பாரிவர்தன்மையறிவாரார். [லவனீச்சரத்

வானமாள்வதற்கூனமொன்றிலைமாதர்பல்லவனீச்சரத்தானை
4011 ஞானசம்பந்தன்நற்றமிழ்சொல்லவல்லவர்நல்லவரே. கக

113 உற்றுமைசேர்வதுமெய்யினையேயுணர்வதுநின்னருள்
மெய்யினையே, கற்றவர்காய்வதுகாமனையேகனல்விழிகாய்
வதுகாமனையே, அற்றமறைப்பதுமுன்பணியேஅமரர்கள்

செய்வதுமுன்பணியே,பேற்றுமுகந்ததுகந்தனையேபிரமபுரத்
4012 தையுகந்தனையே. க

சதிமிகவந்தசலந்தரனே தடிசிரநேர்கொள்சலந்தரனே,
அதிரொளிசேர்திகிரிப்படையா லமர்ந்தனரும்பர்துதிப்
படையால், மதிதவழ்வெற்பதுகைச்சிலையேமருவிடமேற்
பதுகைச்சிலையே, விதியினிலிட்டவிரும்பரனேவேணு
4013 புரத்தைவிரும்பரனே. உ

காதமரத்திகழ்தோடினனே கானவனுய்க்கடிதோடினனே
பாதமதாற்கூற்றுதைத்தனனே பார்த்தனுடலம்புதைத்தனனே
தாதவிழ்கொன்றைதரித்தனனே சார்ந்தவினையதரித்தனனே
4014 போதமமருமுரைப்பொருளே புகலியமர்ந்தபரம்பொருளே.

மைத்திகழ்நஞ்சுமிழ்மாசுணமேமகிழ்ந்தரைசேர்வதுமா
சுணமே, மெய்த்துடல்பூசுவர்மேன்மதியேவேதமதோது
வர்மேன்மதியே, பொய்த்தலையோடுறுமத்தமதேபுரிசடை
வைத்ததுமத்தமதே, வித்தகராகியவெங்குருவேவிரும்பிய
4015 மர்ந்தனர்வெங்குருவே. ச

உடன்பயில்கின்றனன்மாதவனேயுறுபொறிகாய்ந்திசை
மாதவனே, திடம்படமாமறைகண்டனனே திரிகுணமேவிய
கண்டனனே,படங்கொளரவரைசெய்தனனேபகடுரிகொண்
டரைசெய்தனனே, ;தொடர்ந்ததுயர்க்கொருநஞ்சிவனே
4016 தோணிபுரத்துறைநஞ்சிவனே. ரு

திகழ்கையதும்புகைதங்கழலே தேவர்தொழுவதுந்தங்
கழலே, இகழ்பவர்தாமொருமானிடமேயிருந்தனுவோ
டெழில்மானிடமே, மிகவருநீர்கொளுமஞ்சடையேமின்
னிகர்கின்றதுமஞ்சடையே, தகவிரதங்கொள்வர்சுந்தரரே
4017 தக்கதராயுறைசுந்தரரே. சு

ஓர்வருகண்களிணைக்கயலேயுமையவள்கண்களிணைக்கய
ஏர்மருவுங்கழனகமதேயெழில்கொளுதாசனகமதே[லே
நீர்வருகொந்தளகங்கையதேநெடுஞ்சடைமேவியகங்கைய
4018 சேர்வருயோகதியம்பகனேசிரபுரமேயதியம்பகனே. [தே

ஈண்டுதுயிலமரப்பினனேயிருங்கணிடந்தடியப்பினனே
தீண்டலரும்பரிசக்கரமேதிகழ்ந்தொளிசேர்வதுசக்கரமே

வேண்டிவருந்தநகைத்தலையேமிகைத்தவரோடுநகைத்தலையே
4019 பூண்டனர்சேரலுமாபதியேபுறவமமர்ந்தவுமாபதியே. அ

நின்மணிவாயதுநீழலையேநேசமதானவர்நீழலையே
உன்னிமனத்தெழுசங்கமதேயொளியதனோடுறுசங்கமதே
கன்னியரைக்கவருங்களனேகடல்விடமுண்டகருங்களனே
4020 மன்னிவரைப்பதிசண்பையதேவாரிவயன்மலிசண்பையதே.

இலங்கையரக்கர்தமக்கிறையேயிடந்துகயிலையெடுக்கிறையே
புலன்கள்கெடவுடன்பாடினனேபொறிகள்கெடவுடன்பாடினனே
இலங்கியமேனியிராவணனேயெய்துபெயருமிராவணனே
4021 கலந்தருள்பெற்றதுமாவசியேகாழியரனடிமாவசியே. க0

கண்ணிகழ்புண்டரிகத்தினனேகலந்திரிபுண்டரிகத்தினனே
மண்ணிகழும்பரிசேனமதேவானகமேய்வகைசேனமதே
நண்ணியடிமுடியெய்தலரேநளிர்மலிசோலையிலெய்தலரே
4022 பண்ணியல்கொச்சைபசுபதியேபசுமிசவூர்வர்பசுபதியே.

பருமதில்மதுரைமன்னவையெதிரே பதிகமதேழுதிலை
யவையெதிரே, வருநதியிடைமிசைவருகரனேவசையொடு
மலர்கெடவருக்கனே, கருதலிலிசைமுரல்தருமருளேகழு
மலமமரிறைதருமருளே, மருவியதமிழ்விரகனமொழியே
4023 வல்லவர்தம்மிடர்திடமொழியே. கஉ

114 பாயுமால்விடைமேலொருபாகனே பாவைதன்னுரு
மேலொருபாகனே, தூயவானவர்வேதத்துவனியேசோதி
மாலெரிவேதத்துவனியே, ஆயுநன்பொருள்நுண்பொரு
ளாதியே ஆலநீழலரும்பொருளாதியே, காயவின்மதன்
4024 பட்டதுகம்பமேகண்ணுதற்பரமற்கிடங்கம்பமே. க

சடையணிந்ததும்வெண்டலைமாலையே தம்முடம்பிலும்
வெண்டலைமாலையே, படையிலங்கையிற்சூலமதென்பதே
பரந்திலங்கையிற்சூலமதென்பதே, புடைபரப்பனபூதக
ணங்களேபோற்றிசைப்பனபூதகணங்களே, கடைகள்
4025 தோறுமிரப்பதுமிச்சையேகம்பமேவியிருப்பதுமிச்சையே.

வெள்ளெருக்கொடுதும்பைமி லைச்சியேவேறுமுன்
செலத்தும்பைமிலைச்சியே, அள்ளிநீறதுபூசுவதாகமேயான
மாசுணமூசுவதாகமே, புள்ளியாடையுடுப்பதுகத்துமே

போனவூழியுடுப்பதுகத்துமே, கள்ளுலாமலர்க்கம்பமிருப்
4026 பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. ரு

முற்றலாமையணிந்தமுதல்வரே. மூரியாமையணிந்த முதல்வரே, பற்றிவாளரவாட்டும்பரிசரேபாலுநெய்யுகந் தாட்டும்பரிசரே, வற்றலோடுகலம்பலிதேர்வதேவானி ஞேடுகலம்பலிதேர்வதே, கற்றிலாமனங்கம்பமிருப்பதே
4027 காஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. ச

வேடனாகிவிசையற்கருளியே வேலைநஞ்சமிசையற்கரு ளியே, ஆடுபாம்பரையார்த்ததுடையதேயஞ்சுபூதமுமார்த் ததுடையதே, கோடுவான்மதிக்கண்ணியழகிதேகுற்றமின் மதிக்கண்ணியழகிதே, காடுவாழ்பதியாவதுமும்மதேகம்ப
4028 மாபதியாவதுமும்மதே. ரு

இரும்புகைக்கொடிதங்கழல்கையதே யிமயமாமகள்தங் கழல்கையதே, அரும்புமொய்த்தமலர்ப்பொறைதாங்கியே ஆழியான்றன்மலர்ப்பொறைதாங்கியே, பெரும்பகல்நட மாடுதல்செய்துமேபேதைமார்மனம்வாடுதல் செய்துமே, கரும்புமொய்த்தெழுகம்பமிருப்பதே காஞ்சிமாநகர்க்கம்ப
4029 மிருப்பதே. சு

முதிரமங்கைதவஞ்செய்த காலமேமுன்புமங்கைதவஞ் செய்தகாலமே, வெதிர்களோடகில்சந்தமுருட்டியேவேழ மோடகில்சந்தமுருட்டியே, அதிரவாறுவரத்தழுவத் தொடேயானையாடுவரத்தழுவத்தொடே, கதிர்கொள்பூண்
4030 முலைக்கம்பமிருப்பதேகாஞ்சிமாநகர்க்கம்பமிருப்பதே. எ

பண்டரக்கனெடுத்தபலத்தையேபாய்ந்தரக்கனெடுத்த பலத்தையே, கொண்டரக்கியதுங்கால்விரலையேகோளரக் கியதுங்கால்விரலையே, உண்டுழன்றதுமுண்டத்தலையிலே யுடுபதிக்கிடமுண்டத்தலையிலே, கண்டநஞ்சமடக்கினே
4031 கம்பமேகடவுள்நீயிடங்கொண்டதுகம்பமே. அ

தூணியானசுடர்விடுசோதியே சுத்தமானசுடர்விடு சோதியே, பேணியோடுபிரமப்பறவையேபித்தனானபிரமப் பறவையே, சேணிஞேடுகீழூழிதிரிந்துமேசித்தமோடு கிழூழிதிரிந்துமே, காணநின்றனருற்றதுகம்பமேகடவுள்
4032 நீயிடமுற்றதுகம்பமே. கூ

ஒருடம்பினையீருருவாகவே யுன்பொருள்திறமீருரு
வாகவே, ஆருமெய்தற்கரிதுபெரிதுமேஆற்றவெய்தற்கரிது
பெரிதுமே, தோரும்மறியாதுதிகைப்பரேசித்தமும்மறி
யாதுதிகைப்பரே, கார்நிறத்தமணர்க்கொருகம்பமேகடவுள்
4033 நீயிடங்கொண்டதுகம்பமே. க0

கந்தமார்பொழில்சூழ்தருகம்பமேகாதல்செய்பவர்தீர்த்
திடுகம்பமே, புந்திசெய்துவிரும்பிப்புகலியேபூசுரன்றன்
விரும்பிப்புகலியே, அந்தமில்பொருளாயினகொண்டுமே
யண்ணலின்பொருளாயினகொண்டுமே, பந்தனின்னியல்
4034 பாடியபத்துமேபாடவல்லவராயினபத்துமே. கக

115 ஆலநீழலுகந்ததிருக்கையே யானபாடலுகந்ததிருக்
கையே, பாலினேர்மொழியாளொருபங்கனேபாதமோதலர்
சேர்புரபங்கனே, கோலநீறணிமேதகுபூதனேகோதிலார்
மனமேவியபூதனே, ஆலநஞ்சமுதுண்டகளத்தனேஆலவா
4035 யுறையண்டர்களத்தனே. க

பாதியாவுடன்கொண்டதுமாலையே பாம்புதார்மலர்க்
கொன்றைநன்மாலையே, கோதில்நீறதுபூசிடுமாகனே
கொண்டநற்கையின்மானிடமாகனே, நாதன்நாள்தொறு
மாடுவதானையேநாடியன்றுரிசெய்ததுமானையே, வேதநூல்
4036 பயில்கின்றதுவாயிலேவிகிர்தனூர்திருஆலநல்வாயிலே. உ

காடுநீடதுறப்பலகத்தனே காதலால்நினைவார்தமகத்
தனே, பாடுபேயொடுபூதமசிக்கவேபல்பிணத்தசைநாடிய
சிக்கவே, நீடுமாநடமாடவிருப்பனேநின்னடித்தொழநாளு
மிருப்பனே, ஆடல்நீள்சடைமேவியஅப்பனேஆலவாயி
4037 னின்மேவியஅப்பனே. ௩

பண்டயன்தலையொன்றுமறுத்தியே பாதமோதினர்
பாவமறுத்தியே, துண்டவெண்பிறைசென்னியிருத்தியே
தூயவெள்ளெருதேறியிருத்தியே, கண்டுகாமனைவேவவி
ழித்தியேகாதலில்லவர்தம்மையிழித்தியே, அண்டநாயக
4038 னேமிகுகண்டனேஆலவாயினின்மேவியகண்டனே. ச

சென்றுதாதையுகுத்தனன்பாலையே சிறியன்புசெகுத்
தனன்பாலையே, வென்றிசேர்மழுக்கொண்டுமுன்காலையே

வீடவெட்டிடக்கண்டுமுன்காலையே, நின்றமாணியையோ
டினகங்கையால்நிலவமல்கியுதித்தனகங்கையால், அன்று
4039 நின்னுருவாகத்தடவியேஆலவாயரனுகத்தடவியே. ரு

நக்கமேகுவர்நாடுமோரூருமே நாதன்மேனியின்மாசுண
மூருமே, தக்கபூமனேச்சுற்றக்கருளொடேதாரமுய்த்தது
பாணற்கருளொடே, மிக்கதென்னவன்தேவிக்கணியை
யேமெல்லநல்கியதொண்டர்க்கணியையே, அக்கினுரமு
4040 துண்கலனேடுமேஆலவாயரனுருமையோடுமே. சு

வெய்யவன்பல்லுகுத்ததுகுட்டியேவெங்கண்மாசுணங்
கையதுகுட்டியே, ஐயனேயனலாடியமெய்யனேயன்பினுல்
நினைவார்க்கருள்மெய்யனே, வையமுய்யஅன்றுண்டது
காளமேவள்ளல்கையதுமேவுகங்காளமே, ஐயமேற்பது
4041 சைப்பதுவீணையேஆலவாயரன்கையதுவீணையே. எ

தோள்கள்பத்தொடுபத்து மயக்கியேதொக்கதேவர்செ
ருக்கைமயக்கியே, வாளரக்கன்நிலத்துக்களித்துமேவந்த
மால்வரைகண்டுகளித்துமே, நீள்பொருப்பையெடுத்தவுன்
மத்தனேநின்விரற்றலையான்மதமத்தனே, ஆளுமாதிமுறித்
4042 ததுமெய்கொலோஆலவாயானுய்த்ததுமெய்கொலோ. அ

பங்கயத்துளநான்முகன்மாலொடேபாத நீண்முடி
நேடிடமாலொடே, துங்கநற்றழலின்னுருவாயுமேதூய
பாடல்பயின்றதுவாயுமே, செங்கயற்கணினுரிடுபிச்சையே
சென்றுகொண்டுரைசெய்வதுபிச்சையே, அங்கியைத்திகழ்
4043 விப்பதிடக்கையேஆலவாயரனுரதிடக்கையே. கூ

தேரரோடமணர்க்குநல்கானேயே தேவர்நாள்தொறுஞ்
சேர்வதுகானேயே, கோரமட்டதுபுண்டரிகத்தையே
கொண்டநீள்கழல்புண்டரிகத்தையே, நேரிலூர்களழித்
ததுநாகமேநீள்சடைத்திகழ்கின்றதுநாகமே, ஆரமாகவுகந்
4044 ததுமென்பதேஆலவாயரனுரிடமென்பதே. கo

ஈனஞானிகள்தம்மொடுவிரகனேயேறுபல்பொருள்முத்
தமிழ்விரகனே, ஆனகாழியுள்ஞானசம்பந்தனேஆலவாயி
னின்மேயசம்பந்தனே, ஆனவானவர்வாயினுளத்தனே
யன்பரானவர்வாயினுளத்தனே, நானுரைத்தனசெந்தமிழ்
4045 பத்துமேவல்லவர்க்கிவைநற்றமிழ்பத்துமே. கக

116 துன்றுகொன்றைநஞ்சடையதேதூயகண்டநஞ்சடையதே
கன்றின்மானிடக்கையதேகல்லின்மானிடக்கையதே
என்றுமேறுவதிடவமேயென்னிடைப்பலியிடவமே
4046 நின்றதும்மிழலையுள்ளுமேநீரெனைச்சிறிதுமுள்ளுமே. ௧

ஓதிவாயதும்மறைகளேயுரைப்பதும்பலமறைகளே
பாதிகொண்டதும்மாதையேபணிகின்றேன்மிகுமாதையே
காதுசேர்கனங்குழையரேகாதலார்கனங்குழையரே
4047 வீதிவாய்மிகும்வேதியாமிழலைமேவியவேதியா. ௨

பாடுகின்றபண்டாரமேபத்தரன்னபண்டாரமே
சூடுகின்றதுமத்தமேதொழுதஎன்னையுன்மத்தமே
நீடுசெய்வதுந்தக்கதேநின்னரைத்திகழ்ந்தக்கதே
4048 காடுசேர்மிழலையூருமேநாகநஞ்சழலையூருமே. ௩

கட்டுகின்றகழல்நாகமேகாய்ந்ததும்மதனாகமே
இட்டமாவதிசைபாடலேயிசைந்தநூலினமர்பாடலே
கொட்டுவான்முழவம்வாணனேகுலாயசீர்மிழலைவாணனே
4049 நட்டமாடுவதுசந்தியேநானுய்தற்கிரவுசந்தியே. ௪

ஓவிலாதிடுங்கரணமேயுன்னுமென்னுடைக்கரணமே
ஏவுசேர்வுநின்னாணையேயருளிநின்னபொற்றாணையே
பாவியாதுரைமெய்யிலேபயின்றநின்னடிமெய்யிலே
4050 மேவினன்விறற்கண்ணனேமிழலைமேயமுக்கண்ணனே. ௫

வாய்ந்தமேனியெரிவண்ணமேமகிழ்ந்துபாடுவதுவண்ணமே
காய்ந்துவீழ்ந்தவன்காலனேகடுநடஞ்செயுங்காலனே
போந்ததெம்மிடையிரவிலேயும்மிடைக்கள்வமிரவிலே
4051 ஏய்ந்ததும்மிழலையென்பதேவிரும்பியேயணிவதென்பதே.

அப்பியன்றகண்ணயனுமேயமார்கோமகனுமயனுமே
ஒப்பிலின்றமரர்தருவதேயொண்கையாலமர்தருவதே
மெய்ப்பயின்றவிருக்கையேமிழலையூருமதிருக்கையே
4052 செப்புமின்னெருதுமேயுமேசேர்வுமக்கெருதுமேயுமே.

தானவக்குலம்விளக்கியேதாரகைச்செலவிளக்கியே
வானடர்த்தகயிலாயமேவந்துமேவுகயிலாயமே
தானெடுத்தவல்லரக்கனேதடமுடித்திரளரக்கனே
4053 மேனடைச்செலவிருப்பனேமிழலைநற்பதிவிருப்பனே. ௮

சாயமிக்கதொருபன்றியேகலந்தநின்னவுருபன்றியே
ஏயவிப்புவிமயங்கவேயிருவர்தாமனமயங்கவே
தூயமெய்த்திரளகண்டனேதோன்றிநின்றமணிகண்டனே
4054 மேயவித்துயில்விலக்கணுமிழலைமேவியவிலக்கணு. ௯

கஞ்சியைக்குலவுகையரேகலக்கமாரமணர்கையரே
அஞ்சவாதிலருள்செய்யநீயணைந்திடும்பரிசுசெய்யநீ
வஞ்சனேவரவும்வல்லையேமதித்தெனைச்சிறிதும்வல்லையே
4055 வெஞ்சலின்றிவருவித்தகாமிழலைசேரும்விறல்வித்தகா. ௧0

மேயசெஞ்சடையினப்பனேமிழலைமேவியஎன்னப்பனே
ஏயுமாசெயவிருப்பனேயிசைந்தவாசெயவிருப்பனே
காயவர்க்கசம்பந்தனேகாழிஞானசம்பந்தனே
4056 வாயுரைத்ததமிழ்பத்துமேவல்லவர்க்குமிவைபத்துமே. ௧௧

**117** யாமாமாநீயாமாமாயாழீகாமாகாணுகா
4057 காணுகாமாகாழீயாமாமாயாநீமாமாயா. ௧

யாகாயாழீகாயாகாதாயாராராதாயாயா
4058 யாயாதாராராயாதாகாயாகாழீயாகாயா. ௨

தாவாமூவாதாசாகாழீநாதாநீயாமாமா
4059 மாமாயாநீதாநாழீகாசாதாவாமூவாதா. ௩

நீவாவாயாகாயாழீகாவாவானோவாராமே
4060 மேராவானோவாவாகாழீயாகாயாவாவாநீ. ௪

யாகாலாமேயாகாழீயாமேதாவீதாயாவீ
4061 வீயாதாவீதாமேயாழீகாயாமேலாகாயா. ௫

மேலேபோகாமேதேழீகாலாலேகாலானுயே
4062 யேனுலாகாலேலாகாழீதேமேகாபோலேமே. ௬

நீயாமாநீயேயாமாதாவேழீகாநீதானே
4063 நேதாநீகாழீவேதாமாயாயேநீமாயாநீ. ௭

நேணவராவிழயாசைழியேவேகதளேரியளாயுழிகா
4064 காழியுளாயரிளேதகவேயேழிசையாழவிராவணனே. ௮

காலேமேலேகாணீகாழீகாலேமாலேமேபூ
4065 பூமேலேமாலேகாழீகாணீகாலேமேலேகா. ௯

வேரியுமேணவகாழியொயேயேனைநிணேமடளோகரதே
4066 தேரகளோடமணேநினையேயேயொழிகாவணமேயுரிவே.௧௦

நேரகழாமிதயாசழிதாயேனனியேனனிளாயுழிகா
4067 காழியுளானினயேனினயேதாழிசயாதமிழாகரனே. ௧௧

118 மடல்மலிகொன்றைதுன்றுவா ளெருக்கும்வன்னியும்
மத்தமுஞ்சடைமேற், படலொலிதிரைகள்மோதியகங்கைத்
தலைவனார்தம்மிடம்பகரில், விடலொலிபரந்தவெண்டிரை
முத்தமிப்பிகள்கொணர்ந்துவெள்ளருவிக், கடலொலி
4068 யோதமோதவந்தலைக்குங்கழுமலநகரெனலாமே. ௧

மின்னியஅரவும்வெறிமலர்பலவும்விரும்பிய திங்களுந்
தங்கு, சென்னியதுடையான்தேவர்தம்பெருமான்சேயிழை
யோடுமுறைவிடமாம், பொன்னியல்மணியுமுரிசரிமருப்
புஞ்சந்தமுமுந்துவன்றிரைகள், கன்னியராடக்கடலொலி
4069 மலியுங்கழுமலநகரெனலாமே. ௨

சீருறுதொண்டர்கொண்டடி போற்றச்செழுமலர்புன
லொடுதூபந், தாருறுகொன்றைதம்முடிவைத்தசைவனார்
தங்கிடமெங்கும், ஊருறுபதிகளுலகுடன்பொங்கியொலி
புனல்கொளவுடன்மிதந்த, கூருறுசெம்மைநன்மையால்
4070 மிக்ககழுமலநகரெனலாமே. ௩

மண்ணினாரேத்தவானுளார்பரச அந்தரத்தமரர்கள்
போற்றப், பண்ணினாரெல்லாம்பலபலவேடமுடையவர்
பயில்விடமெங்கும், எண்ணினால்மிக்காரியல்பினால்நிறைந்
தாரேந்திழையவரொடுமைந்தர், கண்ணினாலின்பங்கண்
4071 டொளிபரக்குங்கழுமலநகரெனலாமே. ௪

சுருதியான்தலையும்நாமகள்மூக்குஞ்சுடரவன்கரமுமுன்
னியங்கு, பரிதியான்பல்லுமிறுத்தவர்க்கருளும்பரமனார்
பயின்றினிதிருக்கை, விருதினான்மறையுமங்கமோராறும்
வேள்வியும்வேட்டவர்ஞானங், கருதினாருலகிற்கருத்துடை
4072 யார்சேர்கழுமலநகரெனலாமே. ௫

புற்றில்வாளரவுமாமையும்பூண்ட புனிதனார்பனிமலர்க்
கொன்றை, பற்றிவான்மதியஞ்சடையிடைவைத்தபடிறனார்
பயின்றினிதிருக்கை, செற்றுவன்திரைகளொன்றொடொன்

றேடிச்செயிர்த்துவண்சங்கொடுவங்கம், கற்றுறைவரை
4073 கள்கரைக்குவந்துரைக்குங்கழுமலநகரெனலாமே. சு

அலைபுனற்கங்கைதங்கியசடையா ரடல்நெடுமதிலொரு
மூன்றுங்கொலையிடைச்செந்தீ வெந்தறக்கண்டகுழகனூர்
கோயிலதென்பர், மலையின்மிக்குயர்ந்தமாக்கலஞ்சாக்கு
மற்றுமற்றிடையிடையெங்கும், கலைகளித்தேறிக்கானலில்
4074 வாழுங்கழுமலநகரெனலாமே. எ

ஒருக்கமுன்னினையாத்தக்கன்றன்வேள்வி யுடைதரவுழ
றியபடையார், அரக்கனைவரையாலாற்றலன்றழித்தஅழகனு
ரமர்ந்துறைகோயில், பரக்கும்வண்புகழார்பழியவைபார்த்
துப்பலபலஅறங்களேபயிற்றிக், கரக்குமாறறியாவண்மை
4075 யால்வாழுங்கழுமலநகரெனலாமே. அ

அருவரைபொறுத்தஆற்றலினானு மணிகிளர்தாமரை
யானும், இருவருமேத்தஎரியுருவானஇறைவ ருறை
விடம்வினவில், ஒருவரிவ்வுலகில்வாழ்கிலாவண்ணம்ஒலி
புனல்வெள்ளமுன்பரப்பக், கருவரைசூழ்ந்தகடலிடை
4076 மிதக்குங்கழுமலநகரெனலாமே. சு

உரிந்துயருருவிலுடைதவிர்ந்தாரு மத்துகில்போர்த்
துழல்வாருந், தெரிந்துபுன்மொழிகள்செப்பினகேளாச்
செம்மையார்நன்மையாலுறைவாங், குருந்துயர்கோங்கு
கொடிவிடுமுல்லைமல்லிகைசண்பகம்வேங்கை, கருந்தடங்
4077 கண்ணின்மங்கைமார்கொய்யுங்கழுமலநகரெனலாமே. ௧௦

கானலங்கழனியோதம்வந்துலவுங் கழுமலநகருறைவார்
மேல், ஞானசம்பந்தன்நற்றமிழ்மாலைநன்மையாலுரை
செய்துநவில்வார், ஊனசம்பந்தத்துறுபிணிநீங்கியுள்ளமு
மொருவழிக்கொண்டு, வானிடைவாழ்வர்மண்மிசைப்பிற
4078 வார்மற்றிதற்காணையுநமதே. ௧௧

119 புள்ளித்தோலாடைபூண்பதுநாகம் பூசுசாந்தம்பொடி
நீறு, கொள்ளித்தீவிளக்குக்கூளிகள்கூட்டங்காளியைக்
குணஞ்செய்கூத்துடையோன், அள்ளற்காராமையகடுவான்
மதியமேய்க்கமுட்டாழைகளானே, வெள்ளைக்கொம்பீனும்
4079 விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே.

இசைந்தவாறடியாரிடுதுவல்வானோ ரிழுகுசந்தனத் திளங்கமலப்,பசும்பொன்வாசிகைமேற்பரப்புவாய்கரப்பாய் பத்திசெய்யாதவர்பக்கல், அசும்புபாய்கழனியலர்கயன் முதலோடடுத்தரிந்தெடுத்தவான்சும்மை, விசும்புதூர்ப்பன
4080 போல்விம்மியவீழிமிழலையானெனவினைகெடுமே. ௨

நிருத்தனாறங்கன்நீற்றன்நான் மறையன்நீலமார்மிடற் றன்நெற்றிக்கண், ஒருத்தன்மற்றெல்லாவுயிர்கட்குமுயிரா யுளனிலன்கேடிலியுமைகோன், திருத்தமாய்நாளுமாடுநீர்ப் பொய்கைசிறியவாறிவினின்மிக்க, விருத்தரையடிவீழ்ந்
4081 திடம்புகும்வீழிமிழலையானெனவினைகெடுமே. ௩

தாங்கருங்காலந்தவிரவந்திருவர் தம்மொடுங்கூடினாரங் கம், பாங்கினால்தரித்துப்பண்டுபோலெல்லாம்பண்ணிய கண்ணுதற்பரமர், தேங்கொள்பூங்கமுகுதெங்கிளங்கொடி மாச்செண்பகம்வண்பலாஇலுப்பை, வேங்கைபூமகிழால்
4082 வெயிற்புகாவீழிமிழலையானெனவினைகெடுமே. ௪

கூசுமாமயானங்கோயில்வாயிற்கட் குடவயிற்றனசில பூதம், பூசிமாசாந்தம்பூதிமெல்லோதிபாதிநற்பொங்கா வரையோன், வாசமாம்புன்னைமௌவல்செங்கழுநீர்மல ரணைந்தெழுந்தவான்தென்றல், வீசுமாம்பொழில்தேன்
4083 துவலைசேர்வீழிமிழலையானெனவினைகெடுமே. ௫

பாதியோர்மாதர்மாலுமோர்பாகர்பங்கயத் தயனுமோர் பாலர், ஆதியாய்நடுவாயந்தமாய்நின்றஅடிகளாரமரர்கட் கமரர், போதுசேர்சென்னிப்புரூரவாப்பணிசெய்பூசுரர் பூமகனனைய, வேதியர்வேதத்தொலியறாவீழிமிழலையா
4084 னெனவினைகெடுமே. ௬

தன்தவம்பெரியசலந்தரனுடலந் தடிந்தசக்கரமெனக் கருளென், றன்றரிவழிபட்டிழிச்சியவிமானத்திறையவன் பிறையணிசடையன், நின்றநாள்காலையிருந்தநாள்மாலை கிடந்தமண்மேல்வருகலியை, வென்றவேதியர்கள்விழாவறா
4085 வீழிமிழலையானெனவினைகெடுமே. ௭

கடுத்தவாளரக்கன்கைலையன்றெடுத்த காமுரஞ்சிரம் நெரிந்தலற, அடர்த்ததோர்விரலாலஞ்செழுத்துரைக்க அரு

ளினன்தடமிகுநெடுவாள், படித்தநான்மறைகேட்டிருந்
தபைங்கிளிகள்பதங்களையோதப்பாடிருந்த, விடைக்குலம்
4086 பயிற்றும்விரிபொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. ௮

அளவிடலுற்றஅயனொடுமாலு மண்டமண்கிண்டியுங்
காணா, முளையெரியாயமூர்த்தியைத்தீர்த்தமுக்கணெம்
முதல்வனைமுத்தைத், தளையவிழ்கமலத்தவிசின்மேலன்
னந்தன்னிளம்பெடையொடும்புல்கி, விளைகதிர்க்கவரிவீச
4087 வீற்றிருக்கும்மிழலையானெனவினைகெடுமே. ௯

கஞ்சிப்போதுடையார்கையிற்கோ சாரக்கலதிகள்கட்
டுரைவிட்டு, அஞ்சித்தேவிரியஎழுந்தநஞ்சதனையுண்டமரர்க்
கமுதருளி, இஞ்சிக்கேகதலிக்கனிவிழக்கமுகின்குலை
யொடும்பழம்விழத்தெங்கின், மிஞ்சுக்கேமஞ்சுசேர்
4088 பொழில்வீழிமிழலையானெனவினைகெடுமே. ௧௦

வேந்தர்வந்திறைஞ்சவேதியர்வீழிமிழலையுள்விண்ணிழி
விமானத், தேய்ந்ததன்தேவியோடுறைகின்றஈசனையெம்
பெருமானைத், தோய்ந்தநீர்த்தோணிபுரத்துறைமறை
யோன்தூமொழிஞானசம்பந்தன் வாய்ந்தபாமாலைவாய்
4089 நவில்வாரைவானவர்வழிபடுவாரே. ௧௧

120 மங்கையர்க்கரசிவளவர்கோன்பாவைவரிவளைக்கைம்
மடமானி, பங்கயச்செல்விபாண்டிமாதேவிபணிசெய்து
நாள்தோறும்பரவப், பொங்கழலுருவன்பூதநாயகனால்
வேதமும்பொருள்களுமருளி, அங்கயற்கண்ணிதன்னொடு
4090 மமர்ந்தஆலவாயாவதுமிதுவே. ௧

வெற்றவேயடியாரடிமிசை வீழும்விருப்பினன்
வெள்ளைநீறணியும், கொற்றவன்றனக்குமந்திரியாயகுலச்
சிறைகுலாவிநின்றேத்தும், ஒற்றைவெள்விடையனும்பாரார்
தலைவனுலகினிலியற்கையையொழிந்திட், டற்றவர்க்கற்ற
4091 சிவனுறைகின்றஆலவாயாவதுமிதுவே. ௨

செந்துவர்வாயாள்சேலனகண்ணாள் சிவன்திருநீற்றினை
வளர்க்கும், பந்தணைவிரலாள்பாண்டிமாதேவிபணிசெயப்
பாரிடைநிலவும், சந்தமார்தரளம்பாம்புநீர்மத்தந்தண்ணெ
ருக்கம்மலர்வன்னி, அந்திவான்மதிசேர்சடைமுடியண்
4092 ணல்ஆலவாயாவதுமிதுவே.

கணங்களாய்வரினுந்தமியராய்வரினுமடியவர்தங்களைக் கண்டால், குணங்கொடுபணியுங்குலச்சிறைகுலாவுங்கோபுரஞ்சூழ்மணிக்கோயில், மணங்கமழ்கொன்றைவாளராமதியம்வன்னிவண்கூவிளமாலை, அணங்குவீற்றிருந்தசடைமுடி
4093 யண்ணல்ஆலவாயாவதுமிதுவே. ச

செய்யதாமரைமேலன்னமே யனையசேயிழைதிருநுதற் செல்வி, பையரவல்குற்பாண்டிமாதேவிநாள்தொறும் பணிந்தினிதேத்த, வெய்யவேற்சூலம்பாசமங்குசமான் விரிகதிர்மழுவுடன்தரித்த, ஐயனுருமையோடின்புறுகின்ற
4094 ஆலவாயாவதுமிதுவே. ரு

நலமிலராகநலமதுண்டாகநாடவர்நாடறிகின்ற
குலமிலராகக்குலமதுண்டாகத்தவம்பணிகுலச்சிறைபரவும்
கலைமலிகரத்தன்மூவிலைவேலன்கரியுரிமூடியகண்டன்
4095 அலைமலிபுனல்சேர்சடைமுடியண்ணல்ஆலவாயாவதுமிதுவே.

முத்தின்தாழ்வடமுஞ்சந்தனக் குழம்புநீறுந்தன்மார்பினின்முயங்கப், பத்தியார்கின்றபாண்டிமாதேவிபாங்கொடு பணிசெயநின்ற, சுத்தமார்பளிங்கின்பெருமலையுடனே சுடர்மரகதமடுத்தாற்போல், அத்தனுருமையோடின்புறு
4096 கின்றஆலவாயாவதுமிதுவே. எ

நாவணங்கியல்பாமஞ்செழுத்தோதி நல்லராய்நல்லியல் பாகும், கோவணம்பூதிசாதனங்கண்டால்தொழுதெழுகுலச்சிறைபோற்ற, ஏவணங்கியல்பாமிராவணன்திண்டோளிருபதும்நெரிதரவூன்றி, ஆவணங்கொண்டசடைமுடியண்
4097 ணல்ஆலவாயாவதுமிதுவே. அ

மண்ணெலாம்நிகழமன்னனாய் மன்னும்மணிமுடிச் சோழன்றன்மகளாம், பண்ணினேர்மொழியாள்பாண்டிமாதேவிபாங்கினாற்பணிசெய்துபரவ, விண்ணுளாரிருவர்கீழொடுமேலுமளப்பரிதாம்வகைநின்ற, அண்ணலாருமை
4098 யோடின்புறுகின்றஆலவாயாவதுமிதுவே. கூ

தொண்டராயுள்ளார்திசைதிசைதோறுந்தொழுதுதன் குணத்தினைக்குலாவக், கண்டுநாள்தோறுமின்புறுகின்ற குலச்சிறைகருதிநின்றேத்தக், குண்டராயுள்ளார்சாக்கியர்

தங்கள்குறியின்கண்நெறியிடைவாரா, அண்டநாயகன்று
4099 னமர்ந்துவீற்றிருந்தஆலவாயாவதுமிதுவே. ௧0

பன்னலம்புணரும்பாண்டிமா தேவிகுலச்சிறையெனு
மிவர்பணியும், அந்நலம்பெறுசீராலவாயீசன் திருவடியாங்
கவைபோற்றிக், கன்னலம்பெரியகாழியுள் ஞானசம்பந்தன்
செந்தமிழிவைகொண், டின்னலம்பாடவல்லவரிமையோ
4100 ரேத்தவீற்றிருப்பவரினிதே. ௧௧

121 இடறினார்கூற்றைப்பொடிசெய்தார் மதிலையிவை
சொல்லியுலகெழுந்தேத்தக், கடறினாரவர்காற்றுளாராவர்
காதலித்துறைதருகோயில், கொடிறனார்யாதுங்குறைவிலார்
தாம்போய்க்கோவணங்கொண்டுகூத்தாடும், படிறனார்
4101 போலும்பந்தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. ௧

கழியுளாரெனவுங்கடலுளா ரெனவுங்காட்டுளார்காட்
டுளாரெனவும், வழியுளாரெனவும்மலையுளாரெனவும்மண்
ணுளார்விண்ணுளாரெனவுஞ், சுழியுளாரெனவுஞ்சுவடுதா
மறியார்தொண்டர்வாய்வந்தனசொல்லும், பழியுளார்போ
4102 லும்பந்தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. ௨

காட்டினாரெனவும்நாட்டினா ரெனவுங்கடுந்தொழிற்கால
னைக்காலால், வீட்டினாரெனவுஞ்சாந்தவெண்ணீறுபூசியோர்
வெண்மதிசடைமேல், சூட்டினாரெனவுஞ்சுவடுதாமறியார்
சொல்லுளசொல்லுநால்வேதப், பாட்டினார்போலும்பந்
4103 தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. ௩

முருகினார்பொழில்சூழுலகினா ரேத்தமொய்த்தபல்
கணங்களின்துயர்கண், டுருகினாராகியுறுதிபோந்துள்ள
மொண்மையாலொளிதிகழ்மேனி, கருகினாரெல்லாங்கை
தொழுதேத்தக்கடலுள்நஞ்சமுதமாவாங்கிப், பருகினார்
4104 போலும்பந்தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. ௪

பொன்னினார்கொன்றை யிருவடங்கிடந்துபொறிகிளர்
பூணநூல்புரள, மின்னினாருருவின்மிளிர்வதோரரவம்மேவு
வெண்ணீறுமெய்பூசித், துன்னினார்நால்வர்க்கறமமர்ந்தரு
ளித்தொன்மையார்தோற்றமுங்கேடும், பன்னினார்போலும்
4105 பந்தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. ௫

ஒண்பொனூரனைய அண்ணல்வாழ் கெனவுமுமையவள் கணவன்வாழ்கெனவும், அண்பினுர்பிரியாரல்லுநன்பகலு மடியவரடியிணைதொழவே, நண்பினுரெல்லாம்நல்லரென் றேத்தவல்லவர்தீயரென்றேத்தும், பண்பினுர்போலும்பந் 
4106 தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. சு

எற்றினுரேதுமிடைகொள்வா ரில்லையிருநிலம்வானுல கெல்லை, தெற்றினுர்தங்கள்காரணமாகச்செருமலைந்தடி யிணைசேர்வான், முற்றினுர்வாழும்மும்மதில்வேவமூவிலைச் சூலமும்மழுவும், பற்றினுர்போலும்பந்தணைநல்லூர்நின்ற 
4107 எம்பசுபதியாரே. எ

ஒலிசெய்தகுழலின்முழவமதியம்ப வோசையாலாடல ருத, கலிசெய்தபூதங்கையினுலிடவேகாலினுற்பாய்தலு மரக்கன், வலிகொள்வர்புலியினுரிகொள்வரேனைவாழ்வுநன் ருனுமோர்தலையில், பலிகொள்வர்போலும்பந்தணைநல் 
4108 லூர்நின்றஎம்பசுபதியாரே. அ

சேற்றினுர்பொய்கைத்தாமரை யானுஞ்செங்கண்மாலிவ ரிருகூருத், தோற்றினுர்தோற்றத்தொன்மையையறியார் துணைமையும்பெருமையுந்தம்மில், சாற்றினுர்சாற்றியாற்ற லோமென்னச்சரண்கொடுத்தவர்செய்தபாவம், பாற்றினுர் 
4109 போலும்பந்தணைநல்லூர்நின்றஎம்பசுபதியாரே. கூ, க0

கல்லிசைபூணக்கலையொலி யோவாக்கழுமலமுதுபதி தன்னில், நல்லிசையாளன்புல்லிசைகேளாநற்றமிழ்ஞான சம்பந்தன், பல்லிசைபகுவாய்ப்படுதலையேந்திமேவிய பந்தணைநல்லூர், சொல்லியபாடல்பத்தும்வல்லார்மேல் 
4110 தொல்வினைசூழகிலாவே. கக

122 பூங்கொடிமடவாளுமையொருபாகம் புரிதருசடை முடியடிகள், வீங்கிருள்நட்டமாடுமெம்விகிர்தர்விருப்பொடு முறைவிடம்வினவில், தேங்கமழ்பொழிலிற்செழுமலர் கோதிச்செறிதருவண்டிசைபாடும், ஓங்கியபுகழாரோமமாம் 
4111 புலியூருடையவர்வடதளியதுவே. க

சம்பரற்கருளிச்சலந்தான்வீயத் தழலுமிழ்சக்கரம் படைத்த, எம்பெருமானுரிமையவரேத்தஇனிதினங்குறை

விடம்வினவில், அம்பரமாகியழலுமிழ்புகையினாகுதியால் மழைபொழியும், உம்பர்களேத்துமோமமாம்புலியூருடை
4112 யவர்வடதளியதுவே. உ

பாங்குடைத்தவத்துப்பகீரதற்கருளிப் படர்சடைக் கரந்தநீர்க்கங்கை, தாங்குதல்தவிர்த்துத்தாதலத்திழித்த தத்துவனுறைவிடம்வினவில், ஆங்கெரிமூன்றுமமர்ந்துடனிருந்தஅங்கையாலாகுதிவேட்கும், ஓங்கியமறையோ
4113 ரோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. ௩

புற்றரவணிந்துநீறுமெய் பூசிப்பூதங்கள்சூழ்தரவூரூர், பெற்றமொன்றேறிப்பெய்பலிகொள்ளும்பிரானவனுறைவிடம்வினவில்,கற்றநால்வேதமங்கமோராறுங்கருத்தினாருத்தியால்தெரியும்,உற்றபல்புகழாரோமமாம்புலியூருடையவர்
4114 வடதளியதுவே. ௪

நிலத்தவர்வானமாள்பவர்கீழோர்துயர்கெடநெடியமாற்கருளால், அலைத்தவல்லசுராசறவாழியளித்தவனுறைவிடம்வினவில், சலத்தினாற்பொருள்கள்வேண்டுதல்செய்யாத் தன்மையார்நன்மையால்மிக்க,உலப்பில்பல்புகழாரோமமாம்
4115 புலியூருடையவர்வடதளியதுவே. ௫

மனந்திகழ்திசைகளெட்டுமேழிசையுமலியுமாறங்கம்ஐவேள்வி, இணைந்தநால்வேதம்மூன்றெரியிரண்டுபிறப்பெனவொருமையாலுணரும், குணங்களுமவற்றின்கொள்பொருள்குற்றமற்றவையுற்றதுமெல்லாம், உணர்ந்தவர்
4116 வாழுமோமமாம்புலியூருடையவர்வடதளியதுவே. ௬

தலையொருபத்துந்தடக்கைய திரட்டிதானுடையாக்கனைண்கயிலை, அலைவதுசெய்தஅவன்திறல்கெடுத்தஆதியாருறைவிடம்வினவில், மலையெனவோங்குமாளிகைநிலவும்மாமதில்மாற்றலரென்றும், உலவுபல்புகழாரோமமாம்புலியூ
4117 ருடையவர்வடதளியதுவே. ௮

கள்ளவிழ்மலர்மேலிருந்தவன் கரியோனென்றிவர்காண்பரிதாய, ஒள்ளெரியுருவருமையவளோடும்முகந்தினிதுறைவிடம்வினவில், பள்ளநீர்வாளைபாய்தருகழனிப்பனிமலர்ச் சோலைசூழாலை, ஒள்ளியபுகழாரோமமாம்புலியூருடையவர்
4118 வடதளியதுவே. ௯

தெள்ளியரல்லாத்தேரரோ டமணர்தடுக்கொடுசீவர
முடுக்கும், கள்ளமார்மனத்துக்கலதிகட்கருளாக்கடவுளா
ருறைவிடம்வினவில், நள்ளிருள்யாமம்நான்மறைதெரிந்து
நலந்திகழ்மூன்றெரியோம்பும், ஒள்ளியார்வாழுமோமமாம்
4119 புலியூருடையவர்வடதளியதுவே. ௧௦

விளைதருவயலுள்வெயில்செறி பவளமேதிகண்மேய்
புலத்திடறி, ஒளிதரமல்குமோமமாம்புலியூருடையவர்வட
தளியானைக், களிதருநிவப்பிற்காண்டகுசெல்வக்காழியுள்
ஞானசம்பந்தன், அளிதருபாடல்பத்தும்வல்லார்களமரலோ
4120 கத்திருப்பாரே. ௧௧

123 நிரைகழலரவஞ்சிலம்பொலி யலம்புநிமலர்நீறணிதிரு
மேனி, வரைகெழுமகளோர்பாகமாப்புணர்ந்தவடிவினர்
கொடியணிவிடையர், கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்
பருங் கனமணிவரன்றிக், குரைகடலோதம்நித்திலங்
4121 கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே. ௧

கடிதெனவந்தகரிதனையுரித்து அவ்வுரிமேனிமேற்போர்ப்
பர், பிடியனநடையாள்பெய்வளைமடந்தைபிறைநுதலவ
ளொடுமுடனாய்க், கொடிதெனக்கதறுங்குரைகடல்சூழ்ந்து
கொள்ளமுன்னித்திலஞ்சுமந்து,குடிதனைநெருங்கிப்பெருக்க
4122 மாய்த்தோன்றுங்கோணமாமலையமர்ந்தாரே. ௨

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடை
வைத்தார், கனித்திளந்துவர்வாய்க்காரிகைபாகமாகமுன்
கலந்தவர்மதில்மேல், தனித்தபேருருவவிழித்தழல்நாகந்
தாங்கியமேருவெஞ்சிலையாக், குனித்ததோர்வில்லார்குரை
4123 கடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே. ௩

பழித்திளங்கங்கைசடையிடைவைத்துப் பாங்குடை
மதனனைப்பொடியா, விழித்தவன்தேவிவேண்டமுன்
கொடுத்தவிமலனார்கமலமார்பாதர், தெழித்துமுன்னாற்
றுஞ்செழுங்கடல்தாளஞ் செம்பொனுமிப்பியுஞ்சுமந்து,
கொழித்துவன்திரைகள்கரையிடைச்சேர்க்குங் கோணமா
4124 மலையமர்ந்தாரே. ௪

தாயினும்நல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள், வாயினும்மனத்தும்மருவிநின்றகலாமாண்பினர் காண்பலவேடர், நோயிலும்பிணியுந்தொழிலர்பால்நீக்கி நுழைதருநூலினர்ஞாலம், கோயிலுஞ்சுனையுங்கடலுடன்
4125 சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே. ரு

பரிந்துநன்மனத்தால் வழிபடும்மாணிதன்னுயிர்மேல் வருங்கூற்றைத், திரிந்திடாவண்ணமுதைத்தவற்கருளுஞ் செம்மையார்நம்மையாளுடையார், விரிந்துயர்மௌவல் மாதவிபுன்னை வேங்கைவண் செருந்திசெண்பகத்தின், குருந்தொடுமுல்லைகொடிவிடும்பொழில்சூழ் கோணமாமலை
4126 யமர்ந்தாரே. சு, எ

எடுத்தவன்தருக்கையிழித்தவர்விரலாலேத்திடவாத்த மாம்பேறு, தொடுத்தவர்செல்வந்தோன்றியபிறப்புமிறப் பறியாதவர்வேள்வி, தடுத்தவர்வனப்பால்வைத்ததோர் கருணைதன்னருட்பெருமையும்வாழ்வும், கொடுத்தவர்
4127 விரும்பும்பெரும்புகழாளர்கோணமாமலையமர்ந்தாரே. அ

அருவராதொருகைவெண்டலையேந்தியகந்தொறும்பலி யுடன்புக்க, பெருவராயுறையும்நீர்மையர்சீர்மைப்பெருங் கடல்வண்ணனும்பிரமன், இருவருமறியாவண்ணமொள் ளெரியாயுயர்ந்தவர்பெயர்ந்தநன்மாற்கும், குருவராய்நின்
4128 றார்குரைகழல்வணங்கக்கோணமாமலையமர்ந்தாரே. கூ

நின்றுணுஞ்சமணுமிருந்துணுந்தேரும் நெறியலாதன புறங்கூற,வென்றுநஞ்சுண்ணும்பரிசினரொருபால்மெல்லிய லொடுமுடனாகித், துன்றுமொண்பௌவமவ்வவுஞ்சூழ்ந்து தாழ்ந்துறுதிரைபலமோதிக், குன்றுமொண்கானல்வாசம்
4129 வந்துலவுங்கோணமாமலையமர்ந்தாரே. க0

குற்றமிலாதார்குரைகடல் சூழ்ந்தகோணமாமலையமர்ந் தாரைக், கற்றுணர்கேள்விக்காழியர்பெருமான்கருத்துடை ஞானசம்பந்தன், உற்றசெந்தமிழார்மாலையீரைந்துமுரைப் பவர்கேட்பவருயர்ந்தோர், சுற்றமுமாகித்தொல்வினையடை
4130 யார்தோன்றுவர்வானிடைப்பொலிந்தே. கக

**124** சுண்ணவெண்ணீறணிமார்பில்தோல்புனைந்
தெண்ணரும்பல்கணமேத்தநின்றாடுவீர்
விண்ணமர்பைம்பொழில்வெள்ளடைமேவிய
4131 பெண்ணமர்மேனியெம்பிஞ்ஞகனீரே. க

திரைபுல்குகங்கைதிகழ்சடைவைத்து
வரைமகளோடுடனாடுதிர்மல்கு
விரைகமழ்தண்பொழில்வெள்ளடைமேவிய
4132 அரைமல்குவாளரவாட்டுகந்தீரே. உ

அடையலர்தொல்நகர்மூன்றெரித்தன்ன
நடைமடமங்கையோர்பாகம்நயந்து
விடையுகந்தேறுதிர்வெள்ளடைமேவிய
4133 சடையமர்வெண்பிறைச்சங்கரனீரே.

வளங்கிளர்கங்கைமடவரலோடு
களம்படஆடுதிர்காடரங்காக்
விளங்கியதண்பொழில்வெள்ளடைமேவிய
4134 இளம்பிறைசேர்சடையெம்பெருமானே.

சுரிகுழல்நல்லதுடியிடையோடு
பொரிபுல்குகாட்டிடையாடுதிர்பொங்க
விரிதருபைம்பொழில்வெள்ளடைமேவிய
4135 எரிமழுவாட்படையெந்தைபிரானே.

காவியங்கண்மடவாளொடுங்காட்டிடைத்
தீயகலேந்திநின்றாடுதிர்தேன்மலர்
மேவியதண்பொழில்வெள்ளடைமேவிய
4136 ஆவினிலைந்துகொண்டாட்டுகந்தீரே.

**125** கல்லூர்ப்பெருமணம்வேண்டாகழுமலம்
பல்லூர்ப்பெருமணம்பாட்டுமெய்யாய்த்தில
சொல்லூர்ப்பெருமணஞ்சூடலரேதொண்டர்
4137 நல்லூர்ப்பெருமணம்மேயநம்பானே.

தருமணலோதஞ்சேர்தண்கடல்நித்திலம்
பருமணலாக்கொண்டுபாவைநல்லார்கள்
வருமணங்கூட்டிமணஞ்செயுநல்லூர்ப்
4138 பெருமணத்தான்பெண்ணோர்பாகங்கொண்டானே. உ

அன்புறுசிந்தையராகியடியவர்
நன்புறுநல்லூர்ப்பெருமணமேவிநின்
றின்புறுமெந்தையிணையடியேத்துவார்
4139 துன்புறுவாரல்லர்தொண்டுசெய்வாரே. ௩

வல்லியந்தோலுடையார்ப்பதுபோர்ப்பது
கொல்லியல்வேழத்துரிவிரிகோவணம்
நல்லியலார்தொழுநல்லூர்ப்பெருமணம்
4140 புல்கியவாழ்க்கையெம்புண்ணியனார்க்கே. ௪

ஏறுகந்தீரிடுகாட்டெரியாடிவெண்
ணீறுகந்தீர்நிரையார்விரிதேன்கொன்றை
நாறுகந்தீர்திருநல்லூர்ப்பெருமணம்
4141 வேறுகந்தீருமைகூறுகந்தீரே. ௫

சிட்டப்பட்டார்க்கெளியான்செங்கண்வேட்டுவப்
பட்டங்கட்டுஞ்சென்னியான்பதியாவது
நட்டக்கொட்டாட்டறாநல்லூர்ப்பெருமணத்
4142 திட்டப்பட்டாலொத்திராலெம்பிரானிரே. ௬

மேகத்தகண்டனெண்டோளன்வெண்ணீற்றுமை
பாகத்தன்பாய்புலித்தோலொடுபந்தித்த
நாகத்தன்நல்லூர்ப்பெருமணத்தான்நல்ல
4143 போகத்தன்யோகத்தையேபுரிந்தானே. ௭

தக்கிருந்தீரன்றுதாளாலரக்கனை
உக்கிருந்தொல்கவுயர்வரைக்கீழிட்டு
நக்கிருந்தீரின்றுநல்லூர்ப்பெருமணம்
4144 புக்கிருந்தீரெமைப்போக்கருளீரே. ௮

ஏலுந்தண்டாமரையானுமியல்புடை
மாலுந்தம்மாண்பறிகின்றிலர்மாமறை
நாலுந்தம்பாட்டென்பர்நல்லூர்ப்பெருமணம்
4145 போலுந்தங்கோயில்புரிசடையார்க்கே. ௯

ஆதரமண்ணொடுசாக்கியர்தாஞ்சொல்லும்
பேதைமைகேட்டுப்பிணக்குறுவீர்வம்மின்
நாதனைநல்லூர்ப்பெருமணமேவிய
4146 வேதனதாள்தொழவீடெளிதாமே. ௧௦

நறும்பொழிற்காழியுள்ஞானசம்பந்தன்
பெறும்பதநல்லூர்ப்பெருமணத்தானை
உறும்பொருளாற்சொன்னவொண்டமிழ்வல்லார்க்
4147 கறும்பழிபாவமவலமிலரே. கக

இத் திருமுறையில்

பண்கள் ஒன்பது :—காந்தாரபஞ்சமம் 2801 - 3051, கொல்லி 3052 - 3243, கொல்லிக் கௌவாணம் 3244 - 3254, கௌசிகம் 3255 - 3393, 4057 - 4067, பஞ்சமம் 3394 - 3513, சாதாரி 3514 - 3871, பழம்பஞ்சுரம் 3872 - 4056, புறநீர்மை 4068 - 4130, அந்தாளிக் குறிஞ்சி 4131 - 4147, அற்புதத் திருப்பதிகங்கள் பத்து :—2834 - 2844, 2856 - 2866, 3031 - 3041, 3298 - 3308, 3320 - 3330, 3339 - 3349, 3372 - 3383, 3734 - 3744, 3956 - 3966, 4137 - 4147.

மூன்றம் திருமுறை முற்றிற்று.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப்பதிகங்கள் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

——

# திருவிடைவாய்

திருச்சிற்றம்பலம்

மறியார்கரத்தெந்தையம்மாதுமையோடும்
பிறியாதபெம்மானுறையுமிடமென்பர்
பொறிவாய்வரிவண்டுதன்பூம்பெடைபுல்கி
4148 வெறியார்மலரில்துயிலும்விடைவாயே. க

ஒவ்வாதஎன்பேயிழையாவொளிமௌலிச்
செவ்வான்மதிவைத்தவர்சேர்விடமென்பர்
எவ்வாயிலுமேடலர்கோடலம்போது
4149 வெவ்வாயரவம்மலரும்விடைவாயே. உ

கரையார்கடல்நஞ்சமுதுண்டவர்கங்கைத்
திரையார்சடைத்தீவண்ணர்சேர்விடமென்பர்
குரையார்மணியுங்குளிர்சந்தமுங்கொண்டு
4150 விரையார்புனல்வந்திழியும்விடைவாயே. ௩

கூசத்தழல்போல்விழியாவருகூற்றைப்
பாசத்தொடும்வீழவுதைத்தவர்பற்றும்
வாசக்கதிர்ச்சாலிவெண்சாமரையேபோல்
4151 வீசக்களியன்னமல்கும்விடைவாயே. ௪

திரியும்புரமூன்றையுஞ்செந்தழலுண்ண
வெரியம்பெய்தகுன்றவில்லியிடமென்பர்
கிரியுந்தருமாளிகைச்சூளிகைதன்மேல்
4152 விரியுங்கொடிவான்விளிசெய்விடைவாயே. ௫

கிள்ளைமொழியாளையிகழ்ந்தவன்முத்தீத்
தள்ளித்தலைதக்கனைக்கொண்டவர்சார்வாம்
வள்ளிமருங்குல்நெருங்கும்முலைச்செவ்வாய்
4153 வெள்ளைநகையார்நடஞ்செய்விடைவாயே. ௬

பாதத்தொலிபாரிடம்பாடநடஞ்செய்
நாதத்தொலியர்நவிலுமிடமென்பர்
கீதத்தொலியுங்கெழுமும்முழவோடு
4154 வேதத்தொலியும்பயிலும்விடைவாயே. ௭

எண்ணாத அரக்கனுரத்தைநெரித்துப்
பண்ணார்தருபாடலுகந்தவர்பற்றாங்
கண்ணார்விழவிற்கடுவீதிகள்தோறும்
4155 விண்ணோர்களும்வந்திறைஞ்சும்விடைவாயே. அ

புள்வாய்பிளந்தானயன்பூமுடிபாதம்
ஒள்வான்நிலங்தேடுமொருவர்க்கிடமாங்
தெள்வார்புனற்செங்கழுநீர்முகைதன்னில்
4156 விள்வாய்நறவுண்டுவண்டார்விடைவாயே. கூ

உடையேதுமிலார்துவராடையுடுப்போர்
கிடையாநெறியான்கெழுமுமிடமென்பர்
அடையார்புரம்வேவமூவர்க்கருள்செய்த
4157 விடையார்கொடியானழகார்விடைவாயே. க0

ஆறும்மதியும்பொதிவேணியனூரா
மாறில்பெருஞ்செல்வம்மலிவிடைவாயை
நாறும்பொழிற்காழியர்ஞானசம்பந்தன்
4158 கூறுந்தமிழ்வல்லவர்குற்றமற்றோரே.* கக

திருச்சிற்றம்பலம்



*இப்பதிகம் கல்வெட்டினின்றும் எடுக்கப்பட்டது. இக்கல்வெட்டு அரசாங்கத்தினரால் A. R. No. 8 of 1918 என்று பதிவு செய்யப்பட்டுள்ளது. இது திருமுறை கண்ட காலத்திற் கிடைத்திலதுபோலும். கிடைத்திருப்பின் இரண்டாம் திருமுறையுள் பண் இந்தளத்தில் சேர்க்கப் பெற்றிருக்கும்.